# சித்தர் இலக்கியம்

ஆய்வு நூல்

மீ.ப.சோமு



அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு

# சித்தர் இலக்கியம் - 5

மீ.ப. சோமசுந்தரம்
சோமு

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர் - 608 002.

*Dr.M.A.M. Ramaswamy,* B.A.,D.Litt.
Pro-Chancellor : Annamalai University
Member of Parliament (Rajya Sabha)

Flat.# 111, Ranka View Apartments
51/22-4, Richmond Road,
Bangalore - 560 025.
Tel : 080-25587779
Fax : 080-25584896

# <u>அணிந்துரை</u>

சித்தர் இலக்கியம் 4,5,6 ஆம் தொகுதிகள் வெளிவருவது அறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

என் அருமைத் தந்தையார் அவர்கள் தமது மறைவுக்குச் சில வாரங்கள் முன்பு, இந்த ஆய்வுப் பணியைத் திரு.மீ.ப.சோமசுந்தரம் அவர்கள் செய்ய வேண்டும் என்று விரும்பி, இந்நூல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் வாயிலாக உருவாவதற்குரிய திட்டத்தைக் கலந்து பேசினார்கள். அவர்களுடைய மறைவுக்குப் பிறகு தந்தையார் உருவாக்கிய திட்டத்தை நிறைவேற்றுகிற வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. விரிந்து பரந்த இந்த அரிய ஆய்வு நூலைப் பகுதி பகுதியாக வெளியிட்டு வழங்குகிற பணியானது, எங்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தமிழுக்குச் செய்யும் ஒரு நிலையான தொண்டு என்று நான் கருதுகிறேன்.

அமரர் திரு.மீ.ப.சோமு அவர்கள் ஆழ்ந்த மொழிப் புலமையோடு, தத்துவ நுண்ணறிவும், நவீன விஞ்ஞான ஆராய்ச்சிகளை ஒப்பு நோக்கும் ஆற்றலும் ஒரு சேரப்பெற்றிருந்த நல்லறிஞர். சில மகான்களின் நேர்முகத் தொடர்பும் அவருக்கு உண்டு. எந்தப் பணியை யாரிடம் எவ்வாறு ஒப்படைக்க வேண்டும் என்று தேர்ந்தெடுப்பதில் வல்லமை பெற்று விளங்கிய என் தந்தையாரின் எண்ணம் நூல்வடிவம் பெற்றுள்ளது. இந்த சிறந்த நூலைத் தமிழ் மக்களுக்கு அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வாயிலாக வழங்குவதில் பேருவகை அடைகிறேன்.

*மு.அ.மு. இராமசாமி*

Prof. **Dr. M. Ramanathan,**
M.S. (G.S.) F.R.C.S.(Glasg)
Vice-Chancellor

Phone: Office: 04144-238283
Res. : 04144-238214
Fax : 04144-238925
04144-238080
E-mail: auvc_mr@hotmail.com
ANNAMALAI UNIVERSITY,
ANNAMALAINAGAR P.O. 608 002
INDIA

## பாராட்டுரை

சித்தர் இலக்கியம் குறித்த இவ்வரிய ஆராய்ச்சி நூலின் 4, 5, 6ஆம் தொகுதிகள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் வாயிலாக மறுமதிப்புப் பெறுவதில் மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன். இத்தொகுதிகளில் நாடறிந்த நல்லறிஞர் திரு.மீ.ப.சோமசுந்தரம், சித்தர்கள் குறிப்பு மொழியில் வெளியிட்டுள்ள மெய்ஞ்ஞான இரகசியங்களை எளிமையாக்கித் தமிழுலகிற்குத் தந்துள்ளார்கள்.

இந்நூல் உருவாக்கத்திற்கு முதற்பெருங் காரணரான கொடைவள்ளல் டாக்டர் ராஜாசர் முத்தையா செட்டியார் அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக்கடன்பட்டதாகும். சித்தர் இலக்கியம் நூலாக வெளிவர வேண்டுமென்று விழைந்த தந்தையாரின் திட்டத்தை மாண்பமை இணைவேந்தர் டாக்டர் எம்.ஏ.எம்.இராமசாமி அவர்கள் சிறப்பாக நிறைவேற்றியுள்ளார்கள். அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றி உரியது.

சிவவாக்கியர், கபிலர், காகபுசுண்டர், இடைக்காடர், கடுவெளிச்சித்தர், அகப்பேய்ச்சித்தர், பாம்பாட்டிச்சித்தர், பத்திரகிரியார், கருவூரர், நந்தீசர் முதலிய சித்தர் பலரின் பாடல்கள் உரிய விளக்கங்களுடன் இந்நூல்களில் தரப்பட்டுள்ளன.

'அண்டத்தில் உள்ளது பிண்டத்தில்' என்பார்கள். அதாவது புற உலகிலும் பெறுதற்கரிய மானுட உடம்பிலும் பொதிந்திருக்கும் தத்துவம் ஒன்றுதான் என்பதை உணர்ந்து உணர்த்தியவர்கள் சித்தர்கள். 'உடம்பார் அழியின் உயிரார் அழிவர்' என்பதைப் பலபட வலியுறுத்தியவர்கள். பேரானந்தமாகிய வீடுபேற்று நிலையைப் புறக்கோலங்களாலும் பொய்ம்மைச் சடங்குகளாலும்

CONTINUATION SHEET

ANNAMALAI UNIVERSITY
ANNAMALAINAGAR

அடையமுடியாது என்பதை எடுத்துரைத்தவர்கள். ஆனந்த அனுபூதி நிலையைப் பெறுவதற்கு உரிய யோகப் பயிற்சிகளை, வழிபாட்டு முறைகளை, மந்திரக் கருத்துக்களை விவரிக்கும் இப்பாடல்களில் உலக வாழ்வியல் கருத்துக்களும் அறிவுறுத்தப்பட்டிருப்பது எல்லா மக்களும் இன்புற்று வாழவேண்டும் என்பதற்காகத்தான். சித்தர்கள் வழங்கும் மெய்ஞ்ஞான உண்மைகள் அறிவியற் கருத்துக்களோடு இயைந்து விளங்கும் சிறப்பையும் நூலாசிரியர் ஒப்பிட்டுக் கூறியுள்ளார்கள்.

இறையனுபவம் என்பது சொல்ல முடியாத சுகம் ஆகும். அதைச் சொல்ல முடிந்த அளவு சித்தர்களும் விளக்க முடிந்த அளவு அறிஞர். மீ.ப.சோமு அவர்களும் புலப்படுத்தியுள்ளார்கள்.

தமிழறிஞர்களும், தமிழ் ஆர்வலர்களும் மட்டுமன்றிப் பொதுமக்களும் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் எளியநடையில் எழுதப்பட்டிருப்பது இந்நூலின் குறிப்பிடத்தக்க சிறப்பாகும். அரிய நூல் படைத்த அவரை மனமாரப் பாராட்டுகிறோம்.

தமிழ்கூறு நல்லுலகம் படித்துப் பயன் கொள்ள வேண்டுமென்று விழைகிறேன்.

மா. இராமநாதன்

மா. இராமநாதன்

முனைவர். பழ. முத்துவீரப்பன்
பேராசிரியர் & தலைவர்

தமிழியல் துறை
முதன்மையர் இந்திய மொழிப்புலம்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர் - 608 002

## பதிப்புரை

சித்தர்கள் சமய உலகிலும் சமுதாய வெளியிலும் புரட்சிகரமான கருத்துக்களைப் போதித்தவர்கள். 'உள்ளமே கோயில்' என்று உரக்கச் சொன்னவர்கள். சாதி, சடங்கு, சாத்திரங்களை ஆவேசமாக எதிர்த்தவர்கள். அவர்தம் இலக்கியங்கள் பேரின்பப் பேற்றை அடைய வழிகாட்டுவன. 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற உயரிய நெறியை வலியுறுத்துவன. 'உள்ளத்துக்குள்ளே ஒளிந்திருப்பவன் இறைவன்' என்பதை எடுத்துரைப்பன. உலகளாவிய ஒருமைக்குக் குரல் கொடுப்பன. பெறுவதற்கரியது மானுட உடம்பு; அதனைப் பயன்படுத்தி ஒளிப்பயிற்சி, ஒலிப்பயிற்சி ஆகியவற்றை முறையாகப் பின்பற்றுவதன் மூலம் பிறவிப்பேற்றை அடையலாம் என்று விளக்குவன. மரபுவழிச் செய்யுட்களையும், நாட்டுப்பாடல்கள் அமைப்பையும் பின்பற்றி எளிய நடையில் அரிய கருத்துக்களைத் தருவன. வாழ்வியல் நெறிகளை விவரித்து வாசிப்பவரை நேசிக்க வைப்பன.

அறிஞர் மீ.ப.சோமு சித்தர் இலக்கியங்களில் ஆழங்காற்பட்டவர். தக்க குருமார்கள் வழி சித்தர் இலக்கிய நுட்பங்களைக் கற்றுணர்ந்த பெருமையர்.

சித்தர் இலக்கியம் 4ஆம் தொகுதியில் சிவவாக்கியம், கபிலர் அகவல் என்னும் இருநூல்கள் இடம் பெற்றுள்ளன. சிவவாக்கியம் என்னும் பகுதியில் இடம்பெற்றுள்ள 856 பாடலகளும் தத்துவப் பாடல்களாகவும் துதிப்பாடல்களாகவும் விளங்குபவை. தொடர்ந்து வைத்தியம் குறித்த சித்தர் பாடல்கள் தரப்பட்டுள்ளன.

சிவவாக்கியம் தந்த சிவவாக்கியர் ஒருமைப்பாடு என்ற பேரானந்த ஒடுக்கத்தின் பேரின்பத்தை அனுபவித்தவர். உலகம் முழுதும் இறைவனே என்ற ஒருமைக் காட்சியை உணர்ந்தவர். சரியை, கிரியை, யோக, ஞான நிலைகளில் தோய்ந்து பாடுபடுபவர். சமுதாயச் சீர்திருத்தக் கொள்கைகளைப் பேசியதில் தந்தைபெரியாரை விட ஒருபடி மிஞ்சியவர். ராம நாமத்தின் மகிமையையும் விளக்கியுள்ளார்.

அகக் காட்சி பெறும் வழிகளை எளிமையாக எடுத்துரைத்தார். மனம் மலர்கிற நிலையே ஞானம் என்றவர். பெறுதற்கரிய உடம்பைப் பெற்றும் ஞான ரகசியங்களை அறியாதிருப்பது- உடம்புக்குள் ஞானவாசலைத் திறக்கத் தெரியாமல் மூடி வைத்திருப்பது - வீடுகட்டிக் கதவைச் சாத்தி வைத்திருப்பது போல என்கின்றார்.

கபிலர் அகவல் என்ற நூல் பிறப்பால் உயர்வுதாழ்வில்லை, அவரவர் சிறப்பால்தான் உயர்வு என்பதை விரிவாக எடுத்துரைப்பது. உலகளாவிய பொதுநோக்கு, சடங்குகள் மற்றும் மூடநம்பிக்கை எதிர்ப்பு, புரட்சி மனப்பான்மை ஆகியவற்றின் திரட்டுப் பாலாகத் திகழ்வது. மழையும், காற்றும், பூமியும், கதிரவனும் அனைவருக்கும் பயன்படுவது போல மானிடர் யாவர்க்கும் குலமும், குடியும், பிறப்பும், வழிபடுதெய்வமும் ஒன்றே என்று வலியுறுத்துவது. இப்பாடற் செய்திகளை ஆய்ந்தும் தோய்ந்தும் இயன்றவரை எளிமைப் படுத்தி விளக்கியுள்ளார் அறிஞர் மீ.ப.சோமு.

5ஆம் தொகுதியில் சிவவாக்கியம் எனும் தலைப்பில் காகபுசுண்டர் எழுதிய 987 பாடல்கள் குறிப்புரையுடன் இடம் பெற்றுள்ளன. இச்சையை விடுப்பதும் சினம் நீக்குவதும் மோட்சம் அடைவதற்குரிய வழிகள் ஆகும். உடலும் மனமும் செம்மைப்பட்டால் அனுபூதி நிலை பெறலாம். அக உலகின் கதவைத் திறத்தலே பயிற்சிகளில் எல்லாம் பெரிய பயிற்சி. உட்சோதியைக் கண்டு தெளிவதே மரணமிலாப் பெருவாழ்வு வாழ்வதற்குரிய அமரநெறி. குண்டலினியை எழுப்புவது என்பது பயிற்சியினால் கிடைக்க வேண்டிய ஒரு மகத்தான அனுபவம் ஆகும் என்றெல்லாம் சித்தர்கள் கூறும் பல்வேறு ஞானநெறிகள், யோக முறைகள் மீ.ப.சோமுவால் எளிய நடையில் விளக்கப்பட்டுள்ளன.

ஆறாம் தொகுதியில் மந்திர ஆற்றல், பதச்சோறு என்னும் தலைப்புகளில் ஆயவுக் கட்டுரைகள் உள்ளன. இடைக்காடர், குதம்பைச் சித்தர், கடுவெளிச்சித்தர், அகப்பேய்ச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர், பத்திரகிரியார் முதலிய 17 தலைப்புகளில் பலநூறு சித்தர் பாடல்கள் குறிப்புரைகளுடன் விளக்கம் பெற்றுள்ளன. இப்பாடல்கள் அனைத்தும் தன்னை அறிய வேண்டும் என்பதை விளக்குவன. சீவனுக்குள்ளே சிவமணம் பூக்க வழிகாட்டுவன. கையில் விளக்கு வைத்துக்கொண்டு வழி தெரியாமல் கடலில் விழக் கூடாது என்று நெறிப்படுத்துவன.

மனித உடம்பிலே நிலைகொண்டுள்ள எழுத்தாகிய ஆற்றல்களையும் ஆறு ஆதார நிலைகளையும் மூலக்கனலின் இயக்கத்தையும் வாசிப்பயிற்சி முறைகளையும் பேசாக்கிளவி வாயிலாகச் சித்தர்கள் விளக்குவதை எடுத்துரைப்பன. சுருங்கச் சொன்னால் குறியீட்டு மொழியில் கூறப்பட்டிருக்கும் பல்வேறு ஆன்ம ரகசியச் செய்திகளை இயன்றவரை எளிமைப்படுத்தி விளக்குவன.

பிறவிப் பயனை அடைய வழிகாட்டும் சித்தர் இலக்கியக் கருத்துக்களைப் பொதுமக்கள் அனைவரும் உணரும் வகையில் எளிமைப்படுத்த முயன்றுள்ள அறிஞர் மீ.ப.சோமு ஆன்மிக உலகின் பாராட்டுக்குரியவர் ஆவார்.

பழ. முத்துவீரப்பன்

# சிவ வாக்கியம்

## காக புசுண்டர்

### காப்பு

1. ஆதியென்ற மூலமந்திர மைந்தெழுத்தை
அன்புடனே மனதில்வைத்து ஓங்காரத்தை
நீதியுடன் றான்பணிந்து பெருநூல் தன்னை
நிகழ்த்துதற்கு ஐங்கரன்றன் பாதங்காப்பு
சோதியென்ற சுழிமுனையைத் தியாகஞ்செய்து
சுந்தரமாய்ப் பிராணாயம் விரித்துரைக்கப்
பாதிமதி யணியீச னுமையாள்காப்பு
பக்தியுள்ள வாலையின்றன் பாதங்காப்பே.

2. புசுண்டர் தன்வரலாறு

பாதமதைச் சிரசில்வைத்து யுகங்கள்தோறும்
பண்பாகத் தானிருந்து கோடிகாலம்
சாதகமாய்ப் பிரளயங்கள் முடியும்போது
தனியாகக் கல்லாலின் மேலிருந்து
சேதமொன்று மில்லாமல் மவுனமுற்று
சிறப்பாக எத்தனையோ யுகங்கள்கண்டு
வேதமென்ற பிர்மத்தி லடங்கிக்கொண்டு
வெகுகோடி யுகங்கள்வரை யிருந்திட்டேனே

---

1. 'ஐந்தெழுத்து' என்று இங்கே குறிக்கப் பெறுவது சூக்கும பஞ்சாக்கரம். சுழுமுனையைத் தியானம் செய்வது என்பதன் விரிவை அவ்வைகுறள் விளக்கத்தில் காண்க. பிராணாயம்-பிரணாயாமம் என்பதன் குறைக்குறிப்பு.

2. 'நோஆஸ் ஆர்க்' என்று வழங்குகிற குறிப்புக்களை ஒப்பிட்டுப் பார்க்க. யுகம் முடிந்ததும் தனியாக காகமாக இருந்து என்பதன் உட்பொருள் மேற்குநாட்டு ஞானிகளின் கருத்தோடு சேர்த்துப் பார்க்க வல்லது.

3. இருந்திட்டேன் காகத்தின் சொரூபமாக
இன்பமுடன் வசிஷ்டருந்தான் யென்னிடத்தில்
வருந்தியே வந்துயென்றன் முன்னேநின்று
வாய்திறந்து கோடியுகம் கல்லால்தன்னில்
பொருந்தியே யிருந்துதான் வந்தீரையா
புகழாக யிருந்துவந்த விதங்கடன்னை
திருந்தியே சொலவேணு மென்றுகேட்கச்
செப்பினே னுண்மைதனைத் திறந்துதானே.

## நூலடக்கம்

4. தானென்ற ஞானமதை வெளியதாகத்
தான்சொல்ல வேணுமென்று வசிஷ்டர்கேட்க
நானென்ற சித்தர்களும் வசிஷ்டரோடே
நாட்டமுடன் றான்சேர்ந்து ஞானந்தன்னைத்
தேனென்ற அமிர்தம்போல் சொல்லவேண்டும்
திருவருளால் கடைத்தேறச் செய்யவேண்டும்
கோனென்றே வேண்டினதால் வசிஷ்டருக்குக்
குறிப்பாக ஞானமதைச் செப்பினேனே.

---

3. 'எவல்யூஷன்' என்பதன் நுட்பத்தையும், உலகம்தோன்றிய வரலாற்றையும் அறிவியற் கண்கொண்டு பார்க்கிற இன்றைய யுகத்தின் கோட்பாடுகளும் இந்தப் பாடல்களின் உட்கிடையும் ஐக்கியப்படுகின்றன.

4. வசிட்டருக்கு ஞானம் உரைத்த வரலாறு வேறு சில சித்தர் சுவடிகளிலும் காணப்படுகிறது. ஞானிகளின் அறிவியல் என்பது உபதேசமாக வழங்குகிற செம்பொருளே என்பதும், கற்றுப்பெறுகிற நூலறிவு அன்று என்பதும் கருத்து.

5. செப்புகிறேன் சுழிமுனையின் பாகந்தன்னைத்
திறமாக யிருகலையுந் தெரியவேதான்
முப்புமுறை வகையோடு ஆராதாரம்
முப்பாழும் அப்பாழாய் முடியுகின்ற
அப்புவுடன் ஞானதிருஷ்டி தூரதிருஷ்டி
அடைவான ரவிமதிமுச் சுடரின்நேர்மை
இப்புவியில் அண்டபிண்டம் காயசித்தி
இன்னதென்றும் திரிகால மியம்புவேனே.

6. திரிகால வர்த்தமுடன் ஆராதாரம்
செவிதூ ரம் கேட்பதுடன் கெவுனம்பாய்தல்
மரிகால மறிவதுடன் சடலத்தாலே
மறுவுடலைப் பகுத்தறியும் வர்த்தமானம்
செரிகால மித்தனையு மறிதல்கொண்டு
சேர்ந்தோம்நா மிருவருமே யின்றுகாலம்
குறிகால மறிந்துணர்ந்த காலந்தன்னிற்
கொண்டுணர்ந்து கூறியே நோக்கினேனே.

---

5. அவ்வை குறளின் விளக்கத்தில் கூறப்பட்டுள்ள முச்சுடர் நுட்பம் இப்பாடலில் இடம்பெறுகிறது. இருகலை என்றது இடகலை பிங்கலை; சூரிய சந்திரர்களின் ஆதிக்கமும் வன்னியின் நிலையும் பேசப்பெறுகின்றன. முடியுகின்ற-முடிகின்ற என்பதன் யாப்பமைதி.

6. முனிவர்களுடைய ஒடுக்கநிலை என்பது காலம் இடம் இரண்டையும் கடந்து நிற்பதாகும். இந்த உடம்பிலே ஆற்றல்கள் வளரும்போது, ஞானச்செயல்கள் அனைத்தும் கைகூடுகின்றன. தூரம்கேட்டல் என்றும், பரகாயப் பிரவேசம் என்றும் பல ஆற்றல்களைத் திருமந்திரம் விரிவாகப் பேசுகிறது. ஒப்புநோக்கத்தக்கன இந்த வரிகள்.

7. நோக்கினே னிதையறிந்து வசிஷ்டர்தானும்
நுவலுமென்று சொல்லவுமே அடியேனுந்தான்
தாக்கியே யெதைவெளியாய்ப் பேசவேண்டும்
சாற்றுமெனக் கேட்கவுமே வசிஷ்டரப்போ
பாக்கியில்லா தெல்லாமுஞ் சொல்லவேண்டும்
பண்பாய்மா னிடர்பிறக்கு மார்க்கமுந்தி
தூக்கியே சொல்வேண்டு மென்றுகேட்க
சுந்தரமாய் வசிஷ்டருக்குச் சொல்லினேனே.

## பெண்கள் கெற்பப்பூச்சி

8. சொல்லுகிறேன் பெண்களுக்குக் கெற்பப்பூச்சி
தொன்றுதொட்டு நாமான வாருதன்னை
கில்லுகிறேன் பெண்மரங்கள் காய்ப்பதேமேல்
கெற்பமங்கை முன்னாடிக் கன்னிகாலம்
தொல்லுலகில் சதைக்குஞ்சு வுள்ளிருக்கும்
துடர்மனதை வென்றவர்கள் கண்டகாட்சி
நில்லுகிறேன் புருஷரன்றிப் பிள்ளையுண்டோ
நீர்வினவுஞ் சொல்லுகிறேன் மார்க்கந்தானே.

---

7. வசிட்டருக்கு ஞானம் உரைத்த வரலாறு கூறி இரகசியங்களைப் பேசத் தொடங்குகிறார் காகபுசுண்டர்!

தூக்கியே சொல்லுதல் - சீர்தூக்கித் துல்லியமாய் எடுத்துக் கூறுதல்.

8. தாவர உலகில் அஃறிணை என்று நாம் அழைக்கிற மரங்களிலும் ஆண்மரம் என்றும், பெண்மரம் என்றும் இருப்பது மிகப்பெரிய விஞ்ஞான நுட்பமாகும். ஆண்பால் பெண்பால் என்பது மக்கள் தேவர் உலகில் மட்டுமின்றி, அஃறிணை உலகிலும் இருப்பதைக் கண்டறிந்தவர்களே நம் சித்தர்கள்.

9. மார்க்கமிந்தப் புல்பூண்டு செடிமரங்கள்
மண்ணிருந்த நீருண்டு காய்த்தாலுந்தான்
ஆர்க்கிந்த வகைதெரியு மரத்திற்பெண்ணும்
ஆண்மலடு யென்றுசொல்லக் கேட்பதுண்டு
பார்க்குளிதை நீரறிவீர் மண்ணினுள்ளே
பலபேரும் பார்த்தறிவார் யீசல்புத்தை
நோக்குமிதை யுள்ளறிந்து வெடித்த காலம்
நுட்பமே வாய்திறக்கும் பூமிதானே.

10. பூமிபோற் பெண்ணணங்கும் புருஷராலே
பூத்திறக்கக் கூடியதால் வாய்திறந்தே
காமியாய் நாமிணங்க நீரைவாங்கிக்
கருவுருவாய் நாமாவோம் சிசுவின்பூச்சி
நேமியோ தந்தையுட நீரையுண்டு
நீண்டுடலும் பெரிதாகிச் சிலதுநாளிற்
சாமியே யாயிடவே சாப்பாடுண்டு
தற்சித்தேன் நீபாரு ஆண்பெண்ணென்றே.

---

9. புல்பூண்டு செடிமரங்கள் ஆகிய தாவர உலகில் கர்ப்பம் தரிப்பது இந்தப் பால் வேறுபாட்டினால் தான்! என்பது அறிவியல் உண்மை. இவ்வாறே மண்ணுக்குள்ளே கர்ப்பம் தரிப்பர் என்பது மேலும் நுண்ணிதான அறிவியலுண்மையாகும்.

10. 'பூத்தல்' என்ற தமிழ்ச்சொல் விஞ்ஞானமாகிய அறிவியல் பொதிந்த ஆழமான சொல்லாகும். 'ஸையன்ஸ்' என்று இக்காலத்தில் நாம் அழைக்கும் அறிவியலின் துறைகளிலே இன்னும் நாம் புகுந்து செல்ல முடியாத பல அறிவியல் இரகசியங்கள் சித்தர் இலக்கியத்தில் உள்ளன என்பதற்கு இப்பாடல் சான்றாகும்.

11. ஆண்பெண்ணின் கூர்விதங் ;ள் மார்க்கந்தன்னை
அறைகிறேன் பின்னாடி யதன்முன்னேதான்
காணிந்தச் சூரியனார் மடிந்தபோது
கங்குலது வந்துவிடும் மறைவார்சிலர்
பூணிந்தச் சூரியனார் வருவார்வந்தால்
பூமிதனிற் புற்றீசல் வந்தாப்போலத்
தோணிந்தச் சீர்களும் புற்பூண்டோடு
தோன்றிடுவார் மண்ணிலிருந் தேறுவாரே.

12. ஏறுவார் மண்ணுடைய நிறமேபோல
யெப்படியென் றெண்ணாதீர் நிறமண்மாறும்
பாருபார் குழந்தைகள்போல் வருவாரப்பா
பந்தடிக்கும் பாவனைபோ லோடுவார்கள்
நீருயா ரெனவினவக் கூறுவார்போல்
நிமிஷம்உற வாடியவர் பிரிந்தார்பின்னே
வாருவா ரவர்களுமே வந்தபோது
வாசிமூச் சாடினதோ ருயரந்தானே.

---

ஸஸ- குதிருகூ:

11. கதிரவன் மறைவும், அவன் உதயமும் போல என்ற உவமையின் அழகும், ஆழமும் போற்றற்குரியன. ஒளிநீங்கி இருள்வருவது சூரியனுடைய மரணம், அவனுடைய மடிவு அல்லது இறப்பு என்பதில் உள்ள ஆழம் உய்த்துணரவல்லது. உடம்பிலுள்ள ஆதித்தநிலையும் இவ்வாறே.

12. சூரியனுடைய இயக்க ஒத்திலே பரிவார இயக்கம் செயல்படுகின்ற பான்மையை உரைத்தவாறு.

13. தானிந்த மூச்சிருந்து வருமேவாசல்
தாழ்மூக்கு முதல்வாசல் அகலந்தானே
தேனிருந்த மண்ணதனிற் கண்டகாட்சி
செப்பினேன் பெண்ணாணும் பிறக்குமார்க்கம்
வானிந்த வாகாய மண்ணில்மாந்தர்
மங்கையரின் கெற்பமதி லாண்பெண்ணான
ஊனிந்தக் கெற்பக்கூர் சொல்லிவந்தேன்
உத்தமனே ஆண்கெற்பம் கேளும்நீரே.

## ஆண்கெற்ப லக்ஷணம்

14. நீரிப்போ யாபகமாய்க் கேட்கவேணும்
நிகழ்காலந் தெரியாதோ ரறியாரய்யா
கூறிப்போ விந்துவினி லிரண்டுமாதங்
கொண்டகெற்பக் கருக்குழியில் பிள்ளையாச்சு
மாறிப்போந் தலைகீழாய்ப் பிறக்குமுன்னே
மார்பிருக்கு மேசிசுவின் தலைதானப்பா
பாரிப்போம் பாவையரின் பள்ளநெஞ்சில்
பய்யலென வேபிறக்குங் கெற்பம்ஆணே.

---

13. மூச்சின் தன்மை கூறி, மங்கையரின் கருவிலே ஆண் பெண் எப்படி ஏற்படுகிறது என்ற நுட்பம் செப்புகிறார்.

14. கருவின் வளர்ச்சியும் தலைகால் இருக்கும் நிலையும் சிசுவின் பால் குறிக்கிறது.

இந்தப் பாடலிலுள்ள சொல்லாட்சியிலே மயக்கம் இருக்கிறது. பொதுவாக இத்தகைய நுட்பங்களைக் கூறுகிற பாடல்கள் ஆசானால் உணர்த்தவேண்டியவை. அந்தக் காரணத்தினாலேயே சொற்களின் வைப்புமுறையிலே பூட்டுப்போட்டு விடுகிறார்கள் ஞானிகள். இனிவரும் பின்பகுதியிலும் இத்தகைய பாடல்கள் உள்ளன.

15. ஆணென்றாற் தாய்மார்பு பள்ளம்நெஞ்சு
அடிவயிற்றின் மேற்றொப்புள் மேலேதானும்
ஆணென்றாற் தாய்விலாவில் யிருகையுந்தான்
அமைந்திருக்கும் பாதம்ரெண்டுந் தொப்புள்மத்தி
ஆணென்றாற் கீழ்மேலும் யேறும்பாரு
ஆண்புழுவு மிப்படியே அங்கசேட்டை
ஆணென்றாற் தாய்மூலம் நெஞ்சின்தீயும்
அமைதிகொண்டு வேகுங்கான் கனலின்தீயே.

16. கனலென்ற மூலகனல் அனல்மேலேறி
கால்வீசி மேல்நோக்கி மண்டையேறும்
அனலென்ற தநுவேறித் தீய்ந்தபாண்டம்
ஆணாகி முகமீசை யமர்ந்துதய்யா
புனலென்ற யித்தீயாற் பிழைக்கச்செய்து
புருவநடு வாசிவரக் கண்ணதாச்சு
கனலென்ற அத்தீயு மடியிற்சேர
காயென்ற பீசவிரை திரண்டுபோச்சே.

---

15. கர்ப்பத்தின் வேறுபாடுகளை மிகவும் நுட்பமாகக் கூறுகிற பாடல் இது. கருவின் அசைவு, அமைப்பு, அதன் நிலை ஆகியன பாலை வளர்த்துகின்ற தன்மையைக் கூறுகிறது இப்பாடல்.

16. சிசுவுக்கு அங்கங்கள் அமைகிற முறைமையைக் கூறுகிறார் முனிவர். இந்தப் பாடலின் விரிவையும் இதுபோன்ற பாடல்கள் பின்வருவனவற்றின் விரிவையும் தாய்சேய் நலமருத்துவர்கள் இக்காலத்துக் கருவிகளைக் கொண்டு ஆய்வு செய்தால், வியக்கத்தக்க பல அறிவியல் உண்மைகளை மகப்பேறு

17. திரண்டுருண்ட பையதனிற் கனலும்நின்று
தீயேறி நின்றவிடம் நெஞ்சமையா
பிரண்டுருண்டு மேலேறி நெத்திநின்றால்
பெருமூக்கு மத்திநடு கோபமாகும்
மருண்டுருண்டு மேலேறி உச்சிநின்றால்
வாசிவலு காயசித்தி யோகசித்தி
உருண்டுருண்டு யிப்படியே கீழ்மேலுந்தான்
உடல்நடுவில் மூலம்வந்தால் சாந்தகுணமாமே.

## பெண்கெற்ப லக்ஷணம்

18. சாந்தமே சொல்லுகிறேன் பெண்ணங்கு
தாய்வயிற்றி லேயுதிக்கு மார்க்கந்தன்னை
சாந்தமே முன்சொன்ன கெற்பப்பூச்சி
சாய்ந்துதலை விலாவொட்டி விலாக்கால்நீட்டி
சாய்ந்துமே முன்புறத்தை நோக்கித்தானே
தலைகாலும் விலாவயிற்றில் சார்ந்தகூரு
சாய்ந்துமே பெண்புழுவும் தந்தைநீரைத்
தானுண்டு வளர்ந்தது கனற்றீயாலே.

---

17. பருப்பொருளின் அமைப்பு மொழிந்ததுபோல் பண்புகளின் அமைப்பு பேசப்பெறுகிறது. இதுவரை கூறப்பட்டவை ஆண்பாலின் இயல்புகளாம்.

18. தாயின் வயிற்றிலுள்ள கரு பெண்கருவாக அமைந்திருக்குமானால் அதனுடைய குறிகளும், அது இயங்குகிற வகையும் விளக்கம் பெறுகின்றன. இந்த உண்மைகளை இக்கால வைத்தியர்கள் கற்றுணர்ந்தால் கருக்கொள்ளுதல் பற்றிய பல தகவல்களை 'ஸ்கேனிங்','எக்ஸ்ரே' போன்ற புறக்கருவி முறைகளைக் கையாளாமலேயே தெரிந்துகொள்ளலாம்.

19. தீயான மூலகனல் சேர்க்கையாலே
சேர்விந்து வுண்டுணர்வு வளர்ச்சியாலே
தாயான அவ்வயிற்றின் அச்சினாலே
தான்ரெண்டு விதமாச்சு வித்தினாலே
பேயான பிச்சையினாற் காமத்தீயால்
பெருவிளைவு வுண்டாச்சு கொக்கோகத்தால்
வாயான தநுதிறக்கும் நவத்துவாரம்
வாசிவெளி யேறினது வாசல்தானே.

தாவர சங்க உற்பத்தி - மூச்சுப்பேச்சு விபரம்

20. வாசலிந்த மண்ணதனில் வந்தாற்பூண்டு
மங்கையரின் வாசல்வந்தாற் புதல்வராச்சு
பாசையென்றா லிதுதானும் சரமதாகும்
பரையுயிரும் நாசிவர மூச்சதாகும்
கூசலென்ன நாக்குயிரும் வந்தேயாடில்
கூக்குரலாஞ் சாஸ்திரமும் பேச்சதாகும்
வாசலென்ன கீழ்நோக்கில் அபானனாகும்
மண்டைசெவி நீட்டிடவே ஓசையாமே.

---

19. மூலக்கனல் கருவுற்பத்தியில் மிகப்பெரிய பங்கு வகிக்கிறது. ஒவ்வொரு புணர்ச்சியும் கருவாவதில்லை. இதன் நுட்பம் என்ன? இங்கேதான் மூலக்கனலின் செயல் வருகிறது.

20. உறுப்புக்கள் அமைவதால் மட்டும் இயக்கம் வந்து விடாது. செவி இருக்கலாம், அது செவிடாக இருக்கலாம். நாக்கு இருக்கலாம், அது பேசும் வல்லமை அற்றதாக இருக்கலாம். இவ்வாறுதானே எல்லா உறுப்புக்களின் இயக்கமும் அமைகிறது.

21. ஓசையென்ன யிவ்வுயிருங் கோஷம் வந்தால்
வுருமுதண்டு உச்சிவந்தால் யோகமாகும்
ஆசையென்ன பீசம்நின்றால் அண்டமாகும்
அவ்வுயிருங் காலில்வந்தால் நடையதாகும்
பூசையென்ன நெஞ்சில்நின்றால் நினைவுமாகும்
புலாவெலும்பை சுற்றிநின்றாற் கருவியாகும்
மாசையென்ன வுயிர்கலங்கில் கலக்கமாகும்
மனதென்ன விளையாடல் உயிருங்கூட்டே.

22. கூட்டிலுயிர் உலாவுதலே கருவியாகும்
குடலெலும்பு தசைநரம்பு தோலும்ரோமம்
காட்டிலிந்த ரத்தநீர் வாசிகூடிற்
கருத்தறிவு தெளிவுண்டா மனதேபுத்தி
வீட்டிலிந்த ஓர்மூலை பிசகித்தானால்
மேற்பிசமு முயிர்கலங்குஞ் சந்திற்பொந்திற்
பாட்டிலிதை நாம்திருத்தி யொன்றாய்ச்சேர
பழகிவரச் சொன்னார்சாஸ் திரத்தைத்தானே.

---

21. உயிரின் இயக்கம் இந்த உடம்பு முழுதும் ஆட்கொண்டுள்ளது. உயிரின் நிலை எங்கெங்கு சென்று எவ்வாறெல்லாம் தொழிற்படுகிறது என்பதைக் கூறுகிறார் முனிவர். மனத்தின் செயல்கள் அனைத்துக்கும் இயக்க ஆற்றலாக விளங்குவது உயிர் ஆற்றல். மின்கலத்தில் உதிக்கிற மின்ஆற்றல் விளக்காக எரிகிறது, காற்றாடியாகச் சுழல்கிறது, இயக்கத்தின் சக்கரமாக உருள்கிறது அல்லவா? இவ்வாறே உயிராற்றலும் அந்தந்த மையத்தில் புகுந்து அவ்வவ்வினையை இயக்குகிறது. அருமையான கருத்தமைந்த அற்புதமான பாடல்.

22. வீட்டில் எரிக்கிற மின்சாரத்துக்கு 'மெயின்' என்றும் அங்கங்கே 'ப்யூஸ்' என்றும், 'ஸ்விட்ச்' என்றும் இருப்பது போலாகும்.

## தத்துவ நூல் ஆதி

23. சாஸ்திரத்திற் தத்துவமே ஆதிநூ லாம்
தனையறியச் சொன்னார்ரே பிறவிநீங்க
பாத்திரத்தி லிதையறிந்தால் யோகமென்பார்
பழகினவர் ஞானியென்ற பெரியோரென்பார்
கோத்திரத்தி லிதின்பெயரே குருகுலந்தான்
குருவானாற் தன்கண்ணில் உடலுட்தோன்றும்
சேத்திரத்தில் ஞானக்கண் பிடறிதோன்றும்
சென்மாந்திரங் காண்முதுவுந் தோற்றும்பாரே.

24. தோற்றுமே கண்ணெதிரிற் தோற்றினாப்போற்
தோற்றிவிடும் பார்பூதம் அஞ்சுந்தானே
ஏற்றிவிடு மதின்மேலே ஆகாயத்தும்
இறங்கிவிடில் ஞானக்கண் பாதாளத்தும்
சாற்றிவிடுந் திரிகால மதனைக்கொண்டு
தன்னுடலைப் பகுத்தறிந்த செல்வந்தானும்
கூற்றிவிடுங் கூற்றனவ னெதிரேநிற்பான்
கொன்றவனுஞ் சண்டையிடான் சிநேகன்றானே.

---

23. பாத்திரத்தில் - உடம்பாகிய இந்தக் கலனில் , ஒளிமுறை என்று முந்திய பகுதிகளிலே வருகிற மைய ஆற்றலின் இயக்கம் இங்கே பேசப்படுகிறது.

24. சித்தர்களுடைய பயிற்சிமுறையிலே 'கூற்றை உதைக்கும் உபாயம்' என்பது ஒரு பாடம். ஆசிரியனிடம் நேரிலே தெரிந்துகொள்ள வேண்டிய இந்தப் பயிற்சியின் விளைவுகளைப் பேசுகிறார் ஞானி காகபுசுண்டர்.

25. சினேகமென்ன ராமகுரு வசிஷ்டரேகேள்
செப்புகிறேன் கருவிகர ணாதிதன்னை
சினேகமதாய்ச் சொல்லுகிறேன் கருவிக்கூட்டம்
திருவருளைக் கண்டார்க்கு மெட்டாயெட்டா
சினேகமது யான்கண்ட கருவிசொல்வேன்
சிந்தித்தாற் கருவியின்வகை சொல்லிற்கோடி
சினேகமென்ன கோடான கோடிவித்தை
தேசத்திற் கண்டிடலாங் கருவியாமே.

உடற்கருவி உயிர்க்கருவி விபரம்

26. ஆமிந்த உடற்கருவி சொல்லிவாரேன்
அங்கசேஷ்டை யெத்தனையோ கோடாகோடி
நாமிந்த உயிர்க்கருவி சொல்லவில்லை
நலமான உயிர்க்கருவி கோடாகோடி
தாம்கண்ட மனக்கருவி கோடாகோடி
தன்னறிவி லேவினையுங் கோடாகோடி
ஆம்கண்ட கருத்ததுவுங் கோடாகோடி
அத்தனையும் ஞாபகமாய்ச் சொல்வாருண்டோ.

---

25. திருவருள் - ஞானிகளுடைய பயிற்சிகளை ஓர்ந்து, அவற்றின் துணைகொண்டு மாணவன் துய்க்கிற இன்ப அனுபவம்.

26. பருஉடலைச் சார்ந்துநின்று இந்த நுட்பங்களைத் துய்க்க முடியாது. பருவுடலுக்குள் நுண்ணுடலைக் கண்டு அந்த நுண்ணுடலின் மையங்களை இயக்கும்போது இந்தப் பருவுடலும் கோடிக்கணக்கான புற உலகின் இயக்கங்களும் செயல்படுகின்றன.

27. உண்டோதான் புத்தியுடன் யூகங்கோடி
உற்றிதனை யறிந்தக்காற் கருவியாமே
பண்டறிந்த பேர்களுமே சொல்லவில்லை
பழவினையைப் போக்காதார் பாக்கியுண்டோ
விண்டேதான் சொல்லவில்லை காணாதாலே
மெய்மினுக்கும் வேசியர்போற் பாடினார்கள்
தொண்டுதான் செய்யாமற் குருவானாரோ
சூக்ஷகுரு சொல்மொழியு மாகாதாமே.

28. ஆகாத பிராணனுடன் பித்தங்கூடில்
அதுகணக்கு யெத்தனையென் றெண்ணிபபாரீர்
சாகாத பிராணனது தடையாற்சேத்மம்
தான்மறைக்க யெத்தனையென் றெண்ணிப்பாரீர்
வாகாத மாதமது யிடுப்பின்கீழே
வலநீரா மொழியறியார் கருவிதோணார்
வேகாதார் கண்டுகொள்வார் சேத்மங்கோழை
விரைந்திருகிக் கட்டிவிடத் தடையதாச்சே.

---

27. விண்டேதான் சொல்லவில்லை - வெளிப்படையாக இரகசியத்தைப் பிட்டு வைக்கவில்லை, பொதிந்து உரைத்துள்ளார்கள்.

28. உயிர் அழிவதில்லை. அதனால் இந்த அழிகிற உடலுக்குள் அதன் நிலை எப்படியெல்லாம் சிற்குறுகிறது என்பதை விளக்குகிறார். அடிப்படைத் தத்துவங்கள் வாதம், பித்தம், சேத்மம் என்கிற சிலேப்பினம்.

29. ஆச்சப்பா பித்தநீ ரேதென்றக்கால்
அரைகிறே னுண்டநீர் தலைமேலேறும்
பூச்சப்பா முன்னோர்கள் மனதிற்கண்டார்
பொய்யில்லை தெரிந்தமட்டுஞ் சொன்னார்நல்லோர்
ஏச்சப்பா சொல்லாதே அறிவில்லாத
யிடுமடையர் வேறுசொல்வா ரறிவில்லாமல்
பேச்சப்பா யிதையறிந்தா லுனக்கேகிட்டும்
பெரும்பிழையைத் தள்ளிவிட்டு உற்றுநோக்கே.

## கனவு விபரம்

30. நோக்கியே சொல்லுகிறேன் கனவின் செய்கை
நுண்ணறிவாற் கண்டகனா சொல்லுவேன்கேளு
தாக்கியே பிராணனது யிடவிலாவில்
தானிறங்கி மலசலத்தைத் தொடும்போதெல்லாம்
ஆக்கியதோர் பித்தநீர் கீழிறங்கும்
அஃதுவாயில் வந்தவுடன் நினைவுதப்பும்
ஏக்கியே நடுநினைவை மாற்றிக்கண்ணை
யிருக்கிவிடு மேயறிவு மாறுஞ்சொல்லே.

---

29. உண்டநீர் - உடம்பு உட்கொண்ட நீர்.

30. உறக்கம் வருவது எப்படி என்பது ஒரு மாபெரும் கேள்வி. உறக்கத்துக்குக் காரணமானது பொருளா அல்லது ஆற்றலா அல்லது இரண்டுமேயா என்ற வினாக்களுக்குச் சரியான விடை சித்தர்களின் ஞானத்திலேதான் உள்ளது. தூங்குவது என்பது உடம்பு உறங்கி, மனம் உள்ளுலகில் நிற்கும் நிலை. இதுபோலவே உள்ளத்தை உள்ளுலகுக்கு அனுப்பி உடம்பு தூங்குகிற நிலை என்ற ஒன்று உண்டு. இந்த இரண்டும் தவிர உறக்கம் என்ற நிலையே இல்லாமல் மனம் ஒடுங்குகிற 'தூங்காமல் தூங்கும்' நிலையும் உள்ளது.

31. சொல்லுமே வலதுபுற விலாவின்கீழே
சொன்னஅறி வதுவிளங்கில் மலமேகூடும்
செல்லுமே தன்னறிவை விழுங்கிக்கொள்ளும்
மேலெழுந்த நினைவெல்லாங் கனவுமாகும்
புல்லுமே நினைவிலுள்ள மற்றதெல்லாம்
புகலுமே சடமறந்து காதுங்கேளா
மல்லுமே போர்புரிந்த விதமேகாண
வாதபித்த சிலேத்துமத்தைப் போக்குவீரே.

## சேத்துமத்தைப் போக்கி தமர்திறக்க யோகம்

32. போக்குவீ ரென்றுசொல்லிப் போக்கத்தானே
பொருளதனைச் சொல்லிவைத்தே
னிடங்கள்தோறும்
நாக்குமே லண்ணாக்கு உண்ணாக்குள்ளே
நடுத்தமரைத் தான்திறந்தா லுச்சிவாசல்
மூக்குமேற் தண்டினிலே முனைமூக்குக்குள்
முளைத்தெழுந்த வாசிவரப் பார்த்தபேர்கள்
தாக்குவார் புருவநடு மேலே பார்ப்பார்
தமர்வாச லடைத்திருக்கும் பூட்டுத்தானே.

---

31. அறிவு அந்தந்த நிலையிலே இறங்கும்போது உடம்பு வெவ்வேறு அனுபவங்களைப் பெறுகிறது. இந்த நுட்பத்திலே விலாப்பகுதியின் பங்கு மகத்தானது என்பதை இந்தப் பாடலிலும், வேறுபல பாடல்களிலும் காகபுசுண்டர் அடிக்கோடிட்டுக் காட்டுகிறார்.

32. வாசியோகத்தின் தன்மை கூறிக் காற்றின் ஆற்றலை அழுத்தி உள்வாசலைத் திறக்கும் உத்தியைக் கூறுகிறார்.

## அமுர்தம்

33. பூட்டுடைத்துக் கண்டவர்கள் மெத்தவுண்டு
புத்தியுள்ளோ ரவர்களே சித்தர்சித்தர்
ஆட்டமிதிற் காண்பார்கள் அனேகங்காட்சி
அம்மம்மா வென்றார்கள் சுத்தவீரர்
காட்டம்விறு கெய்தாமற் தீயிடாமல்
கதிர்மதிக்கு மத்தியது புருவமத்தி
நாட்டமிடக் கோபுரத்தின் வாசற்பூட்டு
நாசிமுனை புருவமத்தி திறந்துகொள்ளே.

## தினமோர் காலம் சாதனை

34. திறந்துகொண்டு மேலேற நெற்றிமார்க்கம்
தீயவழி நாடாதே மூக்கின்மார்க்கம்
மறந்துவிட லாகாது தினமோர் காலம்
வாய்பிதற்று லாகாது அடக்கமாகில்
சுறந்துவிழும் பாலமுர்தம் மனதிற்றானே
தூங்கினவர் போலிருக்கு மேங்கிடாதே
கறந்துகொள்ளச் சொன்னாரே மற்றோர்வீட்டிற்
கால்வைக்கச் சொல்லவில்லை யுள்ளேதானே.

---

33. பூட்டைத் திறப்பது என்ற பயிற்சி ஞானயோகப் பயிற்சியிலே முதன்மையானதாகும்.
கதிர் - வலப்புறம், மதி - இடப்புறம்.

34. தனது உடம்புக்குள்ளேயே உட்சென்று அமுதம் உண்ணுகிற வித்தை இது. அமுதம் சுரக்கிற வகையும், அந்த அமுதத்தைப் பருகும் முறையும் கூறியவாறு.

35. உள்ளேதான் பாலமுர்தம் வடியுமென்பார்
உண்டஅன்னம் பசியடக்கும் வாரதாகும்
தெள்ளினே னிதுவிபரந் தெரிந்துகொள்ளு
தெளியாவிட்டால் யான்சொன்ன சூட்சம்பாரு
கள்ளேதான் வடியுமென்பார் உச்சிவாசல்
கட்டறுத்தா லேகோழை வடியுமல்லோ
பிள்ளைகா ளிதுவறியார் மட்டியாகும்
பேசினார் யானறுத்து மேற்சென்றேனே.

## அமுர்த விபரம்

36. சென்றேனே உச்சிநீர் தாயேயாகும்
சிரசிலுள்ள நீரெல்லாம் வாலையாகும்
சென்றேனே உச்சிமேற் கபாலவீட்டில்
சென்றதினா லுச்சியின்கீழ் கோழைகண்டேன்
சென்றேனே அதுயிறக்க முட்டிநானே
சீக்கிரத்தி லேயுடைத்தேன் கதவைத்தானே
சென்றேனே அக்கதவின் தாளே கோழை
தீயிட்டு நானெரித்தேன் மேலேதீயே.

---

35. உடம்புக்குள்ளே ஆற்றல்கள் செயல்படும்போது, அமுதம் சுரக்கிறது என்பதும் இந்த அமுதம் எல்லாச் சித்திகளையும் தரவல்லது என்பதும் சித்தர் அனுபவம்.

36. உடம்புக்குள்ளே தீமூட்டல் என்றும், நாவாலே கனலை ஏற்றித் திரிபுரம் எரித்தல் என்றும், இன்னும் பல உருவகங்களிலும் தகன வித்தையைச் சித்தர்கள் பாடியுள்ளார்கள். மேல்வாசல், உள்வாசல், ஞானவாசல் என்றெல்லாம் சொல்லப்படுகிற அக உலகின் கதவைத் திறத்தலே பயிற்சிகளில் எல்லாம் பெரிய பயிற்சியாகும்.

### யோகம்

37. தீயென்றால் மூலகனல் உச்சிவாசல்
  தீண்டிவிட்டு மேலேறிற் தீபசோதி
நீயென்றால் நான்தெரியச் சோதிசொல்லும்
  நிமிஷமுத லெக்காலும் நிகழ்த்தும்சோதி
ஈயென்றால் வாய்திறக்கும் ஞாயஞ்சொல்லும்
  இப்படியே உச்சிவெளி கபாலமேடை
ஊவென்றால் உள்மூலந் திறந்துகாட்டும்
  உச்சரிக்கு மந்திரமுஞ் சொல்லுந்தானே.

### எமன் கோழை

38. சொல்லுமே கபாலமதிற் சேர்ந்தவாசி
  சோதியொளி கண்டிடுமே கனலாற்காலால்
நில்லுமே மூலதலம் காசிகொண்டு
  நிமிர்ந்திருந்து பார்க்கவுமே பிடரியேறும்
கொல்லுமே பிடரியெமன் கோழைதன்னை
  கொட்டிவிடுங் கக்கிவிழச் சள்ளைமெத்த
வெல்லுமே யவ்விடத்திற் பின்னால்நின்று
  வேதாந்த உச்சிவர மூலம்பாரே.

---

37. சூக்கும மந்திரம் பற்றி ஏற்கனவே அவ்வையின் குறள் விளக்கத்திலும், வேறுபல இடங்களிலும் விளக்கியிருப்பதனை ஒப்பு நோக்குக.

38. உட்சோதியைக் கண்டு தெளிவதே மரணமிலாப் பெருவாழ்வு வாழுவதற்குரிய அமரநெறியாகும். நில் என்று சொல்லி நிலைநிறுத்தல் அதுவேயாகும். அப்படிச் செய்துவிட்டால், கொல் என்று வருகிற எமன் குடியோடிப் போவான் என்பது ஞானவாக்கு.

35. உள்ளேதான் பாலமூர்தம் வடியுமென்பார்
உண்டஅன்னம் பசியடக்கும் வாரதாகும்
தெள்ளினே னிதுவிபரந் தெரிந்துகொள்ளு
தெளியாவிட்டால் யான்சொன்ன சூட்சம்பாரு
கள்ளேதான் வடியுமென்பார் உச்சிவாசல்
கட்டறுத்தா லேகோழை வடியுமல்லோ
பிள்ளைகா ளிதுவறியார் மட்டியாகும்
பேசினார் யானறுத்து மேற்சென்றேனே.

## அமுர்த விபரம்

36. சென்றேனே உச்சிநீர் தாயேயாகும்
சிரசிலுள்ள நீரெல்லாம் வாலையாகும்
சென்றேனே உச்சிமேற் கபாலவீட்டில்
சென்றதினா லுச்சியின்கீழ் கோழைகண்டேன்
சென்றேனே அதுயிறக்க முட்டிநானே
சீக்கிரத்தி லேயுடைத்தேன் கதவைத்தானே
சென்றேனே அக்கதவின் தாளே கோழை
தீயிட்டு நானெரித்தேன் மேலேதீயே.

---

35. உடம்புக்குள்ளே ஆற்றல்கள் செயல்படும்போது, அமுதம் சுரக்கிறது என்பதும் இந்த அமுதம் எல்லாச் சித்திகளையும் தரவல்லது என்பதும் சித்தர் அனுபவம்.

36. உடம்புக்குள்ளே தீமூட்டல் என்றும், நாவாலே கனலை ஏற்றித் திரிபுரம் எரித்தல் என்றும், இன்னும் பல உருவகங்களிலும் தகன வித்தையைச் சித்தர்கள் பாடியுள்ளார்கள். மேல்வாசல், உள்வாசல், ஞானவாசல் என்றெல்லாம் சொல்லப்படுகிற அக உலகின் கதவைத் திறத்தலே பயிற்சிகளில் எல்லாம் பெரிய பயிற்சியாகும்.

## யோகம்

37. தீயென்றால் மூலகனல் உச்சிவாசல்
தீண்டிவிட்டு மேலேறிற் தீபசோதி
நீயென்றால் நான்தெரியச் சோதிசொல்லும்
நிமிஷமுத லெக்காலும் நிகழ்த்தும்சோதி
ஈயென்றால் வாய்திறக்கும் ஞாயஞ்சொல்லும்
இப்படியே உச்சிவெளி கபாலமேடை
ஊவென்றால் உள்மூலந் திறந்துகாட்டும்
உச்சரிக்கு மந்திரமுஞ் சொல்லுந்தானே.

## எமன் கோழை

38. சொல்லுமே கபாலமதிற் சேர்ந்தவாசி
சோதியொளி கண்டிடுமே கனலாற்காலால்
நில்லுமே மூலதலம் காசிகொண்டு
நிமிர்ந்திருந்து பார்க்கவுமே பிடரியேறும்
கொல்லுமே பிடரியெமன் கோழைதன்னை
கொட்டிவிடுங் கக்கிவிழச் சள்ளைமெத்த
வெல்லுமே யவ்விடத்திற் பின்னால்நின்று
வேதாந்த உச்சிவர மூலம்பாரே.

---

37. சூக்கும மந்திரம் பற்றி ஏற்கனவே அவ்வையின் குறள் விளக்கத்திலும், வேறுபல இடங்களிலும் விளக்கியிருப்பதனை ஒப்பு நோக்குக.

38. உட்சோதியைக் கண்டு தெளிவதே மரணமிலாப் பெருவாழ்வு வாழுவதற்குரிய அமரநெறியாகும். நில் என்று சொல்லி நிலைநிறுத்தல் அதுவேயாகும். அப்படிச் செய்துவிட்டால், கொல் என்று வருகிற எமன் குடியோடிப் போவான் என்பது ஞானவாக்கு.

## இராக்கால சாதனை

39. மூலம்பார் பின்னிடுப்பில் முடிச்செலும்பில்
முதுகுதண்டு தாரைவழி விலாவோடாமல்
காலம்பா ரிராக்காலம் கதவடைத்து
கண்மணியே பார்ப்பவர்கள் தேறுவார்கள்
சீலம்பார் முன்னோர்கள் தெளிவாய்ச்சொல்ல
சிலம்பொலியைக் கண்டதன்றி முடிவைக்காணார்
கோலம்பா ரதனாலே சாஸ்திரத்தைக்
கொட்டினார் கண்டவரைத் தீட்டினாரே.

40. ஆரென்ன யெத்தனையென் றெண்ணிச்சொல்வேன்
அய்யய்யோ சொன்னாரே முகங்காணாதார்
வாரென்ன சுழிமுனையுஞ் சிலம்புங்கண்டு
வாய்கொண்டு பிதற்றினரே கண்டத்தாலே
தூரென்ன கொண்டைக்கால் மூலந்தொட்டு
தும்பிமுகன் நடுமூலம் உச்சிமூலம்
கோரென்ன சொன்னாரோ யிடுப்பின்மேலே
குண்டலியைச் சொன்னாரே உச்சிமட்டே.

---

39. ஒலிகேட்டல் என்பதும் ஞானப் பாதையிலே ஒரு தொலைக்கல்லே யாகும். அதுவே குறிக்கோள் என்று எண்ணிவிடக் கூடாது . நடந்தேகும் படிகளிலே அமர்ந்து விடாமல் மேலே மேலே ஏறவேண்டும் என்பது உட்கிடை .

40. தும்பிக்கை என்ற தத்துவத்தை முன்பகுதிகளில் விளக்கியுள்ளமை காண்க .

வாய்வாதங்கள் பேசுவதும் வித்தாரங்கள் செய்வதும் அறிவுக்கு உகப்பாக இருக்கலாம் . ஆனால் அனுபவ ஞானத்துக்கு ஒவ்வாத செயல் அது. குண்டலினியை எழுப்புவது என்பது வாய்ப்பேச்சில்லை . பயிற்சியினால் வரவேண்டிய ஒரு மகத்தான அனுபவம் ஆகும் .

## குண்டலி யோகம்

41. உச்சிதலை நெற்றிவிழி புருவமத்தி
உரச்சங்கு மார்புநெஞ்சு உந்திமூலம்
பிச்சிகலை யிடுப்பின்கீழ் முழங்கால்பாதம்
பெரும்பாடு விரல்நிகக்கண் வாசிபாய
கச்சிக்கலை சொன்னாரோ முத்தர்சித்தர்
கால்வாசி கால்யோகம் காணாப்பித்தர்
கொச்சிநரை சொல்லவில்லை வெழுந்தமார்க்கம்
குண்டலியைக் கண்டக்காற் கருக்கும்பாரே.

42. குண்டலியைக் கண்டக்காற் கருக்குமென்பார்
குண்டலியி னிருப்பிடமும் மூலமென்றார்
குண்டலிதா னென்றாக்கால் நரம்போதோலோ
குருத்தண்டோ முள்ளெலும்போ பிடரிமயிரோ
குண்டலியே யென்றவர்கள் பெயரார்சொன்னார்
கொத்தளத்தின் பெருமைதனைச் சொல்லினார்கள்
குண்டலியே வாய் திறக்கப் பேசுமென்றார்
குரு வென்றார் வாலையென்றார் குமரென்றாரே.

---

41. குண்டலினி செல்லும் வழியை விளக்குகிற இந்த வரிகளில் மாணவர்கள் முழுமையாக அந்த ஆற்றலைப் புரிந்துகொண்டு பயிற்சிமேற்கொள்ள வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்துகிறார்.

42. அருவமான ஆற்றலைப் புரிந்துகொள்ளாமல் அதை வசமாக்க முனைவது மடமையாகும்.

மரணத்தை வெல்லுவது என்பதோடு கூட, முதுமையினையும் நரைதிரைகளையும் வென்று யௌவனமாக வாழ்தல் என்பதையும் மாணவன் புரிந்துகொள்ள வேண்டும்.

43. என்றவர்கள் பஞ்சபூத அந்தங்காணார்
இறைக்குறேன் நீரூற்றுக் கிணறுபோல
குன்றதனின் மேலிருந்து வீழ்வார்போல்
குதித்தாலுந் தரையதனில் நிற்பார்போல
நின்றவர்கள் கைமல்லுக் கட்டுவார்போல்
நிகழ்த்துகிறேன் யோகமல்லு குண்டலித்தாய்
வென்றவர்கள் தன்னுக்குள் காணுமார்க்கம்
விதிக்கிறேன் உச்சிதொட்டுப் பாதமட்டே.

## தன்னுக்குள் காணுமார்க்கம்

44. மட்டேதான் மனமிருந்த உயிரேநாடி
மறைவேதங் குடியிருந்த தண்டுநாடி
எட்டேநீ நாக்கினடி மூலபீசம்
யிதுமத்தி கயிறொன்று திருகுகம்பி
முட்டேநீ வாசிதொண்டு கனலெழுப்பி
முகம்மேலே நேர்நிமிர்ந்து கயறெழும்பும்
விட்டேநீ தாண்டிவரச் சாண்கிழம்பும்
வில்லங்கந் தொப்புளின்மேல் வில்லங்கந்தானே.

---

43. தம்பனம் என்பது ஒரு ஞானவித்தை . தனக்குள் தான் கட்டிநிற்றல் என்பது சிக்கலான வழியன்று. அது ஆற்றல்களை அடக்கி அவற்றின் வலிமையை அதிகப்படுத்துகிற முறையாகும்.

44. முதுகுத்தண்டு பயிற்சியிலே, கயிற்றைச் சுண்டி இழுப்பதுபோல் ஆற்றலைச் சுண்டுகிற முறை ஒன்று உண்டு. பட்டம் பறக்கவிடும்போது கயிற்றைச் சுண்டுவது, பட்டம் மேலே மேலே எவ்விப் பறக்க வேண்டும் என்பதற்காக! யோகப் பயிற்சியிலும் காற்றும் கயிறுமாகச் சுண்டுதல் என்னும் முறை இதுவேயாகும்.

## குண்டலி விபரம்

45. வில்லங்க மதுகடக்க முடியாதய்யா
விதிவிலக்கு அன்னசுவை கொடியபட்டினி
சொல்பங்க மாகாது தூக்கமாகா
துரும்புபோ லேயிருக்கஞ் சதையேமாறும்
நெல்லங்கம் போல்வெழுக்கும் கண்ணோகூசும்
நிமிஷத்திற் பித்தநீர் படியிறங்கும்
மல்லங்க மானதுபோல் விதவைகற்பம்
மரணத்துக் கொப்பான துன்பந்தானே.

46. துன்பந்தான் குண்டலிதான் நாலுங்காலம்
துயரென்ன வயறுவலிக்கும் பிரண்டுருண்டு
இன்பந்தான் தொப்புள்நீ ரிறங்கிற்றானால்
இதுபெரிதோ மார்பில்வருங் குண்டலித்தாய்
அ்ன்பந்தான் நமதழுக்கே நெஞ்சிலேறி
அதுநஞ்சு தாண்டிவிடுந் தொண்டையேறி
துன்பந்தான் போய்த்தொலையும் வாரைப்போல
தும்பிக்கை நீட்டிவிடும் உச்சிமேலே.

---

45. குண்டலியின் ஆற்றல் எழுந்து இயங்கத் தொடங்கும் போது, சில வேதனைகள் ஏற்படும். பாற்கடலைக் கடையும்போது அமுதம் வருவதற்குமுன்பு ஆலகால விடம் வருவதுபோலே, ஆன்மப் பயிற்சியில் ஈடுபடுகின்ற மாணவர்கள் இந்த உற்பாதங்களுக்கு ஆயத்தமாகவே இருக்கவேண்டும் என்பது கருத்து.

46. தொடக்கத்தில் ஏற்படுகிற இடையூறுகளின் துன்ப வேதனையைக் கடந்துவிட்டால் பிறகு விளையும் நலன்களுக்கு அளவே இல்லை. உடம்பு தாங்க முடியாத அளவுக்கு நோவுகள் ஏற்பட்டாலும் விபரீத விளைவுகள் நேரா என்ற தெளிவுடன் பயிற்சியைத் தொடரவேண்டும்.

43. என்றவர்கள் பஞ்சபூத அந்தங்காணார்
இறைக்குறேன் நீரூற்றுக் கிணறுபோல
குன்றதனின் மேலிருந்து வீழ்வார்போல்
குதித்தாலுந் தரையதனில் நிற்பார்போல
நின்றவர்கள் கைமல்லுக் கட்டுவார்போல்
நிகழ்த்துகிறேன் யோகமல்லு குண்டலித்தாய்
வென்றவர்கள் தன்னுக்குள் காணுமார்க்கம்
விதிக்கிறேன் உச்சிதொட்டுப் பாதமட்டே.

## தன்னுக்குள் காணுமார்க்கம்

44. மட்டேதான் மனமிருந்த உயிரேநாடி
மறைவேதங் குடியிருந்த தண்டுநாடி
எட்டேநீ நாக்கினடி மூலபீசம்
யிதுமத்தி கயிறொன்று திருகுகம்பி
முட்டேநீ வாசிதொண்டு கனலெழுப்பி
முகம்மேலே நேர்நிமிர்ந்து கயறெழும்பும்
விட்டேநீ தூண்டிவரச் சாண்கிழும்பும்
வில்லங்கந் தொப்புளின்மேல் வில்லங்கந்தானே.

---

43. தம்பனம் என்பது ஒரு ஞானவித்தை. தனக்குள் தான் கட்டிநிற்றல் என்பது சிக்கலான வழியன்று. அது ஆற்றல்களை அடக்கி அவற்றின் வலிமையை அதிகப்படுத்துகிற முறையாகும்.

44. முதுகுத்தண்டு பயிற்சியிலே, கயிற்றைச் சுண்டி இழுப்பதுபோல் ஆற்றலைச் சுண்டுகிற முறை ஒன்று உண்டு. பட்டம் பறக்கவிடும்போது கயிற்றைச் சுண்டுவது, பட்டம் மேலே மேலே எவ்விப் பறக்க வேண்டும் என்பதற்காக! யோகப் பயிற்சியிலும் காற்றும் கயிறுமாகச் சுண்டுதல் என்னும் முறை இதுவேயாகும்.

## குண்டலி விபரம்

45. வில்லங்க மதுகடக்க முடியாதய்யா
விதிவிலக்கு அன்னசுவை கொடியபட்டினி
சொல்பங்க மாகாது தூக்கமாகா
துரும்புபோ லேயிருக்கஞ் சதையேமாறும்
நெல்லங்கம் போல்வெழுக்கும் கண்ணோசுசும்
நிமிஷத்திற் பித்தநீர் படியிறங்கும்
மல்லங்க மானதுபோல் விதவைகற்பம்
மரணத்துக் கொப்பான துன்பந்தானே.

46. துன்பந்தான் குண்டலிதான் நாலுங்காலம்
துயரென்ன வயறுவலிக்கும் பிரண்டுருண்டு
இன்பந்தான் தொப்புள்நீ ரிறங்கிற்றானால்
இதுபெரிதோ மார்பில்வருங் குண்டலித்தாய்
அன்பந்தான் நமதழுக்கே நெஞ்சிலேறி
அதுநஞ்சு தாண்டிவிடுந் தொண்டையேறி
துன்பந்தான் போய்த்தொலையும் வாரைப்போல
தும்பிக்கை நீட்டிவிடும் உச்சிமேலே.

---

45. குண்டலியின் ஆற்றல் எழுந்து இயங்கத் தொடங்கும் போது, சில வேதனைகள் ஏற்படும். பாற்கடலைக் கடையும்போது அமுதம் வருவதற்குமுன்பு ஆலகால விடம் வருவதுபோலே, ஆன்மப் பயிற்சியில் ஈடுபடுகின்ற மாணவர்கள் இந்த உற்பாதங்களுக்கு ஆயத்தமாகவே இருக்கவேண்டும் என்பது கருத்து.

46. தொடக்கத்தில் ஏற்படுகிற இடையூறுகளின் துன்ப வேதனையைக் கடந்துவிட்டால் பிறகு விளையும் நலன்களுக்கு அளவே இல்லை. உடம்பு தாங்க முடியாத அளவுக்கு நோவுகள் ஏற்பட்டாலும் விபரீத விளைவுகள் நேரா என்ற தெளிவுடன் பயிற்சியைத் தொடரவேண்டும்.

47. உச்சிமேல் கைகாட்டும் பொங்கிச் சாயும்
உறுமுகிடாய் திருகுகொம்பு போலத்தானே
எச்சியே தான்விசுறும் உச்சிமூக்கால்
யிடதுகையைப் பற்றியவள் எதிர்நிற்பாள்காண்
குச்சியே குண்டலித்தா யதனில்நிற்பாள்
கொடுங்குமரி வர்ணமதை யென்னசொல்வேன்
பிச்சியே கேட்டதெல்லா மிந்தாவென்பாள்
பார்க்கவே கன்னிசிறு ரூபமாமே.

## வாலை

48. ரூபமே நாமமே ரூபாரூபம்
நுவலுகிறேன் வாலையென்றும் வெளியேயென்றும்
நாமமே கன்னியென்றும் மந்திரமென்றும்
நவிலுஞ்சொல் மொழியென்றும் கற்பமென்றும்
காமமே யிச்சையென்று மனதேயென்றும்
கண்டவர்கள் சத்திசிவ மாய்கையென்றும்
நாமமே வாசிபர தேசிபிர்மம்
நாடியுதித் தொடுங்குமிட மறிந்துபாரே.

---

47. குண்டலினி வசமாகும்போது ஏற்படுகிற பேரின்ப விளைவுகளைப் பேசுகிறது இப்பாடல்.
குண்டலினி என்ற ஆற்றல் தாய் என்று அழைக்கப் பெறுகிற கருணைமயமான சக்தி. அந்தத்தாய் நின்று இயங்குகிற பாங்கை விளக்குகிறது இந்தக் கருத்தாழம் மிக்க பாடல்.

48. வாலை என்ற கன்னித் தெய்வத்தின் மேன்மைகளை ஓதுகிறார். தாயாகிப் பால் கொடுப்பவளும், தாரமாகி இன்பம் தருபவளும், தாய் என்று சொல்லித் தந்தையாகவும் செயற்படுபவளும் - எல்லாமே அவள்தான்.

49. இடமறிந்தோ ரித்தனையுங் காணவேணும்
இல்லறத்தி லிருந்தாலும் பூணவேணும்
சடமென்ன குடிசையென்ன மடந்தானென்ன
தாதுநிலை கண்டாலாச் சிரமமென்ன
குடமென்ன நீர்நிறைந்தாப் போலேவாசி
குண்டலியைக் காணார்க்கு மாயமாகும்
தடமென்ன யிதையறிந்தால் வழியதாகும்
சித்தசிவ மால்காமி யறியலாமே.

## அமுர்த விபரம்

50. அறியலாம் லட்சுமியான் புத்திரனோடு
அவர்மனைவி யச்சரமுங் கூறலாகும்
புரியலா மண்ணாக்கி லமுர்தவாசல்
புண்திறந்து வாசல்கண்டு ஒளியலாகும்
தெரியலா மச்சரத்தி னாதியந்தம்
தேறலாம் அண்டமதில் அஷ்டலாபம்
புரியலா மஷ்டாவ தானங்கோட்டி
பூரிக்கு முள்ளமுர்தம் பொங்கும்நெஞ்சில்.

---

49. புறவாழ்வின் முறைகளைப் பொறுத்து அமைவதில்லை குண்டலியின் செயலாற்றும் திறன். எந்தத் தொழிலில் அல்லது எந்தத் துறையில் அல்லது எத்தகைய வாழ்க்கை முறையில் ஒருவன் இருந்தாலும் குண்டலினி மாறுபடுவதில்லை. அந்த ஆற்றலின் வல்லமை வெளி வாழ்வைப் பொறுத்து அமைவதில்லை.

50. சூக்கும அட்சர நிலையைப் பற்றிய குறிப்பிலே முன் பகுதிகளில் விளக்கியுள்ள நுட்பங்களே இந்தப் பாடலில் பேசப்படுகின்றன. குண்டலினி எழுந்து வேலைசெய்யும்போது அதன் வல்லமைகள் உடம்பிலும் அதன் இயக்கத்திலும் வெளிப்படுகிற நேர்த்தியை மொழிந்தவாறு.

51. நெஞ்சிலொரு தோற்றமதை யென்னசொல்வேன்
நிகழ்காலம் வருங்காலம் செல்காலத்தே
துஞ்சிலேன் நானிருந்து பார்த்துமஞ்சேன்
துயருற்றோர் பாலிருக்குந் துயரேசேர்வேன்
மிஞ்சிலேன் பரமின்றிப் பிரியேன்சேரேன்
மெய்மெலிந்த என்துயரே சுகமேமிச்சம்
அஞ்சிலே யானிருந்து பார்த்தபார்வை
அப்படியே ஆரிட்ட சாபந்தானோ.

52. ஆனோர்கள் சொல்லெல்லாம் வீண்போகாது
அண்டயிடி தடுப்பதற்கும் அவர்தானாகும்
மானார்களில் இவரே யெமனைவென்றோர்
வாய்பிதற்றார் வாய்பிதற்றில் குற்றமாகும்
வானோர்கள் நோக்கிடிலோ யெதிரேசெல்வார்
வானோர்க்குத் தானவரும் யிதன்மேலாகார்
மீனோர்கள் கூட்டமதில் பெரிதாம்ஞாயிறு
வெண்மதியும் பொன்மதியு மெட்டாதுபாரே.

---

51. '**அநுபூதி** நிலை' என்றும், 'தன்வயம்' என்றும், 'சாதனை' என்றும் பற்பல பெயர்களிலே அழைக்கப் பெறுகிற பேரின்பம் எண்ணி எண்ணித் துய்த்தற்பாலது. அந்தநிலை ஏற்பட்டுவிட்டால் பிறகு ஆனந்தம் ஒன்றுமே மிஞ்சுகிறது.

52. ஆனோர்கள் - சித்தி பெற்ற ஞானிகள், சித்தர்கள். மானோர்கள் - மானுடப் பிறவி யெடுத்தவர்கள். மீனோர்கள் கூட்டம் - வானமண்டலம். ஞானம் கைவரப் பெற்றவர்களின் நிலையைப் பேசுகிறது இந்தப்பாடல்.

5[3]. எட்டாது கொட்டாவி யிட்டாற்போல
யேங்கிமனம் புண்ணாகி நைந்தாற்போல
பட்டார்கள் தங்களுக்கு எறும்புசயை
பருந்தெடுத்த கோழிக்குஞ் சவரேயாகும்
விட்டார்கள் தங்களுக்கு மேருபோல
மேலேறுந் தன்மனது மேருவைப்போல்
குட்டான தைதயறிந்த விஷயத்தாலே
குருமுனிபே ரானாரே குருவாவாரே.

54. குருவாழ்வு வானோர்கள் குலத்துக்கெட்டா
கோடான கோடிவித்தை குலத்துக்கெட்டும்
பெருவாழ்வு கீழ்மேலு மில்லையில்லை
பேரின்ப மல்லயிது தூருமின்பம்
திருவாழ்வு நம்மளுக்குள் தேனீப்போல
தேடிவைப்பாய்! தேனதனைக் கூட்டிற்சேர
மருவாழ்வு நாமானோ மிதுபாராதால்
மாய்கையெனச் சொன்னதென்ன மறத்தல்தானே.

---

53. 'நவநீதக் கைவல்யம்' போன்ற நூல்களில் சொல்லப்பட்டுள்ள நல்லாசான் இலக்கணத்தோடு ஒப்பு நோக்கத்தக்க பாடல்.

54. ஞானத்தோடு இயைந்து வாழ்தலின் மேன்மையைச் சொல்லி, பக்குவிகளுக்கு அதன் இன்றியமையாமையை வற்புறுத்தியவாறு.

## உட்கருவு

55. தானேதா னுடலுயிரும் ரெண்டிருக்க
தங்குமுடல் நின்றுவிடு முயிர்தான்சீவன்
வீணேதா னுடலெடுக்கப் பிறவியாச்சு
மெய்யெடுக்கக் காரணமே யிதுதானாகும்
ஆணேநீ யானாற்குண் டலியைப்பாரு
அம்மியுடல் தேய்ந்ததுபார் குழவியாலே
காணேநீ யவ்விரண்டுந் தேய்ந்ததல்லால்
கல்மனமுந் தன்னினைவாற் தேய்ந்துபோமே.

56. போகுமது யெப்படியென் றெண்ணிடாதீர்
பொறிபுலனுஞ் சண்டையிடல் குழவிஅம்மி
ஆகுமது நாமரைக்கத் தேய்ந்தாற்போல
ஆனங்க னிட்டுவர அரைக்கும்வாசி
வேகுமது உள்கருவி காய்ந்ததாலே
வெள்ளாமை நீர்பாய்ந்து விளைவுபோல
சாகுமது நீரில்லாக் காய்ந்தாற்சாவி
சந்ததிகள் உள்கருவி கொல்லுவாயே.

---

55. உடம்போடு உயிருக்குள்ள பிணைப்பு எப்படி இருக்கிறது என்பதை ஒரு ஞானியின் தெளிவோடு பாடுகிறார் முனிவர். இரண்டும் ஒன்றாக இருப்பினும் உடம்பை விட்டு போய்விடுகிறது. பிறகு பிறவி எடுப்பதற்காக உடம்பை நாடுகிறது!

56. உயிர் உடலைவிட்டுப் போகும் பாங்கைச் சிந்தனை செய்தால் பயங்கரமான உண்மைகள் புலனாம். அம்மியை அரைத்து அரைத்துக் குழவி தேய்வதை அழகான முறையில் உவமையிட்டுக் கூறுகிறது பாடல்!

57. வாவென்றால் வருவாரோ கொடுக்கார்பக்கம்
வருபவர்பால் வருவார்கள் கண்ணிற்தோணார்
தாவென்றாற் தருபவர்க ளஞ்சினோர்கள்
தருவார்கள் காலமறிந் துணர்ந்தபேர்கள்
தோவென்றா லோடிவரும் நாயைப்போலத்
தொல்புலித்தோல் நல்லாடை சாற்றிக்கொள்வர்
காவென்றாற் கூடுகிற கூட்டம்போலக்
கல்லெறிந்தா லோடுவரே காகம்போலே.

58. காகம்போற் கூடியவர் வாசிபார்த்தோர்
கல்லெறிந்த சொல்லறியார் கலையைக்காணார்
வேகமாய்ச் சொல்வார்கள் சாஸ்திரமார்க்கம்
விரைந்தேறச் சொல்லுவது குருவின்மார்க்கம்
நாகம்போல் நாக்கிரண்டு வைத்துக்கொண்டு
நடுமார்பி லுதிப்பதனைக் கண்டுவிட்டார்
தேகம்போல் நாமிருக்க அருளிருக்க
திருவருளால் வாலையவள் பதத்தைக்காணே.

---

57. கொடுக்கார்பக்கம் - உலோபிகளின் பக்கம்.
தா என்றால் - யாசித்தல்.
தோ என்றால் - நாயை அழைக்கும் மொழி.
கா என்றால் - கா கா கா என்று கூவிக் காகங்களை அழைத்தல்.
கல்எறிந்தால் - கல்லை விட்டெறிந்தால்.

58. சாஸ்திரமார்க்கம் - நூலறிவின் வழிசெல்லல்.
குருவின்மார்க்கம் - ஆசான் நேரில் வந்து உணர்த்துகிற பயிற்சிவழி.
விரைந்தேறல் - விரைவாக முன்னேறுதல்.

## மனதே தெய்வம்

59. காணுவது மனதென்ன கள்ளமென்ன
கள்ளமது மாய்கையெது மனதேதெய்வம்
பூணுவது மனதுருமை மனதேகாட்சி
புழுக்கூட்டி லேயிருக்கும் ஞாயஞ்சாட்சி
தோணுவது தன்மனதிற் காட்சிரூபம்
தொந்தோமென் றாடிடுமே கள்ளமின்றி
பேணுவது சலனமது அன்னத்தாலே
பேருரையா ரூபமதின் தெய்வமாமே.

60. தெய்வமன தேவிரிந்து ஒளிவாஞ்சோதி
திருவருளின் ரூபமது அருளேசாட்சி
நைவாமெனச் சொன்னாலே நய்யச்செய்யும்
நலியுமென்ன செய்வமெனில் நெஞ்சைநண்ணி
செய்வதென்ன நெஞ்சதனில் ஓடைபோல
திடல்திடலாய்க் கூட்டுநெஞ்சு பள்ளங்காணும்
பொய்யதுவும் செல்லாது யெல்லாம்போகும்
புலாலெலும்பு தோல்கூடு மீதம்நீரே.

---

59. எண்ணத்தினால் விளைகிற ஆன்மசொரூபத்தை இயம்பியவாறு.

60. அருட்பெருஞ்சோதி என்று அழைக்கப்பெறுகிற ஒளிக்காட்சி ஞானப் பாதையிலே செல்கிற மாணவனின் அனுபவமாகும். அதைத் திருவருளின் ரூபம் என்கிறார். அதுவே 'பொய்வளரும் நெஞ்சினர்கள் காணாத காட்சி' என்று தாயுமானவர் பாடுகிற சோதி தரிசனம்.

61. மீதம்நீ ருடலுயிரும் நினைவும்போகும்
வேதாந்த மாகருவும் உள்ளேநிற்கும்
நாதம்நீர் அண்ணாக்கு வாசல்மார்க்கம்
நாம்நினையா தேயிருந்தும் பேசும்வாசல்
பேதம்பார் பரிவாசை யாகப்பாடும்
பொய்யதுவுந் தான்தெரியும் மெய்யுங்காணும்
நீதம்பா ரத்தனையும் தானேகாணும்
நில்லும்நில்லும் நானறிவேன் நினைத்தமார்க்கம்.

## குறுக்கு மார்க்கம்

62. மார்க்கம்போல் நேர்வழியே குறுக்குமார்க்கம்
வாய்வழியே தான்வந்து வாசியேறும்
தீர்க்கம்போற் செப்பிவிடும் வாசிவாசி
செயவாசி கூறிவிடும் வாசிபாசை
கார்ப்பதுபோற் சொல்லிவைக்குந் தனக்குமுன்னால்
கண்டுகொள்ளும் பின்னாலே துடர்ந்துசெல்லும்
சேர்ப்பதுபோற் சொல்லிவைக்கும் பொருந்திடாதே
தீண்டாதே நீயிருந்து வாங்கிநில்லே.

---

61. மெய்யுணர்வு என்பது காட்சி அனுபவமும் ஆகும். எது நித்தியம், எது நிலையற்றது என்ற தெளிவுக்குக் காரணமான அகக்காட்சி கிட்டிவிட்டால் அதுவே பேரறிவிலே பிறக்கும் பேரின்பநிலை.

62. மூச்சுப் பயிற்சியின் நுட்பமான போக்கு பேசப் பெறுகிறது. வாசி யோகத்திலே பயிலும்போது மூச்சு இழைகிற நிலையை உணர்வு தெளிகிறது. இரண்டற்ற நிலையிலும் மூச்சின் இயக்கத்தை இயக்குகிறது.

63. நில்லாதே போனாக்கா லிருள்விழுங்கும்
நிமிஷத்திற் சொக்கிவிடுஞ் சடலந்தோணா
செல்லாதே அவ்விடத்தில் வெகுவாம்பள்ளம்
சிக்கினவர் மெத்தவுண்டு கரையேறாமல்
கொல்லாதே நாம்பிழைக்கச் செய்தவித்தை
கொல்லுமெம னிருக்குமிடஞ் சொக்கதாகும்
கல்லாதார் சாஸ்திரத்தைப் பாராமற்றான்
கரையேற நினைப்பவர்கள் கிறுக்காவாரே.

64. கிறுக்காவார் பித்தவெறி வந்துசேறும்
கிருகிறெனச் சுழலுமனம் அறிவைவிட்டார்
கிறுக்காவார் சொல்லெல்லாம் வேதமாகா
கிட்டினதை யறியாதார் முற்றுமாகார்
கிறுக்காவார் தவசுமுறை காணாமாந்தர்
கேட்டதற்குப் பதிற்சொல்லார் செவிகொடார்கள்
கிறுக்காவார் பரிபாஷை சொல்லென்பார்கள்
கேள்வியற்றார் பார்வையற்றார் நாவற்றாரே.

---

63. நிலைநிறுத்துகிற வாசிப்பயிற்சி அறியாதார் விபரீத விளைவுகளுக்கு உள்ளாவர்; மூளைகெட்டுக் கிறுக்குப் பிடித்த பித்தராகப் போய்விடுவார்கள்.

64. வாசியோகத்தைச் சரியாகச் செய்யாவிட்டால் கிறுக்குநிலை வந்துசேரும். புத்தி தடுமாறும். அவமுறை காணாத மாந்தரான இவர்கள், நற்கேள்விக்குச் செவிகொடாதவர்கள்! அவர்களைச் செவிடர், குருடர், ஊமையர் என்றே கூறிவிடலாம்.

65. அற்றார்க ளிம்மூன்று மில்லாஞானி
அறிவில்லார் தங்களுக்கு யோகிதானே
உற்றார்கள் சாஸ்திரத்தைத் தொட்டபேர்க்கு
உருகிவருஞ் சொற்களது ஆதியந்தம்
பெற்றார்கள் சொல்வதுதான் முறையாய்ச்சொல்வார்
பிசகாது ஒருநாளும் நேரேசொல்வார்
முற்றார்கள் கேட்பவர்க்குக் கவிழ்ந்துசொல்வார்
முன்னின்று கேட்டாலுந் திரும்பிடாரே.

66. திரும்பிக்கொள் வாரவர்கள் சித்தர்தானோ
செப்பினதைக் கேளாதார் பெரியோர்தானோ
திரும்பிக்கொள் மனமிருக்கச் சந்தேகத்தால்
தேசத்தில் சுகித்தறியா விருதாஞானி
திரும்பிக்கொள் உலகருமே ஓடிப்போவார்
தேசத்தில் ஞானிபரி பாஷையென்பார்
திரும்பிக்கொள் ளுலகத்தோர் கேட்டதற்குச்
சிவபூசை செய்ததுபோற் புலம்புவாரே.

---

65. ஆசான்களில் குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளாது , குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்கிறவர்கள் படுகிற அவதியை முன்பகுதிகளில் பார்த்தோம் .
திருமூலரும் தாண்டவராய சுவாமிகளும் விளக்கியுள்ள பகுதிகளைப் போலவே காகபுசுண்டரும் இவ்வுண்மையை எடுத்துக்கூறுகிறார் .

66. போலிவேடங்களும் போலி ஆசாரங்களும் நிரம்பியுள்ள மனிதர்களின் தன்மையைப் பேசுகிறது இந்தப் பாடல். ஐயங்களைத் தீர்க்க வல்லமையற்று வீணே பரிபாஷையின் மீது பழிபோட்டுத் தப்பித்துக் கொள்ளும் போலிச் சாமர்த்தியத்தைச் சீறுகிறார் முனிவர் .

67. புலம்புவா ரதுபிரித்துத் தெரியவேணும்
புகன்றவர்கள் நிமிஷமொரு வருஷங்காணார்
அலம்புவார் மார்பழுக்குத் தெரியாதாலே
அய்யய்யோ வென்றவர்கள் கலங்கினார்கள்
சிலம்பொலிக்கு மென்தாயார் சொல்லின்வித்தை
சிறுநிமிஷம் பெருவருஷம் கணக்காய்ச்சொல்லும்
தலம்புபோல் வேணதெல்லாஞ் சரியாய்ச்சொல்லும்
சமத்தர்களைக் கண்டறிந்து ஏதுஏறே.

## ஞானம்

68. ஏறுங்காண் முற்றறிவு தெளிந்துள்ளோர்கள்
இதயமதில் நடமாடும் உதயங்காணும்
கூறுங்கா ணாகியந்த மிருந்ததெல்லாம்
குமுறியிடு மேகநீ ரிரைச்சல்போலச்
சேருங்காண் மழைத்துளிபோற் சேருஞ்சேரும்
சென்றேறக் காற்றிழுக்கும் வாசியோகம்
மீறுங்காண் முற்றிவிடக் கெர்ச்சிக்குந்தான்
முடிவான முட்டுதல்போ லொளியுங்காணே.

---

67. மெய்யைப் பொய்யினின்றி வேறு பிரிக்கக் கண்டு கொள்ள வேண்டியதன் அவசியத்தைக் கூறியபடி.

68. ஞானிகளின் நிலை கூறுகிறார்.
முற்றறிவு - முழுமையான பதிஞானம்.
உதயம் - ஒளியின்வரவு.
குமுறியிடு மேகநீர் இரைச்சல் - ஞான ஒழுக்கம் கூடியபோது கேட்கின்ற ஒலி.
வாசியோகத்திலே நடைபெறுகிற நாதங்களின் தன்மையைக் கூறியவாறு.

69. காணுவது ஏதென்றால் தெய்வரூபம்
கணக்கெழுதி முடியாது சொல்லிவாரேன்
பூணுங்காண் நம்மனதில் அறிவுதன்னில்
புகழ்கருத்தில் யூகம்மிகும் புலன்களோடுங்
காணுங்காண் யோகநெறி வாசியோடும்
புலனற்றோர் தன்னெஞ்சுஞ் சமமாம்பார்வை!
தோணுங்கா னித்தாதி முறைகளோடு
தூண்டிலகப் பட்டமீன் தொங்கும்போலே.

70. தொங்கினது போலல்லோ உளத்தில்தொங்கும்
தொடுகுறிகள் காண்பிக்கும் உடலைக்காட்டும்
மங்கினாப் போலல்ல சோதிபோலே
மறைவேதம் போலல்ல சித்துப்போலே
தங்கினா லிதற்குள்ளே சிக்குமல்லால்
தவஞ்செய்தோ ரானாலும் விட்டார்கெட்டார்
பொங்கினாற் கண்டுகொள்ள மாட்டார்க்கென்ன
பூதவுடல் தனைச்சுமந்து போனார்வீணே.

---

69. 'நான்று கொண்டு நிற்றல்போலே' என்று திருமந்திரம் கூறுகிற அதே நிலையைத் 'தூண்டில் அகப்பட்ட மீன்' என்கிறது இந்தப் பாடல்.

70. தானே தனக்குள் தொங்குகிறது போன்ற இந்தப் பேரின்ப அனுபவம் மகத்தானது. இதைப் பற்றிக் கொண்டு இதனுள்ளே இலயமாக நிற்றலே யோக ஒடுக்கமாகும். இதை விட்டுவிடாமல் பற்றிக்கொள்ள வேண்டும் என்கிறார்.

## பெண் ஆண் இருவருக்கும் யோகம்

71. வீணேதான் போவரென்று சொல்லிவைத்தேன்
விருதாவாய்ப் புலம்பவில்லை ஞானமெய்தும்
கூணேதா னானாக்கால் யோகங்கிட்டா
குமரிகட்குங் குமரர்கட்கும் யோகமுண்டாம்
ஆணேதான் சாண்முழமும் மூலநாடி
அமைந்திருக்கி லப்படியே யெய்தும்பாரு
காணேநீ முன்சொன்ன குறியைக் கொண்டு
கண்டவர்க ளுடன்கூடிக் கலந்துகொள்ளே.

72. கொள்ளாத பேர்களென்ன குரங்கின்குட்டி
குறியறிந்துங் கேளாதார் உயிரில்லாதார்
விள்ளாத பேர்களில்லை கேட்போரில்லை
விழலுக்கே நீரிறைத்த வாறேயாகும்
தெள்ளாத மாந்தருக்குத் தவிடுமில்லை
தீனிகுறை யாதவர்க்கு வாசியில்லை
மொள்ளாத பேர்க்கென்ன தாகமுண்டோ
மோகமுண்டோ தாகம்விண்டு மொழிகுவீரே.

---

71. பரியங்கியோகம் என்ற பகுதியில் கூறப்பட்ட இரகசியங்கள் ஒருபுறமிருக்க, வாசியோகம் செய்கிற வித்தை இருபாலாருக்கும் ஒப்பும் என்று கூறியவாறு.

72. குரங்குக்குட்டி தாயைப் பற்றிக்கொள்கிற உண்மையை அப்படியே பொருத்திப் பார்ப்பதுதான் ஞான உலகின் பயிற்சி முறையாகும். அல்லாத கடை மாணாக்கனுக்கு ஞானம் கற்பித்தல் என்பது விழலுக்கு நீர் இறைத்த தன்மையேயாம்.

73. கூறினது இத்தனையும் உமக்கெமக்கோ
கோபுரத்தின் மேல்வாசற் சாமிக்கோதான்
பாரினுட கூச்சல்வந்த தாலேசொன்னோம்
பகருவர்க ளென்றவருக் கிச்சைவேணும்
தேரிலுள்ள பொம்மையுட விழியைப்போலே
சித்திரம்போ லேயிருந்து வாசிபாரு
மாறினது காலையந்தி மறந்ததாலே
மனிதருயி ரேமறந்து உடல்கண்டாரே.

74. கண்டவர்கள் சொன்னார்கள் முன்பின்னாகக்
கருணையொடு வைத்துவிட்டேன் கருத்துநேராய்
பண்டவர்கள் சொல்லதினில் நுழைந்துபார்த்துப்
பழகிவர நாட்சிலது பலமாய்நிற்கும்
விண்டவர்கள் சொல்லதுவுங் கொஞ்சம்விள்வார்
வேதவடி வுரைகொஞ்சஞ் சமமாய்ச் சேர்த்து
தொண்டர்களா யிருந்தேதான் பார்க்கவேணும்
துயரென்று நீயிருந்து தூங்கிடாதே.

---

73. இந்த உண்மைகளைச் சொன்னது யாருக்காக என்பதைச் சிந்திக்க வேண்டும். தேரில் உள்ள பொம்மை விழித்தகண் மாறாமல் ஒடுங்கியிருக்கிறது. தேர் ஆடினாலும் அசைந்தாலும் பொம்மையின் பார்வை அதே நிலையில் இருக்கிறது. அதாவது சித்திரம்போலே நிற்கிறது. வாசியைப் பார்க்கும் மாணவன் இவ்வாறுதானே நிற்க வேண்டும்.

74. இடையூறுகளும், பயிற்சிமுறையின் கடுமைகளும் மனத்தைத் தளரச் செய்துவிடாமல் பயிற்சியில் முன்னேறவேண்டும் என்றபடி.

## கூனல் வரும் விதம்

75. தூங்கிடா தேயிருக்க எமனைவெல்லத்
தூண்டுகிறே னின்னமொரு சூட்சங்கேளு
ஏங்கிடா தேயிருப்பீர் போகுங்காலம்
இறைவயிறு கீழ்ப்பாக மேல்பாகத்தே
வாங்கிடா தேயிருப்பீ ரிந்திரியங்கள்
வயிற்றளவு பின்பாகங் கரைந்ததனால்
தேங்கிவிடு நேர்வளையுங் கூனல்தானே
தியங்கிநடு நேர்வளையுங் கூனல்தானே.

## யோகத்துக்கு சூட்சம்

76. தானானார் கோடியென்ற லெக்கம்போலே
தமர்வாசல் தான்திறந்து புக்கினார்கள்
மானான தண்டுலர்ந்தால் வருகார்தோஷி
மாதண்டு பலமிருந்தால் வருவார்நேசி
கூனார்கள் குறுகார்கள் உடலுப்பார்கள்
கோடிவித்தை கண்டவரைத் தொடர்ந்துகூடும்
வீணாட்கள் சொற்கேளாப் பிள்ளையைப்போல்
வினையோடு திரியாமல் வேலைபாரே.

---

75. சோர்வின்றி வாசியோகத்தில் நிற்கவேண்டும். யோகம் பயிலும்போது கீழ்வயிறு மேல்வயிற்றில் ஏறிச் சிக்கல் ஏற்படாதவாறு பயிலவேண்டும். இல்லையெனில் இந்த யோகம் பயிலுவதனால் கூன் விழுவதற்கு இடமுண்டு.

76. முதுகந்தண்டு வளையாமல் வல்லமையோடு இருக்க வேண்டியது மிகவும் முக்கியமாகும். வாசியோகம் பயிலுவதில் பல சிக்கல்கள் உண்டு. அதனாலேதான் நேர்முகமாகக் குருவிடம் இந்த வித்தையைப் பயிலவேண்டும்.

77. வேலையில்லா எத்தனாலே முடிந்ததாலே
விரும்பிச்செய் நிலங்காய்தல் நீரில்லாமல்
சேலையில்லா அம்மணத்தி லிருப்பாள்போல
சிறுபிள்ளை வேலையில்லா திருந்தாற்போல
வாலைவய தேமிகுத்தா லிச்சைபோல
வயிறுநிறைந்த சோம்பியர்கள் தூக்கம்போல
காலையிலு மாலையிலும் நடந்துதூரம்
கனத்தவழி துலையாதெப் போதுஞ்சென்றே.

78. சென்றேறி நடந்தினா லந்தமாடி
திருகுசுழி கேணியடி அமிர்தவாசல்
குன்றேறித் தானுண்டு நிறைந்ததாலே
குமரிகெர்ப்பம் சக்கையைப்போ லிருப்பார்சும்மா
அன்றேறி யிருந்ததுபோற் குறையாமற்றான்
அளவுநிறை மேலதிகம் ஆயுள்மட்டும்
மன்றேறி உள்விழைந்த காட்சிகண்டு
மகிழாதே உள்வேலை வெளிதோணாதே.

---

77. ஞானப் பயிற்சி என்பது பிற இச்சைகளைதத் தாண்டி ஒரே மனத்தோடு ஈடுபடவேண்டிய கல்வியாகும். சோம்பல், ஆசை ஆகியவற்றைக் கடந்து செய்யவேண்டிய பயிற்சி இது.

78. ஞானப்பயிற்சி என்பது ஒரு வழித்தடமாகும். மனஉலகிலே நடந்து செல்கிற இந்த மகத்தான சாலைவழியை உருவகத்தோடு பேசுகிறார். 'மன்றேறுதல்' என்பது சிதாகாசப் பெருவழியில் கூடிநிற்றல்.

## அறியாதார்

79. தோணாது ஜனங்களுக்கு எலும்பின்ஆணி
சொல்லறியாத் தோஷியற்குச் சுழிவுதோணா
வீணாக நாமலைந்து கெட்டோமென்பார்
மெய்நிறைந்த வாசியதைக் காணாமாந்தர்
வாணாளைப் போக்கடித்துச் சடமுங்கெட்டு
வயிறுவிழைக்குஞ் சோம்பியை யோகியென்றே
தூணாளைக் கூட்டியுண்டு சுகித்தாற்போல
துன்பமுற்றுப் பட்டினியே கிடப்பான்வீணே.

80. கிடப்பானே மண்மேலே பிணத்தைப்போல
கிருகிருத்த பித்தநீர் பெலத்தாலே
முடப்பான கால்மடித்து இருப்புங்கெட்டு
முதுகுதண்டு மேநொறுங்கி மெலிந்துநோயால்
நடப்பானே மரணநா ளறியாயோகி
நாவில்வருஞ் சொற்பலித மில்லாத்தேகி
குடப்பானை நீருண்டு மூச்சைத்தள்ளி
கும்பிடுவார் பூட்டுக்குச் சாவியாமே.

---

79. மெய்யை உணர்வது என்பது எளிதில் கிட்டுவதில்லை. முயற்சியும் இலயமும் இணைந்து பெறவேண்டிய அனுபவம் அது.

80. யோகம் சித்திக்காத உடம்பு எத்தனையோ அல்லல்களுக்கு உள்ளாகிறது என்பதைப் பாடுகிறார். முடப்பான கால் - வளைந்துபோய் முடங்கிவிடுகிற நிலை.

முதுகுதண்டு - குண்டலினி யோகத்துக்கு ஆதாரநிலையாகவும் ஞானவழியாகவும் அமைந்துள்ள முதுகந்தண்டின் பாதை.

## பொய் யோகி

81. சாவியிதில் யோகபதர் காவிகட்டி
தன்காலிற் குறடிட்டுத் தாடிகட்டி
கூவியே சொல்லறியாப் பூசைபண்ணி
குங்குமமும் வெண்ணீறும் பொட்டுமிட்டும்
மேவியதில் மொட்டையிட்டுக் கொறடுமொன்று
விறகுதலை சும்மாடு குடுமியிட்டு
தாவியதி லேநடந்து வுலகம்பூராய்த்
தான்மறந்த பாவனைபோற் கூவுவாரே.

82. கூவுவா ரோபெரியோர் உலகந்தன்னைக்
கொள்ளுவரோ தள்ளுவரோ சிறியோர்போல
தாவுவரோ தெரிந்ததனை விள்ளுவாரோ
தாரித்தர மேயதனைச் சொல்லுவாரோ
சாவுவருங் காரணத்தை நினைந்துகொண்டு
தனைக்கொல்லுங் கூற்றனொடு சண்டைசெய்யார்
மேவுவரோ கூற்றனொடு கூடார்வாடார்
மெய்வீசுங் காற்றுலவு கொண்டார்பாரே.

---

81. போலிவேடத்தர் செய்கிற ஆடம்பரங்களையும் அவர்களுடைய பாசாங்குகளையும் பேசுகிறார் முனிவர்.

குறடு - காலிலே மாட்டுகிற மரக்கட்டை. தாடிகட்டி - ஞானத்தோடு ஒட்டாத தாடியை வேடமாக வளர்த்து.

82. பெரியோர்கள் நிலை இவ்வாறாகவா இருக்கும்? இப்படிப்பட்ட போலிச் செயல்களை அவர்கள் செய்யமாட்டார்கள் என்றபடி.

83. கொண்டார்க ளுடலுயிரைப் பகுத்துக்கொண்டு
கோடிவித்தை கண்டார்கள் முத்திசித்தி
தண்டார்க ளொவ்வொன்றைக் கண்டுகொண்டு
சாதித்துப் பெற்றோமே யென்றுஎண்ணி
உண்டோர்கள் பேச்சுரையுங் கைபாகங்கள்
உப்போடு கைப்பறிந்து தெளியுமுன்னம்
திண்டோர்கள் பொய்கொண்டு சாவாரானார்
சிறுபிள்ளை ஆக்கியிட்ட சமையலாச்சே.

84. சமையலாய்ச் செய்வதற்குச் சாமானங்கேள்
தவசுமுறை யுடற்கூறு நன்றாய்ப்பாரு
அமையலாய்க் காயடுப்பு மூலம்பாரு
அனலிலிட நெஞ்சுநடு மனச்சாமான்கள்
சுமையலா வேயிருக்க மேட்டுநெஞ்சில்
துண்டிவிக்கும் நல்லறிவுக் கூடக்கூட்டிக்
கமையலாய்க் காயாமல் ஒன்றுசேர்ந்து
கார்பசிக்கி யிட்டகதை கருத்திற்கீயே.

---

83. யோகம் என்பது உடலுக்குள்ளே நடைபெறுகிற ஒரு சமையல் முறையாகும். உண்மையான முறையைத் தெரிந்துகொள்ளாமல் விபரீதங்களுக்கு ஆளாவதைக் கூறுகிறார்.

84. உடம்புக்குள்ளே சமையல் என்பதை மேலும் விரிவுபடுத்துகிறார்.

மூலக்கனலே இந்த ஞானச் சமையலுக்கு அடுப்பு என்கிறார். சமையலுக்கு வேண்டிய பொருள்கள் யாவை? மனச்சாமான்கள் என்பது ஞானியின் வாக்கு!.

85. ஈயப்பா கோடிதனங் கேட்டாலுந்தான்
இல்லறத்தி லிருக்கவைப்பார் துறவுக்கியார்
பேயப்பா உன்பொருளும் பெரிதோசொல்லு
பித்தர்களென் றெண்ணாதே பொருளைக்கேட்டால்
நாயப்பா பொருள்கொடுக்காத் தோஷிநீயும்
கஞ்சிக்கி ஃபனையலைய வைக்கவோதான்
நீயப்பா கொடுத்தலுடன் நான்கொடுப்பேன்
நிச்சயமாய் யிதுகொடுத்தாற் பின்னீவேனே.

86. ஈவேனோ திரிகால வர்க்கந்தன்னை
என்னெதிரில் மண்தின்று போவாருக்கு
காவனோ நானிருந்து முழிப்பதேனோ
கஞ்சிகுடி யென்றுசொன்ன பையனுக்கோ
மேவனோ நீயிருவே கீழேதானே
மேலிருந்தோன் கீழிருந்தாற் பாவந்தானே
ஆவனோ நானுனையுஞ் சேர்ந்தால்தோஷம்
அய்யய்யோ குருவென்பான் உள்நின்றானே.

---

85. ஞான உலகிலே உள்ள ஒரு பெரிய சங்கடம், போலிகளையும் மெய்யர்களையும் இனம்பிரித்துக் கண்டுகொள்வது எளிதில்லை. பொருள்கேட்கும்போது போலியிடம் ஏமாறுவதுண்டு. மெய்யான ஞானியிடம் ஈயாமல் இருப்பதுமுண்டு.

86. மண்தின்று போவார் - இந்த உடம்பைப் பாதுகாத்து ஞானப் பேடகமாக மாற்றாமல் வீணே வாழ்ந்து மண்ணுக்கு இரையாக்கும் பேதை மக்கள்.

உண்மையான குரு எங்கே நிற்கிறான்? உள்ளுலகிலே என்றபடி.

## பரதேசி

87. நின்றவனும் வெளியில்வர வெட்கமாவான்
நெடுங்காலஞ் செலுமோவென் றெண்ணிக்கேட்பான்
குன்றேற வேணும்நா மென்றேசொல்வான்
குருவென்பான் திருவறியான் குதர்க்கச்சொல்லான்
சென்றேற நாமிருவர் போதுமென்பான்
சீவனங்கள் செய்வதற்கோ ஏதுக்கோதான்
அன்றாடந் தொழில்மறந்த சுருதியில்லான்
அவன்வயிற்றை நிரப்பிடநம் மாலாகாதே.

88. நம்மாலே யாகாதா மனங்குளிர்ந்தால்
நல்லறிவு கண்டுவிடோம் தள்ளமாட்டோம்
தம்மாலே யாகுமென்று நினைத்தாற்போல
சரிசொல்வாய் கிட்டிருந்தால் வாபோவென்பாய்
எம்மாலே கண்டுகொண்ட சிரமந்தன்னை
யெவரறிவா ரதுவறியு மென்றாற்போல
உம்மாலே கண்டுகொண்டா லெமக்குச்சொல்வீர்
உலகமென்றால் வயிறுபிழைக்குங் கள்ளர்தானே.

---

87. வேடத்தில் குருவாகக் காட்சி தந்து ஏமாற்றுகிற போலிகளைப் பாடியவாறு.

88. இதுவும் போலி வேடத்தினைச் சீறியது. தம்மைத் தாமே புகழ்ந்து கொள்வதும் பெரிதாகப் பேசி ஏதேதோ உறுதிகளைச் சொல்லி ஏமாற்றுவதும் இந்தக் கள்ளர்களான வேடதாரிகளுடைய செயல்கள் என்றபடி.

89 கள்ளாநீ கட்குடிக்கும் வெறியுந்தள்ள
கர்மமென்ற மனதறிய வுள்ளேநிற்க
பிள்ளாய்நீ சம்பந்தி யாளாய்நில்லு
பேச்சறிந்து என்னுடனே கலந்துநில்லு
வில்லேபோல் நீவளையாது நிமிர்ந்துநின்றால்
விறகில்லாத் தீயிடுவோம் வாக்கால்நாவால்
கொல்லவே நின்றதொரு நமனைக்கொல்வோம்
குமரியர்கள் சித்திரத்தைப் பேசுவோம்.

## பெண்கள் விசித்திரம்

90. பேசுவோம் யாம்கொண்ட பொருள்களெல்லாம்
பெண்கள்விர லிரைநகைக்கே பெண்கள்கொண்ட
காசுபோல் வட்டமிட்ட பொட்டுப்பார்த்தால்
காதிலெண்ணி முடியாதே மூக்கிலேதான்
தூசுபோ லிட்டாலும் பொன்னாலொட்டு
தொங்கிநின்ற கலலொட்டு எண்ணிப்பார்த்தால்
வீசுயரக் கல்லெறிந்தாற் செம்பொன்மேரு
மேனிநகை யாகுமல்லால் மீதமுண்டோ.

---

89. சம்பந்தி ஆள் - யோக இணைப்பிலே கூடிநிற்கும் சம்பந்தி.

வில்லேபோல் நீவளையாது - வில்வளைவதுபோல் உன்முதுகு கூன்விழாமல் நிமிர்ந்து நிற்க வேண்டும்.

விறகில்லாத் தீ - மூலக்கனல்.

90. போலிவேடம் என்பதை நகை அலங்காரத்தோடு இயைபுபடுத்திப் பாடியவாறு.

91. உண்டோதான் பெண்களந்தப் பரமேசெய்ய
உண்டுடுத்திப் பாராமல் மீசும்வைக்க
கொண்டவர்க ளாயுசுள்ள மட்டுந்தானே
கோடான கோடிமனு உழைத்துநைந்தார்
மிண்டோர்கள் தேடுபொரு ளெம்மட்டோதான்
மேனியதைக் குலுக்குவரே யம்மட்டேதான்
கொண்டோர்கள் வருமைந்தா லதனைப்போக்கி
குறுஞ்சிரிப்பு யீயாரே பின்காய்வாரே.

92. காய்வார்கள் முன்னாலே நம்மைத்தேய்த்துக்
கதைபேசி நடிப்பாரே சித்திரத்தார்
மாய்வாரே யிடுகாடு நம்மைப்போக்கி
மண்பூத்த ஈசலைப்போ லாசைபொங்கி
தேய்வாரே புத்திரர்கள் களத்திராதி
தேரிலொரு பொம்மையைப்போற் பௌத்திராதி
செய்வாரே மக்கள்வழி கிளைஞர்கூட்டம்
தேர்வருநாள் திருநாட்போற் கூடுவாரே.

---

91. பெண்களின் மோகத்திலே சிக்கிக் குறிக்கோளை மறந்து விடலாகாது என்பதை இவர் வற்புறுத்த இந்த அலங்காரங்களை இவ்வாறு அடுக்குகிறார்.

92. ஞானவழியை மறந்து மக்கள் தொகையைப் பெருக்கும் உலகவழிகளிலே சிக்கி மேலும் மேலும் அல்லல் உறுவதை நகையாடுகிறார். வீணான ஆடம்பர வாழ்வின் சிற்றின்ப முறைகளிலே சிக்கி வாழ்வை வீணடிக்கக்கூடாது என்று சொல்வதற்காக வந்தது இந்த ஞானச் சீற்றம்!

93. கூடுவார் நாம்தேட லென்னவாகும்
கொடுமையுள்ள மங்கையற்கா பரணம்பூண
தேடுவா ரிக்கூட்டந் தேடலொன்றே
தேடினவ ரிருந்துண்ண நேரம்வாய்க்கா
போடுவார் சப்ததளம் பரதகங்கை
பொய்யல்ல மெய்யிதுவே சுகமதாகும்
நாடுவார் நாடாட்டால் சுகமிதாகும்
நங்கைசுக மில்லறத்திற் பெரியதாமே.

94. பெரியதாம் பெரியதல்ல நம்மளுக்கே
பேர்பெற்ற சித்தர்களு மறைத்தார்குட்டு
சிறியதாம் பெண்வாலை காமரூபி
சிறுபெண்ணே வாய்பேசாப் பெண்ணைக்கண்டார்
உரியதாய்ச் சொன்னார்கள் கன்னகண்டோர்
உத்தமியின் வாலிபத்தைக் கண்டோரானால்
விரிவதாய்ச் சொல்லார்கள் மேலேகண்டோர்
மேன்மூச்சு அறிவாலே வாலைதானே.

---

93. பெண்கள் என்றால் எல்லாரும் ஒரே வகையில்லை. தீய பெண்களின் நிலையை வேறு பிரித்துக் காட்டுகிறார்.

94. பெண்ணாசையில் சிக்காமல் அதை வெல்பவனே மேனிலையான ஞான சித்தியைப் பெற முடியும். அல்லாத நிலையில் மேலே மேலே சிற்றின்பச் சேற்றிலேயே அழுத்த வேண்டுந்தான்.

95. கண்டாரே வாலைகன்னி குமரியோடு
கடுங்கிழவி முக்காலம் நேரிற்கண்டோர்
உண்டாரே மண்மலைகள் கடலாம்வாரி
உண்டுமிழ்வார் சிருட்டிதிதி சம்மாரங்கள்
கொண்டாரே யவர்புருஷன் கூத்தியாகி
கொடுங்காலன் வேறெனவுஞ் செய்குவார்காண்
தண்டார்கள் வாங்கறியா ரிதனைக்கொண்டு
சாஸ்திரங்கள் பிறந்தனவே பலவாறுதானே.

96. வாராக அவர்கள்கண்ட பதங்கள்போல
வாயுரையோ நின்றவளுஞ் சொன்னாளையா
கூராகச் சொல்லவில்லை அவளாற்பாக்கி
கொண்டவர்க்குக் கண்டமட்டுஞ் சொல்லிவைத்தாள்
தேராத பேர்களுக்குப் பாக்கிவைத்தாள்
செல்பாக்கி கண்டவர்கள் மீதம்பாக்கி
கூறாதே மிச்சம்வையாள் கொட்டிவைப்பாள்
குமரியர்கள் சந்தோஷம் பாக்கிதானே.

---

வாலை, கன்னி, குமரி, கடுங்கிழவி - ஞானசக்தியின் நிலைகள்.

முக்காலம் நேரில் கண்டோர் - திரிகால ஞானி என்ற நிலை.

சென்றது கருதலும் நாளைச் சேர்வது நினைதலும் இவர்களுக்கு இல்லை எனினும், மூன்று காலத்தையும் காணக்கூடிய வல்லமை படைத்தவர்கள் என்பது குறிப்பு.

கொண்டவர்கள் - வழிமுறையை எற்றுக் கொண்டு பயிலுகிறவர்கள்.

மணாளனோடு ஆடுகிற சுகத்தைப் போன்றது பேரின்பம் என்பதை திருமூலரும் கூறுகிறார். ஆனால் சிற்றின்பத்தில் சிக்கி வீணாவது வேறு ஞானம் வேறு.

97. பாக்கிதான் மூப்பதனில் முற்றும்போல
பரைவாலை முப்பதின்மேல் முழுதுஞ்சொல்வாள்
காக்கிதான் சொன்னாரே வசிஷ்டருக்கு
கண்டனென்று சொன்னாரே ராமர்குருவுக்கு
நோக்கியே விழித்தாரே புசுண்டர்காகா
நுவலுமெனச் சொன்னாரே வசிஷ்டமூர்த்தி
தாக்கியே யேதினிமேல் சிரிப்புவந்தே
சந்தேக மதைக்கெடுக்க நீர்சொல்வீரே.

98. சொல்வதே வாலைகரை கண்டோன்சொல்லே
துய்யபர வெளிநீளம் கண்டோன்கல்லே
சொல்வதே பரைவேதம் பரத்தின்வேதம்
தூண்டாது பிரசண்ட வாய்வின்வேதம்
சொல்லடங்கா மேகக்கரு நீரின்வேதம்
சொல்வதே உடுக்கள்மதி ஞாயிறுவேதம்
சொல்மேலே சொல்தோணாக் கருவேதமாமே.

---

97. உடலகத்தே ஞானம் என்பது ஒரு கன்னியின் வடிவத்தில் பேசப்படுகிறது. அதற்கேற்ப ஞானமுதிர்ச்சியும் கன்னியின் வளர்ச்சியை ஒட்டி ஒப்புமை பெறுகிறது.

98. வானமண்டலமும் தேக மண்டலமும் ஒன்றே. விண்மீன்களும் மதியும் ஞாயிறும் புற உலகிலே அமைந்தவாறுதானே உடலின் உள்ளுலகிலும் அமைந்துள்ளன. ஆசிரியன் தனது பயிற்சிகளிலே இந்த நிலையை மாணவனுக்குத் தொட்டு உணர்த்துகிறான்.

99. வேதமே மேலதிட்டு ஆதியந்தம்
விரைந்தேறிக் கண்டவர்கள் அதற்குமேலே
வேதமே சொல்லுமல்லால் மற்றோர்சொல்லார்
மேலடியிற் காலடியே தெரிந்தோர்சொன்னார்
வேதமே யிப்படியே தெரிந்தமட்டும்
மெய்யறிந்தோர் சொன்னாரே பார்த்திருந்தேன்
வேதமே சொற்பிழையைத் திருத்தப்பார்த்தேன்
வேதத்தம்பி அஞ்சுமெனப் பிழைபாரேனே.

100. பாரேனே நானிருந்து யென்னலாபம்
பரதேசி வேடமிட்டு யென்னசேமம்
கூறேனே யின்னமொரு சொல்லும்நானே
குடுகுடுக்கைக் கஞ்சாவைத் தொட்டோன்வீணே
சாணேறத் தெரியாதோன் முழத்தைத்தாண்டத்
தாவுகின்ற யீசலடி நாயேபோல
வானேறத் தெரியாதோன் பிரமரந்திரம்
வாய்கொண்டு மூக்கசைப்பான் வாசிபாரான்.

---

99. வேதம் என்பது நூலறிவன்று. அது இந்த உடம்புக்குள்ளே சென்று ஒன்றை ஒன்றினோடு வேதித்தலாகும்.

100. அறிவைக் கொண்டு வாதிடுவதில்லை, அனுபவ ஞானம் என்பது! பிரமரந்திரம் என்பது உச்சியிலுள்ள ஞான மையம். அதுவே வாசியோகத்தின் குறிக்கோளாகும். இதனை உணராமல் வாய்ப்பேச்சும் மூச்சு அசைப்பும் பயன்பெறுவதில்லை. உண்மையான ஞானம் என்பது மெய்யனுபவமே ஆகும்.

## வாசி பார்க்கும் நெறி

101. வாசியே மூக்குதண்டு நடுவில்வந்தால்
வல்லபமே யோகதண்டு நிமிரலாகும்
கூசியே பாராதே நெற்றிமார்க்கம்
குமரிவினை யாடுதல்லோ நாமமார்க்கம்
தோசியாய்ப் போகாதே நடுநாமத்தே
தொட்டேறி உச்சிவழி மரமரந்திரம்
பேசியே பாராதே சித்திரம்போல்
பெருவூமை போலிருந்து யிமையை நோக்கே.

102. இமைநோக்க உமைத்தூக்கும் மனமும்வாசி
யிடதுபுற மோடாமல் வலமாயோடும்
நமைநோக்கும் பிராணவுயில் வாசிநோக்கும்
நாசியடி புருவமத்தி நடுவேயாகும்
தமைநோக்கும் வல்லபர்க்கு யெல்கை சொல்வேன்
தாதுஉ..ிர் நின்றவிடம் மனிதருக்கே
உமைநோக்க நெற்றியடி புருவமத்தி
ஊசிமுனை மூக்கினடி மத்தியாமே.

---

*101.* ஞானசரநூல் என்ற முன்பகுதியில் இந்த நுட்பங்கள் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. அவற்றையே இந்தப் பாடலும் விளக்குகிறது.

*102.* இடதுபுறம் ஓடுதல் - இடகலை நெற்றியடி புருவமத்தி என்றது நோக்கு கூடுகிற மையத்தை. எல்கை - அளவு, எல்லை. ஊசிமுனை - நாசியின் நுனி. உமைநோக்கு என்பது சந்திரகலையை. அதாவது இடக்கண் பார்வை. நமது உடம்பில் இடப்பக்கம் அம்மை உமையும், வலப்பக்கம் அப்பன் சிவனுமாம். இது பார்வைக்கும் சரத்துக்கும் இரண்டுக்குமே பொருந்தும்.

## முத்திக்குப் பாதை.

103. மத்தியிலே நின்றுருளு மணியாய்த்தானே
மனிதரே யானாக்கால் ஆண்டுபாரும்
சித்தியிலே யிதுசித்தி வருடமொன்றில்
சித்திக்க யிதுமேலே நெற்றியேறும்
பத்திக்கி யிதுதானே முறைகாண்யோகம்
பார்நெற்றி நடுநாம வழியேமார்க்கம்
முத்திக்கு யிதுதானே நேராம்பாதை
முனிவர்களு மாகிடலாம் உச்சியேறே.

104. உச்சியே யேறிநின்று வட்டமிட்டு
உருமுமடா பெண்வாலை வயதோபத்து
மெச்சியே பார்த்திருந்தால் வயதேபோகும்
வெடிவாலை வாலிபமே யாகிவாழ்நாள்
குச்சியே பெலத்துவிடும் குமரிதானும்
குடிசையிதைக் கட்டிடுவாள் பெலத்துநிற்பாள்
அச்சிலே குமரியவள் கிழவிபோலே
அனேகநாள் வாழ்ந்திடுவாள் உடலுனூடே.

---

103. ஒரு வருடம் இவ்வாறு வாசி பயின்றால் சித்தி கிட்டும். முத்தி கிட்டுவதற்குரிய நேரான பாதை இதுவே. முனிவர் என்னும் பதம் அடைவதற்கும் இதுவே வழியாகக் கொண்டு உச்சியில் ஏறவேண்டும்.

104. வாலை வசமாகி நிற்பாள். முதுமை நீங்கி இளமை கிட்டும். முதுகு தண்டு வலிமைபெறும். இந்த உடம்பாகிய குடிசையில் பலமாக நிற்பாள் வாலை. பல்லாண்டு பல்லாண்டு இந்த உடம்பு வாழும், இதில் வாலை குடியிருப்பாள்.

## சத்திக்கு வீடு உடல்

105. உடலினொடு வாழ்வதற்குப் பிரியம்வாலை
உத்தமிக்கு நம்மையன்றி வீடேயில்லை
கடலினொடு வாழாளே மலைமண்மீதும்
காரிருக்கும் வானவெளி யாகாயத்தும்
திடலினொடு மேலேதான் கீழினொடு
தேவரூபி யாவாளே சித்தரூபி
மடலினொடு பூவேறக் கொண்டேயேறும்
மங்கையுட னிருத்தல்இல் லறமதாமே.

106. இல்லறம்போல் நம்மோடு கூடிவாழ
இல்லறத்தில் சோதியொளி யிதனிலிச்சை
நல்லறம்போற் சொல்லிவைப்பாள் நாவால்வேதம்
நாமிருந்து பாடிடலாம் கூடியாடி
சொல்லறமே யதுதானே முடிவேயாகும்
துயருற்று நாமிருந்தா லதுவேமாளும்
அல்லறமே யிதனையே யுருவேசெய்ய
அங்கவுடல் உயிர்மனதை அறிவாய்ச்செய்தே.

---

105. வாசியோகம் என்பது ஒருவகையான இல்லறம் என்கிறார் காகபுசுண்டர். அதாவது வாலைப் பெண்ணோடு நடத்துகிற இல்லறம். புறஉலகு முழுமையும் விரிந்து நிற்பதோடு சித்த வடிவாகி இந்த உடம்பினுள் அவள் வாழ்கிறாள்.

106. வாலையோடு நடத்துகிற இந்த இல்லறத்திலே சோதியொளி வீசுகிறது. அவளே நல்லறம் மொழிகிறாள். நாவால் நாம் வேதம் பாடலாம். அதாவது வேதம் என்பது ஞானநிலையின் உருவகம்.

## பத்திய விபரம்

107. செய்தார்கள் பத்தியங்க ளேதுமில்லை
சிறுவர்கட்கு பத்தியங்கள் முப்பதுக்குள்
வைதார்கள் பத்தியங்கள் சொல்லித்தானே
வாலிபத்தைப் போக்கியுடல் சுத்திசெய்ய
நைதார்க ளவர்மனது நொந்துசொன்னார்
நரைதிரையும் வந்தாக்கால் பத்தியமுண்டோ
நொய்தார்க்குச் சொல்லவில்லை பத்தியங்கள்
நுண்ணறிவாற் கண்டுகொண்டு தொங்குவீரே.

108. தொங்குவீர் அறுசுவையைத் தள்ளவேண்டாம்
துயர்மனதை அல்லலென்று தள்ளவேண்டாம்
யெங்குநீ ரானாக்கால் மனதோவேணும்
யேதென்றாற் சொல்லுகிறேன் மனதுபுத்தி
மங்குமன மானாக்காற் கொல்லவேணும்
மனதறிவே மனத்தெளிவே கருத்தேயூகம்
தங்குவீ ரானாக்கால் மனமேஆதி
தன்மனது மாண்டாக்கால் மாளுமாமே.

---

107. இந்திரிய விரயம் ஒன்று பெரிய சட்டமாகும். மற்றப்படி வாலிபம் பேணுவதற்குரிய உடல் தூய்மை முக்கியமாகும்.

108. மனத்தை அடக்குதல் என்றால் எப்படி? இந்திரிய வாசல்களில் செல்வதைத் திசை திருப்புவதேயாகும். மனத்தை அல்லல் என்று தள்ளிவிட வேண்டாம். மனதே அடிப்படை என்பதை மறந்து விடக்கூடாது. மனமே அறிவு, மனத்தெளிவே அடிப்படை. இதை வைத்தே எல்லாச் செயல்களும்!

## மனதே சக்தி தெய்வம்

109. மாளுகின்ற துன்பமது மனதேகாட்டும்
மனதையன்றி வேறுமுண்டோ சக்திதெய்வம்
வாழில்நின்ற சத்தியல்லோ மனதேயாகும்
பரதெய்வ மானாக்கால் சத்திசேரும்
வாழுகின்ற மனதைவெல்லத் தம்மாலாகா
மந்திரத்தி னாலாகா குருவாலாகா
வீழுகின்ற மனதல்ல வேதத்தாலே
மெய்மனது மாளாது நிற்கும்பாரே.

110. நிற்குமந்த மனந்தனையே வென்றோரென்றார்
நீள்மனது குறுகினதால் நினைவுபோமோ
கற்குமே யல்லாது தர்க்கம்நேரும்
கல்மனதும் நெஞ்சினிலே ஒன்றைப்பற்றி
வர்க்கமே தேடாமல் கிறுத்துநின்று
வாயுரையை யொழித்ததினால் நினைவுமாறா
தாக்குமே யிதனாலே யாவதேது
சடமரண மானாலே நினைவுபோமே.

---

109. மனம் சாகாது நிற்பது. அதை வெல்வது என்பது என்ன? மனமே சக்தி, மனமே தெய்வம். அந்த நிலைக்கு அதை மாற்றவேண்டும். மெய்ம்மை கூடிய மனமானது மாளாது நிற்கும். அதுவே மரணமிலாப் பெருவாழ்வுக்கு ஆதாரம்.

110. வாய்மூடி உரையற்று இருந்துவிட்டால் போதுமா? மனமே ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றித் தாவிச்செல்லும் அல்லவா? நீண்ட மனத்தை அடக்குகிறதாக எண்ணி அதைக் குறுக்கிவிட்டால் போதுமா? நினைவு அழிந்து விடுமா? இல்லை.

## யோகம்

**111.** நினைவுமே போயொழிந்தா லிருளேயாகும்
நெற்றிக்கண் ஞானக்கண் ணாகுமோசொல்
நினைவுமே மாறிவிடில் சுவரேயாகும்
நீநிலத்திற் குட்டிச்சுவ ரென்றுபேரு
நினைவுமே தப்பிவிடில் தனைமறந்தார்
நீசர்களுந் தனைமறக்கத் தவஞ்செய்தாரோ
நினைவுமே போகாமற் தவமேசெய்தார்
நெற்றிக்கண் முனியானார் சித்தர்தானே.

**112.** சித்தரிஷி முனியாகாப் பதத்தினோர்கள்
செத்தசவம் போலிருக்கச் சிரித்தார்மேலோர்
சித்தரிஷி முனிகள்பதம் உடலைத்தொட்டே
தேகமதை மறந்திடிலோ உயிர்தோணாது
முத்தருயி ருடல்மனது தவிர்த்தாரானால்
மோகதெய்வ மெங்கிருக்கும் நடதந்திற்தானே
கர்த்தருமே யானாலுஞ் சாஸ்திரமீவார்
சுரைமனது கடினம்விட்டுச் சுகமாய்ச்செல்லே.

---

111. நினைவு சாகவேண்டும் என்று எண்ணுவது தவறாகும். நினைவு ஒழிந்து போனால் ஒரே இருட்டுத்தான். நினைவு, மாறினால் அதாவது பேதலித்தால் குட்டிச் சுவர்தான்! நீசர்கள் தன்வசம் மறந்து செயலாற்றுபவர்கள்; அவர்கள் என்ன தவமா செய்தார்கள்? நினைவு போகாமல் தவம் செய்பவரே ஞானிகள். அவர்களே நெற்றிக்கண் உடைய முனிவர்கள்; சித்தர்கள்!

112. உடல் மனது தவிர்த்தால், பிறகு இறைமை வாழ்வது எங்கே? எல்லா நிலையும் இந்த உடலிலேதான் நிகழவேண்டும் என்பதை மறந்துவிடலாகாது.

113. செல்லுமந்த மனந்தானே துக்கம்விட்டு
சேர்ந்தசுக மதினாலே மனமாளாது
கொல்லுமந்த மனமென்றாற் துக்கம்விட்டு
கொடியமனம் பரமசுக மடைந்திடாதோ
நில்லுமன மென்றாக்கால் நின்றிடாது
நேர்சுகத்தைக் கண்டாக்கால் மனமேநிற்கும்
வில்லெனவும் பாயுமது அடங்கிநிற்கும்
வேதாந்த மாமிந்த விபரந் தானே.

## பத்தியங் காணேனெனல்

114. ஆமிந்த மார்க்கத்தை நாமேகாண
அங்கமுடல் மார்க்கத்திற் பத்தியமேனோ
நாமிந்தப் பத்தியத்தைக் கண்டிலோமே
நாட்டினார் பத்தியங்கள் விரதமார்க்கம்
தாமிந்த நெறிசொல்லக் கூடாதய்யோ
தர்மமோ சொல்லிவைத்தாற் துறவுக்காக
காமிந்த யில்லறத்தார் தவத்தார்க்கன்னம்
கைவாயும் வயிறுநிறையச் செய்தார்பாரே.

---

113. *மிக அருமையான கருத்து பொதிந்த பாடல் இது. இயங்குகிற மனமானது சுகத்தினால் மாண்டுவிடாது. கொல்லக்கூடிய கொடியமனமாக அதை மாற்றினால்தான் ஞானம் சித்திக்கும் என்றால், கொடியவர்களுடைய மனமெல்லாம் பேரின்பத்தை அடையுமே! அப்படியில்லை! நில்லாய் மனமே என்று அதை நிறுத்திவிட முடியுமா? முடியாது. நேரான சுகத்தைக் கண்டுவிட்டால் மனம் அதில் நின்றுவிடும்! தத்துவம் அதுதான்! வில்லைப்போல் எய்துபாயும் அந்தமனம் இப்படிச் சுகத்திலே நின்றுவிடும்! அதாவது வெளியே அலைகிற மனத்துக்கு இறையின்பத்தைப் புகட்டி விட்டால் பிறகு அது அதிலேயே நிலைத்து நின்றுவிடும்!*

114. *பத்தியம் என்பது என்ன, இல்லறத்தார்கள் தவத்தார்களுக்கு வாயும் வயிறும் நிரம்ப அன்னமிட்டார்கள் என்பதை எண்ணிப் பார்க்வும்.*

115. வாய்வயிறுங் கைநிறையச் செய்தார்க்கிந்த
வயிற்றெரிச்சல் சொல்லிவைத்தார் பத்தியம்போல்
செய்வயிறைப் பட்டினியே போட்டுண்பார்போல்
சித்தர்களும் அமிர்தமிட்டு விஷமேயீந்தார்.
தாய்போலும் வந்ததொரு சேய்மேற்குற்றம்
தான்காட்டி உண்டீரென் றெண்ணாமற்றான்
மாய்வாரு முண்டோதா னதுபோற்தானே
மக்களுக்காய் நானிறங்கி யிதைச்சொன்னேனே.

## வியாசன்

116. சொன்னதினா லுன்சிசுவுஞ் சத்திரியன்றான்
தொடர்சத்திரி யன்குழந்தை பராசனோடு
இன்னிலத்திற் பராசனவன் குழந்தைதானும்
இவன்பெயரோ வியாசரெனச் சொல்லலாகும்
அன்னவன்றன் பாலனவன் சுகனுந்தானும்
ஆச்சரிய மென்றுசொன்னார் பெண்ணில்லாதால்
மன்னவனார் சனகனிடங் கேட்டதென்ன
மலடிபிள்ளைப் பேறான வாறதாச்சே.

---

115. கைநிறையத் தமக்கு வாயும் வயிறும் நிரம்பும்படி உண்பித்தவரைப் பட்டினியிலே கிடக்கும்படி செய்வாரோ ஞானிகள்? இல்லை. மக்களுக்காக அந்த நுட்பத்தை இவ்வாறு எடுத்துச் சொன்னேன்.

116. வியாசனுடைய மரபு சொல்லி, பெண்ணினத்தால் இந்த வம்சம் வளர்ந்த கதையை நினைவூட்டுகிறார். சத்திரியன் - க்ஷத்திரியன். பராசன் - பராசர முனிவன் சுகன் - சுகப்பிரும்மர். சனகன் - ஜனக மன்னன்.

## கத்தித் திரிகிற கோஷ்டி யாகாதெனல்

117. ஆச்சப்பா யிப்படியே சாஸ்திரஞ்சொன்னார்
ஆச்சிரம மிருந்தவர்க ளதுபோலாக
மூச்சப்பா சொன்னார்கள் யோகமுள்ளோர்
முனியாதோர் சொன்னார்கள் சமமாம்பார்வை
பேச்சப்பா சொன்னார்கள் சுவடிபார்த்தோர்
பித்தரைப்போ லாக்கிவிட்ட பித்தம்போல
கூச்சப்பா வேதாந்தக் கோஷ்டிதானே
கூசாமற் கத்தினதால் கோட்டியாமே.

118. கோட்டிதான் கத்தினவன் கிறுக்கனாவான்
குருசொல்லைக் கேளாதான் தர்க்கனாவான்
பாட்டியார் சொற்கேளாச் சிசுவைப்போல
பரத்தைமனம் பலவாறாய்ச் சிதறல்போல
கூட்டித்தான் பறந்தமனம் பாரா முத்தர்
கொட்டினது கொட்டுத்தேள் கொள்கைபாரு
நீட்டித்தான் சொன்னாலும் தன்னாலாகா
நிமிஷமதிற் பிரண்டுவிடு மனிதர்வாக்கே.

---

117. நூலறிவு பேசிக் கதறுகிறவர்களின் நிலையைச் சொல்கிறார். பித்தரைப்போல் ஓசைசெய்து திரிகிறவர்கள் கூசாமல் கத்துவதால் அவர்களைக் கோட்டிகள் என்கிறார்.

118. கோஷ்டியாகக் கத்தினவன் கிறுக்கனே, அதாவது பைத்தியக்காரனே ஆவான்.

குரு சொல்லைக் கேட்காதவன் வெறும் வாதிடுகிற தர்க்கன்!

பாட்டி சொல்லைத் தட்டுகிற குழந்தை, பரத்தையின் மனம் - இவை சிதறிப் போவதுபோல் உள்ளம் சிதறலாகாமல் பயிலுவதே தவம்.

## உலகில் வாக்கின் பெருமை

119. மனிதரவர்க் கெதிர்வாக்குப் படித்தோன்வாக்கு
மாபடித்தோன் வாக்குயெதிர் அஷ்டாவதானம்
மனிதர்வாக் கதுதனி லிதுவுஞ்சேர்ந்து
மாவருளிற் பத்திமுத்தி யிதுவுங்கூடில்
மனிதர்வாக் காகாது முத்தர்வாக்கு
மகாமுத்த ரதிலுண்டு சீவன்முத்தர்
மனிதர்வாக் கானதிலு முத்தர்மேலோர்
மாசித்தர் மேலதிலு முனிமேலோரே.

120. மேலானோர் தரைதனிலே முனிமேலானோர்
மேவுகின்ற முழுபபதமுங் கண்டாலன்றி
கீழானோர் சொன்னமுறை குறையேயாகும்
கீழிருக்கு மதுபோலே சரிதைபோலே
சூலானோர் பிரசோப துன்பந்தன்னை
தூண்டியவள் சொல்லியழுங் கதைபோலாகும்
தாழாவோர் மேலிருந்து சொன்னசொல்லை
தந்திமுகன் தம்பியொடு தான்தட்டாரே.

---

119. சாதாரண மக்களுடைய வாக்குக்கு எதிரானது படித்தவர் வாக்கு. பெருங்கல்வியாளனுக்கு எதிர்வாக்கு அட்டாவதானி.

மனிதவாக்கில் பத்தியும் முத்தியும் கூடில் அது மனித வாக்கில்லை; முத்தர் வாக்கு.

மகாமுத்தர்கள் இந்த வர்க்கத்தில் உண்டு. அவர் சீவன்முத்தர்.

மனிதவாக்கிலும் மேலோர் முத்தர். அவற்றின் மேலோர் சித்தர். சித்தர்களில் மேலோர் முனிவர்.

120. மேலான முனிவர்கள் முழுமையான பதம்கண்டால் அன்றி, அவர்கள் கீழானோர். குறைபாடுள்ளவர். சூலியைப் பிரசவ வேதனை சொல்லி அழும்படி செய்கிற கதை, தாழானோர் மேலிருந்து சொல்கிற வாக்கு!.

121. தட்டார்கள் பிரமரிஷி யானாலுந்தான்
தவசிகட்கு மெட்டாது பின்னாற்தோணும்
கொட்டார்கள் தவசுநெறி பெரியோரானால்
குருவென்று சொல்லார்கள் சினேகர்போல
விட்டார்க ளன்புதனைச் சினேகமானார்
விரதமென்ன நெறியில்லாச் சுசியானார்கள்
கட்டார்க ளன்புகொண்டு குருவுந்தெய்வம்
கலைசுவடி சாஸ்திரங்கள் பீடமாச்சே.

## பொய்வேடம்

122. ஆச்சிந்த வரிசைவிட்டு உலகத்தாசான்
அங்கங்கள் தனைமினுக்கி வேடமிட்டு
பூச்சிந்தக் காவிநீர் புலித்தோலிட்டு
புரிமுறுக்குங் கயிறுபோலே சடையுங்கட்டி
பேச்சிந்த மூச்சறியான் குறடுமிட்டு
பேய்மனதை யறியாதான் வீச்சேயிட்டு
மூச்சிந்த மனந்தெளியப் பாரார்வாசி
முன்னிருந் தார் புலன்பற்றிப் பேசுவாரே.

---

121. தவநெறி நிற்பார்களும் அவநெறி செல்வார்களும் எந்தெந்த நிலையில் உயர்வு தாழ்வு பெறுகிறார்கள் என்பதை நுதலிற்று.

122. போலிகளின் இயல்பு கூறுகிறார். மினுக்கி - மினுமினுக்கும் படி பூச்சுக்கள் செய்து. காவி - காவி உடை; நீர் - கமண்டலம். புரிமுறுக்கும் கயிறுபோலே திரதியான சடைகட்டி, மௌனவிரதம்கொண்டு, காலில் குறடு அணிந்து, ஞானிகள் போலே வெளிவருகிறார்கள்.

123. பேசுவார் புலனறிந்தோ ரேசுவாரோ
பேய்ப்பிள்ளை போலிருந்து பேசுவார்கள்
கீசுவார் தனையறிந்து மாசுபாரார்
கிட்டிருந்துந் தான்விலகி ஓடிப்போவார்
பூசுவார் வெகுநாளாய்க் காத்தேனென்பார்
பொன்குருவு கேட்டதெல்லா மீய்ந்தேனென்பார்
ஏசுவார் சொற்பலித மில்லாத்தோசி
இவர்பேச்சைப் பேசினதால் வருவதேதோ.

## முத்தி மோக்ஷம்

124. வருவதெனு மனந்தெளிதல் தவசுதானே
மாகலக்க மில்லாது முத்திதானே
பெறுவதெனு பின்பிறவி யில்லாச்சாவே
பெருஞ்சித்தி கேட்டதெல்லாம் வருதல்தானே
உருவதெது சாவறிதல் மரணகாலம்
உள்ளிச்சை மாறுவதே மோட்சலாபம்
கருவதெது யிப்பிறவி பின்னேமுன்னே
கண்டுகொண்டு உடல்பிரிதல் மோச்சம்பாரே.

---

123. பொய்ப்பேச்சும் வஞ்சகமும் நிரம்பிய போலிகள் எவ்வாறு மோசம் செய்கிறார்கள் என்பதைப் படம் பிடிக்கிறது இந்தப் பாடல்.

124. வருவது – வரவேண்டியது. வருவது மனத்தெளிவு. தவம் என்பது மாபெரும் கலக்கமின்றி முத்திசேர்தல். பெறுவது ஏது? மறுபிறவி இல்லாத மரணம். பெரிய சித்தி எது? கேட்டதெல்லாம் வருவது. உறுவது மரணத்தை அறிந்துகொள்ளும் முன்னறிவு. மோட்சவருவாய் எது? உள்ளிச்சை மாறுவது.

125. மோச்சபதம் வேண்டியல்லோ யிச்சைதள்ளல்
முனிவதனை நீக்குதலும் முனையாம்பார்வை
நீச்சபதம் நீக்குதலு மதற்குத்தானே
நீராடிச் சுத்திடுவார் குளமுங்கோவில்
மாச்சபதம் மாச்சலது மோச்சலாபம்
வாய்பேசார் பேசினருங் கண்டாருண்டு
ஏச்சபதம் சாத்திரங்கள் தொட்டுக்கொள்ளார்
எந்தமலை போவமென்பார் குருவென்பாரே.

126. குருவென்பார் யிருவென்பார் நாம்தாமென்பார்
கோரக்கர் மூலிநமக் கிச்சையென்பார்
பொறுவென்பார் நாமிருவர் போதுமென்பார்
பொய்க்கூட்டந் தள்ளென்பார் மலையேறென்பார்
திருவென்பார் கண்காட்சி தெய்வமென்பார்
தேடியதைக் கண்டாரைத் தீனியீயார்
மருவென்பா ரிவர்சொல்லைக் கேட்டோர்வாழ்தல்
மறலிகையி லகப்பட்ட வழமொப்பாமே.

---

125. இச்சையை விடுவதும் சினம் நீக்குதலும் முதலானவை எந்தக் குறிக்கோளுக்காக? மோட்சபதம் அடைவதற்காக! சுற்றித் திரிவதும் மௌனம் காப்பதும் முதலான அனைத்துமே மோட்சமாகிய இலாபம் கருதிதான்!

126. ஏதேதோ தற்பெருமைகள் சொல்லி மக்களை ஏமாற்றுகிறார்கள். இப்படிப்பட்ட ஆடம்பர ஆசார ஏமாற்றுக்காரர்களைக் குரு என்று நம்புவதால் மரணவாழ்வே வந்தடையும்! மோட்சம் கிட்டாது!

127. ஒப்பாருங் கண்தெரியா மாடுதானே
ஊர்நிலத்தை உழுததுபோ லுவமையுண்டோ
கப்பாகு மவர்மனது பலவாறாகக்
காசினியிற் காண்பதுவு மெத்தவுண்டு
செப்பாகச் சொல்லுதலே சிரித்தலாகும்
தேரில்வரு பொம்மையது சிரித்தலொப்பாம்
அப்பாரும் நாமறிந்த ததுவும்யீதும்
அசடர்களு மெய்யர்களும் பொதுவென்றாரே.

128. வென்றார்கள் பாவனையைச் சமத்தைக்கண்டோர்
மெய்நலிந்தோர் ஔசதத்தைப் பாவித்தாற்போல்
குன்றார்கள் அனேகநூல் தெளிந்தோரானால்
குருமுறையைத் தெரிவார்கள் அறிவுதன்னால்
நின்றார்கள் தங்களுக்கு யெம்மாலுந்தான்
நிகழ்ந்தநூல் தம்மாலும் நேரில்நிற்கா
பொன்றார்கள் புலித்தோலைப் பசுக்கிட்டாப்போல்
புலியல்ல வேடமிட்டுப் பொய்யாய்ப்போச்சே.

---

127. கண் தெரியாத மாடு ஊர் நிலத்தை உழுதது போலே கடைத்தேறாதவர்கள் பிறருக்கு ஞானம் உரைப்பதாகப் பொய் பேசுவது.

128. உடம்பு கெட்டவர்கள் மருந்துண்ணுவது போலே நாடுகிறார்கள். ஆனால் குருவின் நேர்முகக் கல்வி கற்றவர்களே மெய்யர்கள். நூலறிவு பெற்றவர்கள் அறிவுக்குள்ளேதான் நிற்கிறார்கள். அதைக் கடந்த நிலையே பேரின்பப் பெருவாழ்வாகும்.

129. போச்சப்பா காரியக் குருச்சந்தேகம்
பொய்யல்ல நிசம்போலப் பொய்யாய்ப்போகும்
நீச்சப்பா அவர்மனது காச்சல்மெத்த
நிலையற்ற நீரின்மேற் பாசிபோல
ஆச்சப்பா அந்தரங்கம் வெளியில்நில்லா
ஆனாலுஞ் சுத்தமனம் பாழ்வீணாகா
வீச்சப்பா பாழ்மனது சொன்னவாக்கு
வெளியில்நின்ற ஒளிவதுபோல் மேனியாமே.

## சாதனை கைபாகம்

130. மேனியது ரூபமது மெய்யிற்காணும்
மெய்வெளுக்கும் நிறங்கருக்கும் வீண்சொல்லில்லை
கூனியது நடப்பனபோல் பிலமேயாவார்
கொண்டதொரு உடல்சொரூபம் பலவாறாகும்
தீனியது வாய்நிறையத் தொழிலுமுண்டு
செய்கையது வேறில்லை ஒன்றுமாகா
கோணியே யாகிவிடுந் தெரிந்துகூடில்
கோலங்கள் பலரூபங் கொடுக்குங்கூடே.

---

129. காரிய குரு என்றும், மெய்க்குரு என்றும் இரண்டு வகை உண்டு. காரிய குரு சுயநலத்துக்காக, காரியத்துக்காகவே குரு என்று வேடம் போடுகிறான். மெய்க்கு மெ:ய்யான குரு.

130. தவத்தின் பயன் தொடங்கிவிட்டால் என்னென்ன மாறுதல்கள் உண்டாகும்? மேனியும் வடிவமும் உண்மையான ஒளி காணும். உடம்பும் நிறமாறும். முதுகுக் கூன் நிமிர்ந்து நேர்நடை கூடும். யாரும் எதுவும் அசைக்கமுடியாது.

## வாலை

131. கூடுவது நினைக்குமுன்னே குளிகைகூட்டும்
கூப்பிட்டாற் பூரணமுங் கூடப்பேசும்
ஆடுவது உச்சிவெளி தன்னிலாடும்
அமர்ந்திருக்கும் நெஞ்சடியிற் பள்ளமேடை
ஏடுவது மூலதலங் கீழேதானே
இருகாலின் பாதமதைச் சுத்திநிற்கும்
தேடுவது உச்சியிடை பாதமட்டே
செய்தறிநீ கைபாகஞ் செப்பினேனே.

132. செப்பிவைத்தே னின்னூலில் ஆதியந்தம்
திரட்டிவிட்டேன் வயித்தியசோ திடமுநீக்கி
ஒப்பிவைத்தேன் உள்ளங்கால் பரப்புவெல்லாம்
உயிர்மூச்சு அசைந்தாடும் வாய்வுபோலாம்
கப்பியது உலையேறல் அரிசியோடு
கண்டதுபோ லிடுப்பின்கிழ் வாசியோடும்
துப்பியது வாய்மூக்கி லோடுமாப்போல்
துண்டுதுண்டா யோடாது நிற்குந்தானே.

---

131. எதுவும் நினைப்பதற்குள் கைகூடும். உச்சி வெளியில் கூத்து நடைபெறும். மூலக்கனல் மையங்களிலே நின்று தொழில் செய்யும்.

132. வைத்தியமும் சோதிடமும் தவிர மற்ற ஞானப் பேருண்மைகளை இந்த நூல் பெய்துவைத்து விட்டதாக முனிவர் கூறுகிறார். வாசி துண்டு விட்டு ஓடாமல் சீராக ஓடும்.

## யோகம்

133. நிற்குமந்த வாசியது உச்சிக்கேறா
நின்றயிடை நின்றஉயிர் மூலம்நிற்கும்
கற்குமந்தச் சென்னியுச்சி மூலம்நிற்கும்
கலைவாசி பிராணனுயி ரிதன்பேராகும்
வர்க்கமிந்த வகையுள்ளே திரண்டுநிற்கும்
வால்நீளும் சமயத்தில் வாசிவாலை
தர்க்கமிந்த மும்மலமே வெளியேதள்ளும்
சாதிப்பேன் மும்மலமே சொல்லுவேனே.

## மும்மலம் போக்க

134. சொல்லுவேன் தொண்டைநீ ரிடுப்புநீரும்
தொங்குகின்ற சலநீரு மலநீர்மூன்று
கெல்லுவேன் கெல்லிடுங்கள் உடலேசுத்தி
கேசரத்திற தொங்கிடலாம் உச்சிமேடை
நல்லவனே உச்சிமுதல் பாதமட்டும்
நடுநாடி மூலம்வரை மலத்தைப்போக்கும்
வல்லவனே மும்மலந்தான் தடையேசத்துரு
வாசிவலு வாகினவன் போக்குவானே.

---

133. வாசியோகத்தில் விளக்கியுள்ளவாறு உச்சியின் செயல் விவகரிக்கும். மும்மலம் நீங்குவது உறுதியாயிற்று.

134. தொண்டைநீரான உமிழ்நீர், இடுப்பு நீராகிய உயிர்ச்சத்துநீர், மலநீர் ஆகிய மூன்றும் கெல்லி நீங்கும், உடம்பு தூய்மையடையும். உச்சிமுதல் பாதம்வரை நடுநாடி செயற்படும். அதாவது மூலக்கனல் என்ற தலைப்பிலே விளக்கியுள்ள அத்தனையும் அனுபவமாகக் கைகூடும்.

## பிறவிநீக்க அமுர்தம்

135. போக்குவான் அண்ணாக்கில் உச்சிவாசல்
பொங்குநீ ரமுர்தமென்று யெண்ணவேண்டாம்
நாக்குமேல் நாக்கிருக்கும் நாக்குநீரை
நமதுவர்க்கஞ் சொல்லவில்லை தேனீரென்றே
மூக்குமேல் மூக்குமத்தி தண்டினுள்ளே
முனைவழியே யேறுமந்தப் புருவமத்தி
தாக்குமே உச்சிதொட்டுக் கீழேபாயும்
தலையேறிப் பிடரிவழி யோடுந்தானே.

136. ஓடுமந்த உச்சிவழி வட்டமிட்டு
உப்பிடரி வழியிறங்கும் கயிறேபோல
கூடுமந்த முள்ளெலும்பு மூலநாடி
கொண்டந்தப் பாதைவழி யிடுப்பின்மத்தி
தேடுமந்தப் பின்புறத்தில் முதுகின்மத்தி
திரைஅலைபோ லலைவீசி
நாடுமந்த வாசல்வழி குடத்துநீரை
நாம்கொட்டும் வாறதுபோல் கொட்டுந்தானே.

---

135. அமுதநீர் என்பது பற்றிப் பலர் குழம்புகிறதைக் கூறுகிறார். மூக்குநுனியிலே பார்வை செலுத்தி முதுகந்தண்டிலே ஆற்றல் பாயும்போது உச்சியிலிருந்து கீழே கொட்டுகிற அதுவே அமுதம்.

136. குடத்திலிருந்து நாம் தண்ணீர் கொட்டினால் அது எப்படியிருக்கும்? அவ்வாறே இந்த அருவியுங் கொட்டும்.

137. கொட்டுமந்த வாசிஉயிர் பிலத்ததாலே
கோறுவார் பிராணலயத் தருகில்மேவி
நட்டுவர்கள் கொட்டலைப்போல் யோகமார்க்கம்
நாமுழுது பயிர்கண்டு வேலிபோட்டு
முட்டுவர்காண் நெற்றிவழி தினமுந்தொட்டு
முன்பிறவி தோற்றமட்டும் பூசைசெய்வர்
கட்டுவர்காண் தன்மனதைப் பிறவிநீக்க
காயநிலை கண்டதனால் நீத்தார்பாரே.

## முன்பிறவி தோற்ற

138. நீத்தார்கள் சமாதிநிலை கண்டோர்ஞாயம்
நிகழ்த்தினேன் வாலைபதம் பூசிப்பாய்நீ
காத்தார்கள் பிராணயந் தெரியவேணும்
கழறுவேன் யான்கண்ட அதிசயத்தை
பூத்தார்கள் நிஷ்டைமுத்தி சமாதிகண்டு
பொங்கிவிடுஞ் சமாதியினிற் சேதியெல்லாம்
ஏத்தார்கள் தன்னுடைய விபகாரத்தை
எதிர்நின்று சொல்வதுபோல் சொல்லினேனே.

---

137. இந்த வாசிச் சிலிர்ப்பை அனுபவிக்கிறவர்கள் ஊழின் தோற்றம் துலங்கும் வரை பயிலுவார்கள். இனி அடுத்த பிறவி ஏற்படாதவாறு கட்டுவார்கள்.

138. யோகத்திலே ஒடுங்கும்போது முற்பிறவி தோன்றும். செய்திகள் எல்லாம் அப்படி அப்படியே நிகழும்.

இந்த அனுபவத்தின் விரிவை ஆசான் உணர்த்த அறியவேண்டும். இது காரணமாகவே பொத்திப் பொத்திச் செல்கிறது பாடல்.

*139.* சொல்லுமிந்தக் காயவுட லழியுமட்டும்
தூண்டிவிக்கு முன்பிறவி முற்றுந்தோற்றம்
செல்லுமந்தக் காலமிந்த ஆதியந்தம்
செப்பினது திரிகால வர்த்தம்பாரு
கெல்லுமிந்த வகையதனைச் சொன்னீர்நல்லோய்
கேட்டறிவுக் குத்தாந்தான் விள்ளுமேலோய்
கொல்லுமிந்த மனமாளும் யோகந்தாட்டில்
கொடியமனு யோகியென்றால் யோகமுற்றே.

*140.* யோகமுத்தி ஞானபதம் விரும்பாமற்றான்
உள்ளுணர்வில் காட்டிவிக்கும் சமாதியென்பார்
யோகமுடி வேசமாதி பிரமநிஷ்டை
யூகித்தார்க் கருத்துநிக்கும் மேலேசொல்லும்
யோகமது திரிகால யோகமாச்சு
உற்றுணர்ந்து காண்பதுவுஞ் சம்பிரதாயம்
யோகமது யென்னசொல்வேன் கருத்தால்வந்த
யோகத்தி னாச்சரியங் கோடியாமே.

---

*139.* இந்த உடம்பு அழியுமட்டும் இந்த வாசி ஞானத்திலே மூன்று காலமும் துலங்கும். இதற்குமேல் முனிவர்களின் உரையாடல் போன்று செய்தி கேட்டல் என்னும் நிலை பிறக்கப்பெறுகிறது.

*140.* சிந்தித்துப் பார்த்தோமானால் இந்த யோகமானது உடம்பைக் கொண்டு செய்கிற அடயோகம் அன்று. இன்னும் ஆழ்ந்து ஆராய்ந்தால் இது பாவனையை அடிப்படையாகக் கொண்டு நிகழ்கிற மனக்கருத்தின் இயக்கமே!.

## சித்தர்கள் நூல் சொன்ன விபரம்

141. கோடியென்றாற் கோடியல்ல கோடாகோடி
கொங்கணவன் சொல்லிவைத்தா னதுபோதாது
வாடியென்றால் மனஞ்சுருங்கும் பெண்டீர்போல
மனஞ்சுருங்கும் வாசிவலு கோடிசித்து
பேடியென்றா லாணுக்கு வீரம்போல
பெருஞ்சித்தி மேன்மேலும் விழைவிக்குந்தான்
கூடியுந்தான் ஒட்டாம லிருக்கவேணும்
குமரகுரு வர்க்கத்தி லகஸ்தியர்தானே.

142. அகஸ்தியரே பெரும்பேற்றை யடைந்தோராவர்
அம்மம்மா வெகுதெளிவு அவர்வாக்குத்தான்
அகத்திலுறை பொருளெல்லாம் வெளியாய்ச்சொல்வர்
அவர்வாக்குச் செவிகேட்க அருமையாகும்
அகஸ்தியரின் பொதிகையே மேருவாகும்
அம்மலையும் அகஸ்தியரின் மலையுமாகும்
அகத்தியரி னடையாளம் பொதிகைமேரு
அவர்மனதும் அவரைப்போற் பெரியோருண்டோ.

---

141. கோடி என்று ஓர் எண்ணுக்காகக் குறிப்பிட்டதேயல்லாமல் கணக்குப் பார்த்தால் பல கோடிகள்! வா என்று ஒரு பெண்ணை அழைத்தால் வெட்கம் வருவதுபோல எதிர் ஆற்றல் ஒன்று கிளம்புகிறது. எனவே கைகூடிய ஆற்றலை விலகாமல் காக்கவேண்டும்.

142. பல ஞானிகள் இந்த நுட்பங்களைச் சொல்லியுள்ளனர். அவருள்ளே அகத்தியர் வாக்கே மிகமிகத் தெளிவு! அவருடைய பொதிகையே மேரு! அந்த மலையும் அகத்திய மலை. அவருடைய மனதும் மேருமலை! அவரைப் போற் பெரியவர் வேறில்லை.

## துவாபரத்தில் போகநாதன்

143. உண்டோதான் துவாபரத்தில் போகநாதன்
உதித்தகுழாத் துடனேதா னிங்குவந்தார்
கண்டோதான் கருவூரான் போகநாதன்
கர்மமில்லாக் கன்னிசித்தன் கொங்கணன்றன்
விண்டேதான் தன்வந்திரி ஞானஞ்சொன்னார்
விபரமறிந் தகஸ்தியர் குழாம் அங்கெழுந்து
கண்டேதான் ஞானங்கள் மிகவுஞ்சொன்னார்
காதிலே கேட்டேநல் வாக்கென்றேனே.

144. வாக்கியென்றால் வாக்கியன் போகநாதன்
மானிலத்திற் சொல்லியநூ லெல்லாங்கேட்டேன்
ஆக்கியநூல் யாவுமே அமுதமாகும்
அம்மம்மா வாயாலே சொல்லப்போமோ
பாக்கியமாய்ச் சொல்லிவிட்டா ரமுதமாகும்
பண்பான நூல்களையு மறைத்துக்கொண்டார்
நோக்கியே வேடமிட்ட குருக்கள்தன்னை
நுழையாதே ஊர்வழிபோ வென்றேன்பாரே.

---

143. பாரம்பரியம் கூறியவாறு : போகநாதன் என்றும் போகர், கருவூரார், கொங்கணன், தன்வந்திரி ஆகிய வரிசையில் ஞானம் வெளியாயிற்று.

144. போகநாதன் வாக்கே வாக்கு! அவனே வாக்கியன் என்ற சொல்லுக்கு உரியவன். அவனுடைய சொல்லானது அமுதமேயாகும்.

145. பாரப்பா பொய்க்குருக்க ளெல்லோருந்தான்
பரதேசி வேடமிட்டுப் புறப்பட்டார்கள்
ஏரப்பா உழுதக்கால் உலகங்காணும்
இல்லறத்தின் கற்புநிலை தெரியாமாந்தர்
கூரப்பா சொன்னாலுங் குலவழக்கம்
கும்பிடுதல் கோவில்குளம் யில்லாப்பாவி
வீரப்பா அந்திசந்தி அனுஷ்டானங்கள்
விரதவகை தொட்டறியா நீசன்றானே.

146. நீசரென்ன கூட்டமாய்க் கூடிக்கொண்டு
நீணிலத்திற் தற்கித்தார் குலமாமாந்தர்
ஈசரென்ன நீரான தச்சுவேறோ
எங்கள்குலம் வேறான வாறுமேது
பாசமென்ன நீரறிந்தீர் பாசம்விட்டாற்
பரத்துடனே யாம்கலந்தோம் போவென்றார்கள்
தாசரென்ன நீரிருந்தீ ரிதற்குமுன்னே
சமயத்தைத் தள்ளிவிட்டோம் யேற்கோமென்றாரே.

---

145. பொய்யான குருக்களின் வேடமும் செயலும் கூறி அவரை நிந்திக்கிறார்.

பரதேசி வேடம் - துறவி போன்ற கோலங்கள்.

146. நீணிலத்தில் தற்கித்தார் - நாட்டில் எங்குச் சென்றாலும் தர்க்கவாதம் செய்தார். தாசரென்ன நீரிருந்தீர் - அவர்களுக்கு அடிமைகள் என்று உலக மக்களாகிய நீங்கள் தொழிற் பட்டீர்கள்.

சமயத்தைத் தள்ளிவிட்டோம் - மதங்கள் அனைத்தையும் துறந்துவிட்டோம்.

147. ஏர்க்கோமென் றிகழ்ந்ததினாற் குளமுங்கோவில்
இவர்களுக்கு ஆகாம லிருந்ததாலே
பார்க்கோமே கோவிலுக்குள் மூலஸ்தானம்
பரவாசி கண்டிருந்துந் தள்ளிவைத்தார்
ஆர்க்கோதான் நம்மவர்க்கோ ஆகாக்கோவில்
யார்போயென் னாரிருந்தென் னிகழ்ந்துசொன்னார்
நார்க்கோ னாகாது வாக்கியன்தான்
நாட்டினான் கற்சிலையொன் றீட்டினானே.

148. ஈட்டினான் ஓடோடி யெழுதிக்கீறி
இதயமதின் சூடதனை யெழுத்தரைந்தான்
மூட்டினான் மறைத்தவர்கள் குலமாம்வர்க்கம்
மோசம்வரு மென்றுசொல்லிப் பதனஞ்செய்தார்
நீட்டினா னிதுபோல எத்தனையோசொல்லி
நீணிலத்திற் தன்னரசு நாடாங்காலம்
கூட்டினான் செபதபங்கள் தெரியாதாலே
குலவர்க்கம் படிப்பிலிரா குலத்திலெய்திடுமே.

---

147. ஏர்க்கோம் - ஏற்கவிட்டோம். எதுகை நோக்கி இடையினம் பெற்றது.

தள்ளிவைத்தார் - செல்லாது நின்றார்.

யார்போய்என் - எவர் சென்றாலென்ன

யார் இருந்தென் - உள்ளே யார் இருந்தால் என்ன

148. தனது அறியாமை, மோசடி ஆகியவற்றிற்கு இயைந்தபடி கோட்பாடுகள் பேசி மாந்தரை ஏமாற்றியதோடு, மரபுகள் அனைத்தையும் நீக்கி ஆசாரங்களை அழித்தார்கள்.

149. எய்தாது படித்தாலு மெய்தாபாரு
எங்கள்குல சம்பிரதாயம் யார்க்குந்தோணா
வைதாலும் பறைச்சிமகன் வைதுபோடா
மானிலத்திற் பெண்டுவிற்குங் குறவன்போடா
செய்தாலு மிதுவறியாத் தோசிபோடா
சீசீசீ கோவில்குளத் தோசிபோடா
எய்தாலு முங்கள்குல மண்ணுள்மட்டும்
மெக்காலங் கும்பிடுவீர் வுட்போவாயோ.

## தெய்வ மிகழ்தல்

150. உள்ளேதான் போகாத தோசிநீதான்
உயர்தெய்வங் கல்லென்று செப்பிவிட்டாய்
கள்ளேதான் குடித்தாயோ அடியுண்டாயோ
கருமிகையில் சிக்கிநீ யிடியுண்டாயோ
வல்லேநா னென்றுநீ போகாமற்றான்
வாய்மதத்தாற் பட்டசனம மெத்தவுண்டு
செல்வேநா னென்றுநீ போகுங்காலம்
செம்புச்சிலை யென்றுநீ சிறுவனாவாயே.

---

149. தோசி - பாவஞ் செய்த குற்றவாளி. கோயில் குளத்தோசி - கோவிலையும் குளத்தையும் நிந்தித்த பாவி.

150. கோவிலுக்குள் செல்லாத பாவியாகிய நீ, ஏதேதோ இகழ்ச்சி பேசிக் கேடு தேடுகிறாய். உன் முடிவு விபரீதமாகவே இருக்கும்.

151. சிறுவனாய்ப் போனதென்ன உடற்கர்மந்தான்
திருமூர்த்தி யானாலும் பொறுமைவேணும்
கருவிலே செனிக்கையிலே தாயார்தந்தை
தன்மனைவி பிள்ளைசுற்றந் தமரினோடு
தருவனாய் மலைகடலு மாற்றினோரம்
தான்பிறந்த மன்றினிலும் வினையம்புத்தி
பெறுவனாய்ப் பேரிளமை பிணிமூப்பின்பம்
பிறந்தவுட லழியுகின்ற சாவந்தமாமே.

152. அந்தமே ஆதிதொட்டுக் கருவமைந்தால்
ஆகாத தென்றுமில்லை அனர்த்தமில்லை
பந்தமே வந்தாலு மூன்றுபத்தில்
பலிக்காது நின்றுவிடும் பழகினாக்கால்
சொந்தமே யாகிவிடுஞ் சமையதீச்சை
சொற்பேதந் தானறிவார் தீச்சைமேலோர்
கந்தமே நீண்டுவது பிறர்க்குங்கூட
காதுகண்ணு மூக்குவா யுடற்சுகம்போல்.

---

151. உடற்கர்மம் - பிறவித்துன்பம், வினைச்சுழல். பெருவனாய் - பெரியவனாக. பேரிளமை பிணி மூப்பின்பம் - உடம்பெடுத்தபின் வரிசையாக வருகிற இன்பத் துன்பச்சுழல்.

152. சமயச் சடங்குகளிலே தோயும்போது பழகப் பழக அவை உடம்போடு ஒட்டி விடுகின்றன. பிறகு அவற்றை வேறு பிரிக்க முடிவதில்லை. உடம்பின் அங்கங்கள் போலே நம்மின் பகுதிகளாக அவை திகழ்கின்றன.

## சித்தர் வர்க்கம்

153. சுகம்போலே சொல்லிவைத்தான் காசிநாதன்
சொன்னவிதிற் காசிபரும் அதிதியோடு
மகம்போலே திதியோடு வாழ்ந்தான்மேலோன்
மக்களிலே வல்லவர்கள் விதமிரண்டு
அகம்போலே சொல்லிவைத்தான் நந்தியீசன்
அவன்மகனாங் காலாங்கிச் சித்தன்தானும்
நகத்திலே விரல்நுனியில் அழுகுண்டாற்போல்
நாட்டினான் திருமூலன் விபரந்தானே.

154. விபரமாய்த் திருமூலர் பிள்ளைபோகன்
மேலான பிள்ளைகளா மூவருண்டு
அபரமே கொங்கணவன் கருவூரானும்
அய்யோகேள் புலிப்பாணி மூவர்பிள்ளை
விபரமே யிதுபோலே பிள்ளைபெற்றார்
மெய்சிலிர்க்குஞ் சொன்னாலும் பிள்ளைநேர்மை
அபரமே யிதுபோலே அகஸ்தியர்க்கு
ஆனந்த சுந்தரரு மிடைக்காட்டாரே.

---

153. காசிபர் - காசியபர். அதிதி - மனைவி.
அகம்போலே - உட்கருத்தின் வண்ணம்.
காலாங்கி - காலாங்கி என்னும் சித்தன்.

154. போகரைத் திருமூலரின் பிள்ளை என்கிறார். அதாவது சீட பரம்பரையைக் குறிப்பிடுகிறார். போகரின் பிள்ளைகளாகக் கொங்கணவன், கருவூரார், புலிப்பாணி ஆகிய மூவரையுங் குறிப்பிடுகிறார். இவ்வாறு அகத்தியரின் மாணவர்களாக சுந்தரர், இடைக்காடர் ஆகிய இருவர் என்கிறார். பிள்ளை - மகன் என்று சொல்லுகிற ஆசிரிய பரம்பரையில் உதித்த மாணவன்.

## சித்தர்

155. ஆட்டாருஞ் சட்டையரும் புலத்தியர்மச்சர்
ஆச்சரிய மானதொரு பிள்ளையாகும்
பாட்டாரே கோரக்கர் ராமதேவர்
பரிபாஷை யாகவே நூல்கள்சொன்னார்
மீட்டாரே ஒருவருந்தான் காணமாட்டார்
மேலான பெரியோருந் தெரியமாட்டார்
கூட்டான கோரக்கர் சொன்னநூலோ
குமரிமார் நைந்ததுபோல் மனம்புண்ணாமே.

156. புண்ணாகும் குழியழற் பட்டமாந்தர்
புழுவிருக்கு தென்றறியார் கசிந்துநீரால்
மண்ணாகு மவர்மனது வுடலிருக்க
வாய்நீரும் வேர்வைவழி வந்தபோது
எண்ணாத கணக்கில்லை அதிகமானால்
யேதுண்டு புண்குழியி லிறைச்சியுணடு
தண்ணாருந் தண்ணீரே யொழுகும்நாற்றம்
தாரைவழி நீர்விடலு மிரண்டும்பாரே.

---

155. சட்டையர் - சட்டைமுனி

156. உலக இச்சைகளின் செயற்பாட்டை ஒரு சித்தருக்குள்ள வெறுப்போடு, பட்டினத்தார் போலே வேகமான சொற்களால் வேகமாகச் சாடுகிறார்.

157. இரண்டின்மேற் சீயொழுகல் பத்தின்மேலே
யிதுபோலே புருஷருக்கீ ரைந்தின்மேலே
தண்டின்மேல் ரோமமது வலுக்குங்காலம்
தந்தையுடன் தாயாருந் தள்ளிவைப்பார்
வண்டின்மேற் குப்பிருக்கும் வாறேபோல
மனதிருக்கு மங்கையர்கள் வாசலோரம்
மொண்டுமே தேன்குடிக்க வண்டுபாயும்
மோகவலை தடுப்பதற்கு யாராலாமோ.

## ஞானம்

158. ஆகாது ஆண்டொன்று அடுப்பாரானால்
அய்யய்யோ வதின்பிறகு மாதம்மூன்று
வேகாது மற்றநா னென்னசெய்வார்
வெறும்பேச்சாய்ப் போய்விடும் யேவல்செய்வார்
போகாது நித்திரையின் நினைவின்துக்கம்
புருஷருக்கு மாகாத பாவியானாள்
நோகாது அவளைவைத்துப் பார்ப்பதற்கு
நுண்மணலைத் திரித்திடலா மிருவாகாதே.

---

157. வயதின் மாற்றங்களைச் சொல்லிப் போகத்தில் ஆசை உண்டாகும் வகை சொல்லி, இதையெல்லாம் யாரால் தடுக்க முடியும் என்கிறார் - வயதின் கோளாறு!

158. பெண்ணாசையில் உழல்கிற நிலைக்கும் இறையின்பத்துக்கும் தொலைதூரம் என்பதை மேலும் விளக்குகிறார்.

## குடும்ப மார்க்கம்

159. இதுவாகா முப்பதின்மே லிருவருக்கும்
இளஞ்சிசுக்கள் வந்துவிடில் ரெண்டுமூன்று
மதுவாகத் தான்வளப்பார் படுக்கைவீட்டில்
மைந்தரோடு பெண்களோடு தாயார்பக்கம்
பொதுவாகப் படுக்கையதி லெல்லாங்கூடும்
பொழுதுவிழப் புருஷருக்குப் படுக்கைவாய்க்கா
எதுவாகத் தாய்தந்தை யிருப்போர்முன்னோர்
யிதுவிலகி யிருப்பதற்கு ரேமாமோ.

## மலடி மார்க்கம்

160. நேரமது விடிந்தபின்பு நேரேநிற்க
நிமிஷமது கவலையில்லா நேரமில்லை
தூரமது போவமென்றாற் துரத்துவானே
தும்பிமுகன் பெருச்சாளி சுரண்டினாப்போல்
காரமது மேலிடுமே மலடிமார்க்கம்
காட்டுகிறேன் பெண்ணணங்கு சரீரங்கல்லு
வீரமது யென்னசெய்யுஞ் சும்மாதூங்கும்
விதவையுடன் கூடினாப்போல் வேலையீதே.

---

159. குடும்பச் சூழலிலே பாசமும் பிணைப்புமாக நாட்கள் கழிகின்றன. இரவும் பகலும் நிகழ்கிற இந்த நிகழ்ச்சிகளைப் பாடுகிறார்.

160. இந்த இல்லறத்திலும் சில பெண்களோடு கூடுவதில் உலக வளர்ச்சி தடைப்படுகிறது. போகங்கள் பயன் தருவதில்லை என்பதைச் சுட்டிக்காட்டுகிறார்.

161. வேலையிது வென்றுசொல்வாள் அழுதாப்போலே
வேறுமுக மேகிடுவாள் யெனக்கேனென்பாள்
காலையிலு மாலையிலும் ராக்காலத்தும்
கடிதடத்தின் தெரிசனமே தடையில்லாதே
சேலையிலு மினுக்கியிடுஞ் சடமேகல்லு
சிலையதனைப் போயணைத்த சுகம்போலய்யா
பாலதனில் மட்டிப்பா லுண்டாப்போலும்
பசிக்கிஅன்ன முண்ணவும் பழையதாச்சே.

162. பழையதாய்ப் போனபின்பு தள்ளிவைப்பார்
பக்குவங்கள் தப்பினதால் நரைத்தபின்பு
கிழையதாய்க் கூடிருந்த சேர்க்கையாலே
கிழவியென்று யெண்ணாமற் கிழவரோடு
பழையதாய்ப் பேச்சிழுத்து உலகமார்க்கம்
வாயுறவு கொண்டாடிக் கூடுவார்கள்
கிழையதாய்ச் சம்பந்த மானபின்பு
கிழவிமக்கள் பிள்ளைகளைத் தூக்குவாளே.

---

161. காய்க்காத மரம்போன்ற பெண்ணின் சுகத்தினால் பயனில்லை என்பதை மேலும் பாடுகிறார்.

162. வயதான பின்பும் பிணைப்புக்கள் நீங்குவதில்லை. உடலுறவு விழுகிறது. வாயுறவு நீள்கிறது. பிள்ளைப் பாசம் குலதருமமாகிப் பாசப்பிணிப்பு வலுக்கிறது.

163. பிள்ளைகளைத் தூக்குதற்கு மகள்வீடேகி
பெருந்தூர மேகிடுவாள் தனியேவைப்பாள்
பிள்ளைகளின் சம்பந்த மானபின்பு
பெருங்குடும்ப மெனக்கென்ன வென்றுசொல்வாள்
பிள்ளைகளைப் பெறுமுன்னே தனதேயாவாள்
பெற்றபிள்ளை அன்னமுண்டாற் சரியேயாவாள்
பிள்ளைகளை யேவளர்க்கத் தூக்கநேரம்
பிசகாமல் நின்றிடுவா ளேசுவாளே.

164. ஏசுவாள் சுகதுக்கம் நமக்கேயென்றாள்
இச்சுகமே போதுமக்கு யெனக்கேனென்பாள்
வீசுவாள் சாஸ்திரத்தி லுண்மைபோல
வீணிலே நானிருக்கேன் போம்நீரென்பாள்
பேசுவா ளவள்புருடன் மட்டிமட்டி
பெருமூச்சு தானும்விட்டு எழுந்திருந்து
கூசியே அருகில்நின்று வார்த்தைசொல்வாள்
கொடுமையுள்ள பெண்ணணங்கு மிஞ்சுவாளே.

---

163. குடும்பம் என்று ஏற்பட்ட பின்பு குழந்தைகளோடு நேரம் கழிகிறது. பிள்ளைகளைப் பெறுவதும் பேணுவதும் வளர்ப்பதுமான செயல்களில் நேரம் முழுதும் சரியாகின்றன.

164. வயதான பின்பு ஒரு பெண் தன் கணவனை எப்படி உதாசீனம் செய்கிறாள் என்பதை ஒரு நாடகம்போலப் பாடுகிறார்.

165. மிஞ்சினே னுமைமணந்த விசேஷத்தாலே
மேலான காரிங்க ளெல்லாங்கண்டேன்
துஞ்சினேன் கவலையன்றிப் படுக்கைகொண்டேன்
சுடுகாடு போலானேன் சுகமதானேன்
அஞ்சினேன் சூக்ஷமது காணாதாலே
அங்கமதில் நெஞ்சுநடுப் பள்ளமேடை
கெஞ்சினா னதையறிந்து பிளந்துவென்றேன்
கேடில்லா திருந்ததுதான் ஞானமென்னே.

166. என்னவென்று நாமிருந்தால் பின்னேவந்து
ஏங்கவைக்கு தோர்நினைவு யென்னசொல்லும்
முன்னேதான் சொன்னபெண்ணைத் தள்ளிவைத்தால்
மோசம்வருங் காயப்பெண் ணிரவில்வந்தே
என்னேநீ யெண்ணிக்கை நினைவுமேலே
எழுந்தோடி வந்துவிடும் நம்மூக்குள்ளே
அன்னேதா னென்னாளுந் திரும்பிவந்து
அழுதவளு மடிபிடித்துத் தொங்குவாளே.

---

165. திருமணம் செய்து அந்தச் சுகங்களை அனுபவித்த கதையையெல்லாம் சொல்லுகிறாள் மனைவி.

166. இந்த இல்லறப் பெண்ணுக்கு நடுவிலே ஞானப்பெண் என்ன ஆவாள்? இரவும் பகலுமாகச் சுழல்கிற காலத்தில் சுழற்சியிலே யாருக்கு எது இடம்?

167. தொங்குவாள் வையகத்துப் பெண்ணின்மாந்தர்
சொக்குவார் பொருளில்லார் பெண்ணின்மேலே
தங்குவார் பொருளிருந்தா வடிமைசெய்வார்
தன்கணவன் கோபமெல்லாந் தாங்கியேங்கி
பொங்குவார் பொருளில்லாப் புருஷராலே
புலைவேடந் தானெடுத்தா லழுதுநிற்பார்
மங்குவா ரிப்படியே புருஷன்பெண்டீர்
மாமலையி லிருந்தாலுங் கூடித்தானே.

168. கூடினார் பெண்களுமே பெண்ணின்கூத்து
குமரகுரு பரன்வீட்டி லிதுதானப்பா
பாடினா ரிப்படியே யதனைக்கண்டு
பரதேசி வேடமிட்டார் மலைமேல்நின்றார்
தேடினார் சிவனுமையு மூத்தார்தானும்
திருமாலும் நான்முகனுந் தேடிக்கண்டார்
வாடினார் சரஸ்பதியு மாலின்தேவி
மாதீப லெட்சுமியும் நாடினாளே.

---

167. வசதிகள் குறைந்தால் கணவனிடம் வெறுப்பு. பணநிறைவிலே மகிழ்ச்சி. இப்படியே சுற்றிச் சுழல்கிறது பந்தபாசப் பிணைப்பு.

168. இப்படித்தான் உலக நடப்பு இருக்கிறது. ஆகவே பரதேசி வேடமிட்டார்கள். இப்படியேதான் திருமாலும் நான்முகனும் தேடிக்கண்டார். சரஸ்வதியும் இலக்குமியும் தேவியர்கள் என்றவாறெல்லாம் புராணங்கள் பாடினார்கள்.

169. நாடினார் மலைமீதி லிருக்கக் கண்டார்
நங்கைவள்ளி தெய்வானை வெட்கிநின்றாள்
ஓடினார் யானைவள்ளி புருஷன்தானே
ஓடிதே யென்றுசொன்னார் உலகவாழ்வே
சாடினார் யெங்களைப்போல் நீயுஞ்செய்தாய்
தம்வாணி நீயல்ல யெம்மைப்போல
வாடினாய் நீயிருவே னாங்கள்போறோம்
மதிவிட்டோம் பிள்ளைகளை வந்தாற்போலே.

170. போலவே வேலையிட்டார் விந்தையிட்டார்
புழுக்கூடு சாவதற்கே சலனந்தொட்டார்
ஏலவே நாங்கள்வந்தோ மிந்தமார்க்கம்
எப்போதும் நாமழியச் செய்துவைத்தோம்
சாலவே சங்கடமே லேசாய்ச்செய்தோம்
தம்மையுமே நாமறிந்து சிசுவைச்செய்தோம்
காலமே வந்தகதிர் மறைந்தஞாயம்
கதிரில்லாச் சூரியனோ மறைந்ததேனோ.

---

169. இல்லறச் சூழலிலே சுற்றிவரும் மாந்தர் தெய்வங்களை எப்படி அணுகி அந்தச் சுழலிலேயே சுற்றுகிறார்கள் என்பதைச் சொல்கிறது இந்தப் பாடல்.

170. இவ்வாறு உலக வாழ்க்கை சென்று சென்று, தந்தை, மகன், மகனின்மகன் என்று செல்கிறது உலகம். சூரியன் உதிப்பதும் மறைவதும் உதிப்பதுமாக நாள்கள் ஓடுகின்றன.

167. தொங்குவாள் வையகத்துப் பெண்ணின்மாந்தர்
சொக்குவார் பொருளில்லார் பெண்ணின்மேலே
தங்குவார் பொருளிருந்தா வடிமைசெய்வார்
தன்கணவன் கோபமெல்லாந் தாங்கியேங்கி
பொங்குவார் பொருளில்லாப் புருஷராலே
புலைவேடந் தானெடுத்தா லழுதுநிற்பார்
மங்குவா ரிப்படியே புருஷன்பெண்டீர்
மாமலையி லிருந்தாலுங் கூடித்தானே.

168. கூடினார் பெண்களுமே பெண்ணின்கூத்து
குமரகுரு பரன்வீட்டி லிதுதானப்பா
பாடினா ரிப்படியே யதனைக்கண்டு
பரதேசி வேடமிட்டார் மலைமேல்நின்றார்
தேடினார் சிவனுமையு மூத்தார்தானும்
திருமாலும் நான்முகனுந் தேடிக்கண்டார்
வாடினார் சரஸ்பதியு மாலின்தேவி
மாதிப லெட்சுமியும் நாடினாளே.

---

167. வசதிகள் குறைந்தால் கணவனிடம் வெறுப்பு. பணநிறைவிலே மகிழ்ச்சி. இப்படியே சுற்றிச் சுழல்கிறது பந்தபாசப் பிணைப்பு.

168. இப்படித்தான் உலக நடப்பு இருக்கிறது. ஆகவே பரதேசி வேடமிட்டார்கள். இப்படியேதான் திருமாலும் நான்முகனும் தேடிக்கண்டார். சரஸ்வதியும் இலக்குமியும் தேவியர்கள் என்றவாறெல்லாம் புராணங்கள் பாடினார்கள்.

169. நாடினார் மலைமீதி லிருக்கக் கண்டார்
நங்கைவள்ளி தெய்வானை வெட்கிநின்றாள்
ஓடினார் யானைவள்ளி புருஷன்தானே
ஓடிதே யென்றுசொன்னார் உலகவாழ்வே
சாடினார் யெங்களைப்போல் நீயுஞ்செய்தாய்
தம்வாணி நீயல்ல யெம்மைப்போல
வாடினாய் நீயிருவே னாங்கள்போறோம்
மதிவிட்டோம் பிள்ளைகளை வந்தாற்போலே.

170. போலவே வேலையிட்டார் விந்தையிட்டார்
புழுக்கூடு சாவதற்கே சலனந்தொட்டார்
ஏலவே நாங்கள்வந்தோ மிந்தமார்க்கம்
எப்போதும் நாமழியச் செய்துவைத்தோம்
சாலவே சங்கடமே லேசாய்ச்செய்தோம்
தம்மையுமே நாமறிந்து சிசுவைச்செய்தோம்
காலமே வந்தகதிர் மறைந்தஞாயம்
கதிரில்லாச் சூரியனோ மறைந்ததேனோ.

---

169. இல்லறச் சூழலிலே சுற்றிவரும் மாந்தர் தெய்வங்களை எப்படி அணுகி அந்தச் சுழலிலேயே சுற்றுகிறார்கள் என்பதைச் சொல்கிறது இந்தப் பாடல்.

170. இவ்வாறு உலக வாழ்க்கை சென்று சென்று, தந்தை, மகன், மகனின்மகன் என்று செல்கிறது உலகம். சூரியன் உதிப்பதும் மறைவதும் உதிப்பதுமாக நாள்கள் ஓடுகின்றன.

167. தொங்குவாள் வையகத்துப் பெண்ணின்மாந்தர்
சொக்குவார் பொருளில்லார் பெண்ணின்மேலே
தங்குவார் பொருளிருந்தா வடிமைசெய்வார்
தன்கணவன் கோபமெல்லாந் தாங்கியேங்கி
பொங்குவார் பொருளில்லாப் புருஷராலே
புலைவேடந் தானெடுத்தா லழுதுநிற்பார்
மங்குவா ரிப்படியே புருஷன்பெண்டீர்
மாமலையி லிருந்தாலுங் கூடித்தானே.

168. கூடினார் பெண்களுமே பெண்ணின்கூத்து
குமரகுரு பரன்வீட்டி லிதுதானப்பா
பாடினா ரிப்படியே யதனைக்கண்டு
பரதேசி வேடமிட்டார் மலைமேல்நின்றார்
தேடினார் சிவனுமையு மூத்தார்தானும்
திருமாலும் நான்முகனுந் தேடிக்கண்டார்
வாடினார் சரஸ்பதியு மாலின்தேவி
மாதீப லெட்சுமியும் நாடினாளே.

---

167. வசதிகள் குறைந்தால் கணவனிடம் வெறுப்பு. பணநிறைவிலே மகிழ்ச்சி. இப்படியே சுற்றிச் சுழல்கிறது பந்தபாசப் பிணைப்பு.

168. இப்படித்தான் உலக நடப்பு இருக்கிறது. ஆகவே பரதேசி வேடமிட்டார்கள். இப்படியேதான் திருமாலும் நான்முகனும் தேடிக்கண்டார். சரஸ்வதியும் இலக்குமியும் தேவியர்கள் என்றவாறெல்லாம் புராணங்கள் பாடினார்கள்.

169. நாடினார் மலைமீதி லிருக்கக் கண்டார்
நங்கைவள்ளி தெய்வானை வெட்கிநின்றாள்
ஓடினார் யானைவள்ளி புருஷன்தானே
ஓடிதே யென்றுசொன்னார் உலகவாழ்வே
சாடினார் யெங்களைப்போல் நீயுஞ்செய்தாய்
தம்வாணி நீயல்ல யெம்மைப்போல
வாடினாய் நீயிருவே னாங்கள்போறோம்
மதிவிட்டோம் பிள்ளைகளை வந்தாற்போலே.

170. போலவே வேலையிட்டார் விந்தையிட்டார்
புழுக்கூடு சாவதற்கே சலனந்தொட்டார்
ஏலவே நாங்கள்வந்தோ மிந்தமார்க்கம்
எப்போதும் நாமழியச் செய்துவைத்தோம்
சாலவே சங்கடமே லேசாய்ச்செய்தோம்
தம்மையுமே நாமறிந்து சிசுவைச்செய்தோம்
காலமே வந்தகதிர் மறைந்தஞாயம்
கதிரில்லாச் சூரியனோ மறைந்ததேனோ.

---

169. இல்லறச் சூழலிலே சுற்றிவரும் மாந்தர் தெய்வங்களை எப்படி அணுகி அந்தச் சுழலிலேயே சுற்றுகிறார்கள் என்பதைச் சொல்கிறது இந்தப் பாடல்.

170. இவ்வாறு உலக வாழ்க்கை சென்று சென்று, தந்தை, மகன், மகனின்மகன் என்று செல்கிறது உலகம். சூரியன் உதிப்பதும் மறைவதும் உதிப்பதுமாக நாள்கள் ஓடுகின்றன.

167. தொங்குவாள் வையகத்துப் பெண்ணின்மாந்தர்
சொக்குவார் பொருளில்லார் பெண்ணின்மேலே
தங்குவார் பொருளிருந்தா வடிமைசெய்வார்
தன்கணவன் கோபமெல்லாந் தாங்கியேங்கி
பொங்குவார் பொருளில்லாப் புருஷராலே
புலைவேடந் தானெடுத்தா லழுதுநிற்பார்
மங்குவா ரிப்படியே புருஷன்பெண்டீர்
மாமலையி லிருந்தாலுங் கூடித்தானே.

168. கூடினார் பெண்களுமே பெண்ணின்கூத்து
குமரகுரு பரன்வீட்டி லிதுதானப்பா
பாடினா ரிப்படியே யதனைக்கண்டு
பரதேசி வேடமிட்டார் மலைமேல்நின்றார்
தேடினார் சிவனுமையு மூத்தார்தானும்
திருமாலும் நான்முகனுந் தேடிக்கண்டார்
வாடினார் சரஸ்பதியு மாலின்தேவி
மாதிப லெட்சுமியும் நாடினாளே.

---

167. வசதிகள் குறைந்தால் கணவனிடம் வெறுப்பு. பணநிறைவிலே மகிழ்ச்சி. இப்படியே சுற்றிச் சுழல்கிறது பந்தபாசப் பிணைப்பு.

168. இப்படித்தான் உலக நடப்பு இருக்கிறது. ஆகவே பரதேசி வேடமிட்டார்கள். இப்படியேதான் திருமாலும் நான்முகனும் தேடிக்கண்டார். சரஸ்வதியும் இலக்குமியும் தேவியர்கள் என்றவாறெல்லாம் புராணங்கள் பாடினார்கள்.

169. நாடினார் மலைமீதி லிருக்கக் கண்டார்
நங்கைவள்ளி தெய்வானை வெட்கிநின்றாள்
ஓடினார் யானைவள்ளி புருஷன்தானே
ஓடிதே யென்றுசொன்னார் உலகவாழ்வே
சாடினார் யெங்களைப்போல் நீயுஞ்செய்தாய்
தம்வாணி நீயல்ல யெம்மைப்போல
வாடினாய் நீயிருவே னாங்கள்போறோம்
மதிவிட் டோம் பிள்ளைகளை வந்தாற்போலே.

170. போலவே வேலையிட்டார் விந்தையிட்டார்
புழுக்கூடு சாவதற்கே சலனந்தொட்டார்
ஏலவே நாங்கள்வந்தோ மிந்தமார்க்கம்
எப்போதும் நாமழியச் செய்துவைத்தோம்
சாலவே சங்கடமே லேசாய்ச்செய்தோம்
தம்மையுமே நாமறிந்து சிசுவைச்செய்தோம்
காலமே வந்தகதிர் மறைந்தஞாயம்
கதிரில்லாச் சூரியனோ மறைந்ததேனோ.

---

169. இல்லறச் சூழலிலே சுற்றிவரும் மாந்தர் தெய்வங்களை எப்படி அணுகி அந்தச் சுழலிலேயே சுற்றுகிறார்கள் என்பதைச் சொல்கிறது இந்தப் பாடல்.

170. இவ்வாறு உலக வாழ்க்கை சென்று சென்று, தந்தை, மகன், மகனின்மகன் என்று செல்கிறது உலகம். சூரியன் உதிப்பதும் மறைவதும் உதிப்பதுமாக நாள்கள் ஓடுகின்றன.

171. ஏனோதான் நம்முடலும் நாமழிந்து
யிருதயத்தைப் புண்ணாக்கி விந்தைவிட்டு
கூனேதா னாகியுள்ள ரத்தங்கெட்டு
குடிசையுள்ளே நாம்படுத்துத் தூங்கினாப்போல்
நானேநா மெல்லோரும் பிரண்டுருண்டு
நாயகியாள் தன்னிடுப்பில் விழுந்தகூரு
தேனேதா னெடுத்துண்ணக் குழவிகொட்டத்
தெய்வமே யென்றழுத துன்பந்தானே.

172. துன்பமே மனத்துன்பம் மேலேஏறும்
தொக்குஉடற் காய்ச்சடலம் புண்ணாய்வேகும்
இன்பமே யித்தனைக்குந் தீயிட்டாப்போல்
யிவள்போலே தானிருந்து புண்ணாம்மோகம்
கம்பமோ வதுநில்லா நம்மைக்கொல்லும்
காயவுட லுண்டுவிட வந்தாள்மாரி
தம்பமோ மோககூக மெந்தமட்டோ
தாரித்திரம் வந்தபின்பு சிநேகமுண்டோ.

---

171. இப்படியாக வாழ்க்கை நடந்துசென்று, பிறகு மூப்பும் பிணியும் வந்தடைகின்றன.

172. மோகம் என்பதும் பெண்ணாசை என்பதும் எப்படியெல்லாம் இயங்கிப் பிறகு மரணத்திலே கொண்டுவிடுகிறது என்பதைப் பாடுகிறது இந்தச் செய்யுள்.

173. உண்டுஉண்டு பொருளிருந்தா லெல்லாமுண்டு
ஊருண்டு காடுண்டு மலைதானுண்டு
தொண்டுண்டு தீபவொளி மேடையுண்டு
சுடுகாடு போமளவு மேன்மையுண்டு
தண்டுண்டு பொருளில்லாற் கென்னவுண்டு
சமத்தென்ன வாயென்ன சவுடாலென்ன
கண்டுண்டு கேட்பதென்ன தோணாதென்ன
கர்மமென்று சொல்லிடுதல் யெதனாலென்னே.

வாலை

174. என்னவென்றால் நம்கோச பீசமத்தி
யிருக்கின்ற கொடியொன்று கயிறுபோல
சொன்னததில் முடிச்சொன்று முடிச்சின்காமம்
துயர்விளைக்கு மனதுலைக்குந் தோணிபோல
அன்னசத்து அங்கிருக்கு முடிச்செலும்பே
அவ்வெலும்பு மேடாகும் புன்னிடுப்பே
பின்னசைத்து பெண்ணிடுப்பிற் முன்பாகத்தில்
பெருவரையே கால்நடுவிற் கேணிதானே.

---

173. செல்வம் ஒன்று வேண்டும் இத்தகைய உலக வாழ்வுக்கு.

அது இருந்து விட்டால் பிறகு மற்ற அனைத்தும் தொடரும்.

174. வாலையின் இருப்பிடம் சொல்கிறது.
இந்த உடம்புக்குள் கயிறும் அதிலுள்ள முடிச்சும் குரு உணர்த்தத் தெரியவேண்டிய மையமாகும்.

175\. கேணியதி லாண்முடிச்சு விழுகுந்தள்ளும்
கிருகிரென வேமயங்குஞ் சுழலுங்கண்கள்
பாணியது நாவரளும் முடிச்சுநோகும்
பாதமது யேகாது படுக்கச் செய்யும்
நாணியது வேவிலகும் மல்லாந்தோர்கள்
நடுங்காம லேயெழுந்து நடந்துபோவார்
சாணியது விட்டாக்கால் நீரேசிந்தி
தண்டுநரம் பேகாது சாய்கைதானே.

176\. சாய்கைதான் நாமிரண்டு பேருஞ்செய்த
சங்கர்ப்பம் பிள்ளையென உருவேயாகி
மாய்கைதான் பிறந்தவளின் மடியிருக்க
மனையாட்டி தான்படுத்த வண்மையாகா
நாய்கைதான் விரற்பொந்திற் சர்ப்பந்தீண்ட
நாயழுத வாறேபோல் மனையாள்ஞாயம்
கூகூவென் றழுதபிள்ளை தொட்டிலாட்டிக்
குமரிசத்தம் போட்டசைத்து ஆட்டும்போதே.

---

175\. இந்த உடம்பில் எப்படி வம்ச விருத்தி ஏற்படுகிறது என்பதைச் சொல்கிறார். ஒவ்வொரு கலவியின்போதும் நேருகிற பருஉடலின் செயல்களைக் கூறுகிறார்.

176\. சிசு பிறந்து அழுவது முதல் இந்தப் பிறப்புத் தத்துவம் எப்படி வினைசெய்கிறது என்பதைப் பாடுகிறார்.

177. ஆட்டுவாள் நாம்விலக்கித் தூரநிற்போம்
அசைந்தாடுந் தொட்டிலதி லழும்போதெல்லாம்
தீட்டுவாள் கண்ணீரைப் பாட்டேசொல்லி
செத்தார்போல் தூங்கும்வரை ஆட்டிக்கொள்வாள்
நாட்டுவாள் நாம்நினைக்கக் குழந்தைசத்துரு
நாம்நினைக்க நடுநிற்கும் தூரநிற்பாள்
மூட்டுவாள் குழந்தைதனைப் பாராமற்றான்
மூடமா யானாயே தூரநில்லே.

178. நில்லென்று சொன்னதுவும் ஞாயந்தானோ
நிமிஷஉற வாடுவரே பின்னாற்தானே
மல்லென்று வதைவருங் குழந்தைபின்பு
மலடியே யானாலுந் துன்பமுண்டு
வில்லென்று நாம்வளையா திருந்தோமால்
விதவைபோ லேயிருந்து விருதாவாழ்வு
சொல்லென்றும் நீங்காதே காமநோயே
துணையாகப் பிறந்ததுவும் நாமேதானே.

---

177. பாசம் செய்கிற வேலை அது! குழந்தையைத் தொட்டிலில் இட்டு ஆட்டுவதும் பாட்டுப் பாடுவதும் தூங்கவைப்பதுமான பல செயல்கள் இப்படி நிகழ்கின்றன.

178. குழந்தை பிறப்பதனால் இப்படி நேர்கிறது துன்பம்! பிறக்காவிட்டாலோ மலடி என்ற துன்பம்! பயனற்ற வாழ்வாக முடிகிறது. எனவே, காமத்தினை இன்றியமையாத காரியமாக நிற்கிறது! எல்லாம் நாமே தேடிக்கொள்வது.

175. கேணியதி லாண்முடிச்சு விழுகுந்தள்ளும்
கிருகிரென வேமயங்குஞ் சுழலுங்கண்கள்
பாணியது நாவரளும் முடிச்சுநோகும்
பாதமது யேகாது படுக்கச் செய்யும்
நாணியது வேவிலகும் மல்லாந்தோர்கள்
நடுங்காம லேயெழுந்து நடந்துபோவார்
சாணியது விட்டாக்கால் நீரேசிந்தி
தண்டுநரம் பேகாது சாய்கைதானே.

176. சாய்கைதான் நாமிரண்டு பேருஞ்செய்த
சங்கர்ப்பம் பிள்ளையென உருவேயாகி
மாய்கைதான் பிறந்தவளின் மடியிருக்க
மனையாட்டி தான்படுத்த வண்மையாகா
நாய்கைதான் விரற்பொந்திற் சர்ப்பந்தீண்ட
நாயழுத வாறேபோல் மனையாள்ஞாயம்
கூகூவென் றழுதபிள்ளை தொட்டிலாட்டிக்
குமரிசத்தம் போட்டசைத்து ஆட்டும்போதே.

---

175. இந்த உடம்பில் எப்படி வம்ச விருத்தி ஏற்படுகிறது என்பதைச் சொல்கிறார். ஒவ்வொரு கலவியின்போதும் நேருகிற பருஉடலின் செயல்களைக் கூறுகிறார்.

176. சிசு பிறந்து அழுவது முதல் இந்தப் பிறப்புத் தத்துவம் எப்படி வினைசெய்கிறது என்பதைப் பாடுகிறார்.

177. ஆட்டுவாள் நாம்விலக்கித் தூரநிற்போம்
அசைந்தாடுந் தொட்டிலதி லழும்போதெல்லாம்
தீட்டுவாள் கண்ணீரைப் பாட்டேசொல்லி
செத்தார்போல் தூங்கும்வரை ஆட்டிக்கொள்வாள்
நாட்டுவாள் நாம்நினைக்கக் குழந்தைசத்துரு
நாம்நினைக்க நடுநிற்கும் தூரநிற்பாள்
மூட்டுவாள் குழந்தைதனைப் பாராமற்றான்
மூடமா யானாயே தூரநில்லே.

178. நில்லென்று சொன்னதுவும் ஞாயந்தானோ
நிமிஷஉற வாடுவரே பின்னாற்தானே
மல்லென்று வதைவருங் குழந்தைபின்பு
மலடியே யானாலுந் துன்பமுண்டு
வில்லென்று நாம்வளையா திருந்தோமால்
விதவைபோ லேயிருந்து விருதாவாழ்வு
சொல்லென்றும் நீங்காதே காமநோயே
துணையாகப் பிறந்ததுவும் நாமேதானே.

---

177. பாசம் செய்கிற வேலை அது! குழந்தையைத் தொட்டிலில் இட்டு ஆட்டுவதும் பாட்டுப் பாடுவதும் தூங்கவைப்பதுமான பல செயல்கள் இப்படி நிகழ்கின்றன.

178. குழந்தை பிறப்பதனால் இப்படி நேர்கிறது துன்பம்! பிறக்காவிட்டாலோ மலடி என்ற துன்பம்! பயனற்ற வாழ்வாக முடிகிறது. எனவே, காமத்தினை இன்றியமையாத காரியமாக நிற்கிறது! எல்லாம் நாமே தேடிக்கொள்வது.

179. நாமென்ன பாடுபட்டுந் துன்பந்தானே
நம்மனைவி தன்சுகமுஞ் சுகமோவீணே
ஆமென்ன சொன்னாலுங் கூடிவாழ்வ
தரிதாகும் நிற்காது யின்பந்தாமும்
நாமென்ன சிசுக்கள்வந்து நம்மேல் வீழ்ந்தால்
கலந்துவிடும் நாமென்ன செய்யலாம்
சாமென்ன நாம்நினைவு கொள்ளல்தானும்
சங்கர்ப்ப மித்தனைக்கு மூலந்தானே.

180. மூலம்நாம் வழக்கிடவு முடியுமோபார்
மோகமந்தப் பெண்டீரும் பொருள்போல்ரூபம்
காலமந்தக் காலமெதிர் வந்துதானால்
கண்செவியுந் தூங்காது கருத்துஞ்சொக்கும்
பாலமந்தப் பாதைவழி போகாதார்க்கு
பரதேசி யென்றிடலா மில்லங்கூட
ஞாலமதி லிப்படியே வெகுபேர்நின்றார்
நம்குருவுஞ் சீஷனுமாய் வெகுபேர்தானே.

---

179. எத்தனை பாடுபட்டாலும் கடைசியில் துன்பந்தான் முடிவாகிறது. பிள்ளைப்பாசம் ஆட்டுகிறது. இத்தனைக்கும் வித்து சங்கற்பந்தான்!

180. இச்சை உதித்துவிட்டால் என்ன நேர்கிறது! கண்ணும் தூங்காது, செவியும் நிற்காது. இப்படி இருக்கிறது இல்லறப் பாதை. இதிலே போகாத பரதேசி வாழ்க்கை எப்படி இருக்கிறது. குருவும் சீடனுமாகப் பின்னி நிற்கிறது.

181. வெகுபேர்க ளிச்சையுண்டு யில்லாருண்டு
மேதினியிற் கபடமாய் விட்டோருண்டு
வெகுவிதே யென்றுசொல்வார் வெகுவேயாகா
வெகுவாகுங் காசில்லார் தாரமில்லார்
நெருவிதா மண்ணிற்கல் நீக்கலாமா
நீண்விசும்பில் ராப்பகலும் ஒன்றதாமா
வெகுவிலாப் பசியடங்க மனிதர்நீங்க
நீர்கண்ட எருமைபன்றி நின்றிடாதே.

182. நிற்குமோ சொல்லிடுவீர் நின்றபேரே
நின்றவரார் மதிகதிரை நேரிற்பாரீர்
நிற்குமோ சோடியன்றி ஒன்றேயுண்டோ
நேர்மலையு மண்ணன்றி வாரியன்றி
நிற்குமோ பெண்ணையன்றிப் புருஷரன்றி
நிகழ்காலம் விழைவிக்கும் பிள்ளையிச்சை
நிற்குமோ நாம்தனியே நின்றாற்காயம்
நில்லாது ஆனதினா லிச்சையாச்சே.

---

181. பலருடைய வாழ்க்கையும் இப்படியேதான் ஓடுகிறது. மண்ணிலிருந்து கல்லை நீக்க முடியுமா? அப்படித்தான் பாசம் பிணைந்திருக்கிறது. பசியடங்குதல் என்பது உடற்பயிற்சி உள்ளத்தின்பசி இரண்டுமே! தண்ணீரைப் பார்த்ததும் எருமையும் பன்றியும் தாவிக் குதிக்கின்றன!

182. எப்பரமே இணைப்பிலே சுழல்கிறது இவ்வுலகம்! கடலின்றி மண்ணில்லை, பெண்ணின்றி ஆணில்லை என்ற பிணைப்பு! இச்சை வந்த விதம் இதுவே.

183. இச்சையென்ன மனத்துன்பஞ் சரீரதுன்பம்
யிதுவென்ன மலசலங்க ளிடையிற்துன்பம்
கச்சையென்ன உடையினொடு உணவுதுன்பம்
காதென்ன பார்வையொடு துன்பமாச்சு
பச்சையென்ன கொடிநரம்பு ரத்தக்கூற்றைப்
பார்த்தல்லோ யானிருந்தேன் பலநாள்வீணில்
கச்சையென்ன மங்கைமின்னார் உலகம்வீடு
கடல்மலைக ளேறியுந்தா னிறைபோதாதே.

184. போதாது யென்னுடனே புத்திரரோடு
புத்திரர்கள் சம்பிரதாயம் யிரைபோதாது
வாதாது மாபலியுஞ் சூரபத்மன்
வந்துமே ஆகாரம் போதாதென்றான்
ஏதேது யிப்படியே யிருந்தார்மேலோர்
யிமைவிழியாத் தூக்கத்தி லிருந்தபோதும்
சாகாது வாழ்வமென்ற முனிவரோடு
தன்னுடலைப் போட்டிருநாள் தெரிந்திலாரே.

---

183. இச்சையினால் ஏற்படுகிற துன்பங்கள்தாம் எத்தனை! மனத்துன்பம், உடல் துன்பம், உடை உணவு என்ற துன்பம், இத்தியாதி.

184. குடும்ப நிலை போதாது! உணவு போதாது! இப்படியே போதாமை பல்கிப் பெருகுகிறது! எத்தனை உணவு கண்டாலும் போதாது என்ற நிலை!

185. தெரிந்திடுவார் காயவுயிர் அறியாமட்டி
சீரழியச் செய்தவர்கள் பெண்ணாமங்கை
மரிந்திலா மங்கையரா நம்மைக்காப்பார்
மறைவேதப் பிரமனவன் சிருஷ்டிபோலே
அறிந்திலா மங்கையரும் வளர்த்தார்சிருஷ்டி
ஆனதினாற் பெண்பிரமன் சரியேயாகும்
எறிந்திலாச் சந்திரன்போ லுதவிசெய்து
இருள்நீக்கிப் பெண்ணுடனே தள்ளல்போலே.

186. போலவேப நம்துணையாய் உதவிபோலும்
பொங்குதிரை யலைபோலே வாழ்ந்தார்மின்னார்
ஏலவே புற்பூண்டு கொடிமரங்கள்
ஏதவத்தை குடும்பமுண்டோ பழம்காயுண்டு
சாலவே நாய்நரிகள் குஞ்சுக்காக
தாபந்தம் உண்டிடுமோ யேதுங்காணோம்
மாளவே வைப்பதர்க்கா யிச்சீவர்க்கு
மற்றுள்ள சீவர்கட்கு யெதுங்காணோமே.

---

185. காயத்தின் தாபத்தாலே பெண்ணாசையிலே சிக்கி எத்தனை பிணைப்புத் துன்பங்களிலே உழல வேண்டியுள்ளது என்பதைப் பாடுகிறது இந்தச் செய்யுள்.

186. அலைஅலையாய் வருவதுபோலே அடுக்கடுக்காய்ப் பாசப்பிணைப்பில் துன்பங்கள் வருகின்றன குடும்ப வாழ்க்கையில்! ஆனால், நாயும் நரியும் பிள்ளைகளுக்காக இப்படிப்பட்ட பிணைப்பிலே சிக்கி உழல்கின்றனவா? குடும்பத்துன்பம் அவற்றுக்கு ஏது?

187. காணோமே மேல்மதியு முடுக்கினமும்
கதிரவனுந் தேடவில்லை யிரையைத்தானே
ஊணுமே யெங்களன்றிக் கதவுபூட்டு
ஒருசீவர் வைக்கவில்லை துன்பமில்லை
நாணுமே வைக்காட்டா லெங்களுக்கே
நாயகமே கைலையதிற் பூட்டுண்டோசொல்
வீணுவே யாகாத பூட்டுண்டாகில்
விதவைபிள்ளை பேறான விந்தையாமே.

188. ஆமிந்த விதத்தாலே சலனமெல்லாம்
ஆகிடிலோ திரிகால வர்த்தம்போக
நாமிந்த வகைதானே உலகந்தானே
நல்லவர்க ளாவதெப்போ சலனந்தீர்ந்து
காமிந்த மனதாலே பட்டோரெல்லாம்
கடினமென்று போனாரே ஆகாதல்ல
தாமிந்தப் படிசொன்னா லென்னவாகும்
தம்பியர்க ளாவதெப்போ சாஸ்திரம்பாரே.

---

187. இப்படிப்பட்ட பூட்டும் கதவும் அவசியந்தானா? வேறு எந்த சீவருக்கும் இல்லாத பூட்டும் கதவும் நமக்கு எதற்கு? அவை இல்லாவிடில் முகவரி இல்லாத குழந்தைகளாக அல்லவா நமது வம்சம் ஆகிவிடும் - விதவை பெற்ற பிள்ளைகளைப் போல!

188. அப்படியானால் இந்தத் துன்பச் சுழற்சியிலிருந்து விடுபடுவது எப்படி? எப்போது?

## தெய்வந்தோண

189. பாரப்பா பேய்போலே கதறிக்கொண்டு
பசப்பியே திரிவதனா லென்னவுண்டு
நாரப்பா சொல்வதினால் வருவதேது
நமன்வருவான் திரிகாலம் வருமோசொல்லு
கூத்திறங்க ளற்றுநமன் கோழையற்று
குருவாக நாமறிய வேலைசொன்னோம்
வாய்த்திறங்கள் பேசாதீர் லேசாய்வாரும்
வந்தாக்கால் நாம்வருவோம் மறந்துவாரீர்.

190. மறந்துவா வென்றீரே புசுண்டநாதா
மனக்கண்ணைக் காட்டுமது ஞானக்கண்ணை
திறந்துவா வெனவிளங்கு முக்காலந்தான்
தெரிந்துவி லக்கண்ணாற் தெய்வந்தோணும்
சுரந்துமே மேற்பொழியுந் தொன்றுதொட்டு
தொல்பவங்கள் தோற்றிவிடும் மறந்ததெல்லாம்
இறந்துமே போனவுடல் யெல்லாஞ்சொல்லும்
எல்லையில்லை சொல்லுதற்கு யெல்லையேதே.

---

189. பேயாகக் கதறித்திரிந்து வீணாக வேண்டாம். நமன்வந்து கொண்டு போவான். அவ்வளவே வாழ்க்கை. அப்படியின்றி இங்கே வாரும், வழி சொல்வோம் என்று மனிதகுலத்தை அழைக்கிறது சித்தர் உலகம்.

190. காகபுசுண்டரின் அழைப்புக்கு மறுமொழி கிடைக்கிறது. ஞானக்கண் திறக்கப்படுகிறது. மரணம் அடைகிற உடம்புக்கு வல்லமை வருகிறது.

191. எல்லையில்லாப் பேரொளியே யெதிரில்லாதே
ஏகமன மானத்து யெவரும்பார்க்க
தொல்லையதி லகப்பட்டும் போனபேரை
சூரியனை ராகதுவுஞ் சூழ்ந்தாற்போல
வல்லையென்றால் நாம்காணக் கொடுப்பதாரு
மக்களென்றாற் தந்தையிடம் வலுத்திநில்லும்
இல்லையென்றால் வாய்மூட உதடுங்கூடில்
இழுக்குமடா பேசாமை மவுனங்கேளே.

## பேசா மோனம்

192. கேளென்றார் வசிட்டருடன் புசுண்டர்தானே
கிருபைகொண்டு சொல்லுகிறா ரிருவருந்தான்
பாழென்றார் வாய்மூடல் பேசாமோனம்
பரதேசி வேடமென்ன தவசிக்கேதான்
ஊழென்றார் புத்திதனை யறியாமாந்தர்
உறமில்லாச் சண்டாளர் ஞாயமில்லார்
மானென்றார் கருவிகளைக் கொன்றார்சும்மா
மவுனமா நாக்கசைத்தால் மரணமாகாதே.

---

191. சூரியனை இராகு சூழ்வதுபோல் இடர்சூழ்கிற நிலை மாறுகிறது. இரகசியம் பேசப்படுகிறது. மௌனம் என்ற பேச்சற்ற நிலை சொல்லப்படுகிறது.

192. வசிட்டரும் காகபுசுண்டரும் கூறுகிற மோனக் கல்வி இதுவே. மாற்றிப் பிறக்கும் வித்தை அது.

மவுனமாக நாவசைத்தால் மரணத்தை வென்றிடலாம்.

193. ஆமப்பா சுட்டிசுட்டி பத்தியமிட்டார்
அலைவார்கள் கமண்டலமும் அரைஞாணோடு
காமப்பா நீத்தார்கள் ஒட்டியாணம்
கப்பல்கட்டுங் கயிறதுபோல் யோகப்பட்டை
தாமப்பா கொண்டுயிந்த யோகஞ்செய்தால்
சாதிக்கு மோமனது வாதிக்குந்தான்
ஊமப்பா மனம்மட்டி அறிவுமட்டி
உலத்தர்களு மிப்படிமூக் கைப்பார்த்தாரே.

## பிராண நாட்டம் பார்வை விபரம்

194. மூக்கைப்பார்த் தவர்கோடி மர்ணமானார்
முனிநாக்கை யேற்றினவர் கோடிபேராம்
நோக்கைப்பார்த் தேறினவர் கோடியாகும்
நுனியேறா மானிடர்கள் கோடாகோடி
தாக்கிப்பா ராமனுக்கள் யேறுவாரோ
சமுத்திரத்திற் சென்றவர்கள் ஆழமபாரீர்
ஆக்கைபா ருடலுள்ளே பிராணநாட்டம்
ஆகையினாற் சொல்லிவிட்டேன் அறிவுள்ளோர்க்கே.

---

193. வேடங்களை வெகுண்டு பேசுகிறார். யோகப் பட்டை, கமண்டலம், அரைஞாண் ஆகிய கோலங்கள் எல்லாம் யோக சாதனைகளா? இவற்றைக் கொண்டு யோகம் இயற்றினால் மனமானது சாதிக்குமா? இல்லை.

194. மூக்கைப் பார்த்தவர்கள் கோடிப்பேர். மரணம் அடைந்தார்கள். நுனிநாக்கை எற்றினவர்களும் அவ்வாறே! இரகசியம் அதுவன்று. ஞான நுட்பம் வேறு!

195. அறிவுள்ளோர் சிவநிலை பிராணநாட்டம்
அய்யய்யோ உயிர்மூச்சு சிவன்தானே
தெறியுள்ளார் வாசியென்றுந் தேசியென்றும்
தேர்நடத்தும் பொம்மைகட்டக் குதிரையென்றும்
மறிவுள்ளார் கலையென்றும் பரிதானென்றும்
மரணமதை உண்டவர்கள் ஆன்மாவென்றும்
செறிவுள்ளார் கண்டுகொளல் மனந்தானென்றும்
சிவனதைப் பார்த்திருப்பார் மனதுள்ளோரே.

196. மனமில்லா ரறிவில்லார் மரணமென்பர்
மனதையே கொண்டாடுஞ் சலனருவி
சினமுள்ளார் மன்தன்றித் தேகமில்லை
சிறுபிள்ளை போலிருக்கு மனப்புலன்தான்
கனமுள்ளோர் மனதாலே மனந்தான்தான்
கண்தூர மெவ்வளவோ மனந்தான்மாய்கை
இனமுள்ளோ ருள்ளறிவு வெகுதூரந்தான்
இதும்ஞான யோகமது மிதற்கொவ்வாதே.

---

195. வாசி என்றும் தேசி என்றும் சொல்லி ஏதேதோ செய்து மரணம் அடைகிறார்கள். மனம் உள்ளவர் சிவனைக் காண்பர். அதுவே இரகசியம்.

196. மனமில்லாது உடம்பில்லை. இதுவே பெரிய இரகசியம். மனம் என்ற நிலையை முதலில் தெரிந்து கொள்ளவேண்டும். இந்த உடம்புக்குள் மனம் எங்கே இருக்கிறது, எங்கே செயற்படுகிறது என்பதே ஞானம். அதை உணர்த்துபவனே ஞானகுரு. அவரே காகபுசுண்டர்.

197. ஒவ்வாது ஞானமென்ன யோகமென்ன
உறவான கிரியையொடு சரியையென்ன
தவ்வாத முத்தியென்ன மோச்சமென்ன
சாஸ்திரங்க ளாவதென்ன வருவதென்ன
இவ்வாறு சொல்லிவைத்தார் பரிபாஷைக்கே
இத்தனையுஞ் சித்தர்கள்தான் செய்தகூத்து
ஒவ்வாறு வேதவியா சன்றன்வாக்கு
உயர்வேதங் களைப்பிறட்டிச் செய்தான்பாரே.

## பிராமணர் செய்கை

198. ஆமிந்தச் சரியையொடு முத்திமோக்ஷம்
அறைந்தார்கள் பாப்பாரன்றி மற்றோரெல்லாம்
நாமிந்த அய்யமா ரேட்டைப்பார்த்து
நடுங்காமல் நம்மவர்க்கே யேட்டைப்பாரு
ஓமிந்த அச்சரங்கள் பொதுவேயாகும்
உலகத்தில் முத்திமோச்சம் நமக்கேயல்லால்
தாமிந்தப் பொய்க்குருவும் பூணூலிட்டு
தாரித்திரம் போக்குதற்காசா னல்லபாரே.

---

197. சித்தர்கள் விளையாடிய பரிபாஷைக் கூத்துக்குள் உண்மை ஒளிந்து கொண்டிருக்கிறது. அதைக் கண்டு தெளிவதே ஞானம்.

198. வேடத்திலே ஆசாரமாக இருப்பவர்கள் பல நிபந்தனைகள் செய்தது பிசகாயிற்று. ஓமாதி அச்சரங்கள் எல்லாருக்கும் பொதுவானவை. அதை மறந்துவிடலாகாது.

**195.** அறிவுள்ளோர் சீவநிலை பிராணநாட்டம்
அய்யய்யோ உயிர்மூச்சு சீவன்தானே
தெறியுள்ளார் வாசியென்றுந் தேசியென்றும்
தேர்நடத்தும் பொம்மைகட்டக் குதிரையென்றும்
மறிவுள்ளார் கலையென்றும் பரிதானென்றும்
மரணமதை உண்டவர்கள் ஆன்மாவென்றும்
செறிவுள்ளார் கண்டுகொளல் மனந்தானென்றும்
சீவனதைப் பார்த்திருப்பார் மனதுள்ளோரே.

**196.** மனமில்லா ரறிவில்லார் மரணமென்பர்
மனதையே கொண்டாடுஞ் சலனருவி
சினமுள்ளார் மனதன்றித் தேகமில்லை
சிறுபிள்ளை போலிருக்கு மனப்புலன்தான்
கனமுள்ளோர் மனதாலே மனந்தான்மாய்கை
கண்தூர மெவ்வளவோ மனந்தான்ரூபம்
இனமுள்ளோ ருள்ளறிவு வெகுதூரந்தான்
இதும்ஞான யோகமது மிதற்கொவ்வாதே.

---

**195.** வாசி என்றும் தேசி என்றும் சொல்லி ஏதேதோ செய்து மரணம் அடைகிறார்கள். மனம் உள்ளவர் சீவனைக் காண்பர். அதுவே இரகசியம்.

**196.** மனமில்லாது உடம்பில்லை. இதுவே பெரிய இரகசியம். மனம் என்ற நிலையை முதலில் தெரிந்து கொள்ளவேண்டும். இந்த உடம்புக்குள் மனம் எங்கே இருக்கிறது, எங்கே செயற்படுகிறது என்பதே ஞானம். அதை உணர்த்துபவனே ஞானகுரு. அவரே காகபுசுண்டர்.

197. ஒவ்வாது ஞானமென்ன யோகமென்ன
உறவான கிரியையொடு சரியையென்ன
தவ்வாத முத்தியென்ன மோச்சமென்ன
சாஸ்திரங்க ளாவதென்ன வருவதென்ன
இவ்வாறு சொல்லிவைத்தார் பரிபாஷைக்கே
இத்தனையுஞ் சித்தர்கள்தான் செய்தகூத்து
ஒவ்வாறு வேதவியா சன்றன்வாக்கு
உயர்வேதங் களைப்பிறட்டிச் செய்தான்பாரே.

## பிராமணர் செய்கை

198. ஆமிந்தச் சரியையொடு முத்திமோக்ஷம்
அறைந்தார்கள் பாப்பாரன்றி மற்றோரெல்லாம்
நாமிந்த அய்யமா ரேட்டைப்பார்த்து
நடுங்காமல் நம்மவர்க்கே யேட்டைப்பாரு
ஓமிந்த அச்சரங்கள் பொதுவேயாகும்
உலகத்தில் முத்திமோச்சம் நமக்கேயல்லால்
தாமிந்தப் பொய்க்குருவும் பூணூலிட்டு
தாரித்திரம் போக்குதற்காசா னல்லபாரே.

---

197. சித்தர்கள் விளையாடிய பரிபாஷைக் கூத்துக்குள் உண்மை ஒளிந்து கொண்டிருக்கிறது. அதைக் கண்டு தெளிவதே ஞானம்.

198. வேடத்திலே ஆசாரமாக இருப்பவர்கள் பல நிபந்தனைகள் செய்தது பிசகாயிற்று. ஓமாதி அச்சரங்கள் எல்லாருக்கும் பொதுவானவை. அதை மறந்துவிடலாகாது.

## நாலு ஜாதி

199. அல்லவே அய்யமாரைப் பிராமணர்களென்றும்
அடித்துழுகுஞ் சத்திரியன் ராசனென்றும்
மெல்லவே பேச்சிடுதல் வியாபாரங்கள்
விரிந்தவரை வைசியரென் றிகழ்ந்தாரய்யா
கெல்லவே மற்றோரைச் சூத்திரராக்கி
கெம்பீரஞ் செய்தாரே அய்யமாரும்
இல்லவே அய்யமார் அய்யராகும்
இருநெற்றி நடுவேதா னய்யங்கார் சொல்லே.

## பலவகை ஜாதி

200. சொல்லவே முண்குடுமிச் சோழியாகும்
துர்வீசை யுள்ளதொரு ராயமாரும்
கொல்லவே பிணஞ்சுமக்குஞ் சண்டியய்யர்
குலவர்க்கஞ் சொல்லுகிறேன் மற்றோரெல்லாம்
அல்லவே நாயக்கர் சேர்வைகாரர்
அம்பட்ட நாவிதனே காவிவண்ணான்
மெல்லவே சக்கிலியன் தோட்டிதானும்
வேடிக்கைத் தேவடியாள் தாசிமாரே.

---

199. நான்கு சாதியாக வகுத்துப் பேசி, அவற்றிலே பல நியதிகளைக் கற்பித்த காரணத்தால் பொதுவுடைமையான ஞானம் மற்றவர்க்குக் கிட்டாமற் போயிற்று என்பது கருத்து.

200. இன்னும் சொல்லப்போனால், ஒவ்வொரு சாதிக்குள்ளும் பல உட்சாதிகள். அந்த உட்சாதிக்குள்ளும் உயர்வு தாழ்வுகள்! என்ன மடமை என்று சீறுகிறது சர்வ மைய சமரச ஞானம் வகுத்துத் தேர்ந்த சித்தர் உலகம்!

201. மாரென்ன ரெட்டிதொட்டி நாயுடுகார்
மறவரென்ன தேவமார் துலுக்கர்சாய்பு
கூரென்ன பட்டுநூல் செட்டியார்கள்
குலதர்மம் யிவ்வகையில் வாறேயாகும்
நாரென்ன கைக்கோளன் முதலிமாராம்
நடுவிருந்த சாணாரும் நாடாரென்பார்
ஊரென்ன வடுகதமி ழாசாரிக்கே
உலகநடை யிப்படியே அய்யமாரே.

## பிராமணர் பாப்பாரல்ல

202. அய்யர்களை பிராமணரென் றுரைக்கலாமோ
அறுத்தபெண்வீட் டில்லாட்டா லவனேபாப்பான்
பய்யத்தான் சொன்னாரே விதவையாகில்
பாரிலுள்ள மனிதரைப்போ லாகினீர்கள்
மெய்யாகப் பிரமனவன் சிட்டித்தாக்கால்
விதமென்ன முதற்சாதி ஞாயத்தாரே
அய்யாகூ வென்றழுகல் நீசன்தானே
அரைகட்டி நின்றிருந்தார் சூத்திரன்தானே.

---

201. எத்தனை சாதிகள் எத்தனை எத்தனை என்று வலியுறுத்திக் காட்டுவதற்காகச் சிற்சில பெயர்களை அடுக்குகிறார்.

202. பிரும்மத்துக்குரிய பெயராக பிராமணர் என்ற சொல்லுக்கு ஞானிகள் கூறுகிற பொருள் வேறாகும். அய்யர் என்ற பிரிவுக்குரியவர்களையெல்லாம் பிராமணர் என்று அழைப்பது தவறு என்கிறார்.

203. சூத்திரனார் வைசியனார் சத்திரியனாகும்
துயரில்லாப் பாப்பாராம் அய்யமாரும்
காத்திரனார் நாமுழுக நீரேதின்க
கலப்பைதொட மாட்டாத சாதியாரே
பாத்திரத்தி லுபாதான மெடுக்கத்தானே
பரிபாஷை சொல்லிவைத்தீர் பிச்சைக்காக
சேத்திரனார் தங்களிடம் பூமிவிட்டு
தீனிகிடை யாமலுந்தான் தெருவந்தீரே.

204. வந்தீரே பிச்சைதனைப் பூரியென்றீர்
வாய்ப்பேச்சை வேதமென்றீ ரிழப்பந்தானே
தந்தீரே கும்பிடுமுன் ஆசிர்வாதம்
தானர்த்த மென்னவென்றால் வந்தேனென்னல்
முந்தீரே சண்டிமுதற் கலப்பை மார்க்கம்
முறைதெரியா மானிடரே நில்லுநில்லும்
பந்தீரே நாமிருக்க யிழவுக்காகா
பாணிமுதற் தாகத்துக் கிடஞ்சலாச்சே.

---

203. கலப்பை தொட்டு உழமுடியாத மக்கள் தங்கள் நலத்துக்காகச் சில விதிமுறைகளை ஆக்கினார்கள் என்றும், அந்த விதிமுறைகளில் அறிவியலுக்கு ஒத்த நியாயம் இல்லை என்றும் கபிலர் போன்ற பல ஞானிகள் சொல்லியுள்ளனர். அக்கருத்தே இங்குப் பேசப்படுகிறது.

204. வாழ்வில் சில நெறிமுறைகளைக் கடைப்பிடிப்பதிலுள்ள சுயநலத்தைச் சாடுகிறார் சித்தர்.

205. ஆகவே யுங்கள்குல வழக்கஞாயம்
அறைகிறேன் மூத்தோரை அடேநீயென்பீர்
சாகவே மனைப்புருஷன் றனைவெளியிற்றள்ளி
தங்கச்சி பெண்சாதி யுள்ளேநிற்பார்
ஏகவே போனாலும் மவன்தன்வீட்டை
யிருக்கையிலே அவனைவெளி யேற்றிவிட்டீர்
மாகவே அச்சாம்பல் புருஷனல்லோ
மனையாட்டி யெச்சாம்பல் புருஷசாம்பலாமே.

206. சாம்பலாய்ப் போகுமுன்னே சடத்தைத்தள்ளி
தர்மமோ புரோகிதர்கள் அருசியுண்ண
சாம்பலே யாகுமட்டுங் கருமாதிச்சோர்
தன்கிளைகள் சந்ததிகள் முழுதுந்தானே
சாம்பலே யுங்கள்தவம் பிச்சையுண்டோ
தர்மமோ தர்மமிட்டால் வந்துண்பீர்கள்
சாம்பலிலே தர்மச்சோர் தின்றுவிட்டு
சாதியுட னேகூடி வாழலாமோ.

---

205 - 206. இவ்விரு பாடல்களும் முந்திய பாடல்களின் விரிவுகளேயாம்.

வெறுப்பும் கசப்பும் இந்தப் பாடல்களிலே கொப்பளிக்கின்றன என்பது உண்மை. ஆனால் பல சித்தர்கள் இவ்வாறு சமுதாயத்தைச் சீறியுள்ளார்கள். சாதித்துவேஷம் என்று இவற்றைத் தள்ளிவிடுவதற்கில்லை. யோசித்துப் பார்த்தால் சமுதாயப் புரட்சியாளரின் கருத்துக்கள் சித்தர் இலக்கியத்தில் பல இடங்களில் வருவது தேற்றம். இவற்றை இன்றைய அரசியலோடு குழப்பிக்கொள்ள வேண்டியதில்லை. மனிதர்களிலே ஏற்றத்தாழ்வு பேசுவதும் உயர்வுசொல்லி வஞ்சிப்பதும் தவறாகும். என்ற கருத்து அக்காலத்துச் சித்தர் வாக்கிலேயே வெளியாகியுள்ளது என்பது உண்மை.

## யோகம் வாழ்வு

207. வாழலா மூக்குமுனை வீணாத்தண்டு
வகையாகப் பார்த்தாக்கா லெல்லாமுண்டு
பாழேதான் போகாமற் சமாதிகூடும்
பரிபாஷை யிதுவல்ல புருவமத்தி
ஆழலா மேல்வாச லறிந்துகொண்டால்
அய்யமொன்று மெண்ணாதீர் சொல்லிவந்தேன்
தாழலா மிதுவிட்டா லெல்லாம்போச்சு
சாதித்துத் தேறிவரக் கூறினேனே!

## பொய்க்குரு

208. கூறினோ மென்றுசொல்லிப் பரியாசங்கள்
கொள்ளுபவ ரன்னமின்றி யிரந்துண்பார்கள்
தேறினோ மென்றுசொல்லி வெளியேவந்தோர்
தேறினவ ரல்லவர் தேறார்தேறார்
மாறினோ மாணாக்கர் பின்னேநின்று
வசனிக்கும் பெண்மாய்கை மடியில்நின்று
வாறினோ மார்கொண்டு சாணமிட்டு
வையகத்து யிருளகல வொழியிற்சிக்கே.

---

207. ஆழலாம் - ஆளலாம்; எதுகை நோக்கிச் சிறப்பு ழகரம் வந்தது. வீணாத்தண்டு - முதுகெலும்பு. பார்க்க, 'மூலக்கனல்' என்ற பகுதி. சாதித்துத் தேறிவர - சாதனைகள் செய்து தேறவேண்டும்.

208. பொய்யான ஆசான்கள் தங்கள் வல்லமைகளைத் தாங்களே எடுத்துச் சொல்லி ஏமாற்றுவதும், வஞ்சனை புரிவதுமான மோசடியைப் பாடியவாறு.

209. சிக்கினோம் ஒளியதனிற் தீபசோதி
திருவேடங் காணவென்றால் மனதைத்காரும்
புக்கினோம் புருவமய்யம் வாசிகொண்டு
பூரகமுஞ் செய்யாமல் நோக்கத்தாலே
மூக்கினோம் மூக்குமுனை யிருந்தவாசி
மூக்கினடி புருவமத்தி யுருவிப்பாய்ந்து
வெக்கினோ மனமசந்து ரோசங்கெட்டு
வேரற்ற மரம்போலே வெளிதானோமே.

210. வெளியாகும் பஞ்சபுலன் கருவியெல்லாம்
விடாதீர்க ளந்தரங்க மேலோர்போல
தெளிவாகும் கருவிகளின் கருவிநிற்கும்
சீரணிக்கும் அக்கருவி தெளிந்தகூறே
பொழிவாகும் அமுர்தமெனத் தேருவீர்கள்
பொல்லாங்கு போயொளியுந் தானாய்த்தானே
அழிவாகு மிம்மார்க்கம் மனதினாலே
ஆகாது அறிவான கண்ணாற்பாரே.

---

209. மனத்தைக் காக்கும் பக்குவத்தை அடைந்து வாசியோகம் இயற்றுகிற முறையைக் கூறுகிறார்.

210. மெய்யான இந்த யோக நெறியானது வெறும் மனமுயற்சியினால் மட்டும் ஆகாது. 'அறிவுக்கண் கொண்டு, அதாவது ஞானப் பார்வையினால் கண்டு தெரியவேண்டிய மெய்யனுபவமாகும்.

## 10 வாசல் ஞானம் அறிவானகண்

211. அறிவான கண்ணதென்றால் புருவாசி
அங்கத்திற் பம்பரம்போ லாடினாக்கால்
முறிவான பூட்டுடைத்துப் புருவமத்தி
மூக்கோடும் வாசியது நெற்றியேறில்
தெறிவான யிவ்வாசில் பத்தாம்வாசல்
சிறுவாசல் அறிவாசல் யோகவாசல்
குறியான மணிவாசல் குருவின்வாசல்
கோபுரவா சல்தெரிவா யானாற்பாரே.

212. ஆனாலே யொளிகாணும் புலன்கள்தோணும்
ஆகாத கருவிகளு மடங்கிப்போகும்
போனாலே கற்பூர வாசம்வீசும்
பொங்குதிரை மேலெழும்பு மாய்கைபோகும்
வானாளை யேற்றிவிடும் புருவமத்தி
வாசிகொண்டு நீட்டிவிடும் நாசிமத்தி
தானாலே யாகிடலாந் திறக்கப்பூட்டத்
தந்திரங்கள் வேணுமப்போ சரங்கள்பாரே.

---

211. ஞானவாசலாகிய இந்த வழிதிறந்து உட்செல்லும் காரியத்தைச் சிவவாக்கியரும் பாடுகிறார். அண்டவாசல் ஆயிரம் பிரசண்ட வாசல் ஆயிரம் ஆறிரண்டு நூறுகோடி ஆனவாசல் ஆயிரம் இந்தவாசல் ஏழைவாசல் ஏகபோக மானதாம் எம்பிரான் இருக்கும்வாசல் யாவர்காண வல்லீரே.

212. தந்திரம் என்றது வழியை, உபாயத்தை. வாசியோகம் பயில்வதன் விளைவுகளைப் பாடுகிறார் சித்தர்.

213. வேணுமே மயிர்ப்பாலம் நெருப்பாறேக
மெய்வலுவில் ஊசிமுனை வாசியேறத்
தோணுமே நாமிருந்த யிடங்கள்தானும்
தொந்தோமென் றாடிடுமே சுலபமாகக்
காணுமே தீபவொளி கருத்துங்கண்ணும்
கள்கஞ்சாக் கொண்டதுபோல் மயக்கங்காணும்
வீணுமே யாகாது மயக்கம்வேண்டாம்
வேதாந்தங் கண்டிடலாம் வாசிபாரே.

214. கண்டிடலாம் புருவமத்தி வாசலோரம்
கண்ணிரண்டுங் கூடிவிடும் ஞானக்கண்ணாம்
உண்டிடலாம் ஞானசரங் கண்ணிற்தானே
உட்புகுந்து மேலேறும் வாசல்தாண்டும்
தெண்டுடனே கமண்டலமுங் குகையும்வேண்டாம்
சிறுகற்பம் அறுசுவையுந் தள்ளவேண்டாம்
மண்டுடனே கூடிடுவீர் ரசமேஉண்பீர்
வாருங்கள் தேனமுர்தம் உச்சிநீரே.

---

213. வாசியோகத்திலே வருகிற மயக்கம் பற்றிப் பிறரும் பாடியுள்ளமை காண்க. எண்சாண் உடம்பில் இருக்கின்ற கள்ளை இறக்கவேண்டும் என்றும், உள்ளுண்டு சோமக் கலையாதி பானம் என்றும் பாடுகிற அனுபவம் இதுவே.

214. பட்டினி போடுகிற பத்தியங்கள் வேண்டாம். புருவ நடுவில் பார்வை கூடி ஒடுங்கும்போது ஞானக்கண்ணின் நோக்கம் சித்திக்கிறது. அதன் விளைவே இந்தப் பேரின்பம்.

## ஞானரச விபரம்

215. நீரேதான் வருமென்றார் முன்னோரெல்லாம்
நிகழ்காலம் உச்சிரச மிறங்குமையா
காரான மேகமது யிறங்குமாப்போல்
கண்மூக்கு மத்தியிலே யிறங்கும்பாரு
சீரேதான் அண்ணாக்கு வழியிறங்கும்
தினந்தினந்தா னாண்டொன்று ஒழுகிப்பாயும்
பாரேநீ நாவில்விழக் காரித்தள்ளும்
பங்குனியில் வெயிலடித்த வாறுபோலே.

216. போலவே துப்பிடவே யெல்லாம்வீழும்
பொங்கியது பொங்கியது வழியும்பாரு
சாலவே யிறங்கிவிடும் கபாலமெல்லாம்
தானிருந்த மூழையின்றன் கசடுபோகும்
ஞாலமே லிப்படியே யோகதுன்பம்
நம்கோழை உச்சிநீ ரிறங்கிவிட்டால்
பாலமே தாண்டிடலாம் சோதிகாணும்
பக்குவத்திற் சூரியனார் கோடிதானே.

---

215. அமுதம் பொழிகிற பாதையையும் அதன் தன்மையையும் பாடுகிறார். கார்மேகம் இறங்குவதுபோல், மழைபொழிவது போல், கண்மூக்கு நடுவில் இந்த அமுதமழை இறங்கும் என்கிறார்.

216. 'கோழை நீங்கினால் பீழை நீங்கும்' என்பது வசனம். இந்தப் பயிற்சியிலே கோழை அகல்வதும், அமுதம் பொழிவதும் விரிவாகக் கூறப்படுகின்றன.

## குருகிருபை யோகம்

217. காணுங்கண் ஞானவொளி கோடிசூரியன்
கதிர்விட்டுத் தானெறியுந் தூரந்தோற்றும்
பூணுங்காண் உச்சியொளி புருவப்பூட்டு
பூட்டுடைக்க வல்லவரே வாருங்காணும்
தோணுங்கா ணுங்களுக்குத் தூரதிஷ்டி
சொற்பலிக்குந் திரிகால வர்த்தந்தோற்றும்
நாணுங்காண் கர்மவினை தர்மமாகும்
நரைமூப்பு சாக்காடுங் காணலாமே.

218. காணலா மெத்தனையோ கோடாகோடி
கண்ணுக்குள் ளேதெரியுங் கிருஷ்ணனைப்போல்
தோணலா மெதிர்நிற்கும் பாவனைபோல்
துயரெல்லா மாற்றிவிடுஞ் சுழினைவாசல்
வீணல்லால் மற்றொன்றிற் காண்பதுண்டோ
மிஞ்சினவர் சொற்கேட்ட வித்தைபோல
நாணில்லா வில்லெறிந்த வீரன்போல
நாமறியத் தன்மைவிட்டு நாடினாலே.

---

217. ஞானவெளிச்சம் எப்படி இருக்கும்? கோடி சூரியர்களின் ஒளி அது! புருவப் பூட்டை உடைத்தால் அது துலங்கும். தொலை நோக்கும், முக்காலச் செய்திகளும் சித்திக்கும்.

218. குறி தப்பாது. கண்ணுக்குள் எத்தனையோ காட்சிகள் தெரியும். துன்பம் ஒழிந்து ஆனந்த அனுபவம் கிட்டிடும்.

## ஞானரச விபரம்

215. நீரேதான் வருமென்றார் முன்னோரெல்லாம்
நிகழ்காலம் உச்சிரச மிறங்குமையா
காரான மேகமது யிறங்குமாப்போல்
கண்மூக்கு மத்தியிலே யிறங்கும்பாரு
சீரேதான் அண்ணாக்கு வழியிறங்கும்
தினந்தினந்தா னாண்டொன்று ஒழுகிப்பாயும்
பாரேநீ நாவில்விழக் காரித்தள்ளும்
பங்குனியில் வெயிலடித்த வாறுபோலே.

216. போலவே துப்பிடவே யெல்லாம்வீழும்
பொங்கியது பொங்கியது வழியும்பாரு
சாலவே யிறங்கிவிடும் கபாலமெல்லாம்
தானிருந்த மூளையின்றன் கசடுபோகும்
ஞாலமே லிப்படியே யோகதுன்பம்
நம்கோழை உச்சிநீ ரிறங்கிவிட்டால்
பாலமே தாண்டிடலாம் சோதிகாணும்
பக்குவத்திற் சூரியனார் கோடிதானே.

---

215. அமுதம் பொழிகிற பாதையையும் அதன் தன்மையையும் பாடுகிறார். கார்மேகம் இறங்குவதுபோல், மழைபொழிவது போல், கண்மூக்கு நடுவில் இந்த அமுதமழை இறங்கும் என்கிறார்.

216. 'கோழை நீங்கினால் பீழை நீங்கும்' என்பது வசனம். இந்தப் பயிற்சியிலே கோழை அகல்வதும், அமுதம் பொழிவதும் விரிவாகக் கூறப்படுகின்றன.

## குருகிருபை யோகம்

217. காணுங்கண் ஞானவொளி கோடிசூரியன்
கதிர்விட்டுத் தானெறியுந் தூரந்தோற்றும்
பூணுங்காண் உச்சியொளி புருவப்பூட்டு
பூட்டுடைக்க வல்லவரே வாருங்காணும்
தோணுங்கா ணுங்களுக்குத் தூரதிஷ்டி
சொற்பலிக்குந் திரிகால வர்த்தந்தோற்றும்
நாணுங்காண் கர்மவினை தர்மமாகும்
நரைமூப்பு சாக்காடுங் காணலாமே.

218. காணலா மெத்தனையோ கோடாகோடி
கண்ணுக்குள் ளேதெரியுங் கிருஷ்ணனைப்போல்
தோணலா மெதிர்நிற்கும் பாவனைபோல்
துயரெல்லா மாற்றிவிடுஞ் சுழினைவாசல்
வீணல்லால் மற்றொன்றிற் காண்பதுண்டோ
மிஞ்சினவர் சொற்கேட்ட வித்தைப்பால
நாணில்லா வில்லெறிந்த வீரன்போல
நாமறியத் தன்மைவிட்டு நாடினாலே.

---

217. ஞானவெளிச்சம் எப்படி இருக்கும்? கோடி சூரியர்களின் ஒளி அது! புருவப் பூட்டை உடைத்தால் அது துலங்கும். தொலை நோக்கும், முக்காலச் செய்திகளும் சித்திக்கும்.

218. குறி தப்பாது. கண்ணுக்குள் எத்தனையோ காட்சிகள் தெரியும். துன்பம் ஒழிந்து ஆனந்த அனுபவம் கிட்டிடும்.

219. ஆனாக்கா லின்னமுமே நாக்கின்கீழே
அடிநாக்கு மூலவரை பீசமட்டும்
நானாக்கா லாதியந்தம் பீசம்நாக்கு
நடுநாடி யிதுவழியே வாசியாகும்
மானாக்கால் சொல்லுகிறேன் மூச்சையோடும்
வரும்வாசி யாடினால்மூச் சாடிநிற்கும்
தானாகக் கொட்டாதீர் மேலேயேற்றும்
தம்பியரே புருவமத்தி வாசிபாரே.

220. பாரீரோ அறுமுகமாய் நின்றமத்தி
பார்நெற்றி மூக்குமத்தி முகத்தின்மத்தி
வாரீரோ புருவமத்தி கண்ணின்மத்தி
மக்களே நினைமத்தி செவியின்மத்தி
கோரீரோ மூச்சுமுட்டி யிறங்குமத்தி
குமுறியது யிருவாசல் பிரியுமத்தி
தாரீரோ உம்மனதும் நீருங்கூடத்
தாக்கினால் புருவமத்தி யேறிப்பாரே.

---

219. வாசியோகத்திலே 'காலாலே கனல் ஏற்றும் வித்தை' என்கிற பயிற்சியைப் பாடுகிறார்.

220. இங்கே மத்தி என்றது மையத்தை. ஆறு ஆதாரங்களிலே நிற்கிற ஞானக் கனல் எந்தெந்த மையங்களில் எவ்வாறு செயல்புரிகிறது என்பதைக் கூறுகிறது, இந்தப்பாடல். 'மூலக்கனல்' என்னும் பகுதியிலே இதன் விரிவைக் காணலாம்.

221. ஏறுவது வெகுமுறைகள் கோடாகோடி
இவ்விதந்தான் பத்தியமு மில்லையில்லை
நேறுவது கடினமல்ல மனதே சார்ந்தால்
நீர்கூடத் தொடர்ந்திடலாம் கடினமில்லை
தேறுவது லெகுவல்ல சூச்சத்தாலே
செங்கனலைத் தூண்டிவிடச் செங்கண்ணாகும்
மாறுவது வந்தாக்கால் சாஸ்திரந்தூ ண்டும்
மக்களே பழுக்குமுன்னே வாசிபாரே.

222. பழுத்தபின்பு எமகாலன் கருதுவான்பார்
பரிவாசி யேற்றுவிக்கத் தூண்டிவிக்க
இழுத்தபோ தேவருவோ மேலேதானே
ஏற்றிவிக்கத் தள்ளிவிடும் நம்மைக்கூடக்
கொழுத்தபோ தழுத்திவைக்கும் உற்றார்போலக்
குருகுலமும் வேலையிரே கூவவேண்டாம்
அழுத்தபோ தல்லவோ துணையும்வேணும்
ஆர்வேணு நீர்போது மறிவாற்பாரே.

---

221. வேறு எந்த விதமான கட்டுப்பாடுகளும் இல்லை. பயிற்சியின் முறையைச் சரியாகக் கற்று இயற்றினால் இந்த வாசி யோகத்தினால் சித்தி பெறலாம்.

222. அறிவே துணையாகக் கொண்டு இதில் முன்னேறினால் வேறு எந்தப் பக்க பலமும் வேண்டுவதில்லை. கனிவு தானாக உண்டாகும். எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை.

223. அறிவாற்பா ரதைவிட்டு விடாதேகர்மம்
அதுதானே கர்மமென்பார் அறிவைவிட்டால்
தெரிவாற்பார் தெளிவுகொண்டு அறிவாற்சிந்தை
தேகநிலை போகமுறை சிதறவேண்டாம்
குறியால்பார் அண்ணாக்கின்மேலேஉச்சி
கூர்துளையே நாக்குவழி சித்திவாசல்
நெறியாற்பார் புருவமத்தி வாசலுண்டு
நீட்டிவிடு உளத்துவாசந் திறக்கும்பூட்டே.

## பூட்டுத் திறக்க

224. பூட்டதனைத் திறக்கவென்றால் விழிமேல்நீத்தாய்
பொய்யல்ல கண்ணிமையம் புருவந்தாக்கு
ஓட்டதனில் வாசியென்ற மூச்சுதன்னை
ஊடுருவப் பாயுமடா மேலேநோக்கில்
வீடதனைத் திறப்பதற்கு வாசிபாரு
மெய்யதனைச் சம்மணமே நேருநேராய்
கூட்டதனைக் குந்தவைத்து உடலாடாமல்
குவிந்தமனம் நிமிந்திருந்து உடலைப்பாரே.

---

223. அறிவுகொண்டு செய்ய வேண்டிய ஞானச் செயல்கள் இவை.

224. இந்தப் பயிற்சியை ஆசான் செய்வதை நேரிலே கண்டு பின்பற்ற வேண்டும் என்றும், ஏட்டுப் படிப்பை மட்டும் வைத்துச் செயலில் இறங்கவேண்டாம் என்றும் ஞானிகள் எச்சரிக்கை செய்கிறார்கள்.

## யோக சாதனம்

225. உடல்நோய் நெஞ்சுகண்டந் தலைகண்மூக்கு
உயர்ந்திருந்து நேர்நிமிர்ந்து உட்கார்ந்தேதான்
கடல்கொண்டு சொரிவதுபோல் வாசியேற்றும்
கருநாடி உயிர்நாடி சிவநாடி
அடல்கொண்டு யேறிவிடு மூலநாடி
அரைமூலந் தானிருந்து யெழும்புமூச்சு
குடல்கொண்டு பாராதே காலைமாலை
கொண்டுபசி யாறுமுன்னே பாருபாரே.

226. பாருபார் முள்ளெலும்பு முதுகின்மூலம்
பரிந்தோடி வாசிவரும் பையப்பைய
ஆருபார் வாரதுவும் நாமேதானே
அரையிடுப்பு முதுகுநடு மத்தியேறும்
தேருவார் பார்த்துவர முழந்தானேறும்
தேகமது நடுநாடி தேனீயேறும்
காருபா ரதைநிதமுங் காலைமாலை
கண்டுகொண்டு ஏறிவரக் கனலாம்பாரே.

---

225. உட்காருகிறமுறை, நாடிகளை இயக்கி மேலே செல்லும் வழி, மூச்சை இயக்கிச் செலுத்துகிற பாங்கு ஆகிய அனைத்தையும் கூறுகிறது இப்பாடல்.

226. வீணாதண்டத்தின் வழியாகக் கனல் ஏறுகிற நேர்த்தி, நாடிகளின் இயக்கம், கண்களைச் செலுத்துகிற உத்தி ஆகிய அனைத்தும் ஒன்றிய பயிற்சியே இந்த வாசியோகப் பயிற்சியாகும்.

227. ஏறுமே மூலக்கனல் மேலேவாசி
இரண்டொன்றாய்க் கூடியது நடுவேநின்று
மீறுமே முடிச்செலும்பைப் பத்திநின்று
மேனியெல்லா மோடாது நடுவேயோடும்
வாறுமே மேலெழும்பி நினைவைமேலே
வாய்பொத்தி அச்சமயம் பிடரியேறும்
சீறுமே மேலேறத் தள்ளும்பின்னால்
திரும்பாமல் நாக்கின்வழி சாருந்தானே.

228. சாருமுந்தி நாக்கின்வழி தாண்டியப்பால்
சங்கின்வழி தொண்டையதைத் தாண்டுந்தாண்டும்
நீறுமிந்த வழிவரவுங் கண்டந்தாண்டி
நேரிவழியே அண்ணாக்குப் பாதைபோகும்
சேருமிந்த அண்ணாக்கு உச்சிவாசல்
தீபவொளி கண்டிடலாங் கம்பந்தோணும்
கூருமிந்தச் சாஸ்திரத்திற் பாடுபட்டால்
கொங்கணவன் போலாக வாழுவீரே.

---

227. மூலக்கனலானது மேலெழும்பிச் செல்லுதல். அதைத் தொடர்ந்து நடைபெறும் ஆனந்த அனுபவங்களும் கூறியவாறு.

228. இந்தப் பயிற்சிமுறையில் சீராக முன்னேறி தீபவொளியின் காட்சியனுபவம் கிடைத்துவிட்டால் பிறகு பிணிமூப்பு இல்லை.

229. வாழுவா ரெங்கைளைப்போ லெல்லோருந்தான்
    டண்வெட்டி கோடாலி யிதற்குவேண்டாம்
கேளுநீ சொல்லறிந்து குண்டுக்கல்லை
    கிழிஞ்சிலெனப் பொடியாக்கும் உளியைப்போல
ஆழுநீர் பூட்டுடைக்க மேலவாசல்
    அங்கத்திற் கண்திறக்க ஞானக்கண்ணாம்
தாழுவீ ராகாமல் மூட்டிப்பாரும்
    சந்ததியே யென்கிளையே சாற்றினேனே.

230. சாற்றினே னென்குருவின் கடாச்சத்தாலே
    தள்ளினேன் பாவகர்மம் தவசினாலே
பேற்றினே னதுவறிந்து யென்குருவும்
    பூரித்துச் சொன்னாரே அருளாற்றானும்
ஊற்றினேன் முன்னாளுங் களுக்குச்சொன்னேன்
    உத்தமர்காள் தங்களுக்குத் தோணச்சொன்னேன்
ஏற்றினேன் கர்மதர்மம் யாருங்காண
    யெப்போதும் பார்த்தறியச் சொன்னேன்நானே.

---

229. சித்தர்களின் ஞானக்குழுவிலே ஒருவனாக என்றென்றும் ஆனந்தநிலை பெற்று மரணமிலாப் பெருவாழ்வு வாழலாம்.

230. பாவம் தொலைந்து அருளாற்றல் ஓங்கப் பெற்று பேரின்பப் பெருவாழ்வு காண்கிற முறை இதுவே. என்குருவின் அருளால் இதை எடுத்துச் சொன்னேன்.

231. சொன்னதினா லாவதென்ன பார்க்கவேணும்
 றொன்றுதொட்டு சிசுவினிலே காணவேணும்
பின்னதனாற் கண்டுகொள்வார் குருவில்லாமல்
 பெருங்காடாய்த் தோணுமது யாருக்குந்தான்
அன்னசுவை காணுதல்போற் குருவாம்சாய்கை
 அடுத்துவரு மேலேதான் குருவாம்வாலை
சொன்னமொழி கேட்டிருநீ உபதேசிப்பாள்
 சோம்பலையே போக்கிடுவாள் வாலையாமே.

232. ஆகுமிந்த வாலைமுடி வதனைச்சொல்வாள்
 ஆச்சரியங் குருசொல்லார் அருளேசொல்லும்
போகுமிந்த மாய்கையது நினைவின்துக்கம்
 போகுமல்லாற் சாதனையால் குருவில்லாமல்
ஏகுமந்த அருள்சொல்லப் பிரமஞானி
 யில்லாவிட்டால் யோகியென்றுஞ் செப்பலாகும்
ஓகுமிந்த யோகிபயன் வீணேயாகும்
 உண்மையன்றி மற்றொன்றுங் காணாதய்யே.

---

231. ஞானகுரு உபதேசித்த இந்த வழியே சென்றால், பிறகு வாலையே தெய்வ குருவாக விளங்கி மேலும் மேலும் உபதேசங்களை வழங்குவாள்.

232. இறுதியான கொடுமுடியாம் நிலையை வாலையே உணர்த்துவாள். பிரமஞானி அல்லது யோகி என்னும் நிலை கிட்டும்.

## வாலை யுபதேசம்

233. அய்யய்யா அருள்வாலை தனையறிந்து
ஆகூகூ வென்றழுது அவள்மேற்பாய்ந்தேன்
பய்யவய்யா வென்றுயெனை மடியில்வைத்தாள்
பய்யாநீ சித்தனெனப் பேருமிட்டாள்
பொய்யாய்நீ யாவாயோ நானிருக்க
புழுக்கூடு மாகிடுமோ யென்னைத்தொட்டு
மெய்யாய்நீ யாகினதால் மடியில்வந்தாய்
மேலென்ன கேளுமினிச் சொல்லுவேனே.

234. சொல்லிவா யென்னுடைய பதத்தையென்றேன்
சொன்னாளே பாவிபழி காரிநீலி
முன்னாலே நீயிருந்த வயதைத்தள்ளி
மோகமிட்டே னின்றுதின மினிமேற்றானே
என்னாலே யானமிட்டு மிருப்பேன்கூட்டில்
எழுந்தோடிப் போகும்நா ளுனக்குத்தோற்றா
அன்னாளே நானெடுப்பேன் மலையில்வைப்பேன்
ஆர்கையிலு நான்கொடேன் கூடவொட்டேனே.

---

233. வாலை தனது மடியில் என்னை ஏற்றுக் கொண்டு 'பையா, நீ சித்தன்' என்று அருள் செய்தாள்.

234. இனி வாழ்நாள் முழுதும் அவள் கையில் என்ற நிலை ஏற்பட்டது. இதை அவளே எனக்கு உணர்த்தினாள்.

235. ஒட்டேனே சுட்டிடவும் பிறர்கள்கையில்
ஒப்புவித்துப் பிறர்சுமக்க உற்றார்கூட
விட்டேது போகேனினி யென்னாற்கூடா
மேதினியி லிதுகடக்க யென்னாலன்றி
கொட்டாவி யிட்டாப்போற் கூத்தன்யாரு
குறையுயிரே நீர்போல வத்தல்தானே
கட்டாவி கட்டுதற்கு உருவேசெய்தோர்
காசினியி லென்னுடலை விடமாட்டேனே.

236. விடமாட்டே னென்னுயிரை ஆயிரத்தின்
வேணுமென்று கற்பமதைத் திறந்துசொன்னேன்
படமாட்டே னப்பாலுந் தூரதிஷ்டி
பார்வைகொண்டு நானிருப்பேன் மரணமாகேன்
தொடமாட்டே னதைவெல்ல ஞானக்கண்ணின்
சொல்லறிந்து தாண்டிடுவேன் தப்புவிப்பேன்
கடமாட்டேன் சடலமதை விடவுமாட்டேன்
கர்த்தனைப்போல் நானிருந்து வாழுவேனே.

---

235. மனிதர்கள் கையில் இனி இந்த உடலைத் தரமாட்டேன் என்ற உறுதியை வாலையே தருகிறாள். இதுவே பக்குவநிலை.

236. இனிச் சாவு இல்லை. தொலைநோக்கினால் ஊடுருவிப் பார்ப்பேன். எந்த முடிவையும் ஞானக்கண்ணின் துணைகொண்டு தாண்டிவிடுவேன். கர்த்தனைப் போலவே நான் இருந்து வாழ்வேன்.

237. வாழுவேன் திரிகாலந் தெரிந்துகொண்டேன்
மாளாமல் நின்றிடுவேன் திரிலோகத்தும்
மீழுவேன் இனியென்ன பயமெனக்கு
வேதமுதல் நானானேன் என்னுள்ளானேன்
கோழுவாய்ச் சாவதுவும் பொய்யதாகும்
குமரிகையைப் பற்றாதார் மரணமாவார்
தாழுவே யாகாது எக்காலத்தும்
சாவதுவும் பிறப்பதுவு நம்மாற்றானே.

238. சாகாம லிருப்பதற்குக் கல்வியுண்டு
சாக்காடு கொள்வதற்கு விபரமுண்டு
வேகமாய் நடப்பதற்குக் காலுமுண்டு
வேளாண்மை செய்வதற்கு மாடுமுண்டு
பாகமா யேறுதற்கு நீச்சுமுண்டு
பரிபாஷை தப்பாது பிழையிராது
காகமாய் மரத்தின்மே லிருப்பேனப்பா
கவலையுட நீயிருநா னுள்நிற்பேனே.

---

237. தாழுவே - எதுகை நோக்கி வந்தவாறு; தாழ்வே என்பது சொல். முக்காலமும் தெரிந்துகொண்டு வாழ்வேன். மாளாமல் அமரனாக நிற்பேன். தாழ்வே இனி இல்லை. பிறப்பிறப்புச் சூழல் இனி எனக்கில்லை.

238. சாகாக்கல்வி இது. வேகமாய் நடக்கக் கால், வேளாண்மை செய்ய மாடு, முன்னேறுவதற்கு நீச்சல் உண்டு. இது குறியீட்டு மொழி. பொய்க்காது நான் காகமாக இருந்து பிரளயத்தை வெல்வேன்.

239. நிற்பேனே யெந்தெந்த நாளும்நிற்பேன்
நீபிசகில் நான்பிசகேன் நிலையில்நிற்பேன்
கற்பேனோ வேருடலில் வாழமாட்டேன்
காகமதாய் நானிருப்பேன் உலகமாய்ந்தும்
சொற்பொருளா மென்னாலுந் தூண்டாச்சோதி
சுகம்பெற்ற திதைவிட்டு வேறேபோகேன்
அற்பமோ நான்போகேன் வேறோர்கூட்டில்
ஆரிருந்து மென்னதுணை நீர்வாழ்வீரே.

240. வாழ்வீரென் றென்னையே சொன்னாள்வாலை
வசனித்த சொற்கேட்டு விசனித்தேதான்
கோழ்போலே நானினைத்தேன் பொய்போலேதான்
குமரிகன்னத் தட்டிடித்து உச்சிகொட்டி
சேய்போலே யானினைக்க வளர்க்கயென்னைத்
திருடியென்று சொன்னாயே யென்னாவென்றாள்
பாய்மேலே படுத்திருக்க வைத்திருக்கப்
பாவியென்ன சொன்னாயடா பரமன்பார்த்தே.

---

239. எந்த நாளும் எனக்கு அழிவில்லாமல் நிற்பேன். வேறுடலில் புகுந்து வாழ்தல் இனி இல்லை. காகமாகவே நான் இருப்பேன்.

240. வாலை இந்த வாழ்த்துச் சொன்னாள். குழந்தையாக என்னை வளர்க்க முனைந்த அவளை ஐயமுற்றபோது கண்டித்தாள்.

241. பரமன்பார்த் ததிசயித்து யிவளாரென்னப்
பரிந்தோடிப் போனபழி காரிநீலி
பிரமன்பார்க் காமலென்பின் னாலேநின்றாள்
பின்னிருந்து முன்பார்த்துப் பேசினாள்பார்
சிரமம்பார்த் தேயெனது பிள்ளைமுன்னே
சிந்திக்க வந்தாயோ வென்றுசொல்லி
வர்மம்பார்த் தவள்தன்னைப் பார்த்துவெட்கி
வாயில்மண்ணைப் போட்டதுபோல் மல்லாந்தாரே.

242. மல்லாந்தா ரேபடுத்தார் வலக்கால்நீட்டி
மறுமண்டி போட்டொருகால் வளைத்துநின்றார்
சொல்லார்ந்த யென்தாயே சுடடாவென்றாள்
சுடுகாடில் லாவிடத்தே சுட்டுப்போட்டேன்
அல்லார்ந்த பிணச்சாம்பல் நீர்விடாமல்
அங்கமொரு பிடிச்சாம்ப லழக்கக்கண்டேன்
வில்லேந்தும் வேல்மதனுங் கூடநின்றார்
வெறுங்கையே நானெறிந்தேன் சாம்பலாச்சே.

---

241 - 242. இந்தப் பாடலும் அடுத்த பாடலும் மிகமிக நுட்பமாக ஆன்மக் கிரியைகளைச் சொல்கின்றன. மரணமிலாப் பெருவாழ்வுக்கு ஆயத்தமாக ஆன்ம உலகிலே நடைபெறுகிற வினை உடம்பின் தகனமும் அதையொட்டிய கிரியைகளும் பேசப்படுகின்றன. பரிபக்குவிகளுக்கு ஞானகுருமார்கள் இந்த வினைச்செயல்களை உணர்த்துவர் என்று சித்தர் இலக்கியம் கூறுகிறது.

243. சாம்பலே யில்லாமற் சடமுங்கண்டேன்
சணத்திலே வந்தவனுந் திரும்பிப்பார்த்தான்
ஆம்பலே பூத்தாப்போல் ரூபமாறி
அடிக்கடியே வேறுநிற மாகிவந்தான்
வீம்பலே யென்றுசொன்னா ளென்தாய்தானும்
மெய்சிலிர்க்க யென்கூட்டி லுள்நுழைந்தான்
தூம்பலே யென்றவனைப் பிடுங்கிவீழ்ந்தாள்
தூத்தூதூ வென்றவனைத் துப்பினாளே.

244. துப்பினாள் உயிர்மாய்ந்து உடல்கிடந்த
தும்பிமுகன் பெருச்சாளி ஆழநீளம்
செப்பினா னுடல்தெளிந்து வரவேயில்லை
சித்திரத்தைப் போலிருந்து நிமையைக்காட்டி
கப்பினா னிருகையு மொட்டிக்கொண்டு
காதோரங் கன்னத்தி லறைந்துதட்டி
துப்பினா னென்குழந்தை முகத்திற்தானே
துடிப்பயலே யிவளைவிடு நான்போகேனே.

---

243. அநித்தியமான உடம்பை நித்தியமாக்கி இதை ஒளிச்சடலமாக மாற்றுவதற்கு அவள் இதனுள் நுழைந்து செய்த மகத்தான மாற்றங்களைப் பேசுகிறார்.

244. இதுவும் ஆன்ம உலகின் தெய்வ அனுபவங்களைப் பேசுகிறது.

திருமந்திரம் சொல்கிற அனுபவம் வருமாறு; "உறங்கும் அளவில் மனோன்மணி வந்து கறங்கு வளைக்கைக் கழுத்தாரப் புல்லிப் பிறங்கொளித் தம்பலம் வாயில் உமிழ்ந்திட்டு உறங்களை யாளன்றோர் உபாயம்செய் தாளே".

245. நான்போயென் னிருந்தென்ன யினிமேலம்மா
நாய்போலே நானலைவேன் மதியார்முத்தர்
தேன்போலே உன்சிசுவு யிருக்கட்டம்மா
சிறுபிள்ளைப் புத்தியல்ல பெரியோனம்மா
கூன்போலே வளைந்திருந்துஞ் சிறியோனம்மா
குமரிக்கி யேத்தமகன் வாலிபன்தான்
தான்போனா யோயினிமேற் பிறக்கும்பிள்ளை
தரும்பல னதுவேதோசும் மாபோறேனே.

246. போறனென்று போனவனுஞ் சாகாமற்றான்
போயொளிந்தா னெத்தனையோ நவமிதானோ
வாரனென்று வாயிடுக்கிற் பல்சொன்னாற்போல்
வருவானாந் தசமிதினம் யிட்டான்கெட்டான்
போறனென்று சொன்னவனும் பேர்ந்துபோவான்
பிழையில்லான் சொல்லில்லான் பிழைக்கமாட்டான்
கூறனோ அவனேழை தெய்வமில்லான்
கும்பிடவும் ரூபமில்லான் கோழைதானே.

---

245. மரணத்தை வெல்லும் நிலையிலே நடைபெறுகிற தெய்வ உரையாடல்.

246. இதுவுமது.

247. கோழையற்றான் வேலையற்றா கொடுங்கையில்லான்
குருபோலத் துணை யில்லான் சமாதியில்லான்
வாழைநீர் போல்வாடியுந் தீர்த்தமில்லான்
வசனிக்கத் தெரியாதான் முட்போலுள்ளான்
கேழையிலுந் தீப்பூடு மனிதருள்ளில்
கிள்ளாக்குப் போலிருப்பான் முறட்டுரூபி
பாழையிலு மிவன்பாழே தெய்வவீட்டில்
பரதேசி தாண்டுவா னருமைபாரே.

248. அருமையுடன் செய்தவனே சித்தன்சித்தன்
அம்பரமாய் விட்டுவிட்டா லொன்றுமில்லை
வெறுமையிது வந்தாலும் விடக்கூடாது
வேணுமொன்று பார்த்தறிந்து செய்துவந்தால்
பெருமையென்ன ஞானியென்ன கெருவங்கொள்ளான்
பிடியரிசி பொங்கியுண்பான் உப்பில்லாமல்
உருமையென்ன கொடுத்ததெல்லாம் வாங்கிக்கொள்வான்
ஓகோகோ குடிசைகட்டிக் கொள்ளுவானே.

---

247. ஞானத்தின் உயர்நிலையை அடைந்த பின்பு அவனுடைய நடத்தைகளில் மகத்தான மாற்றங்கள் நிகழ்கின்றன. அவனுடைய தோற்றம், செயல்கள் யாவுமே வேறுபட்டவை.

248. தன்னில் தானே ஆனந்திக்கும் இயல்பை அடைந்தபின்பு அவனுடைய எளிமை, ஞான நிலைமை அனைத்தும் வியத்தகு நிலையை அடைகின்றன.

249. வானென்ன இவ்விதமா யார்க்குந்தானே
மனமென்ன அறிவுகொண்டு சொல்லுவாரோ
நானென்ன பட்டசளந் தனைநினைந்தால்
யார்க்குரைப்பேன் பேரின்பம் யானேகானேன்
நானென்ன சொல்வதற்குத் தேடிக்காணேன்
நம்குருவே யென்றுசொல்லி யடிபணிந்தான்
தேனென்ற மொழிபேசிக் கரையலாகா
சிறுகல்லோ யென்மனது மலையதாமே.

250. மலைகளிலும் பெரியது மேருவோசொல்
மாமகத்தோர் தங்கள்மனம் சிறியதோபார்
சிலையதிற் கோவில்குளம் பெரியதோசொல்
தேறினவர் தங்களுடல் கயிலாசம்பார்
கலையதுக்குச் சிங்ககுணம் வருமோசொல்லு
கலையறிந்தோர் தங்கள்குணஞ் சாபமாமோ
விலையதுபோற் சொல்லிடலாம் யேதுக்குந்தான்
மேன்மைமவர மீபவர்க்கு விலையேதாமே.

---

249. 'நான்' இறந்தேன். அந்தப் படுகளத்தை யார்க்கு எப்படிச் சொல்வேன்? என்மனம் சிறுகல் இல்லை; பெரிய மலை. எப்படிக் கரைந்தது என்பதை எங்ஙனம் சொல்வது?

250. மலைகளில் எல்லாம் பெரியது மேருமலை. மாமனிதர் மனம் அவ்வாறே. சிலையைவிடக் கோயிலும் குளமும்பெரியனவோ? ஞான பக்குவம் அடைந்தவர்களின் உடம்பு கைலாயமே யாகும்.

251. ஏதாகுஞ் சொல்லறிந்தாற் சொல்லுவீரோ
யெங்களுட லாவிமனம் விலைவைத்தாளே
போதாகுஞ் சொல்வீரோ தெரிந்ததனாற்
பொருள்கேட்டா லோடிடுவீர் கஞ்சிதாரீர்
மாதாகும் பிணத்துக்குப் பொருளையெல்லாம்
வாய்கேட்டா வதைக்கொடுப்பர் நினைத்ததெல்லாம்
தாதாவென் றேஅடித்தார்க் கஞ்சியெல்லாந்
தான்ஈவீர் போங்களெனத் தள்ளுவோமே.

252. தள்ளுவோம் சேர்ந்தாலும் அணையமாட்டான்
தள்ளினுமே போகானே நல்லோன்நாளும்
விள்ளுவோ மலன்தனக்குப் பாஷையெல்லாம்
வெறும்பாஷை தானல்ல சித்திபாஷை
மொள்ளுவா னென்சொல்நீர் கனவின்மேலும்
மோகமிடான் தாகமுளான் யென்சொல்லாலே
கிள்ளுவான் மற்றவர்கள் சொல்லுமுன்னே
கிள்ளாக்கை வைத்திருப்பான் வாயிற்தானே.

---

251. இந்த ஆனந்த நிலை பெற்ற உடம்பின் மேன்மையும் அதன் மதிப்பும் யாரறிவார்? பாமர மக்கள் மயங்குவது எது எதற்கோ என்பது உண்மை.

252. மேன்மை தெரியாத மக்களுக்கு இதைச் சொல்லிப் பயனில்லை.

## பிறவி நீக்க யோகநெறி

253. வாயினாற் கேட்பவனுந் தள்ளுவோனே
வாயினாற் கேளாமற் தொண்டுசெய்வான்
பாயினால் விட்டெரிந்து கிட்டநிற்பான்
பதமுத்தி காண்டிவனுஞ் சித்திகாண
நோயதிலே சிக்கானே முன்னாற்தானே
நோயிருந்துஞ் சொல்லானே யெனதுமுன்பு
பேயினாற் பட்டசளந் தன்னைச்சொல்வான்
பெரும்பிறவி நீக்குதற்குப் பிசகில்லானே.

254. இல்லானே ஒன்றுளது முத்திமோட்சம்
யெப்போவென் றுங்கேளான் வேலையுள்ளான்
கல்லான நெஞ்சிருக்கும் சித்தசுத்தி
கலைவாசி சீவன்முத்தி தேகசுத்தி
நில்லானோ யென்குழந்தை வேறுபாரான்
நிணிலத்திற் சமுசாரி போலிருப்பான்
மல்லான தைதயெடுக்கான் சாஸ்திரங்கள்
வாய்கொண்டு பேசானே யேசான்கேளே.

---

253. தள்ளுவோன் - உள்ளத்தில் ஏற்றுக்கொள்ளாதவன். வாயினால் கேளாமல் தொண்டு - குறிப்பறிந்து செய்கிற தொண்டு.

254. ஆசிரியன் சொன்னபோது அதைக் கேட்பதன்றி அமைதியற்ற நிலையில் தொந்தரைகள் செய்யாமல் இருப்பான். ஆடம்பரமான பேச்சுக்கள் இல்லாமல் பணிவோடு இருப்பான்.

255. கேளுங்க ளிவ்விதங்க ளன்றிமற்ற
கேடுதொழிற் செய்யான்பார் தினமுந்தானே
கேளுங்கள் களவுமுதற் பொய்சொல்லாதான்
கும்பிடவுந் தெரியானே கையைக்கூப்பி
மீளுங்க ளென்றுமிகச் சொல்லுவான்பார்
விரதங்கள் நோம்புவகை மெய்யுளானே
தாழுங்கள் போறேநான் விடுவீரென்பான்
சம்பிரதா யங்கள்மெத்தச் சாடுவானே.

256. வானேறச் சாடுவனே மெத்தயோகி
மறைவளப்பஞ் சொல்லுவானே கடலுப்பாதி
கோனேறிப் பேசானே நமதுகூட்டம்
குருவென்றுஞ் சொல்லானே திருவென்பானே
மானாரி லிவன்மனிதன் திரிகாலங்கள்
வாய்க்குமிந்த யோகனுக்குச் சாதகனாம்
தானேறி மீள்பவனோ திரும்பமாட்டான்
தலையுச்சி காணுமட்டுந் திரும்பிடானே.

---

255. கேடுதொழில் - தீய வினைகள். களவு முதற் பொய் - பொய், களவு, சூது முதலிய பாவச் செயல்கள்.

256. உச்சியிலே உள்ள சித்தாகிய அம்பரத்தை நாடுபவனே வானேறுபவன். மானாரில் - மக்கள் கூட்டத்திலே இவன் மனிதன் - இவனே மனிதன்.
ஒப்புநோக்குக :

மனிதரிலும் பறவையுண்டு; விலங்குண்டு
கல்லுண்டு; மரமும் உண்டு
மனிதரிலும் மனிதருண்டு; வானவரும்
மனிதராய் வருவதுண்டு -

257. திரும்பிடா னிவனுக்குச் செப்பலாமே
சீஷனென்று சொல்லாமற் சினேகன்போல
கரும்பிலே யீயிருக்குங் கசடுமுண்டு
கனிந்தமன மவனுக்குச் சேய்போலய்யா
அரும்பிலோ நாரிருக்கும் வாசமாறும்
அவனறிவு மாறாது யெந்தநாளும்
விரும்பிலோ பெரட்டாது விரும்பாதாரிக்கு
மெய்நிறையச் சொல்லவில்லை வேழேஆண்மே.

258. ஆண்மைகொண்ட ததினாலே யார்தான்பூண்டார்
அகம்விட்டுச் சமம்வந்தால் வருத்தங்கண்டார்
ஆண்மைகொண்ட வீரர்களு மெங்கேயெங்கே
அமைதிகுண சாந்தருக்கே காலவர்த்தம்
ஆண்மையது திரிகால வர்த்தஞ்சொல்லும்
அவருக்கா காததுந்தா னிருந்துமென்ன
ஆண்மையது வானதிரி காலமூன்றும்
அதுநிற்குந் திரிலோக வரைக்குஞ்செப்பு.

---

257. குழந்தை போன்ற மனம்; மாறாத அறிவு இப்படிப்பட்ட இலக்கணம் உள்ள பயிற்சியாளன் சித்தி பெறுவது எளிது.

258. திரிகால வர்த்தம் என்பது முக்கால அறிவு. காலம் மூன்றும் கருத்தில் உணர்கின்ற இந்த ஞானம் யாருக்குக் கிட்டும்? அமைதியும் சாந்த குணமும் உள்ள நிதானிகருக்கே இது வசமாகும்.

259. செப்புகிற சீஷரைக்கை யணைக்கவேணும்
திருவேடந் தனைப்பறித்து யெறியவேணும்
ஒப்புகிற மாந்தருக்கு உண்மைபூணும்
உவர்நிலத்தில் விரையிட்ட வாறதாகும
தப்புகிற மாந்தருக்கு யிதுதோணாது
சவுக்கடிக்கு மஞ்சுகிற சவங்களேனோ
உப்புகிற மண்வீழ யில்லஞ்சாய
ஒத்திருந்த அவர்தனக்குச் செய்வதென்ன.

260. செய்வதென்ன குருவென்றாற் சீஷர்கூட்டம்
தெருவீதி நிறைந்திருப்பார் ஒன்றுண்டாசொல்
நைவதென்ன யெங்கள்மேற் குற்றமில்லை
நடுங்குமன முடையாரே நடுங்காதீர்கள்
பொய்யிதெனச் சொல்லாதீர் யென்னைப்பாரீர்
பொய்யென்றாற் திரிகாலந் தன்னைப்பாரீர்
கையதனில் வைத்திருந்தும் மறந்துவிட்டீர்
கருத்துமன தறியூகந் தெளிந்துபாரே.

---

259. கையணைத்தல் - ஞானம் புகட்டல் திருவேடம் - வெளி ஆடம்பரம்
உவர்நிலம் - விளைச்சலுக்கு வகையில்லாத உப்புநிலம்.
மண்வீழ்ந்து இல்லம்சாய்தல் - உடம்பாகிய இந்த மண்வீடு வீழ்ந்துபோதல்

260. பொய்யர்கள் இருப்பதால் மெய்யர்களை ஐயுறுகிற நிலையும் நிலவுகிறது. துறவியர் உலகிலே இது நிகழ்கிறது. எது தவவேடம் எது அவவேடம் எனக் கண்டு தெரிவதிலே சிக்கல் உள்ளது.

## திரிகாலம்

261. தெளிவதனிற் தெளிவுதரும் அருளுங்காணும்
சென்மாந் திரங்காணும் பின்னுந்தோணும்
ஒளியதனில் நின்றுவிளை யாடுவாய்நீ
ஊணுறக்க மின்பதுன்பம் பார்ப்பதேபோல்
வெளியதனில் மெய்காணும் அறிவிற்சோதி
வெளிச்சமல்லோ யோகிக்குத் திரிகாலந்தான்
குழியதனி லேவிழித்து வீழ்ந்தாற்போல
குண்டுடையோன் தண்டுடையோன் கோழையேனே.

262 கோழையோன் நம்மெதிரி பகடுஉள்ளோன்
கொடும்பகடு யென்னவென்றாற் கோழைதானே
பாழையோன் பகடுவது யெருமைதானே
பகர்பெரியோ ரெருமைதனைக் கோழையென்றார்
நாழைவாழ் நாள்தடுத்தல் கிடாவுமேறி
நம்மெதிரி கோழையின்மேல் வருமுன்னாலே
மாழேநா னென்று சொல்லிக் குருமுன்னாலே
வாய்கொண்டு சொல்லாதே மனதால்நில்லே.

---

261. ஒளிமுறை யென்ற யோகத்தின் அரிய பலன்களைச் சொல்கிறார் சித்தர். தெளிவதனிற் தெளிவு - தீவினைகளிலிருந்து தெளிந்த நோக்கிலே ஆன்மக்காட்சி தெளிவாகப் புலனாகும். சென்மாந்திரங் காணும் - முன்வினைகள் துலங்கும். பின்னுந் தோணும் - நிகழ்வினையும் வருவினையும் தெரியும்.

262. எருமையைக் கோழையென்றது, அச்சத்தின் வயமாகி நிற்பதாலும், மந்தமாக இருப்பதாலும், சேற்றிலே புரள்வதாலும்!

263. நில்லடா காயத்திரி யீதுதானே
நிலையடா கைதொழுகை யீதுதானே
அல்லடா கும்பிடுதல் யிதுதானாகும்
அணிமாவு மகிமாவு மீதுதானே
சொல்லடா சாஷ்டாங்கம் யீதுதானே
திருவென்ன குருவென்ன அருள்தானென்ன
வல்லடா வாய்ப்பகட்டை விட்டுப்போட்டு
மனப்பகட்டை யென்னுடனே கலந்துகூட்டே.

## ஐம்புலனை யடக்கு முறை

264. கூட்டடா ஐம்புலனை யொன்றாய்க்கூட்டு
குருவோடு சாஸ்திரத்தை யொட்டிக்கூட்டு
பூட்டடா மனந்திறக்கச் சாவிசொல்வேன்
பொறிபுலனுங் கண்டதுவே நினைவிலூறும்
தீட்டடா யத்தொழிலிற் கண்டுங்கேட்டும்
தீங்குவரு மெண்ணாதே உளத்திற்காணும்
பாட்டடா நீயிருக்கச் செவிகண்போகா
பார்த்ததையுங் கேட்டதையு மறக்காகாதே.

---

263. காயத்ரி என்பது இதுதான். வேறு விதமாகக் காயத்ரி ஜபம் பற்றிக் கூறுவது சித்தருக்கு உடன்பாடில்லை. ஒப்பு நோக்குக :

"காயத் திரியே கருதுசா வித்திரி
ஆய்தற் குவிப்பர் மந்திரமாங் குன்னி
நேயத்தே ரேறி நினைவுற்று நேயத்தாய்
மாயத்துள் தோயா மறையோர்கள் தாமே."

- திருமந்திரம்.

264. புலனை அடக்குதல் என்பது ஐம்புலனை ஒன்றித்தலே. அடக்குதல் என்பதன் இப்பொருளையே திருமூலரும் பாடுவர்.

"அஞ்சும் அடக்கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கிலை
அஞ்சும் அடக்கில் அசேதனம் ஆமென்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவறிந் தேனே!"

265. ஆகஃது மறப்பதற்கு வெகுநாள்சிந்தை
அதுகடக்கும் வாறேது அருளேமிஞ்சில்
நோகாது ஏகிவிடும் போகுங்காலம்
நுணுக்கமாய்ச் சொல்லிவிட்டே னிதனைப்பாரு
சாகாது மார்க்கம்விட்டால் நோகாதப்பா
தன்னுடனே பிறந்தகுலம் யெவ்வாறுமாளும்
போகாது ஆனதினாற் பொல்லாப்பேகும்
பூரணமாஞ் சாஸ்திரத்தை முழுதும்பாரே.

266. பாருநீ ஆதிநடு அந்தமட்டும்
பரிசித்தி யோகசித்தி முத்திசித்தி
பேருநீ தானறிந்து பயனைப்பாரு
பேர்பெற்ற சித்தருடன் கூடிவாழு
கூறுநீ யெங்களுடன் வாதில்லாமல்
குருதோச மாகாது நேர்நிற்காதே
தேறுநீ ஆனமட்டும் தெரியும்பட்டால்
செய்திசொல்ல லாகாது பின்னேவாவே.

---

265. மறப்பதற்கு முடியாதது. எப்படி அது அகலும் என்றால் அருள் மிஞ்சில் அது நீங்கும். 'டேப் ரிகார்டரில்' ஒலிநாடாவில் புதியது பதிவாகும்போது பழையது தானே அழிவது கண்கூடு.

266. ஒட்டி உறைதல் என்பது குருவோடு ஒன்றி வாழ்தல். அதுவே உபாயமாகும்.

267. வாவென்றால் நீயிருப்பாய் நானிருப்பேன்
மல்லக செட்டிகதை வார்த்தைவேண்டாம்
போவென்றா லென்மனது கூசுங்காணும்
பொதுவிருக்கும் உளவறிந்தோர் பூரணந்தான்
காவென்றாற் கூவென்பார் தங்களோடு
கள்ளமனக் கள்வரோடு பாசரோடு
ஆவென்றால் நெஞ்சிறக்க மில்லாரோடு
அம்மனது தானிறந்தால் பொருள்சொல்வாரே.

268. சொல்லார்கள் பொருளிடிப்பார் குறையுந்தேயும்
சொல்லடங்கா யோகிபலன் நிருத்தக்கூடா
வல்லார்கள் சொல்விடுவார் பலவாறாக
மாமனதை யுண்டிடுவார் வெகுசீராக
நில்லார்கள் தங்களுக்கும் வல்லபத்தால்
நிமிஷத்தில் நேர்ந்துவிடுங் கடாக்ஷத்தாலே
அல்லார்கள் தங்களுக்கா உண்மையோர்க்கோ
அவர்மனது சீரணிக்கும் அருள்தாங்காதே.

---

267. ஏட்டிக்குப் போட்டியில்லாமல் 'ஒட்டும் இரண்டுமாக' இருப்பதே யோகப் பயிற்சியின் முதலாவது பாடம்.

268. வல்லமை வளர்த்துக்கொண்டால் கடாட்சம் எல்லா மாறுதல்களையும் நிமிஷத்தில் செய்துவிடும். அப்படி அல்லாதவர்களுக்கு அருளையே தாங்கிக்கொள்ள இயலாது.

269. தாங்காது வர்த்தமானம் பொய்யாவிட்டால்
தரைதனிலே தெய்வமில்லை யிதுபோற்தெய்வம்
வாங்காமற் பெய்யமழை சொரிந்தாற்போல
வாலசித்தர் சொன்னாரே தாங்காமற்றான்
ஏங்காது யெத்தனையோ சுவடிசொன்னார்
எத்தனையோ சாஸ்திரங்கள் மீதம்பாக்கி
தேங்காது வாரியிட்டார் வெளியில்நின்று
தெய்வத்தைக் காண்பதற்கு யிந்தயோகமதே.

270. யோகந்தான் முடிந்தபின்னே வீணதாகும்
ஊடுருவி உச்சிகண்டால் லேசதாகும்
தாகந்தான் போக்குதற்கு வெண்ணையாமா
தரியுருவைக் காண்பதற்குக் கண்ணாலாமா
மோகந்தான் போக்குதற்குப் பெண்ணாலாமா
முரிபொருளா லாகுமன்றி வேறேகாணீர்
யாகந்தான் செய்தாலும் வானனாமா
அதுவிறங்கில் மழைபொழியு மடவுபோலே.

---

269. எத்தனையோ சுவடிகள், எத்தனையோ பனுவல்கள் எல்லாம் எதற்காக? மழை பொழிவது போல் பொழிந்தார்கள் - வாங்கும் குளங்களை நாடியே.

270. யோகம் என்பது கைகூடிவிட்டால் படிப்புக்கு அவசியம் ஏது? ஊடுருவிப் பார்த்தால் யோகத்தெளிவு கண்முன் கூடிவிடும். ஏடுகளால் என்ன பயன்?

271. போலவே உச்சிவிழி நெற்றிபார்வை
பூண்டவனும் நின்றுவிடில் இருதயத்தில்
ஞாலமே லென்னயினி மலைமேலென்ன
நாறுடலைக் காப்பதற்கு யிம்மட்டோதான்
தாலமே கோடியிலோ சந்திரன்போல்
தங்கும்வெள்ளிக் கூட்டமதில் அதிசயந்தான்
சீலமே தானொருவர் புசுண்டநாதா
செப்பினதி லவர்க்கினியர் வசிஷ்ட நாதாவே.

272. நாதாவென் றவர்சொல்ல யிவரும்போற்ற
நாமிருவர் பேசுமொழி யிவரும்போற்ற
சூதாவென் றவர்அரியு மிருவர்மோகந்
துன்பவலை யெவ்வளவோ அளவுயின்பம்
பூதாது அறியவெனக் கிச்சைசொன்னாய்
புகழ்வளர்ந்து வெளியுள்ள மட்டுமானாய்
வேதாது வென்றவரே மனுவில்நின்றோர்
வேதய்ந்த உடலானோய் அதிகாமத்தாலே.

---

271. பார்வையை மேலே ஏற்றுகிற வித்தையே ஞானமாகும். அதிலேதான் வான மண்டலமும் விண்மீன் சந்திரன் எல்லாம் அடங்கும்.

272. ஆசையை வென்றவர்களே மனிதர்களில் நிலையாக நிற்கக் கூடியவர்கள். இந்த ஞான உரையாடல் அண்டத்துக்கு அப்பாற்பட்டது.

273. காமத்தாற் பசிவலியா லுடற்துன்பத்தால்
கடந்தனையே வெகுநாளே யுகாதிநாளே
சாமத்தா லென்னசெய்தாய் கூட்டுக்குள்ளே
தன்கயிலை நாட்டாரே கருப்புக்கெல்லாம்
ஆமத்தால் நாவிடுக்கி மேலேதள்ளி
அண்ணாக்கைத் தள்ளியதி னருகில்வாசல்
சேமத்தா லேயொழுகும் பாலையுண்டு
செந்தணலைத் தாண்டினனே பசியோயாதே.

274. ஓயாம லுண்டதனைக் கொண்டீர்கண்டீர்
ஊர்முழுதும் பசிக்கென்ன செய்தார்பார்த்தீர்
மாயாம லிருந்ததுவே கீழ்க்கண்டந்தான்
மற்றகண்டம் மறுபடியு முளைக்கக்கண்டேன்
சேயாக மண்ணுதிக்கப் பெற்றாள்மண்ணும்
திருவுடவே நான்முகனும் வந்தாரீன்றாள்
வாயாக யீன்றகதை விதமேசொல்ல
வசனிக்க யெத்தனையோ விதமென்றேனே.

---

273. காமத்தாலும், பசிவாதனையாலும் உழல்கிறதை விட்டுவிடு. நாவினால் வாசலைத் திறந்து அமுதம் உண்ணும் விதியைப் பார். பிறகு பசி முதலிய வாதனைகள் அணுகமாட்டா.

274. உண்டு உண்டு என்ன கண்டோம், பிறப்பு இறப்பு என்ற சுழற்சியே!

## போகர் தர்க்கம்

275. இரவிந்த சடலத்தார் என்பில்லாதவர்
யெம்மைப்போல் நிறங்கருப்பு ஓர்காலந்தான்
வரம்பிலாக் காயவுடல் மண்ணோர்கண்டம்
வரம்புண்டு யிக்கண்டம் பசுக்காலந்தான்
புறம்புண்டு யென்றனுக்கு யெப்போதுந்தான்
போகனவன் காலத்து மேலேதானே
திறம்பூண்டு நான்வரவே மாட்டேனென்றான்
தேவடியாள் பிள்ளையென்றான் போகனென்றனையே.

276. போகனவன் போனபின்பு மலைமேல் நின்றோன்
பொய்யுரையான் சத்தியங்கள் மெத்தவுண்டு
மாகனவன் வெகுதிடாரி மலைமேற்பாய்வான்
மாதர்க்க கேள்வியுள்ளான் சிறுவர்போல
ஆகனவன் திண்டுடலான் குச்சிக்காலன்
ஆகையினா லேகெவுனம் ஆகாயத்தே
தாகனவன் நீரில்லான் உலகபாரைத்
தாண்டியடி சாப்பாணி தாண்டுவாரே.

---

275. போகரொடு செய்த தர்க்கம் எதைக் குறிப்பிடுகிறது? இந்த மண்ணுலக வாழ்வுக்கு வரம்புண்டு. காலம், இடம் இரண்டையும் கடந்த நிலையில் உள்ளவன் போகன்.

276. கூப்பிட்டதற்கு வராது போனான் போகன். அவனுடைய இயல்பு கூறுகிறது பாடல்.

277. தாண்டுவா ரில்லாட்டால் உச்சிநேரே
தானேறிப் போவதற்கு வேலைசெய்தார்
கூண்டுபார் காயஉடல் பிலத்ததாலே
குமரிவிளை யாடுங்கால் தொட்டுநின்றார்
ஆண்டுபா ரப்படியே சஞ்சரித்தார்
அம்மேகந் தாங்காமற் பாரையொட்டி
மாண்டுபார் போனதுவு மண்ணேயாச்சு
மலைக்கல்லும் பொன்னாச்சு மண்மேலாச்சே.

சட்டைமுனி நூல்கிழித்த விபரம்

278. ஆச்சப்பா யிவ்விதங்கள் பார்த்தேன்யானே
ஆசட்டை முனிசொன்ன நூல்கிழித்தார்
மூச்சப்பா வகைமுறையாய்ச் சொன்னார்நல்லோர்
மூதண்டக் கிசாயமுதல் சொன்னாரன்னாள்
பேச்சப்பா கன்னடமே சேணியன்றான்
பிறழாமற் சொல்லறியான் தமிழ்பாஷைக்கே
கூச்சப்பா தமிழ்வழக்க மில்லாதாலே
கொட்டினான் வெள்ளைக்கவி கட்டினானே.

---

277. விண்மண்டலத்தில் சித்த சஞ்சாரத்தால் என்ன விளைந்தது? காய உடல் பலத்தது. குமரி விளையாடுகிற மேகத்தைத் தொட்டு நின்றதாலே அம்மேகம் கீழே இறங்கியது. மலைக்கல்லும் தங்கமாயிற்று.

278. போகர்கதை அப்படி. சட்டைமுனி நூலைக் கிழித்தெறிந்தார். கன்னடனானதால் தமிழில் வெள்ளைக்கவி கொட்டினான். அந்த இழுக்கினால் அவன் நூலும் கிழிந்தது.

279. நானென்ற தமிழதனிற் சொன்னமுன்னோர்
நன்குணர்ந்தார் பிழையென்று நகைத்தார்சீறி
வானென்ற திருமூலர் கண்ணாற்றானே
வாய்விளங்கச் சொன்னாரே பலபாஷைக்கும்
ஏனென்று கேட்பதுபோ லிருக்கவேணும்
யில்லாட்டாற் சும்மாதா னிருக்கவேணும்
கோனென்று சொன்னாரே குருவில்வாவா
குமரிவாலை கண்டவனா யிருவென்றாரே.

280. இருவென்று நூல்படித்தார் சபையிற்சித்தர்
இருந்தவரிற் கொங்கணவன் யெடுத்துப்பார்த்தான்
பொருவென்றார் மூலகுரு நிற்கச்சொன்னார்
புலவனே நீபோடா நில்லுவாடா
திருவென்றாற் சொற்பிழைகள் யெழுத்துக்குற்றம்
செந்தமிழு முந்தனக்கு வருகுமோதான்
சுருவென்றாற் தான்வருமே யெதிர்பாஷைக்கோ
காலன்கை கொடுத்துவி முரியென்றாரே.

---

279. திருமூலர் ஒப்பற்றவர். எல்லா பாஷைக்குமாக அவர் தவமொழி சொன்னார். தட்டிக் கேட்பதுபோல் பேசினார். வாலையைக் கண்டு வாழ்வாயாக என்றார்.

280. சபையிலே இருந்தவர்களிலே கொங்கணவர் பார்த்தார். தர்க்கம் வந்தது. அழிந்தது இவர் நூல்.

281. முரியென்ற சொற்கேட்டுப் போகநாதன்
மோகமகன் கொங்கணவன் யெடுத்தெறிந்தான்
கரியென்றான் பிடிசாம்ப லாகவென்றான்
கண்டவர்கள் கண்ணெதிரிற் சவாசுயென்றான்
புரியென்றான் செந்தமிழைக் கயிறேயாக்கி
பூரணத்தைச் சொல்லுதற்கு யிவனாரென்றான்
விரியென்றான் சொன்னதெல்லாஞ் சரியேயான
மேலெழுந்த அன்பத்துக் கிழித்தார்பாரே.

282. பாருபார் குருநூலே அதன்பேராகும்
பரிபாஷை யில்லாதாற் கிழித்தாரய்யா
நூறுயிர் பிழைத்திடவே யின்னும்பாரீர்
நூலிரண்டு இருநூறு செய்துவைத்தார்
போருபா ரில்லாமற் சொன்னார்அன்னார்
போகருக்குப் பாட்டனவன் வாத்தியாரே
தேருபோற் தாலிப்பான் உயர்ந்ததாழி
செயவீரன் கூட்டமது மெச்சுவேனே.

---

281. தர்க்கம் வந்து ஏடு கிழிந்த நிகழ்ச்சி கூறுகிறார்.

282. குருநூல் என்ற பெயரில் எழுந்த அந்த நூல் பரிபாஷை யில்லாத காரணத்தால் கிழிபட்டது.

283. மெச்சுவேன் யாகோபு தேரையாரை
வேணபொருள் வைத்திருக்கும் அகஸ்தியனாதன்
குச்சுப்போற் தானிருக்கும் கோரக்கன்தன்னை
குடுகுடுக்கைக் கஞ்சாவைக் கொட்டிமேய்த்தான்
அச்சுப்போல் யாவர்களும் சமித்தாரத்தை
அதைச்செபிக்க மாட்டாமல் மயங்கினார்கள்
வச்சுமே போய்மறந்து போனாப்போல
வையகத்தார் தான்நினைக்கச் செப்பினாரே.

284. செப்பினா ரலைச்சலாய்ப் பாடிப்போட்டார்
திருமூல ரேபார்த்துச் சிரித்தார்பின்னே
ஒப்பினார் யாவர்களும் உள்ளடக்கி
உத்தமிக்குச் சம்மதமா வெனச்சொன்னார்கள்
தப்பினார் கோரக்கர் நூலைப்பார்ப்போம்
சங்கித்துப் போய்வரவும் ஞாயமில்லை
துப்பினார் மூலகுரு கிழவர்நீதன்
சொன்னதென்ன யினிச்சொல்லா தேயென்றாரே.

---

283. இந்தப் பாடலில் தேரையார், அகஸ்தியநாதர், கோரக்கர் பற்றிய குறிப்புக்கள் பேசப்படுகின்றன.

284. திருமூலர் பார்த்துச் சிரிக்கும்படியாக இருந்தவை அந்த நூல்கள்.

கோரக்கர் மட்டும் தப்பினார் என்கிறார். இந்தப் பாடல்களில் குறிக்கப்பெறுகிற செய்திகள் முழுமையற்றுக் காணப்பெறுகின்றன. வரலாறுபோல் விரிவாக இல்லை. கண்டனம் போலும் முழுமையாகவும் இல்லை. இந்நிலையில் இவற்றைப் பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்வதில் இடர்ப்பாடுண்டு.

## யோகம் ஞானம் எளிதிலாக

285. என்றார்க ளிப்படியே யோகமார்க்கம்
யெடுத்தவர்கள் சொல்வார்கள் சித்தர்முன்னே
குன்றார்கள் ஆண்பிள்ளை முழுதுங்கண்டார்
குமரகுருவானாலும் பிசகிப்போகும்.
நின்றார்கள் மற்றவர்கள் கோடாகோடி
நேர்வழியே சொல்லறியா நின்றாரய்யா
சென்றேறி யறிந்தாலு மியற்கைக்கல்வி
சீரணிக்கா தேயிருந்தார் செப்புவாரே.

286. செப்புவா ரியற்கைதனிற் தெரிந்ததேபோல்
செப்பிவிடும் அருள்வந்து தெளிவாய்த்தானே
இப்புவியோர் யாவர்களுஞ் சொல்லார்யோகம்
இதுபெரிது ஞானமது யெளிதுமாகும்
அப்புவார் யேதாகுஞ் சுழிமுனைகாணார்
ஆரறிவார் முச்சுழியை மூச்சின்பேச்சை
பிச்சுவார் காணாதார் மூலங்காணார்
பெருவாக்கை நீட்டிடுவார் தலங்காணாரே.

---

285. எத்தனை நுட்பங்கள் தெரிந்தவராக இருந்தாலும் இயற்கைக் கல்வியின் உட்கிடை இல்லாத காரணத்தால் இத்தகைய சோக முடிவு ஏற்பட்டது.

286. உண்மையைத் தெளிவாகக் கண்டவர்கள் மிகச் சிலரே. மற்றப்படி வித்தாரமாக மொழிகளை வீசுவார்கள். மூலத்தை அறியார். நீட்டி முழக்குவார்கள். ஞானத்தலம் எது என்று அறியமாட்டார்கள்.

287. காணார்கள் மூலஉயிர்ப் பிச்சைதன்னை
கண்டெடுக்க மாட்டார்கள் சல்லிவேரை
நாணார்கள் சொல்லுதற்கு அஞ்சுவாரோ
நமன்கயிற்றை நாடார்க்கு யிதுவேவேலை
தோணாட்டாற் சுமாவிருகார் வாணாக்காலை
சொல்நாவென் றடிப்பார்கள் துடியிற்பெண்டீர்
ஆனாக்கா லிடுக்கிற்பலி யேத்தல்போல
அங்கமசை வுள்ளழவும் பலவாய்த்தானே.

288. தானென்ற சடங்கொண்ட வாயதாலே
தானேறிப் போகுமட்டும் லெகுவாய்ச் சொல்வார்
வானென்ற கருவிருந்த யிடத்தைக்காணார்
மகன்மகளும் பிறந்தவிடம் அச்சைக்காணார்
நானென்ற உயிரொடுங்கு மிடத்தைக்காணார்
நம்பினதை விட்டுவிடுஞ் சடலங்காணார்
ஊனென்ற காயமதிற் தூக்கங்காணார்
உள்மலத்தைப் போக்குதற்கு விசைகாணாரே.

---

287. ஆணிவேரைக் காணாது சுற்றியுள்ள வேர்களை நாடுகிறவர்கள் என்கிறார். மூலத்தைக் காணாமல் அதாவது எமனுடைய பாசக்கயிற்றைப் பிடிக்கத் தெரியாமல் சல்லிவேரைப் பிடிக்கிறார்கள் என்கிறார்.

288. உள்ளுக்குள்ளே இருக்கும் மலத்தை நீக்குவதற்கு வழிகாணார். நான் என்ற உயிர் எங்கே ஒடுங்குகிறது என்ற இடத்தை அறியமாட்டார்கள்.

289. பூணார்கள் பிரமத்தைக் காணுமார்க்கம்
பூணுவார் லச்சியத்தைப் பூட்டிப்பார்ப்பார்
ஆணுபா ரவர்களுட விபரமெல்லாம்
அதிசயங்க ளாயிருக்கு மனேகநூலால்
தோணுவார் முத்தரவர்க் கிரமமெல்லாம்
சொன்னதுக ளெத்தனையோ ஆராய்ந்தேபார்
காணுநீ சொறிசோரம் விடாமலேதான்
கண்டுகொள்ள மெய்மனதாய் அறிவாற்பாரே.

290. பாரப்பா கடைப்பிள்ளை யாகாமற்தான்
பக்குவத்தில் முதல்நடுவும் விட்டிடாதே
சேரப்பா நம்மோடு தூரதிஷ்டி
தெரிவதற்கு அனுகூலந் தெரிந்துகொள்ளு
மேரப்பா யேறுதற்கு வெளியேறாதே
மெய்யறிந்து வெகுதூரஞ் செல்லுவாய்நீ
கூறப்பா வென்றுநம்மைக் கேட்டதாலே
கொட்டினேன் வெகுதூரந் தட்டினேனே.

---

289. நூல்களைப் படித்தால் போதுமா? பிரமத்தைக் காண்பதற்குரிய வழியை மேவுவாரில்லை. செய்திகளைப் படிப்பதோடு சரி. நிகழ்வைக் காணாதவர்கள் இவர்கள்.

290. கடைசியில் நிற்காதே. மேலேறி வா. நம்மோடு சேர்ந்து தொலைநோக்கைப் பார். கடைத்தேறுவாய்.

## இந்நூலின் பெயர்

291. ஏனென்று கேட்டுபதிற் சொல்லுமிந்த
ஏகவெளி சூரியன்றன் ஞானபாகம்
தானென்று யிதற்குப்பேர் ஞானசூரியன்
தாபரம்போ லேயிருக்கு மசையாதப்பா
நானென்று சொல்லுகிற நூல்களெல்லாம்
நம்மையன்றிச் சொன்னாரே உடலுள்ளேதான்
ஊனென்று சொன்னாரே யிதற்குள்ளேதான்
ஒளிவீசு யென்றுசொன்னார் குருவாமேன்றே.

292. குருவென்றால் ஞானமொழி திரிகாலந்தான
கொட்டுமந்த வார்த்தையது ஞானவார்த்தை
திருவென்றாற் திரிகால மிருக்குந்தானம்
தேவர்களு மெச்சுவார்கள் முக்காலத்தை
பொருவென்றா லிப்பொருளி லிச்சைவைத்தாற்
போய்வருவார் போகாரே நிற்பார்தம்முள்
எருவென்றால் தீயன்றிச் சாம்பலாகா
யெப்போது மக்கினியே மூலமக்கினியே.

---

291. இந்த நூலின் பெயர் ஏகவெளி சூரியன். இது ஞானபாகம். தாவரம்போல் அசையாமல் நிற்கும். அதாவது ஆட்டம் கொடாமல் உறுதியாக நிற்கும் என்று பொருள்.

292. குரு என்ற சொல்லுக்கே ஒளி என்று சித்தர் பொருளாகும். எனவே குரு என்றால் ஞானமொழி, திரிகாலம்! திரு என்றால் திரிகாலம் இருக்கும் தானம்.

### யோகம் பார்க்க நேரம்

293. அக்கினியே மூலதழல் நெருப்பைக்கொண்டு
அசைவாகி மேலெழுப்ப யோகநித்தரை
மக்கினியே வயிறுநிறைய அன்னமுண்டு
மாந்தத்தால் மூலஅனல் அபானமாச்சு
தக்கினியே யபானவாய் வாடாமற்றான்
தாதுநஷ்டி பிலட்படவும் உச்சிநோக்கு
சொக்கினிய ராக்காலம் மல்லாந்தேதான்
சூ'டர்வாசி பார்த்திடவும் நடுவேபாரே.

294. பாரப்பா மூக்குமுனை புருவமத்தி
பரிவாசி ஓடும்விதங் கூர்ந்துபாரு
வீரப்பா மேலேறச் சம்மணத்தால்
விரிமடித்து உட்கார்ந்து தானாய்ப்பாரு
சீரப்பா உண்ணாதே மூக்கின்மேலே
தினந்தினந்தான் பாரத்துவரத தானேசொல்லும்
தேரப்பா யிப்படியே வர்த்தமானம்
திரிகால வர்த்தமும்வரும் வெளியிடாதே.

---

293 அக்கினியை மேலெழுப்பினால் யோகநித்திரை. வயிறுநிறைய அன்னமுண்டு அக்கினி கீழே பாயும்போது அபானன் ஆகிறது. எனவே உச்சியை நோக்கு.

294. மூக்கு நுனியிலே ஒடுங்கி நின்றால் திரிகால வர்த்தமானம் கிடைக்கும். தினந்தோறும் இதைப் பயின்று வா.

295. வெளியிடா தேயிருந்து வேலைபாரு
வேணதெலாஞ் சொல்லிவைக்கும் முற்றும்போதில்
ஒளிவிடா வாசியணல் பலன்பெற்றோர்கள்
உத்தமர்கள் பெற்றபயன் உவமையில்லை
தெளிவீடே யோகிபலன் தெளிந்தபின்பு
தேர்வடம் பற்றிநின்ற கதைபோலாகும்
அளிவீடே யாகிவிடும் பிறப்பின்மார்க்கம்
ஆர்கண்டு சொல்வார்கள் யோகிதானே.

### யோகியின் நிலை

296. யோகிதான் ஞானபதம் பெற்றுமேலே
உறவினர்போ லேயிருப்பார் விருந்துண்பார்போல்
யோகிதான் வருங்கால மெடுத்துரைப்பார்
ஊணுறக்க மின்பதுன்ப மொத்திருப்பார்
யோகிதான் ஞானபதம் மேலேயோகம்
உற்றமனம் பட்டதனால் யோகவானாம்
யோகிதான் யோகவான் சித்தஞானி
உறமான ரிஷியிவனும் முனியாவானே.

---

295. வாசியனலின் பலனைப் பெற்றவர்களே உத்தமர்கள். அதுவே பெறுதற்குரிய பயனாகும்.

296. இந்த ஞானபதத்தைத் துய்க்கின்ற யோகியானவன் உறவினர் போலும் விருந்துண்டு. இன்பமாயிருப்பான். வருங்காலம் தெரிந்தவன். ஊண் உறக்கம் எல்லாம் ஒத்திருப்பவன் அவன். இந்த யோகிதான் யோகவான். இவனே சித்தன், ஞானி. இவனே ரிஷி. இவனே முனிவன்.

297. ஆவானே யெப்பதமுங் கிட்டுங்கிட்டும்
ஆகாதோ ஒத்திருந்தாற் பிரமசாய்கை
வேகாதோ காமமது சாம்பலாய்த்தான்
மிஞ்சினது வெளிபோலே ஒளியாகாதா
சாகாதா நம்நினைவு அழிந்தாற்பின்னே
சம்சாரி யாகாதா அருள்ன்வீடு
போகாதா வீட்டருளின் கூட்டுக்குள்ளே
புலியிருந்தால் நரிபோன புடவதாமே.

298. ஏமிந்தப் புடவதனில் சிம்மம்வாரா
ஆகுமோ அருளிருந்தால் மனமும்வாரா
போமிந்தக் கருத்தறிந்தால் யூகம்போகா
பொல்லாங்கு தானிருந்தால் கலகம்போகா
சாமிந்த நோயிருந்தால் மரணம்போகா
தந்திமுகன் தானிருந்தால் யாழிபோகா
நாமிந்தப் பற்றிருந்தால் மனமும்போகா
கணக்கிருந்தால் சங்கற்பங் கணக்கில்லைதானே.

---

297. இந்த நிலையை அடைந்துவிட்டால் பிறகு குறை ஏது? காமம் வெந்து சாம்பலாகும்.

298. இந்தப் புழையினுள்ளே பகைமை புகாது. நற்பயனைத் தவிர எத்தகைய தீதுக்கும் இடமில்லை.

299. இல்லையே சங்கற்பம் கணக்குமில்லை
இத்தனையும் நெஞ்சுப்பள்ளங் கையகலமாகும்
தொல்லையே அப்பள்ளம் மேட்டாகச்
சொன்னவர்கள் கோடியொரு கோடியல்ல
வல்லையே யப்பள்ளம் நிறைவதற்கு
வாலிபப் பெண்களுமோ பொருளேதானோ
கல்லையே மண்மலையும் வாரியோடு
கண்டபள்ளம் நிறைத்தாலும் நிறைந்திடாதே.

300. நிறையுமே திரிகால வர்த்தமானம்
நெஞ்சுநடுப் பள்ளமெல்லாந் திரேகமெங்கும்
உறையுமே யிதையன்றிக் காயசித்தி
ஊரண்டஞ் சுத்திவரு மனவேகந்தான்
பறையுமே யேசிடுவாள் புருஷாவென்று
பார்த்தவர்க்கு யிதுவென்ன லெகுவுதானே
முறையென்றாற் தெய்வபொருள் முத்தியல்ல
முன்சொன்ன பொருளெல்லா முத்தரூபமதே.

---

299. எண்ணுதல், ஈடேறுதல் என்ற நிலைகள் எல்லாம் மாறி எல்லாம் ஒன்றாகும். பள்ளம் மேடாகும்.

300. முக்காலப் பேரறிவும் நிரம்பி நிற்கும். காயசித்தி ஏற்படும். இதுவே முத்தி வடிவமாகும்.

## முத்தி

301. முத்தியென்றால் அகத்தீயு மூலத்தீயும்
முன்னின்ற துர்வாசர் கோபத்தீயும்
சித்தியென்ன யிதுமூன்றும் ஒன்றாய்ச்சேர்த்து
திரிகயிறு திரிகால மீண்டுகாக்கும்
தத்தியென்ற தாகாது தாளமாகா
தம்பட்டை கேட்டுவிடில் ஓடிப்போகும்
கத்தியென்றா லிம்மார்க்கம் செவிடர்போல
காதுக்கு மெட்டாது வெளிபோலாமே.

302. வெளிபோலா மென்றுசொன்னார் வெளியிற்பொங்கும்
மெய்ப்பொருளே காய்க்குமிந்தப் பழத்தைத்தானே
ஒளிபோலே சிருஷ்டிதிதி சம்மாரந்தான்
ஒப்புவிக்கும் வேதமது யேவல்கேட்கும்
வளிபோல நின்றுகொண்டு தாகநீர்போல்
மாமுத்தர் தங்களுக்கு மழைபெயயும்
தெளிநீரே முகிலோடு யென்றாலோடும்
தேவர்களும் வெந்திடுவார் நமதுவாக்கே.

---

301. அகத்தீ - அங்கிநிலை. மூலத்தீ - மூலக்கனல்
மூன்று தீயும் ஒன்றாவது என்ற தத்துவத்தை உள்ளடக்கியதே முத்தீ வளர்த்தல் என்பது. உலகநடையில் அதற்குச் சாதாரணமாக பொருள் வழங்கி வருகிறது.

302. இந்த மரத்திலே காய்ப்பது மெய்ப்பொருளாகிய பழம். வேதம் ஏவல்கேட்டல் என்றால் 96 தத்துவங்களும் அடங்கி வேலைசெய்யும் என்பது பொருள். வளி - காற்று.

303. வாக்கினாற் சொன்னானோ சிருத்தானோதான்
வாய்கொண்டு சொல்லாமல். நகைத்தான்பாரு
நோக்கினாற் போதாதோ பிரமரந்திரம்
நுண்ணறிவோர் தங்களிடம் பிரமரந்திரந்தானே
சாக்கினாற் சொல்வோங்காண் காரணத்தால்
தன்கூடு அழிவதற்கு ஏமனில்லை
போக்கினாற் போவதில்லை பிரமன்செத்தான்
புதுப்பிரமன் நாமானோம் புதிதாய்த்தானே.

## கலியுகம் ருசூக்குமேல் நடக்கும் செய்கை

304. புதிதாய்த்தா னிப்படியே முனியானாக்கால்
புரமூன்று மெரித்தாற்போற் ஸ்திரீகள்சாகும்
மதியேதான் குறைவளரும் புதிதேமேகம்
மானிடரு மப்படியே யினிமேல்நூறே
கெதியேதான் யிரண்டுருண்டு சாய்ந்ததாலே
கிளறுகிறேன் புதுமேகம் கலியுகத்தில்
விதியேதான் அய்யாயிரம் பத்தொட்டொன்று
மேல்நடக்கும் மாசிமுதற் பிறக்கும்பாரே.

---

303. ஆக்குதல் என்ற தொழிலே இந்த யோக சாதனையில் கைவருவதாய் நாம் பிரமன் ஆனோம் என்கிறார். பிரமனுடைய சட்டம் நீங்கிப் புதுச் சட்டம் தோன்றிவிட்டதால் பிரமன் செத்தான் என்றார்.

"அவன்கால் பட்டழிந்தது இங்குஎன் தலைமேல் அயன் கையெழுத்தே" என்று பத்தி உலகில் சொல்லுமாப்போலே, "முன்னைவினையின் முடிச்சை அவிழ்ப்பதும்", "பின்னைவினையைப் பிடித்துப் பிசைவதும்" சேர்ந்து பிரமன் அழிகிறான் என்றவாறு.

305. பிறக்கும்பா ரதுமேலே நாற்பத்தொன்று
பெருஞ்சித்தே மதிவளரும் பெரிதேயாகும்
சிறக்கும்பார் பூரணமா மதிவளர்ந்து
தேய்பிறையு மில்லாமல் முழுவதுமாகும்
உறக்கும்பார் இதுதேய்ந்த காலஞ்சொல்வேன்
ஓகோகோ சூரியனா ருதித்தகாலம்
இறக்கும்பா ரிதுதேய்ந்து வளர்ந்துவட்டம்
இப்படியே அமாவாசி பூரணந்தானே.

306. பூரணமாம் பௌரணையே ஆதிகாலம்
பூவில்வ ருந்தினந்தான் வட்டமாய்த்தான்
காரணமாய் வியாழனென்ற வெள்ளிதானே
கதிர்பெருகி அண்டசுவர்க் கப்பால்நின்றார்
ஈரணமே அவ்விடத்தி லிருந்தசூரியர்
எதிர்ப்பார்வை தாங்காம லிவிடம்வந்தார்
ஆரணமே சொல்லாது பெரியோர்சொல்வார்
ஆச்சரியஞ் சொல்வதெது ஞானசூரியனே.

---

305. காலங்களை எல்லாம் வென்று நிற்கும் இந்த நிலையிலே வளர்பிறையாவது, தேய்பிறையாவது!

306. அண்டாதித்தன் பிண்டாதித்தன் என்று திருமூலர் இயம்புகிற ஆற்றல்களின் வருணனையோடு இந்தப்பாடல் ஒப்பிடத் தக்கது.

## யுக அதிசயம்

307. சூரியனார் தானெதிர்க்க அண்டத்திப்பால்
சூரியனாம் வியாழம்வெள்ளி யிவிடம்வந்தார்
கூரியனா ரிவ்வண்டம் வந்தபோது
குமுறுமொழி சூரியனு மானார்வானில்
வீரியனார் வந்தநாள் சொல்வேன்கேளும்
விபரமிது மெத்தமெத்த மேலோர்கேட்டார்
சீரியனார் தன்வரத்து வருஷமாசம்
செப்புவது யேதென்றாற் சொல்லுவேனே.

308. சொல்லுகிறேன் கேட்டதையு மும்க்குத்தானே
சொல்லுதற்கே நான்கேட்டேன் வாலைசொன்னாள்
புல்லுகிறேன் தன்வந்திரி வசிஷ்டநாதா
புகலுமே முன்சொல்லாப் பின்சொல்லில்லை
கில்லுமே யென்னறுமே கயிலைகண்டார்
கிட்டிருந்து பார்த்திருந்தே னந்தநாளில்
அல்லுமே ராவில்லை சந்திரன்தான்
அடித்துவரும் நிலாவதனிற் பிறந்தநாளே.

---

307 - 308. இந்தப் பாடல்களில் யுகக்கணக்கு என்று கூறப்படுவதன் முழுப்பொருளும் மேலெழுந்த வாறாகப் பார்ப்பவருக்குப் புலனாவதில்லை. ஆனால் ஆராய்ச்சி செய்வதற்குரிய அடிப்படை இதில் இருக்கிறது என்பது தேற்றம்.

அண்மையில் மகாபாரதம், இராமாயணம் ஆகிய இதிகாசங்களின் கதை நிகழ்ந்த காலத்தைப் பற்றிச் சில ஆழமான ஆய்வுகள் நடைபெற்றுச் சில முடிவுகள் வெளியாகியுள்ளன அல்லவா? அவ்வாறே இந்த ஆய்விலும் சில நுட்பமான உண்மைகள் எதிர்காலத்தில் வெளியாகலாம் என்று நினைக்கிறேன். வெறும் சொற்பொருள் இல்லை பாடலின் கருத்து.

309. பிறந்தநாள் சதுர்யுகமே அறுவதேதான்
பேரான சந்திரனும் வட்டமாய்த்தான்
சுரந்தநாள் அமுதுண்டு யாங்கள்வாழ்ந்தோம்
துயரில்லை யக்காலம் பிறப்புமில்லை
இறந்தநாள் யான்காணேன் வானஉச்சி
ஏறியந்த உச்சிதனில் நின்றுபோகும்
மறந்தநாள் நாளில்லை யிதுவுங்கண்டேன்
மாமலைமேல் மதியிருக்க வதுவுங்கண்டேனே.

310. கண்டேனே யின்னமொன்று தினமுங்காலை
கதிரவனும் வெயிலெறியான் ஒளிசெஞ்சோதி
பண்டோனே யீதென்ன பாகமாக
பலவிதமாய்த் தானிருக்கும் விபரஞ்சொல்ல
திண்டோனே மலைபோலே நரையாமூப்பு
சிறுவருக்கு ஆனதுபோல் அவருக்காகும்
உண்டோனே சொல்லிவிடு உளதையெல்லாம்
ஒழியாமற் சொல்லுகிறே னுமக்காய்த்தானே.

---

309. இதுவுமது.

310. காகபுசுண்டர் யுகங்களின் முடிவில் தாம் அழியாமல் காகத்தின் வடிவிலே இருந்து மீண்டும் உலகு தோன்றுவதைக் கண்டு நின்றார் என்று சொல்லப்படுகிறது.

இந்தச் செய்திகளையெல்லாம் வெறும் நெட்டைக் கனவுகள் என்றோ பொருளற்ற கற்பனை என்றோ தள்ளிவிட எனக்கு ஒவ்வவில்லை. வருங்காலத்தில் இவைகுறித்த புதிய ஆய்வுகள் தக்கவரால் நிகழக்கூடும் என்று எண்ணுகிறேன்; எதிர்பார்க்கிறேன்.

311. உமக்காக ஆதிதனிற் கண்டஞாயம்
ஒன்றதுவும் மறவாமல் நினைவாலவர்தம்
தமக்காய்த்தான் வைத்திருக்கேன் யெனக்குவேண்டாம்
சந்ததிகள் கேட்பதென்ன தானேயீயும்
நமக்காய்த்தான் வாலையவள் பிரமரந்திரம்
நாயகனைக் கோறாமற் தனியேநின்றாள்
நிமக்கேதான் நானிருக்கேன் ஊடேகூடு
நெடுநாளோ பீத்தலிது வசைசொற்கூண்டே.

## கோரக்கர் சித்தி

312. கூண்டதனி லென்னைப்போற் பலபேருண்டு
கோரக்கர் யென்போல வெகுநாள் மானி
பாண்டதனில் வருடலுங் கஞ்சாமாய்கை
பதறியவ ருண்டதினாற் சொக்கிப்போனார்
ஈண்டதனி லென்காலஞ் சிலநாள்தன்னில்
எறிமலை மீதினிலே யிருந்துவாழ்ந்தார்
மாண்டதனிற் பின்பொருக்கால் பூமிமண்ணும்
வளமாகி நின்றிடவு மிறங்கிவாழ்ந்தாரே.

---

311. ஞாயம் - நியாயம் என்ற சொல்லின் மரூஉ என்பதோடு காண்பார் காட்சி காணப்படுபொருள் என்பதையும் நினைவூட்டுகிற உத்தியாகும்.

312. இந்த உடம்போடு பலநாள் வாழ்ந்த சித்தர் பலருண்டு. கோரக்கர் இந்த இனத்தைச் சேர்ந்தவர்.

313. வாழ்ந்தார்கள் மண்ணுவரை யாகிப்போன
மனிதரெல்லா மலையேறக் கண்டேன்பார்த்தேன்
தாழ்ந்தாரே மண்ணெல்லாங் கல்லேயாக
தானந்தப் படிசென்றார் மலைமேலேகி
ஆழ்ந்தாரே யிப்படியே மலைமண்மாரி
அடிக்கடியே கடல்பொங்கா மலைமண்பொங்கும்
மீழ்ந்தாரே யிதுகடந்து நெடுநாள்தோறும்
மெய்மண்ணு மிப்படியே மலையுந்தானே.

314. மலைமண்ணு மாறிவிடுங் கடலோர்காலம்
மாறாது நின்றிடுமோ மாறுமாறும்
சிலைமண்ணு மலைவாரி போலத்தானே
தேர்வரத்துச் சந்திரருஞ் சூரியன்றான்
கலையென்ற மூச்சுபிரி வானாற்போல
கண்டகண்டந் தானோடுஞ் சுவரைத்தாண்டி
வலையென்ற பொத்தலெண்ணிக் கண்டாப்போல
மலைமண்ணும் வாரிகண்டம் அண்டம் ஒன்றே.

---

313. மண் கல்லாவதும் கல் மண்ணாவதும் நிலவியல். இந்த உடம்பாகிய மண் கல்லாவது சித்தாந்தம். அறிவியலாகும். இது கட்டுக்கதையில்லை.

314. மண் மாறுவது போலே கடலுக்கும் மாற்றம் உண்டு. சந்திர சூரியர்களும் மாற்றங்களுக்கு உள்ளாவர்.

315. ஒன்றென்று கண்டஅண்ட மிதுதானாகும்
ஊடுருவிப் பார்ப்பதற்குச் சுவரேயுண்டு
குன்றென்ற இருளிருக்குஞ் சுவரேபோல
கோடியல்ல வட்டம்போற் சுழலேஅண்டம்
நன்றென்ற யிருட்சுவராம் தூரங்கேளு
நாம்கண்ட பலபேத மிதற்குட்பாரு
மன்றென்ற ஞாலமதில் ஞாயபேதம்
வசனிக்க யெட்டாது யென்னாலாமோ

## தன்வந்திரி சித்தி

316. ஆமேதா னமாவாசி சூரியர்க்கும்
அரைந்துவிட்டே னிதற்குள்ளே யுற்றுப்பாரு
நாமேதான் கண்டதிந்தப் பலன்தானென்ன
நாயகனை யேபிரிந்த நினைவைப்போல
ஊமேதான் நீர்வினவ யெழுந்தளத்தில்
ஒத்துவரும் வாலைப்பெண் ணுகந்துசொன்னாள்
தாமேதா னாச்சரியம் கொண்டீரய்யா
தன்வந்திரி யித்தனைப்பார்த் தலுத்துச்செத்தாரே.

---

315. மொழியினால் சொல்ல இயலாத மாற்றங்கள் அண்டகோளத்தில் நிகழும். ஊடுருவிப் பார்த்த எம்மனோர்க்கு அவை புலனாம்.

316. தன்வந்திரியின் ஆய்வுகளை இங்கே குறிப்பிடுகிறார். இந்த நுட்பமும் புவியியல் ஆராய்ச்சிக்குரியது.

317. செத்தார்கள் சீவனுயிர் விட்டுமாண்டார்
திருவுடலு மூச்சுஉயிர் பிரிந்ததாலே
வந்தார்கள் நாளிருந்து யோகச்சார்பால்
வாசிவலுச் செய்தவரு மரணங்கண்டேன்
முத்தார்கள் பிஞ்சினிலே கர்ப்பங்கண்டார்
மோகமிட்டா ரானதினால் உடலேகெட்டார்
சித்தார்கள் சீவருடல் பிரிந்ததாலே
இருந்தென்ன போயென்ன யிவர்கள்தானே.

318. இவர்களுட ஞாயமது அனேகங்கண்டேன்
யெப்போது மெத்துணையு மில்லாரானார்
அவர்களுட பாசம்நினைந் துருகியானே
அன்றுமுத லின்றளவும் நைந்ததுன்பம்
எவர்களுடன் சொல்வமென்று யிருந்தேன்யானும்
என்பிறவி யெங்கிருந்தா யிங்குவந்தாய்
உவருடலைப் போட்டிடுமுன் உன்னைக்கண்ட
உவகையெனுஞ் சந்தோஷம் யார்க்குரைப்பேனே.

---

317. எத்தனை காய வலிமைக்கு நடுவிலும் ஆசையும் கருக்கொள்ளலும் சேர்ந்து முடிவுக்கு வித்தாகி விட்டன.

318. அத்தகையவர்களின் பிணைப்பு பற்றி எவ்வாறு எடுத்துச் சொல்வேன். இந்த உப்புப் பாண்டமான உடம்பைப் போடுவதற்கு முன்பு உன்னிடம் இவற்றையெல்லாம் வெளியிடுவதில் இன்பம் காண்கிறேன்.

319. ஆர்க்குரைப்பேன் சூரியனார் அண்டந்தானே
அத்தனையென் றெண்ணவுமென் கணக்கிடாதே
பார்க்குரைப்பேன் நீரறிவீர் புலப்படாதே
பரிதேசி வாசிமூச் சாடல்கண்டார்
தார்க்குரைப்பா ரிதுபெரிதோ வயதோகொஞ்சம்
தாண்டரிது உடல்கெவுனம் யார்க்குந்தொல்லை
சேர்க்கரிது உயிருடலம் பின்னலிட்டு
சித்திரம்போ லாக்கிவிட்டார் போகர்தானே.

## போகர் சித்தி

320. போகரிஷி பெற்றசித்தி யென்னசொல்வேன்
போர்புரிவார் ஆகாச கெவுனந்தன்னில்
ஏகநாதன் வெட்டவெளி தனில்நடப்பார்
எல்லார்க்கு மாகாது கெவுனசாய்கை
மேகநா தன்கெவுன சித்திபெற்றார்
மொய்குழலாள் சித்திபெற்றார் வாங்கப்பெற்றார்
காகநாத னுந்தனுக்குக் கெவுனமார்க்கம்
காலடக்க மில்லாதோ லேசாகாதோ.

---

319. போகர் ஒருவரே இந்த உடலும் உயிரும் இணைத்துச் சித்திரமாக்கினார். எனவே சூரியனார் அண்டமும் பல என்று கண்டார்கள். அதாவது பல சூரியர்கள்.

320. கெவுனம் - கமனம் என்னும் சித்தி. அதாவது வானிலே பறந்து செல்லும் ஆற்றல்.

போகர் ஆகாச கமனத்தில் போர்புரிவார். ஏகநாதர் வெட்டவெளியிலே நடந்துசெல்வார். மேகநாதனும் கமனசித்தி பெற்றவரே.

321. லேசாகா நான்பெருத்தே னுடல்கனத்தேன்
நேராகத் தூரதிஷ்டி பாய்ந்தாற்போல
தூசாக நானிருந்தேன் நான்சொல்தூரம்
துகையுண்டு கணக்கில்லை போகருக்கே
நாசாகக் கண்டுவிட்டார் சுவரைத் தாண்டி
நான்செல்வே னப்படியே தான்செல்லொண்ணா
ஆசாகச் செய்தாரே சம்பிரதாயம்
அவர்பிள்ளை யப்படியே முக்கால்தானே.

322. முக்காலந் தாண்டாமற் பெண்ணாற்சிக்கி
மோகமுனி போகர்குலம் மண்ணாய்ப்போனார்
எக்கால மப்படியே முனியாஞ்சித்தி
யெவராலு மாகாது பெண்ணில்மாளும்
அக்கால மானாலும் பெண்ணால்விட்டார்
ஆகெனவும் போனாலும் பெண்ணைத்தொட்டார்
இக்காலம் பெண்ணைவிடார் கெவுனம்வாயா
எச்சித்தி வாய்த்தாலும் கெவுனம்வாய்க்காதே.

---

321. உடம்பு நொய்ம்மையாகும் சித்தி பெற்றுத் தொலைதூரம் காணும் ஆற்றல் வருவதைப் பாடுகிறார்.

322. எல்லாச் சித்தி நிலைகளிலும் பெண்ணாற் சிக்குண்டு முடிவு வந்துவிடுகிறது. எந்தச் சித்தி கிட்டினாலும் கமனசித்தி வாய்ப்பது அரிதாகும்.

323. வாய்க்காது பெண்ணினத்தாற் சித்திதானே
வாய்க்குமோ பெண்ணினத்தாற் முத்திதானும்
ஏய்க்குமே பெண்களுட் மூலஸ்தானம்
எவர்வெறுத்தார் நீர்வெறுத்தீர் நான்வெறுக்கேன்
தாய்க்குமே பிள்ளையென்றாற் கசப்பேயாகும்
தாபந்தம் வேண்டாங்காண் சும்மாநில்லும்
நாய்க்குமே வெள்ளெலும்பு ருசியானாற்போல்
நாயகியாள் தன்சுகமும் ரத்தம்வடிந்தாலே.

324. ரத்தநீர் கண்ணாலே வடியச்செய்யும்
நாரியரின் சந்தோஷம் ரத்தக்கண்ணீர்
அத்தநீர் ஒட்டுகின்ற தன்மைபோல
அம்மனது மிம்மனதும் நாயகாரே
செத்துநீ றாகுமட்டும் பெண்ணின்சோம்பல்
தேறுதலே விபகாரம் சிறிதேமுத்தி
சுத்தநீ ரானாக்கால் வாலைசாகும்
கதவடைத்து வெளியில்விடாள் அவள்போதாதே.

---

323. நாய்க்கு வெள்ளெலும்பில் இச்சை ஏற்படுவதுபோலேதான் நாயகியாள் சுகம்!

234. இதுவுமது.
நாரியரின் உவகை இரத்தக் கண்ணீர் என்றார்.

325. போதாது யிவளைவிட்டு அவளைச்சேர்வார்
புழுக்கூடு விபகாரம் நீசபாஷை
வாதாது கொடுப்பதற்கு ஒன்றுவேணும்
மனமாள ஓர்வகையு மெட்டுதில்லை
வேதாது கலைவாணி விடாளேவிட்டால்
விதியிலையோ தலைவிதியோ வேறோயாதோ
நாதாது யென்னசெய்யுந் துணையில்லாட்டால்
நாடிநரம் பாடாது வாக்கில்லாதே.

326. இல்லாதே யானபடி அருந்ததிக்கே
யேற்றீரே குற்றமில்லை யினிமேல்ஞாயம்
சொல்லாதே யானிருக்கேன் குலத்துக்கெல்லாம்
சுக்கிலத்தை வெல்லுவதே யெனக்குயிச்சை
கல்லாதே யேன்படித்தேன் விதியேசார்பா
கட்டைமண்ணாய்ப் போமளவும் என்னைவேண்டேன்
நில்லாதே யான்விரும்பில் மனதைக்கண்டு
நீள்விசும்பிற் கேத்திடுவேன் சாவேண்டேனே.

---

325. இவள் அவள் என்று குறிப்பிட்டது வாலையையும் பெண்துணையையும்.

326. சாவினை வேண்டாத நிலையில் உலக இச்சைகளை வென்றேன். சுக்கிலத்தை வெல்லவேண்டும் என்பதே என் ஆன்ம இச்சை.

327. வேண்டேனே மரணமொடு பெண்ணைநத்தும்
மேனியந்த மனரூபங் கருத்தாற்றொட்டு
தூண்டேனே யெக்காலம் வசதியாக
சுகித்திருப்பே னிக்காலம் வாழ்நாள்மட்டும்
மாண்டேனே யென்னினைவிற் றூக்கம்போல
மரணத்தை யார்கடப்பார் பெண்ணுமாளும்
வீண்டேனை நத்துவது துன்பத்திற்கு
விரும்பாமல் வந்திடுமே துன்பந்தானே.

328. துன்பந்தான் வேண்டுமென்றாற் பெண்ணால்வேணும்
துணைவேணு மென்றாலோ பெண்ணாகாது
இன்பந்தா னென்றாலோ பிறவியுண்டு
யிறைத்தூறு மணற்கேணி யேற்றம்போல
அன்பந்தான் சொற்கேளான் நாமுங்கேளோம்
அனைவருமா நம்மவரில் நீருமாமா
நன்பந்தான் நீரிருக்கப் புசிப்பையெண்ணி
நாடினோங் காசிபரும் நாமுந்தானே.

---

327. மரணத்தை விரும்பவில்லை. பெண்ணை நத்தி மரணத்தைச் சேரும் அந்த நிலையையும் வேண்டேன். ஆனால் தூக்கம் வருவதுபோல மரணம் வந்து விடுகிறது. அதை யார் கடப்பார்? விரும்பாமலே வந்துவிடுகிறது துன்பம்!

328. துன்பம் வேண்டுமென்றால் பெண்ணால் வேண்டும் என்பதன் கருத்து பெண்ணினத்தை வெறுப்பதாகாது. இந்த உடம்பிற்கு மரணத்தை வெல்லவேண்டும் என்றால் இந்திரிய இச்சையை வெல்லவேண்டும் என்பதே மெய்யாகும்.

## காசிபர் வசிஷ்டர் சித்தி

329. நானுந்தான் காசிபரும் வசிஷ்டயோகி
நற்பிரம பதம்பெற்றோம் நன்குணர்ந்தோம்
வேணுங்கான் நீங்கள்செய்த தவத்தினாலே
விதிவிலக்கை யேதுறந்தீர் யிருவருந்தான்
பூணுங்கான் ரோமரிஷி பதத்தைச்சொல்லும்
புகலுவேன் ஆராலு முடியாதப்பா
வாணுங்காண் யென்னாலே சொல்லலாகா
வல்லபமே வாய்வார்த்தை வித்தைதானே.

## ரோமரிஷி நூல் மகிமை

330. வித்தைதா னவர்சொற்போல் சாஸ்திரங்கள்
விரித்துரைக்கச் சூச்சமதாய் மெய்யேவாயாய்
முத்தேதான் வாய்திறந்தா லொளியைப்போல
முனியோகி சொல்லிவைத்தா விஸ்தாரங்கள்
சித்தேதா னவர்சொல்லு யினியேதானும்
தேவரோடு மனிதர்களும் விள்ளார்விள்ளார்
எத்தேதான் போலிருக்கும் ரோமர்வாக்கு
ஏதென்று சொல்வதய்யா அவ்வர்வாக்குக்கே.

---

329. பிரம பதம் அடைந்தவர்கள் காகபுசுண்டரோடு காசிபரும் வசிட்டரும். ரோமரிஷி பதம் வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டது.

330. முத்து வாய் திறந்து பேசினால் எப்படியிருக்கும்! முத்து முத்தாக ஒளிவீசும் அப்படி வருகிறது ரோமரிஷி வாக்கியம்!

331. அவர்வாக்குச் சொல்லெல்லாஞ் சுலபமாகும்
அணிமாதி சொல்லாமல் மறைத்துவைத்தார்
இவர்வாக்குக் கற்பவகை நூறிற்சொன்னார்
யிதன்பின்னே அன்பதனிற் குறுக்கிச்சொன்னார்
உவர்வாக்கு வேண்டாமே யவர்வாக்குக்கு
உற்பனங்கள் மெத்தவுண்டு பாஷைநான்று
கவர்வாக்கு அல்லல்ல யோகிவாக்கு
கண்மூக்கு மத்திநடு வெளியாய்ச்சொன்னாரே.

332. சொன்னாரே சித்தரெல்லா மெதிர்த்தார்வந்து
சொற்பிழைகள் காணாமல் விழித்தார்பின்னே
பின்னாலே பிழைசொல்வார் நம்மைப்போலொற்றார்
பேசரிது சாஸ்திரத்தைப் போற்றினேன்யான்
கண்ணாலே பார்த்தவர்கள் விழலேயாகார்
கண்டுகொள்வார் சூட்சத்திற் சூட்சமாகப்
பின்னாரே சங்கற்பம் பூணார்காணார்
பேச்சறிந்து பேசுவரே ரோமரால்.

---

331. அவருடைய சொல்நடை எளிதாகும். ஆனால் வாக்கு யோகிவாக்கு.

332. சித்தர்கள் எதிர்த்தார்கள். ஆனால் சொற்பிழைகள் காணோம். விழித்தார்கள். உண்மையில் அந்த வாக்கை அனுபவித்துப் பார்த்தவர்களே உணர்வார்கள்.

333. ரோமராற் சொன்னதுவுஞ் சம்பிரதாயம்
நுனிநாக்கை மடிக்காம லறுக்காமற்றான்
பாமரர்கள் மடித்திருவா ரறுப்பாரென்று
பல்லுதட்டை மூடாம லுயரிரைநோக்க
காமரர்கள் பார்ப்பதற்கும் லேசதாக
காட்டினார் வேடிக்கை சிரிப்பதாக
ஊமராள் சிரிப்பதுவுங் காண்பதேபோல்
ஊமைகண்ட கனாப்போலு மற்றோர்சொன்னாரே.

334. சொன்னார்கள் மற்றவரும் பின்னலாகத்
தொன்றுதொட்டுச் சொல்லாமல் விரிவாய்ச்சொன்னார்
கன்னார்க ளுடற்பகுதி முழுதுங்கண்டார்
காயசித்தி கெவுனம்வரை முத்திமட்டும்
உன்னார்கள் சொற்பிழையே குறைவேயாகும்
உருண்டவர்கள் சொன்னாக்கால் மரணசாஸ்திரம்
அன்னார்கள் சொன்னதுபோல் ரோமர்சொல்லார்
ஆதிகண்ட காசிபர்போல் யாருஞ்சொல்லாரே.

---

333. நுனி நாக்கை மடிக்காமல் அறுக்காமல் பயிலுகிற சம்பிரதாயம் ரோமரிஷியினுடையது என்பதைக் கூறியவாறு.

334. மற்றவர்கள் போலில்லை ரோமர்சொல்! அது ஒப்பற்றது. அவ்வாறே காசிபர் போல வேறு யாரும் சில முறைகளைச் சொன்னதில்லை.

## காசிபர் ரோமர் வசிஷ்டர் தன்மை

335. காசிபரும் ரோமருமே வசிஷ்டர்நீரே
கரையேறிப் போய்வந்து மீண்டோர்நீரே
வாசிபதி தேசிமூச்சு கூச்சுஆன்மா
மனஞ்சீவ னறிவோடு தெளிவுயூகம்
பேசிவரிக் கருத்ததனை முழுதுங்கண்டோர்
பெரியோர்கள் சொல்லுவரே முழுதுமுத்தி
தேசிபரி பூரணமே குறையக்கண்டோர்
தேடுவரோ சொல்லெல்லாந் தேறாச்சொல்லே.

336. தேறாம லிவ்வகையே முழுதுந்தானே
தேர்வடம்போல் நீட்டிவிட்டார் சாஸ்திரங்கள்
ஆறாத மனச்சாந்தி யில்லாதவர்கள்
ஆகாய சந்திரனின் குறைகாணாதார்
கோறாத சந்திரனைக் குறைதீராமல்
குருகுலமோ மதிகுலமோ குலமோசந்திரன்
ஏறாம லிறங்கினதே யிதனைத்தீரார்
யென்னசொன்னார் சாஸ்திரங்கள் யென்னயோகமதே

---

335. காசிபர், ரோமர், வசிஷ்டர் இந்த மூவரின் சிறப்பு பேசப்படுகிறது.

336. மற்றவர்கள் நூல் எல்லாம் தேர்வடம் போல் நீண்டு முறுக்கிய சரடாம்.

## விஸ்வாமித்திரர் முதலியோர் தன்மை

337. யோகமதாற் சொன்னாரே விசுவாமித்திரர்
ஒடுவெள்ளி பிச்செறிந்தார் நட்சேத்திரத்தை
மோகமாய்ச் சொன்னாரே மாண்டவ்யர்
மொய்குழலாள் சொன்னாளே நளாகினிக்கே
வேகமாய்ச் செல்லானே தடையாய்நின்றான்
வேதவுரை கேட்பவனே சூரியன்றான்
பாகமாய்ச் சொன்னானே தவத்தினாலே
பாரிந்த மதிவளர சாபம்போக்கே.

338. சாபம்போய் வளர்மதியே யென்றுதானே
தான்கொடுக்க மாட்டாத முத்தர்தானும்
கூபம்பா லுள்ளிருக்கும் ஆமைபோல்
குறைவயிறாற் கத்துகின்ற தவளைபோலும்
தீபம்பால் விழுகின்ற காமப்பூச்சி
தெருவழியே நடக்குமவர் குலுக்குமாபோல்
தூபம்போற் சொன்னாரே சோடசங்கள்
தொன்றுதொட்டுச் சொன்னவர்க ளிருக்கத்தானே.

---

337. விசுவாமித்திரரின் யோகத்தை மெச்சுகிறார். இதுவும் புதைபொருளாய்க் காணப்படுகிறது.

338. கிணற்றுக்குள்ளே கிடக்கும் ஆமையைப் போல் வழங்கமுடியாத நிலையில் இருந்தவர் பலர். பசியினால் கத்துகிற தவளைபோலே விளக்கில் விழும் விட்டில்போல இருப்பவரே பலராவர்.

339. இருக்கவே பயமின்றி அச்சமின்றி
எப்போதும் நாணமில்லா தியாக்கைமோனன்
குறுக்கவே சொல்லிவைத்தால் தீனிர்காணா
குருயோகி சிருஷ்டிதிதி சித்தியாதோர்
பெருக்கலே சம்மாரஞ் சாபங்கோபம்
பெருத்திட்டாற் காபம்வரும் மறைவென்றார்கள்
நருக்கலே கற்றாரே ஒட்டக்கற்றார்
நவின்றாலே பலனெதுவோ திஷ்டிதானே.

340. திஷ்டிதான் சிந்திக்க வளருஞ்சந்திரன்
தேய்பிறையே யாகாமற் பூரணந்தான்
திஷ்டிதான் காசிபரும் விசுவாமித்திரன்
சிவந்தகலை நளாகினியும் நீரும்நாமும்
திஷ்டிதான் மதிவளரக் கலைதேயாமல்
செழுமதியாய் உருமதியாய்ச் செங்கண்ணாலே
திஷ்டிதா னிதுசொல்ல நாமுங்கூடி
தீண்டிகரு நீங்கிடவே செப்பினேனே.

---

339 - 340. இந்த உண்மைகளை எடுத்துச்சொல்லி உலக நன்மை கருதி இவை வழங்கவேண்டும் என்ற குறிக்கோளினால் அவர்கள் சொன்னார்கள். நானும்சொன்னேன். பொறாமையும் கண்ணேறும் நிரம்பிய இந்த உலகில் இதுசொல்லித் தீமைகள் நீங்க எண்ணினோம்.

341. செப்பினார் வசிஷ்டரோடு புசுண்டர்தானே
திரிலோகந் தேடியவர் சும்மைக்கண்டு
வைப்பினரே கயிலாச புசுண்டநாதர்
வாய்கொண்டு சொன்னாரே வழ்வைத்தானே
ஒப்பினரே அப்படியே தொடர்ந்துவந்தார்
ஓகோகோ யிங்குவந்தீர் கிழவன்கூட்டில்
மெய்ப்பினரே கடைசியுகம் அறுபதேதான்
மேல்வினையுங் கலியுகமே அதிலேதானே.

## கலியுகத்தில் சந்திரசாபக் கணக்கு

342. கலியுகமோ முன்பாகம் அய்யாயிரத்தே
கலியோடு பதினெட்டும் அதனிற்சேரும்
வலியதிலே அய்யாயிரப் பதினெட்டின்மேல்
வளர்பிறையுந் தேறுமடா நாற்பத்தொன்றில்
மெலிவெய்துஞ் சந்திரருந் தேறுவாரே
மேலய்யா யிரத்தெட்டு அன்பத்தொன்று
பொலிவெய்தும் அய்யாயிரத் தன்பதின்மேல்
பூரணமே ஒன்பதுடன் பூரணமாமே.

---

341. யுக இரகசியங்கள் கூறியவாறு. இந்தப் பேருண்மைகள் சொல்லப்பட்டன. இந்த மொழி கடைசி யுகமான கலியுகத்துக்கே.

342. இந்தக் கணக்கும் மேலாராய்ச்சிக்கு உரியதே.

343. பூரணந்தான் தினந்தினமும் பூரணந்தான்
பொய்யடா அமாவாசி பொய்யாய்ப்போகும்
பூரணந்தான் குறைந்ததினா லமாவாசி
பூர்ணமதி யானாக்கால் அமாவாசையேது
தோரணம்போற் தொங்கிடுமோ நிலைநிற்காதே
தொன்றுதொட்டு வந்ததல்ல குறைந்ததாலே
காரணமே ஓர்முனிவன் சாபமாகும்
கங்குலதை நீக்கிடுமே மதிவந்தாலே.

344. மதிவந்தா லிருள்நீங்கும் பிரபையாலே
மாமாயை யிருளழியும் ராவேயில்லை
கதிர்வந்தாப் பகலுண்டு மதிவந்தாக்கால்
காரிருளும் நீங்கிவிடும் பகல்ராவில்லை
விதிவந்தா லேயொழியும் விதிதானுண்டு
மேகமுதல் யாவுக்குங் கதிர்மதிக்கும்
துதியென்ன யிதுமுறையே வெகுநாளல்லோ
சொர்க்கமுதல் யாவற்று மாளுந்தானே.

---

343. பூரணநிலவென்றும் தேய்பிறை அற்ற நிலை என்றும் சொல்லும் சந்திரனை என்க.

344. இரவு பகல் அற்ற நிலையே யோக ஒடுக்கம். இதில் சந்தரனுக்குத் தேய்வு இல்லை. இருளற்ற இந்த நிலையிலே இரவுபகல் என்ற வேறுபாடு ஏது?

345. மாறுவது காலனொடு காலம்பாரும்
மறைநான்கு ஐந்தாறு ஏழெட்டாகும்
நீறுமது மாறிவிடும் ஓர்காலத்தே
நீண்டமறை செறிந்தஉடன் செறிவோர்காலம்
தூருவது காய்வெடிக்கு மரமோர்காலம்
சொல்பாஷை யென்னாளும் ஒன்றாங்காலம்
மேருவது சிறிதாகும் பள்ளமாகும்
மேன்மையோர் தாழ்வதில்லை ஆத்மங்கண்டோரே.

## ஆத்மங்கண்டோர் பெருமை

346. கண்டோர்கள் மெத்தவுண்டு யெமைப்போலொற்றோர்
கல்லறையில் நுழையவில்லை மனிதர்போலே
விண்டவர்கள் காண்பரிது மேன்மையோரை
மேலோனோர் கண்டுகொளல் அரிதுஅம்மா
மொண்டவர்கள் தன்னோடு கூடியாடி
முறையாமற் கிட்டிருந்து உறவுநாடி
பண்டவர்கள் கண்டுகொள்ள முறையிதாகும்
பழகினவர் போலிருப்பார் அறியார்தானே.

---

345. இதில் கூறப்பட்டுள்ள நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு என்பதெல்லாம் பரிபாஷைச் சொற்கள்.

346. ஆன்ம தரிசனம் பெற்றவர் மெத்தவுண்டு. ஆனால் காணாதவரும் கண்டவர்போல் காட்சி தருவார்கள்.

347. அறியாதான் போலிருப்பா ரறிந்தோருள்ளில்
அறிந்தவர்க ளுடன்கூடில் தெரிவார்தானே
முறிந்தோர்கள் தனைமறந்து தன்னைவிட்டு
முழுமோசத் தால்மறந்து தனைக்காணாதார்
விரிந்தோர்கள் திரிகால மதனைக்கொண்டு
மெய்யுலகி லேயிருந்தார் நினைவையிட்டு
திரிந்தோர்கள் தன்காரிய மறதியாகும்
திரிகாலம் புதுமனிதன் தேவரூபே.

348. தேவரூபி தேவரோடு கூடார்நாடார்
சேர்ந்திருவ ருங்கலந்தார் மனிதர்போல
ஊவரூபி காலனொடு காலமார்க்கம்
ஊடுருவிப் பேசுவரே உளதையெல்லாம்
ஆவரூபி வார்த்தையென்ன யுகங்கள்பேதம்
அண்டகண்டங் கடந்தப்பால் சுவரைத்தாண்டி
ஏவரூபி யிருக்குமந்த வெளியொளியாம்
இயற்கையென்ன வென்றுஅவர் பேசுவாரே.

---

347. திரிகாலம் உணர்ந்தவன் தேவ வடிவினன் ஆகும். அறிந்தவர்கள் அறியாதவர்கள் போலே காட்சி தருவர்.

348. தேவ உருவிகள் தேவர்களோடு சேர மாட்டார். இருவரும் மனித சமுதாயத்திலே கலந்திருப்பர். அவர்கள் இருக்கும் மன உலகம் வெளியொளியாம்.

349. பேசுவார் திரிகாலந் தூரதிஷ்டி
பேச்சறிதல் அண்டசெவி கண்டேகூடும்
வீசும்பார் திரிகாலந் தூரதிஷ்டி
விரதங்க ளில்லாத பெரியோர்காணார்
மாசுபார் கண்ணாலுங் காதினாலும்
மனதாலுங் காண்பரிது பெரியோர்செய்கை
தூசுவார் களத்தடியிற் சாவிபோல
தூர்க்குருவி மாந்தருமே சாவிதானே.

350. சாவிதான் போகாமல் விளைவேயோகி
தன்கதிரைத் தானடிக்கும் பொலிதூத்தாமல்
ஆவிதான் பொலியெனவுந் தூத்திடாமல்
அரகர நாராயணா வென்றிடாமல்
கூவியே அளவில்லாமல் உள்ளேதள்ளி
குமரிகாணாக் கைமுதலை வைப்பார்உச்சி
தாவியே ஏறாதே மலையினுச்சி
சமுசாரி போலிருந்தார் முத்திதானே.

---

349. அவர்களுடைய செவி உலகச்செவி; அண்ட செவி. கண்ணால் காண்பரிய காட்சி காண்பர். அவர்களுடைய செயல்கள் நமது அளவுக்கு அப்பாற்பட்டவை.

350. தோற்றத்தில் அவர்களைக் கணிப்பதற்கில்லை. தனது உழவில் தானே பயிர்செய்து தானே விளைவுகளைத் தூய்மைப்படுத்துவர். இதுதான் மெய்யான ஆன்ம உழவாகும்.

351. முத்தர்தான் வெகுவிதமே யோகிபோலும்
முனிபோலும் ராசரிஷி தொழிலைப்போலும்
வித்தர்தான் மேலவரே தொழிலனேகம்
வேடிக்கை வாய்வார்த்தை சித்திதானே
சுத்தர்கள் செய்தொழிலோ முறையோகோடி
துயர்செய்யா வெகுலெகுவே சொல்லலாகும்
அத்தர்போ லேயிருக்கும் வல்லபங்கள்
ஆருக்குந் தெரியாது சொல்லுஞ் சாஸ்திரமே.

352. சொல்லுமோ வல்லபங்க ளனுபவத்தை
தூண்டிவிக்கக் குருகொடுக்க வாங்கிநில்லு
நில்லுமே யென்றுசொன்னால் நிற்பார்யாரோ
நீயென்னை விட்டுவிடு மென்பாரோதான்
சொல்லுமே யென்றுநம்மைக் கேட்பாரோதான்
குமரிகையை வாங்கிவிடு மென்றிட்டாலோ
சல்லுமோ யென்றதட்ட வருமோபாரீர்
தாபந்த மில்லாத சினேகத்தாலே.

---

351. முத்தர்கள் எப்படி இருப்பார்கள் என்பதைப் பாடுகிறார் எந்தத் தொழிலும் செய்வார்கள். தூய்மையானவர்கள். யோகி போலும் முனிபோலும் ராஜரிஷிபோலும் பலவிதத்திலும் காட்சி தருவார்கள்.

352. குருவினுடைய தொடர்பும் அவர் சொற்படி நடத்தலுமாகிய ஆன்மத் தொடர்பின் வல்லமையை அழுத்தமாகக் கூறுகிறார்.

353. ஆலோஅல் லோவல்லோ துஷ்டரைக்கண்
டடங்கினார் பெருமையுள்ளோ ராதலாலே
காலையன்றித் தலைகீழாய் நடப்பாராரோ
காரிருளை நீக்குவரோ வென்பார்துஷ்டர்
வாலோ தலையோகாணா மாந்தர்தானும்
வசனித்தார்க் கென்சொலுவீர் வாழைவித்தை
போலேயல் லோயிருந்தீர் ரூபங்கொண்டும்
போயிருந்த பொய்க்கூடு மெய்யென்றீரே.

## எமன் கோழை

354. மெய்யென்று நாமறிந்தால் பொய்காணாது
வெறுஞ்சொல்லோ உவர்நெல்லோ மேனிபாரீர்
தையென்ற மாதம்பனி யெங்கேபாரீர்
தாரித்திரம் தாவியல்லோ பெண்ணெனன்பீரே
அய்யமென்ற கோழைதனை யெச்சிலென்றீர்
அதுவிபரங் காணீரோ எயமன்கோழை
மெய்யென்ற கூட்டினுள்ளே விளைந்தயேமன்
மெய்க்குள்ளே தொண்டைநெஞ்சி விருந்தகட்டே.

---

353. தீயவர்கள் எகத்தாளமாக எப்படியெல்லாம் கேட்பார்கள் என்பதைப் பாடுகிறது இச்செய்யுள்.

354. மெய்யென்ற உறுதியொடு இந்த வாசி பயிலவேண்டும்.. பயின்றால் பொய் காண மாட்டோம். மெய் என்ற இந்த உடம்பினுள்ளே விளைகின்ற மரணம் இவ்வுடம்பின் தொண்டையிலும் நெஞ்சிலும் என்பதை அறிவோம்.

355. கட்டுதனை நீக்கிவிட்டார் யெமனைப்போற்றார்
காசினியி லிதுவென்ன உடன்பிறந்தான்
குட்டுதனைக் காணாமல் யோகமென்றார்
கோரக்கர் மூலிகொண்டோர் செருமினாப்போல்
விட்டுயிரை மட்டாக்கி அடைப்பார்துண்டாய்
மெய்விலகுத் தானிருந்தீர் உடலைப்போற்றீர்
கிட்டதனைப் பாய்ந்துவிடுங் கோழைநீரே
தெருவாழை யீன்றபழம் வித்தைபோல.

356. வித்தைபோ லோடித்து விபசாரத்தை
மெய்வீடு மப்படியில் விபகாரத்தை
தத்தைபோ லேநடித்தீர் தத்தைகிள்ளை
தான்பேசும் வார்த்தையைப்போல் படித்தாசொன்னீர்
இத்தையே முன்படித்தீர் கண்டீர்கேட்டீர்
இதுமேலே புதுப்படிப்பே யென்படிப்பு
அத்தையே தூரிருந்தாள் தமக்கைதாயார்
அவர்போலே எல்லாரு மெங்கிருந்தார்.

---

355. இந்த இடங்களைத் தெரிந்து உடம்பைப் பேணுகிற முறை யமனாக வருகிற கோழை நீரைக் கட்டுப்படுத்துவீராக.

356. கிளிப்பிள்ளை போலச் சொன்னதைச் சொல்லிக்கொண்டே இருக்கிறீர்கள். இந்தப் படிப்பு, நான் சொல்லுவது, முற்றும் புதிய படிப்பாகும்.

357. எங்கிருந்தா ரவர்களுமே தூரிருக்க
எவர்மக்கள் கிட்டிருந்தா ரெண்ணிப்பாரீர்
அங்கிருந்தா ரிங்குவந்தார் இங்கார்போனார்
அடுப்படியி னாலல்லோ வேறேயானீர்
தங்கியிருந்தா லிங்கிருந்தா யெமதுசுற்றம்
தாரித்திரம் போற்கழல்வார் தாலியாலே
மங்குவார் கூடியுண்டு அடுப்புச்சாம்பல்
மரணத்துக் கோசாம்பல் மறலியன்பே.

358. மறலியன் ட்ள்ளவரே வாரும்வாரும்
மனதறிவிற் சத்துருவே வாரும்வாரும்
உரலிநடு உலக்கை மத்தி யுள்ளபேரே
உளம்பினவன் சொல்லறியா வுவமையோரே
விரலிநடு ரேகையது விருந்தாப்போலே
மெய்யுள்ளே கோழையது யறியாமாந்தர்
சரலியே யானவரே மலையேகல்லே
தானாகி உடைகல்லாய்ச் சரளியானீர்.

---

357. மறலியை வெல்லும் சிந்தனையின்றிச் சுற்றமுடன் உண்டுறங்குவதிலேயே கழிப்பது அறிவீனம்.

358. நமனிடத்தில் பிணைப்புள்ளவர்களே, வாரீர்! உரலின் நடுவில் உலக்கைக்குள்ளே சிக்கியுள்ளீர்கள். விரலின் நடுவில் ரேகை இருப்பதுபோல உடம்புக்குள் கோழை இருக்கிறது. அந்தச் சிந்தனை இல்லாதவர் நீங்கள்!

359. ஆனீரே நம்முயிருந் தானிருக்க
ஆக்கைதனை யேபிலக்க ஒத்திருந்தீர்
போனீரே நம்குலங்கள் நூறுக்குள்ளே
போனதினால் யானழுதேன் புரையோன்போல
நானீரே யெல்லாருஞ் சமமாய்த்தானே
நாடிருக்க லாகாதா யென்னசெய்வேன்
ஊனீரே உங்களின்மேற் குற்றமில்லை
உதயத்தில் நான்பிறந்த வாய்த்தோசத்தே.

360. தோசமென்ன வென்றாலோ நிலமாம்பூமி
தொக்குசடம் பெண்மானம் பூமிதன்னில்
வாசமென்ன தந்தையவ னுழுதகோசம்
மலடியே யாகாமல் வளைகாவாமல்
நாசமெனப் போகாம லந்தப்பூமி
நரையயிலே யாகாமல் விளைவேமுத்தி
சீஷனென்ன பிள்ளையென்ன மூலபூமி
சிறிதல்ல வெள்ளாண்மைக் களத்தில்வந்தே.

---

359. இப்படி நீங்கள் இருப்பது உங்கள் தப்பில்லை, பாவம்! யாகத்தையே வலுப்படுத்தும் சிந்தனையற்றுப் போனீர்கள்! அதற்காக நான் அழுதேன்! இது நான் பிறந்த வேளையின் குற்றம்! உங்களைச் சொல்லிக் குற்றமில்லை.

360. தவறு என்ன? தந்தை தாயாகிய நிலத்தில் வித்திட்ட குற்றம் அது! மற்றபடி உங்கள் குற்றமில்லை.

361. வந்தோம்நா மைந்துக்குள் பட்டபாடு
மலடிபிள்ளை பேராக மறந்துநாமம்
தந்தோம்நாம் பின்வளர்ந்து றேறிமீறி
தான்செய்த வெள்ளாண்மை யதுபோற்தானே
பிறந்தோம்நா மென்றுசொல்லி முந்தித்தானே
பேர்பட்ட தப்புமென்று விரைவிரைத்தோம்
அந்தோவந் தோர்முன்னே அஞ்சிநாமம்
ஆதரிக்க யெண்ணினாற்போற் கொஞ்சினோமே.

362. கெஞ்சினோ மனையாட்கு மக்களுக்கும்
கிருகிருக்க வேயலைந்து பாடுபட்டு
கஞ்சிகூழ் நாமுண்டு வளர்க்கயெண்ணி
கவலையது விட்டொழியச் சாங்காலந்தான்
மிஞ்சினோ மென்றாக்கால் தஞ்சொட்டாது
மேனியது வேவேலை காணிநானே
பஞ்சுநோய் தீப்படவே மேருபஞ்சில்
பருப்பளவு நெருப்பிட்ட கதைபோலாமே.

---

361. சரி போகட்டும்; நாம் வந்தோம். ஆதரிக்க எண்ணி அணுகினோம்.

?63. மனைமக்களுக்காகப் பாடுபட்டு இறுதியில் மரணத்தின் கையிலே கொடுக்கவா இத்தனை பாடும்!

## இந்நூலின் பெயர்

363. ஆமிந்த வேற்றரசன் வந்தாற்போலும்
அவ்வரசன் குடியோடிப் போனாற்போலும்
ஓமிந்தச் சூரியனாம் ஞானசூரியன்
ஊடுருவப் பார்த்தாக்காற் சொல்லேவிள்ளும்
நாமிந்தக் கணக்கறிந்து பார்க்கவேணும்
நவிலுமொழி வெகுபதமே ஞானசூரியன்
தாமிந்தப் படியறிந்தால் ஞானசூரியன்
தான்சொல்லும் பச்சணத்தி லிச்சைவையே.

364. இச்சைவைப்பா யிதன்பெயரோ ஞானசூரியன்
இதுகடக்க யெதுவென்றாற் துன்பமாய்கை
லச்சைகெட முன்னோர்கள் பெரியோர்சூரியன்
ஞானமெது போதமது நவிலுஞ்சாயற்
பச்சையென்ன காய்ந்துவிடு மயக்கப்பாசம்
பந்தயங்க விட்டாய்போல் வெற்றிசொல்லும்
கச்சையென்ன விருதுகட்டி நின்றாப்போலே
காயசித்தி காயசுத்தி காயமத்தியாமே.

---

363. வேற்றரசன் வந்தாற்போல் இந்த ஞானசூரியன் வருகிறான்! இவன் சொல் வினில்லை.

364. இந்தச் சொல்லில் இச்சை வைப்பாயாக! இது காய சித்தி உபாயமேயாகும்.

365. காயமத்தி மூலவரை பசியாம்தீத்தீ
கனலெம்பும் யிரையன்றி உயிருதானே
ஆயுமத்தீ யுடலிருந்த நீரைத்தானே
ஆகாரஞ் செய்துவிடும் காய்ந்துதீயும்
மாயுமுத்தி யிதுவென்றாற் மாயாமுத்தி
மரணமதைக் கண்டறிவோர் முன்னால்தானே
ஓயுமுத்தி பேச்சடங்கி விழிபிதுங்கி
உணர்வுகொள்ளும் நாவெழாமற் கிடந்தார்கண்டே.

366. கண்டுநாம் மனம்மருண்டு உடல்மிரண்டு
உலைநிலையைத் தேடாமல் தனைமறந்து
உண்டுநா மாக்கைதனைப் போக்கத்தானே
ஒத்திருந்த வாறேது மரணம்பொய்யோ
விண்டுநாம் சொன்னாக்காற் சரியேசொல்வார்
மெய்யறிந்தோர் தங்களுடன் பொய்யிருந்தான்
மண்டுநாம் போலிருந்தாற் சித்தர்நோக்கி
மனிதனல்ல மானிடமே யெனச்சொல்வாரே.

---

365. இந்த உடம்பிலுள்ள ஒரு தீ ஆகாரத்தை எரிக்கும் தீ.
மற்றொன்று, நீரைத் தீய்க்கும் தீ.

366. இதை அறிந்து மனம் மருண்டுபோய், கலை நிலையைத் தேடாமல்
மரணத்துக்கு உடந்தையாக இருப்பது மடமையாகும்.

367. சொல்வாரென் றெனைப்பழிக்கார் குருவாம்வாலை
சொல்லெல்லாம் பிச்செறிவார் முனிவர்கூட்டம்
வெல்வாரே சாஸ்திரத்தை முனிந்துதானே
மெய்யறியார் வாலைமேற் குற்றம்சொல்வார்
நைவாரே சித்தரெல்லா முனிகளோடு
நயந்தடிமை யாகார்கள் போவென்பார்கள்
கைவாரே பழசோடு, புதிதில்லாட்டால்
கல்மனமும் புண்ணாகிக் கனிந்துநோவார்.

368. நோவார்கள் நோவதனைக் கண்டவாலை
நோக்காட்டாற் போடியென்றும் வாடியென்பார்
காவார்க ளில்லாட்டால் வாலையேது
கனமனித ரில்லாட்டாற் கோயிலேது.
சாவார்க ளில்லாட்டா லேமனேது
தண்ணீர்தா னில்லாவிடில் தாகமேது
தாவார்க ளில்லாட்டால் மோகமேது
சந்ததிக ளில்லாட்டாற் பிரமனேதே.

---

367. இந்த உண்மையை மதிக்கத் தெரியாதவர்கள் வாலையின் வாக்கையே உதாசீனம் செய்வார்கள். சாஸ்திரத்தைக் கோபித்து மெய்யை உணராது போவார்கள்.

368. சாவார்கள் இல்லையென்றால் நமன் ஏது? தண்ணீர் இல்லாவிடில் தாகமேது? அவ்வாறேதான் நோவாதாரின் நோவை வாலைகண்டு தெளிந்துள்ளவள்.

369. ஏதேது வானமதில் மேகநீரை
யெய்யாட்டா லென்னஉண்டு வெளியேமிச்சம்
ஆகாது சந்திரனுஞ் சூரியன்றான்
அதுகுடிக்க நீரில்லை அழகுமில்லை
ஏகாது மேகமதாற் சந்திரன்றான்
எப்போதுங் குளிர்ச்சியுண்டு சூடோயில்லை
வாகாது மேகினால் மேகந்தானே
வல்லபமே சூரியனார் வெயில்கொல்லுந்தான்.

370. கொல்லுமே வெளிதானு மேகமன்றி
கூடுவெளி நிறைந்திருக்குஞ் சூடதாலே
நில்லுமே மேகமது தெய்வமோதான்
நீள்விசும்பு யிந்திரியம் மேகநீரே
மல்லுமே வெளிமேகம் மண்வாயுத்தீ
மறைநான்கு மிதற்குள்ளே பிரமம்வேறோ
சொல்லுமே யிதையன்றி வேறிருந்தால்
துயரற்ற புசுண்டரென வசிஷ்டர்கேட்டார்.

---

369. வானத்தில் மேகம் திரளாவிடில் என்ன நேரும்? சூரியன் குடிப்பதற்கு நீரில்லை என்றால் என்ன ஆவது?

370. வசிஷ்டர் இந்தப் பஞ்சபூதப் பிணைப்புப் பற்றிக் கேட்பர். மேகம் என்ன இறைமையா? மண், காற்று, நெருப்பு, வெளி எல்லாம் அதற்குள்ளோ? நான்கு மறையும் அதற்குள்ளோ? பிரமம் வேறோ?

371. துயரற்ற ததனாலே முக்காலத்தை
தூண்டிவிக்கு மதனாலே நீருமானீர்
கயிறற்ற மனிதர்போல் நீரேகேட்டால்
கழல்வதென்ன யானுமக்குக் கழலுவேன்கேள்
மயலற்ற ததனாலே யென்னைக்கேட்டீர்
மயலுற்ற அருந்ததியதால் கேட்கலானீர்
முயலுற்றேன் பிரமபதம் அனந்தங்கண்டேன்
மொய்குழலை விட்டதனாற் கூடிருந்தேன்.

372. கூடிருந்தேன் கூடுடைக்க வருகுதில்லை
கோழையற்ற ததனாலே தடையுமில்லை
வீடிருந்தேன் மேருகிரிக் கூடேயாக
மேடையதில் நானிருந்தும் விட்டதில்லை
நாடிருந்தேன் மேர்பிருந்தேன் கிரியிருந்தேன்
நமதுமட மாச்சிரம மென்றிருந்தேன்
பாடறிந்து பட்டபலன் யென்கண்முன்னால்
பாதளம் அண்டத்திக்குங் கையிலாச்சே.

---

371. காகபுசுண்டர் பற்பல யுகங்கள் கண்டதாகக் குறிப்புவரினும் பாடலின் உட்கிடையில் ஒரு மயக்கம் உள்ளது.

372. இதுவுமது.

## ஞானம்

373. ஆச்சப்பா கையிலரை ரேகையைப்போல்
அண்டமொடு மேற்திக்குங் கீழ்த்திக்குந்தான்
மூச்சப்பா முனைநாசி வாசல்ரெண்டில்
மூக்கோடும் வாசியது கீழேபாய்ந்த
வீச்சப்பா மூக்கின்வழி வெளியேபாய்ந்து
மேலெழுந்த அங்குலந்தான் பனிரெண்டாகும்
போச்சப்பா போய்ப்போயே வாசிலாபம்
பொங்கியது நாசிவழி போயினாரே.

374. போனதே திரும்புகிற வழக்கம்பாரு
போகாதே போனாக்கால் மூக்கடைப்பு
ஆனதே யல்லாமல் யோகமாமோ
அறுத்தடைத்த வாசல்கண்டார் திறக்கலாகும்
ஊனதே காயமதிற் தமராம்வாசல்
உச்சிவழி புருவமத்தி வாசற்பூட்டை
ஏனதே யப்பூட்டைத் திறக்குமார்க்கம்
எங்களுக்கு நீர்கண்ட தியம்புவீரே.

---

373. வாசியோகத்தில் பன்னிரண்டு அங்குலக் கணக்கைச் சொல்கிறார். இது பற்றிய விரிவு ஞானசர நூலில் விளக்கப்பட்டுள்ளது. முன்பகுதி காண்க.

374. இரேசக பூரக கும்பகங்களின் தன்மையையும் முறைகளையும் வினவியவாறு.

## பூட்டுத் திறக்க

375. இயம்புவேன் மூக்கில்வளர்ந் தோடும்வாசி
இடதுபுறம் வலதுபுறம் நடுவாம்பாகம்
தயம்புமதை உட்கார்ந்து சம்மணமேயிட்டு
தலைகழுத்து உடல்நிமிர்ந்து புருவமத்தி
நோக்கமதில் வைத்திருந்து நிமையில்மத்தி
நுண்ணறிவாற் பார்த்திருநீ அசைவுகாணும்
தூக்குவதி லுன்மனதைச் செலுத்திப்பாரு
துன்பமற அவ்விடத்தி லிருந்துபாரே.

376. பாரப்பா அவ்விடத்தே அறிவாம்ஸ்தானம்
பார்த்திருந்து பழகிவரக் காலைமாலை
சேரப்பா நாழிகையாம் முகூர்த்தம்ஒன்றே
தினந்தினந்தான் பார்த்துவர மறந்திடாதே
ஏரப்பா உழுதாலோ கதிருகாணும்
யிம்மனதைத் திருப்பியிடு புருவமத்தி
நீரப்பா அவ்வாசல் திறக்கும்பாரு
நீலமணி வயிரமொடு வெள்ளைபச்சை.

---

375. சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்று நிலைகளிலும் மூச்சின் இயக்கத்தை ஆய்ந்து கண்டு வாசி யோகத்திலே ஈடுபடுவாயாக.

376. இந்தப் பயிற்சியைக் காலையிலும் மாலையிலும் செய்யத் தவறாதே. ஏர் உழுதால் கதிர் காணும் அல்லவா? உன் உழைப்புக்கும் பலன் உண்டு. உச்சி வாசல் திறக்கும் பார்!

## பூட்டு திறந்ததற்கு அடையாளம்

377. பச்சைகோ மேதகமும் புஷ்பராகம்
படிகம்போல் மாதுளம்பூ சிகப்புவர்ணம்
மச்சையே யவ்வாசல் திறந்தபோது
வாய்க்குமிந்த ஒளிவெல்லாங் காந்திமீறும்
இச்சையே கொள்ளுமிந்த மனமோடாமல்
இமைமத்தி கண்டவுடன் நேரேகூறு
கச்சையே கட்டினாப்போல் விடாதேபாரு
கலைவாசி சீவனுயிர் மூச்சேறுந்தான்.

378. ஏறுமல்லோ நாசிவழி யோடுமூச்சு
ஏறுமந்தப் புருவமத்தி வாசலேறும்
பாருமே யங்கிருந்து மேலேயேறப்
பழகினால் மேலேறும் நாசிவாரா
நீறுமே வாசல்வழி தடைகளெல்லாம்
நீங்கிடுமே புருவமதற் குள்ளேயேறும்
காருமே மூக்குமுறை புருவமுத்தி
கால்வாசி மேலேற யோகசித்தே.

---

377. இந்த வாசல் திறந்ததற்கு அடையாளம் சொல்லப்படுகிறது. வண்ண ஒளிகள் புலனாகும். இதை விடாமல் மேலேற்றிப் பயிற்சியைத் தொடரவேண்டும்.

378. மூச்சு ஏறிப் புருவமத்தி வாசலூடே செல்லும். தடைகள் எல்லாம் அகன்று விடும். பின்னர் யோக சித்தி உண்டாம்.

379. யோகமுற்ற யோகசித்தி யோகமார்க்கம்
யோகமுறை யோகவழி யோகதீச்சை
தாகமுறை நாமுறையே கூறியவை
தானறியச் சொல்லிடுவீர் சாந்திசாந்தி
யூகமுறை யோகமிது வாசல்பூட்டு
உட்புகுந்து மனதுயரை யூடுவாசல்
ஆகவுரை நீட்டிமுனை வாசல்கூட்டு
அய்யய்யா தீபவொளி யருட்செஞ்சோதி.

380. சோதியே பெருஞ்சோதி சொல்லொண்ணாது
சுழிவாசல் தான்திறந்தோர் காண்பார்பூண்பார்
ஆதியோ யிவ்வாசல் நுழையக்காணார்
ஆர்காண்பார் மெய்ஞ்ஞானம் அரிதுசத்தே
வீதியோ மேல்வாசல் கெதியாம்வாசல்
மெஞ்ஞான வீடதனிற் குள்ளேசென்றால்
தீதியோ துன்பமில்லை கண்ணாம்வீட்டில்
செந்தணலைக் கண்டிடலாம் தெருவில்தானே.

---

379. யோக சித்தியாகிய இந்த யோக வழியே யோக தீட்சையாகும். இது புரிந்துகொண்டு பயிலவேண்டும். உட்பூட்டு திறக்கும். தீபஒளி தோன்றும் - அருளாகிய செஞ்சோதி.

380. இந்த சோதி சொல்லொணாத அனுபவமாகும். இந்த அக வாசலுக்குள் புகுவது அரிது. இந்த வாசலில் நுழைந்து மெய்ஞ்ஞான வீட்டினுள் புகுந்து விட்டால் பிறகு துன்பமே கிடையாது.

381. தெருவென்ப தெதுவென்றாற் பத்தம்வாசல்
சிறுவாசற் புருவநடு அறிவின்வாசல்
குருவென்றா லவ்வாசற் றிருவாம்வாசல்
கொடுங்கோபந் தானகற்றும் சமாதிவாசல்
கருவென்றால் நினைவிருக்கு முத்திவாசல்
கணக்கறிந்து யேறுவீரோ ஞானவீடு
இருவென்றால் வாராதே யிருந்துபார்ப்பீர்
யித்தனைக்குங் காரணமே நெத்திவாசல்.

382. நெத்தியுடை மத்தியிலே மூக்குமேலே
நீள்புருவத் தடியின்கீழ் புருவமத்தி
தத்தியே வுள்மேடை யுள்ளோர்வாசல்
தான்திறவே ஊசிமுனை வாசல்தானே
சித்திதா னிருக்குமந்தச் சிவமாம்வாசல்
திறைவாசல் செயவாசல் தெய்வவாசல்
கத்தியே பாராதே சும்மாபாரு
கதவையே திறந்துவிடு மறலிபாரே.

---

381. வீடு, தெரு வென்பது எது? புருவ நடுவாகிற அறிவின் வாசல், ஞானவாசல்! கொடுங்கோபம் முதலியவற்றை அகற்றுகிற சமாதி யோகவாசல் அது! அதுவே முத்தி வாசல்!

382. ஊசிமுனை போன்ற வாசல். அது சித்தி இருக்கக்கூடிய சிவமாம்வாசல். அது வெற்றி வாசல், தெய்வ வாசல். கதவைத் திறந்துவிடு!

383. பாருமே மாலுடனே பிரமனோடு
பகர்தெய்வம் யாவையுமே திறந்துகாட்டும்
வாருமே அவ்வாசல் வழிநீர்தானே
வந்தாக்கால் பேசிடுவோம் வாருமென்போம்
நீருமே அவ்வாசல் வராவிட்டாலே
நீரென்னைத் தேடாதீர் சும்மாநீரே
சேருமே யாவர்களும் வாழும்வாசல்
சிறுவாசல் பாழ்வாசல் செந்திவாசல்.

384. வாசலது வந்தாக்கால் சித்தரெல்லாம்
வாரும்வாரு மென்றழைத்து மகிமைசொல்வார்
யேசலது செய்யாதே வாயாடாதே
யிருந்தஇடந் தானிருந்து தூங்கிடாதே
பேசலது சொல்லறிந்து பேசிடாதே
பின்னுமுன்னும் பார்த்தேறு உச்சிபாரு
ஊசலது பார்த்தாரு மென்னைக்காண்பார்
ஓகோகோ நீயேறு சென்னிமீதே.

---

383. இந்த வாசல் வழியாக நீர்வந்தால் சந்திப்பு கிட்டும். உம்மை வரவேற்போம். அந்த வாசலில் நீர் வராவிட்டால் உலகமக்கள் அனைவரும் வாழ்கிற பாழ்வாசலில் இருக்க வேண்டியவர் நீர்!

384. இந்த ஞான வாசலுக்குள் நீர் வந்துவிட்டால் சித்தர்கள் எல்லாரும் வாரும் வாரும் என்று அழைத்து மகிமை சொல்வார். ஆகையினால் சென்னிமீது ஏறுவீராக!

385. சென்னியே தலையுச்சி கபாலந்தானே
சிக்கறுக்க லாகாதோ சித்தராலே
உன்னியே பார்த்தவற்குத் தலைமேல்வாசம்
ஊஆஏஓ வென்றே யுற்றுப்பாரு
இன்னியே ஐயெனவே யிருத்திப்பார்த்தால்
எரிமூட்டி நிற்குமந்தப் புருவமத்தி
கன்னியே சடங்காணாப் போலத்தானே
காலைவிடு புருவமத்தி சடங்கானாலே.

386. சடங்கான பெண்திரளும் வாறேபோல
தாய்சிசுவின் யோகமுறை சடங்குதானே
மடங்காணும் பண்டாரம் அபிஷேகங்கள்
வாயாலே பூசையல்லோ உயிரைக்காணார்
இடங்காணும் நம்மனதும் உயிருந்தோறும்
யிவ்வுடலில் நோயெல்லாந் தோன்றிநாணும்
புடங்காணும் நம்முடலே புருவவாசல்
பூட்டதனைத் திறந்தாக்கால் ஞானந்தானே.

---

385. இந்தப் பாடலில் சூக்கும அட்சரங்கள் என்று முன்பகுதிகளில் விளக்கியுள்ள ஒலிநுட்பங்கள் பேசப்படுகின்றன.

386. இந்த உடம்பு புடமிட்டதுபோல் ஆகும். எனவே புருவ வாசல் பூட்டைத் திறப்பதுவே ஞானம் ஆகும்!

## ஞானம் முத்தி

387. ஞானந்தான் நமையறிதல் மற்றோர்காணல்
நம்பினவர்க் குபதேசம் நவிலல்தோணல்
ஈனந்தா னக்கதவு திறவாதோரே
இயம்புவது பேரழுகை துன்பந்தானே
வீணன்தன் சுகங்காணாத் துன்பஞ்சொன்னான்
மெய்யறிவாய்ச் சொல்லறிவாய் மெய்ஞானத்தால்
மோனந்தா னுடலுயிரை உச்சியேற்றி
உடற்பகுதி கண்டவனே யூகவானே.

## யோகிக ளிருக்கவேண்டிய விபரம்

388. யூகவான் சரிகையொடு கிரிகைகண்டு
உரிமென்ற யோகமொடு ஞானப்பூட்டை
தேகமொடு தானிருந்து ஒளியைக்கண்டு
தெய்வசித்தி யதின்மேலே ஞானசூரியன்
மோகமது விட்டொழிந்து ஞானவீட்டில்
மொய்த்திருந்த கபாலஅறை சித்திவீட்டில்
பாகமொரு நீயறிந்து யிருந்துவாழ்ந்து
பார்த்தவருக்கு மனிதனைப்போல் வாழுவாயே.

---

387. ஞானம் என்பது என்ன? நம்மையறிதல், மற்றோர் காணல், நம்பினவர்க்கு உபதேசம் இத்தியாதி.

388. சரியை, கிரியை கண்டு யோகமியற்றி மோகத்தை விட்டொழித்து ஞானவீட்டில் வாழ்வாயாக! இதுவே யோகிகளின் வாழ்வு முறையாகும்.

389. வாழுவாய் தேறிவிடில் தேறாவிட்டால்
மடமங்கை யாகிடுவாய் சித்தர்க்குள்ளே
கோழுவாய் நீவாழச் சொன்னோமப்பா
குருவென்று சொல்லாதீர் தேறுமட்டும்
மாளுவோ மென்றுசொல்வீர் தெய்வஞ்சாரீர்
வாயறைந்தால் முத்தியென்ற தெய்வந்தானே
கேழுவாய் முத்தியென்ன செத்தபின்னோ
கிறுக்கர்சொல்வார் செத்ததுபோல் சொல்லுவாரே.

390. சொல்லுவார் சாஸ்திரத்திற் செத்தபின்னே
சோம்பேறி முத்தியென்ன சத்திற்கூடா
விள்ளுவார் தெய்வபதம் முத்தியென்று
மென்மேலும் செத்தபின்னே சொர்க்கமென்பார்
தள்ளுவார் சடலத்தை நாற்றமென்றே
தன்னுயிரின் சத்துருவே தோசியோர்கள்
கொள்ளுவார் உடலுள்ளே முத்திதானே
குமரிவிளை யாடுவது குருவினாலே.

---

389. நீ வாழவேண்டிய மார்க்கத்தைச் சொன்னோம். சாகத்தான் போகிறேன் என்று நீ சொன்னால் அதற்குமேல் பேச என்ன உண்டு?

390. பிறர் சொல்வார்கள் ஏதேதோ! பயனில்லை! தெய்வபதம் என்றும், முத்தி என்றும், மரணத்தின் பிறகு என்றும் பேசுவார்கள்! உடம்பை நாற்றம் என்று தள்ளுவார்கள்! இதெல்லாம் தவறு. உடம்புக்குள்ளேயே முத்தி என்பதே ஞானப்பேச்சு!

391. குருவென்ன ஞானமொழி ஞானதீட்சை
கொண்டதினால் ஞானகுரு சாயுச்யந்தான்
திருவென்ன குருமொழிக்கு ளிருக்குதப்பா
தீயொளிபோல் ஞானவொளி காணுமென்றார்
கருவென்ன பெரியோரி னுள்ளேதெய்வம்
காணலையோ செத்தபின்போ பெரியோரானார்
உருவென்ன சாதனையாற் பெரியோர்சொல்லாம்
ஓர்மொழியே யமைந்திருக்கும் பெற்றார்பின்னே.

392. பின்னேது உடலறிவும் யிறந்தபின்னே
பெற்றபலன் சடம்விட்டுச் சடமெடுத்தோ
என்னேது யிப்படியே உலகோர்கூடி
யியம்பினரே வியாசர்சொன்ன கதையேபோல
மின்னேது செத்தபின்பு ஒளிகாண்பதேது
வேடிக்கைப் பொய்ப்பகட்டே வீணாய்நைந்தார்
கண்ணேது பார்ப்பதற்குக் கருத்தங்கேது
கவலையிட்ட மானிடர்சொல் முத்திகாட்டார்.

---

391. ஞானமொழி, ஞான தீட்சைக்குள்ளே மெய்ம்மை இருக்கிறது. தீயொளி போல ஞான ஒளி உண்டு. செத்த பிறகா பெரியவர்கள் ஆகிறார்கள்? இல்லையே. உடல் இருக்கும்போதே உயர்நிலை பெறவேண்டும்.

392. உடம்பு சென்ற பிறகு என்ன பலன்? ஓர் உடலை விட்டு மற்றொரு உடலை எடுப்பதா? செத்த பிறகு ஒளி காண்பது எது?

393. முத்தியென்ன தெய்வமதைக் காணல்கூடல்
நேசித்துக் கூடியுற வாடித்தானே
சித்தியென்ன பொருளிருந்த தெய்வலாபம்
தெய்வத்தின் பொருளல்லோ சித்தியப்பா
சித்தியென்ன யிவ்வாடல் பொருள்களெல்லாம்
தானீய வாங்கியவர் முனிவரானார்
கத்தியென்ன காணார்கள் அருளுங்காணார்
கைப்பிடியாய்ப் பிடித்தாரே சித்தர்தானே.

394. சித்தர்முத்தர் முனிவரோடு தவசியோர்கள்
செய்தனரே சரிதையொரு கிரிகைரெண்டும்
முத்தர்தான் பெற்றபலன் குருவேயானார்
மொய்முனியுஞ் சினேகிதரே தேவருக்கே
சித்தர்தான் கூடிருக்கு மளவேதெய்வச்
செயலறிவார் கிட்டிருந்து பாடுவார்கள்
எத்தர்தான் தெரியாமற் செத்தபின்னே
யெமனுலகஞ் சென்றபின்பு முத்தியென்றார்.

---

393. முத்தி என்பது என்ன? தெய்வத்தை காண்பது; தெய்வத்தைக் கூடுவது. சித்தி என்பதே தெய்வத்தின் பொருள் அன்றோ? கைப்பிடியாய்ப் பிடித்தவர்களே சித்தர்கள்!

394. எத்தர்கள்தான் மரணத்திற்குப் பின்பு முத்தி என்று சொல்வார்கள். சித்தர்கள் அப்படிச் சொல்லவில்லை. உடம்பு இருக்கும்போதே தெய்வச் செயலை அறிவார்கள்; அருகிருந்து பாடுவார்கள். அவரே சித்தர்!

391. குருவென்ன ஞானமொழி ஞானதீட்சை
கொண்டதினால் ஞானகுரு சாயுச்யந்தான்
திருவென்ன குருமொழிக்கு ளிருக்குதப்பா
தீயொளிபோல் ஞானவொளி காணுமென்றார்
கருவென்ன பெரியோரி னுள்ளேதெய்வம்
காணலையோ செத்தபின்போ பெரியோரானார்
உருவென்ன சாதனையாற் பெரியோர்சொல்லாம்
ஓர்மொழியே யமைந்திருக்கும் பெற்றார்பின்னே.

392. பின்னேது உடலறிவும் யிறந்தபின்னே
பெற்றபலன் சடம்விட்டுச் சடமெடுத்தோ
என்னேது யிப்படியே உலகோர்கூடி
யியம்பினரே வியாசர்சொன்ன கதையேபோல
மின்னேது செத்தபின்பு ஒளிகாண்பதேது
வேடிக்கைப் பொய்ப்பகட்டே வீணாய்நைந்தார்
கண்ணேது பார்ப்பதற்குக் கருத்தங்கேது
கவலையிட்ட மானிடர்சொல் முத்திகாட்டார்.

---

391. ஞானமொழி, ஞான தீட்சைக்குள்ளே மெய்ம்மை இருக்கிறது. தீயொளி போல ஞான ஒளி உண்டு. செத்த பிறகா பெரியவர்கள் ஆகிறார்கள்? இல்லையே. உடல் இருக்கும்போதே உயர்நிலை பெறவேண்டும்.

392. உடம்பு சென்ற பிறகு என்ன பலன்? ஓர் உடலை விட்டு மற்றொரு உடலை எடுப்பதா? செத்த பிறகு ஒளி காண்பது எது?

393. முத்தியென்ன தெய்வமதைக் காணல்கூடல்
நேசித்துக் கூடியுற வாடித்தானே
சித்தியென்ன பொருளிருந்த தெய்வலாபம்
தெய்வத்தின் பொருளல்லோ சித்தியப்பா
சித்தியென்ன யிவ்வாடல் பொருள்களெல்லாம்
தானீய வாங்கியவர் முனிவரானார்
கத்தியென்ன காணார்கள் அருளுங்காணார்
கைப்பிடியாய்ப் பிடித்தாரே சித்தர்தானே.

394. சித்தர்முத்தர் முனிவரோடு தவசியோர்கள்
செய்தனரே சரிதையொரு கிரிகைரெண்டும்
முத்தர்தான் பெற்றபலன் குருவேயானார்
மொய்முனியுஞ் சினேகிதரே தேவருக்கே
சித்தர்தான் கூடிருக்கு மளவேதெய்வச்
செயலறிவார் கிட்டிருந்து பாடுவார்கள்
எத்தர்தான் தெரியாமற் செத்தபின்னே
யெமனுலகஞ் சென்றபின்பு முத்தியென்றார்.

---

393. முத்தி என்பது என்ன? தெய்வத்தை காண்பது; தெய்வத்தைக் கூடுவது. சித்தி என்பதே தெய்வத்தின் பொருள் அன்றோ? கைப்பிடியாய்ப் பிடித்தவர்களே சித்தர்கள்!

394. எத்தர்கள்தான் மரணத்திற்குப் பின்பு முத்தி என்று சொல்வார்கள். சித்தர்கள் அப்படிச் சொல்லவில்லை. உடம்பு இருக்கும்போதே தெய்வச் செயலை அறிவார்கள்; அருகிருந்து பாடுவார்கள். அவரே சித்தர்!

## 22 சித்தி வகை விபரம்

395. என்றவர்கள் சொல்லெல்லா மிதற்கொவ்வாது
யித்தனையும் பார்த்தவர்கள் சொர்க்கமென்றார்
குன்றார்கள் சரிதையொரு கிரிகைரெண்டும்
கொட்டினரே யோகமொடு ஞானம்நாலும்
நின்றார்கள் கண்டுகொண்ட சித்திஐந்தும்
நேராகக் கண்டறிந்தோ ரிதுபோற்சொல்வார்
வென்றார்கள் ஐந்துடனே திதியாம்சிருஷ்டி
மெய்சிலிர்க்குஞ் சம்மார மெட்டென்றாரே.

396. எட்டென்றாற் தூரதிஷ்டி செவிதான்தூரம்
யிருகயத்தின் வர்த்தமானம் மனதோடுங்கெவுனம்
விட்டென்றார் பனிரெண்டு சித்திதானோ
மேலேதா னுடகெவுனம் சரீரங்கண்ணு
நெட்டேதான் நடந்தாலும் பதம்படாமல்
நீள்விசும்பில் நய்பவர்போற் பதினைந்தாகும்
தட்டேதான் சாபானுக் கிரகம்ரெண்டு
தானிந்தப் பதினேழுந் தெய்வக் கூறே.

---

395. சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கிலும் குறை காணார். ஐந்து சித்திகளும் கண்டார்கள். ஐம்புலனையும் சிருஷ்டி, திதி, சம்ஹாரம் ஆகிய எட்டும் உணர்ந்தார்கள்.

396. இந்த எட்டோடு தூரம் பார்த்தல், செவி கேட்டல் (இதயச் செய்தி), வான கமனம் ஆகிய இந்த நான்கும் சேர்ந்து பன்னிரண்டு. இவற்றோடு பதம்படாமல் நடத்தல் முதலியன சேர்த்து பதினைந்தாகும்.

397. கூறென்ன நரைமாறல் காயசித்தி
கோடியுக மிருப்பதென்றாற் பிரமசித்தி
பாரென்ன பத்தோடு ஒன்பதாகும்
பகருகின்றேன் பசிநீங்கில் ரெண்டுபத்து
வீரென்ன தானிருக்கும் பெலமாம்யானை
மெய்வலுவுந் தொட்டதெல்லாஞ் சித்தியென்ன
ஆரென்ன சொல்லுவரோ யிருபதேமேல்
அரைந்தரெண்டுந் தெய்வபெலன் கண்டீரே.

398. கண்டாரே யிப்பொருளைக் கொண்டுவந்தார்
காணுவது செத்தபின்போ யிருந்தபோதோ
தொண்டாரே தெய்வவாசல் காணாப்பேரே
தொடைதட்டி யேடநக்கும் வந்துபாரே
உண்டாரைக் காணாமற் சொன்னதாரு
உளம்புவீர் உளமறியாத் தோசிநீரே
விண்டோரைப் பாராம லுரைத்ததாரே
விளக்கமா றோஉனக்குச் சாஸ்திரந்தான்.

---

397. காயசித்தி என்பது நரைதிரை மூப்பை வெல்லுதல். பிரமசித்தி என்பது கோடியுகம் இருப்பது. இதற்கு மேலும் உள்ள சாதனைகளை இந்தப்பாடல் விளக்குகிறது.

398. இதெல்லாம் காணுவ்து உடம்பு அழிந்த பின்பா? இல்லை. இந்த உடலோடு இருக்கும்போதே பெறவேண்டிய சாதனைகள் இவை.

## 22 சித்தி வகை விபரம்

395. என்றவர்கள் சொல்லெல்லா மிதற்கொவ்வாது
யித்தனையும் பார்த்தவர்கள் சொர்க்கமென்றார்
குன்றார்கள் சரிதையொரு கிரிகைரெண்டும்
கொட்டினரே யோகமொடு ஞானம்நாலும்
நின்றார்கள் கண்டுகொண்ட சித்திஐந்தும்
நேராகக் கண்டறிந்தோ ரிதுபோற்சொல்வார்
வென்றார்கள் ஐந்துடனே திதியாம்சிருஷ்டி
மெய்சிலிர்க்குஞ் சம்மார மெட்டென்றாரே.

396. எட்டென்றாற் தூரதிஷ்டி செவிதான்தூரம்
யிருகயத்தின் வர்த்தமானம் மனதோடுங்கெவுனம்
விட்டென்றார் பனிரெண்டு சித்திதானோ
மேலேதா னுடகெவுனம் சரீரங்கண்ணு
நெட்டேதான் நடந்தாலும் பதம்படாமல்
நீள்விசும்பில் நய்பவர்போற் பதினைந்தாகும்
தட்டேதான் சாபானுக் கிரகம்ரெண்டு
தானிந்தப் பதினேழுந் தெய்வக் கூறே.

---

395. சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கிலும் குறை காணார். ஐந்து சித்திகளும் கண்டார்கள். ஐம்புலனையும் சிருஷ்டி, திதி, சம்ஹாரம் ஆகிய எட்டும் உணர்ந்தார்கள்.

396. இந்த எட்டோடு தூரம் பார்த்தல், செவி கேட்டல் (இதயச் செய்தி), வான கமனம் ஆகிய இந்த நான்கும் சேர்ந்து பன்னிரண்டு. இவற்றோடு பதம்படாமல் நடத்தல் முதலியன சேர்த்து பதினைந்தாகும்.

397. கூறென்ன நரைமாறல் காயசித்தி
கோடியுக மிருப்பதென்றாற் பிரமசித்தி
பாரென்ன பத்தோடு ஒன்பதாகும்
பகருகின்றேன் பசிநீங்கில் ரெண்டுபத்து
வீறென்ன தானிருக்கும் பெலமாம்யானை
மெய்வலுவுந் தொட்டதெல்லாஞ் சித்தியென்ன
ஆறென்ன சொல்லுவரோ யிருபதேமேல்
அரைந்தரெண்டுந் தெய்வபெலன் கண்டீரே.

398. கண்டாரே யிப்பொருளைக் கொண்டுவந்தார்
காணுவது செத்தபின்போ யிருந்தபோதோ
தொண்டாரே தெய்வவாசல் காணாப்பேரே
தொடைதட்டி யேடநக்கும் வந்துபாரே
உண்டாரைக் காணாமற் சொன்னதாரு
உளம்புவீர் உளமறியாத் தோசிநீரே
விண்டோரைப் பாராம லுரைத்ததாரே
விளக்கமா றோஉனக்குச் சாஸ்திரந்தான்.

---

397. காயசித்தி என்பது நரைதிரை மூப்பை வெல்லுதல். பிரமசித்தி என்பது கோடியுகம் இருப்பது. இதற்கு மேலும் உள்ள சாதனைகளை இந்தப்பாடல் விளக்குகிறது.

398. இதெல்லாம் காணுவஃது உடம்பு அழிந்த பின்பா? இல்லை. இந்த உடலோடு இருக்கும்போதே பெறவேண்டிய சாதனைகள் இவை.

399. சாஸ்திரங்கள் சொன்னாலே தவமே செய்து
சாஸ்திரத்தை ஆதியந்த முற்றுமாய்ந்து
வாஸ்திரங்கள் விட்டுவிட்டுக் குருவாசாரம்
மகிமைமெத்த உண்டாகிச் சித்தனாகி
சூத்திரங்கள் தான்மறந்து முத்தனாகி
குருவென்ற பேராகி முனியுமாகி
பேத்திரமாஞ் சொல்லெல்லாஞ் சித்தியாகி
பெரும்பேற்றைப் பெற்றபின்பு உடலிருந்தே.

400. உடலிருந்து யிதுகண்டு தெய்வங்கண்டு
உள்மனதைக் கட்டினவர் முத்தியென்றார்
சடமிறந்து கண்டவர்கள் பெற்றலாபம்
தானென்ன சொல்வதினித் தெரியாமுட்டாள்
குடமுடைந்தால் நீருண்டோ உடல்கவிழ்ந்தால்
கொண்டமுத்தி யெங்கிருக்கும் உயர்போனாக்கால்
திடமுடனே சொல்லிவிட்டார் பெரியோராகார்
செப்பவில்லை சித்தர்முத்தர் முனிவர்தானே.

---

399. இந்தச் சாதனைகளை யெல்லாம் அடைந்து முத்தனாகி, குருவாகி, முனியுமாகி சொல்லெல்லாம் சித்தியாக வேண்டும்.

400. இவையனைத்தும் உடம்பிருக்கும் போதே பெறவேண்டியவை. குடம் உடைந்தால் நீரில்லை. உடல் கவிழ்ந்தால் முத்தி எங்கிருக்கும்?

401. முனிவர்பத மோபெரிது முத்திதன்னில்
மூச்சுக ளாறுனாலு முத்தர்தானே
கனிபதமே யிவர்சொல்வார் முழுதுங்கண்டார்
காலரைக்கால் பெறமாட்டார் முத்தியென்றார்
தனிப்பதமே பெற்றக்கால் யெல்லாஞ்சொல்லும்
தாரித்திரஞ் சிறுமுத்தி சிறிதல்லோதான்
இனியென்ன தெய்வத்துக் கிதுதான் வீட்டி
லிருப்பதுவே கண்டவர்க ளிச்சையற்றோர்.

402. இச்சையென்ன யிதுமேலே யிருப்பதுண்டோ
எங்கிருக்கு மிச்சைவந்து யெனக்குள்ளேசொல்
அச்சையென்ன யிதுரூபம் பொருள்களெல்லாம்
அமைந்திருக்கும் பூதஉட லண்டந்தானே
மிச்சமென்ன அண்டமதில் மலைமண்வாரி
மேல்வெளிக்கு ளிருந்ததுவும் கீழேவிள்ளும்
சொச்சமென்ன யிதிலடங்கு மெல்லாந்தானும்
தொன்றுதொட்டு வந்தவகை விபரந்தானே.

---

401. முனிவர் என்ற பதம் மிகப் பெரிது. முழுதுணர்ந்தவர் சொல்வது இந்நிலையே.

402. தொன்றுதொட்டு வழங்கிவருகிற ஞானப் பேருண்மை இது. இந்தச் சித்தி கூடிவிட்டால் ஐந்து பூதமும் உள்ளடக்கமாம்!

## இந்நூலின் தொகை

403. விபரமாய்ச் சொல்லிவைத்தே னிந்நூலில்
மேற்பாகஞ் சொல்லிவைத்தே னிரண்டாம்பாகம்
அபரமே யித்தனையும் ஞானசூரியன்
ஆகரெண் டாயிரத்தின் சொச்சமாகும்
உபரமாங் காண்டங்கள் வேணதெல்லாம்
ஒன்றுபோற் பாடினதை ஒன்றேசொன்னார்
இபரமே யிதுதானுஞ் சொன்னதைத்தான்
யின்னூலே சொல்லாது அன்னூல்சொல்லிடுமே.

404. அன்நூலு மின்னூலுஞ் சரியாய்ப்பாரு
அதிலில்லா தத்தனையு மின்னூல்சொல்லும்
என்னூலும் பார்த்திருந்தா லின்னூல்விள்ளும்
யவர்களும் பார்க்கரிது ஆராய்ந்தோர்க்கு
முன்னூலும் பின்னூலும் யின்னூலோடு
முறைமுற்றும் ஆராய்ந்தறிவோர் தெளிவுகாணும்
பின்னூலைப் பார்த்தறிந்தால் முன்னூல்சொன்ன
பெருவுரையைக் காண்பதற்கு யென்னூல்தானே.

---

403. 'ஞான சூரியன்' என்ற மகுடத்தில் முன்பகுதி ஆயிரம் சொன்னேன், பின்பகுதி ஆயிரம்.

404. முன்னூல், பின்னூல் இரண்டுக்கும் உள்ள இயைபு மொழிந்தவாறு.

405. என்னூலி லண்டம்விள்ளுந் திக்குவிள்ளும்
இதுமேலே கருப்பண்டம் மேலேசொல்லும்
சொன்னாலே மத்திநின்ற மேகஞ்சொல்லும்
தொடர்வாய்வு மதியுடுக்கள் மலைமண்வாரி
இன்னூலே யிதன்கீழே வெளியுந்திக்கும்
இதனடியிற் கண்டஅண்ட திசைகள்யாவும்
வன்னூல்போ லேயிருக்கு மெந்தநூலுக்கும்
வசனிக்க யெட்டாது கருத்துக்கெய்தும்.

406. எய்துமோ பலநூலும் பாராதார்க்கு
ஏறுமோ தீட்சைவிதி யெல்லோருக்கும்
வைதுமோ நேராது விவேகியோர்க்கு
வாயாதோ சுத்தமன மௌனியோர்க்கு
நைதுமோ தாராது மேலுள்ளோர்க்கு
ஞாதாவின் பொற்குருதாழ் நம்பவாய்க்கும்
பெய்துமோ போகாது பொரியுள்ளோர்க்குப்
பேரின்ப மோர்பெரிதோ பெரியோர்தானே.

---

405. நூலின் உள்ளுறையும் வகையும் கூறி இன்னூல் ஒரு வன்னூல், வலிமை மிக்க நூல் என்பதை உணர்த்தியவாறு.

406. தீட்சைவாதி என்பது எல்லோருக்கும் ஏறாது. கொடுத்துவைத்தவர்க்கே அது கிட்டும்.

## பெரியோரான விபரம்

407. பெரியோர்தா னிப்படியே பெலத்தார்வீரர்
பெய்தமழை குளிர்ந்தால்போல் குளிர்ந்தார்ஞானம்
உரியோர்தான் மனங்குளிர ஒளியேவீச
ஊடுருவி மேலேறி யொளியைத்தாண்டி
சிறியோரே யதின்மேலே நீரைத்தாண்டி
சிலம்பொலியுந் தாண்டியதின் மேலேபாரு
அறியோரே அச்சரத்தைப் பார்த்தபின்னே
அதன்மேலே பாடுகவி வரிசைபாரே.

408. பாரப்பா அருட்கவியே பெலமாம்பாசை
பாடுதலுந் தாளமொடு ஆடல்காணும்
நீரப்பா வேரிருந்து சீருபாரு
நீண்டமனம் யேகாமல் ஓடிடாமல்
காரப்பா ஒளிகண்ட யிடத்தைக்காரு
காரக்கியனும் வந்திடுவான் ஞானசூரியன்
பேரப்பா சொல்லிடுவா ரிடங்கள் சொல்வார்
பேர்பெற்ற சித்தர்களும் அடங்குவாரே.

---

407. வளர்ச்சியின் நிலைகளை ஒவ்வொரு படியாகக் கூறியவாறு.

408. அட்சரத்தைப் பார்த்தபின்பு அந்த நிலையிலே அருட்கவியின் வல்லமை கூடும். சித்தர்களெல்லாம் அதற்குள் அடக்கம்.

409. அடங்குவார் உச்சியிலே அமர்வார்வந்து
அவர்பட்ட பாடதனைச் சொல்லிப்போவார்
முடங்குவார் பிரசோப துன்பம்போல
முனிகூட்டம் வந்திடுவார் உதவிசெய்ய
கடங்கள்பார் சாவனுட துன்பம்போல
காணுமடா ஒளிகண்டாற் துன்பந்தீரும்
இடங்கண்டால் யெல்லோருந் தானாகவந்து
யென்குழந்தை யென்றுசொல்லித் துணைசெய்வாரே.

410. செய்வார்கள் முத்தர்களுந் தானேவந்து
சிறுபிள்ளை படுந்துன்ப மாற்றுவார்கள்
தெய்வார்கள் கண்டுகொண்டு க்ஷணத்தில்வந்து
தேறுதலை சொல்லிடுவார் சந்தோஷங்கள்
நைய்வார்க ளெப்படியோ அதுபோற்தானே
நமக்காகச் சித்தர்களு முன்னேநிற்பார்
கொய்வார்கள் கர்மமென்ற பாவம்போக்கும்
குருவென்றா லவர்குருவே திருவேதான்

---

409. அடங்குவதோடு உச்சியிலே வந்து இருந்து கொள்வார்கள். உதவிசெய்ய முனிவர் கூட்டம் வந்து சேரும். இடத்தைக் கண்டுகொண்டால் எல்லோரும் தாமாக வந்து என்குழந்தை என்று உரிமை பாராட்டித் துணைசெய்வார்கள்.

இது சித்தர்களின் தீட்சை முறைகளைப் பயில்பவர்களுக்கு மிகவும் முக்கியமான ஓர் அனுபவத்தைச் சொல்லுகிற அற்புதமான பாடல். மிகவும் முக்கியமானதும் ஆகும்.

410. இதுவும் அது. ஞானப் பயிற்சியில் தோய்கிறவர்கள் இதை அனுபவித்துக் காணலாம். உண்மையான மெய்யுணர்வு நிரம்பிய கவிமொழி இது.

**411.** திருவென்ன குருவுதவி யிதுதானய்யா
தீண்டாது விட்டுவிட்டாற் பாவிநீதான்
பொருவென்று சொல்வாரே மற்றோர்தானும்
போயொழியார் வல்லவரும் வருவார்தானே
கருவென்ன வந்துவிடாக் காணலாகும்
காமப்பால் நாமெடுத்த சனனநேரம்
உருவென்றா லுடலல்ல சித்தனாகும்
ஊரண்ட சித்தர்களும் கண்டுகொள்வார்.

## சீஷன் திறம்

**412.** கண்டுகொள்வார் ஒளிதெரிந்த சீஷன்றன்னை
கண்ணான ஞானக்கண் கொண்டுதானே
விண்டுசொல்லார் அங்கிருந்து கெவுனம்பாய்வார்
மெய்சிலிர்த்து நின்றதொரு சீஷன்முன்னே
கண்டுகொள்ள வந்ததென்றே சொல்லிநிற்பார்
கதவடைத்து யிருட்டறையி லிருந்தாலுந்தான்
கொண்டுவந்து காதிலுறை யுபதேசங்கள்
கொண்டமட்டும் ஊட்டுவிப்பார் கோடிதானே.

---

**411.** குருமார்கள் செய்கிற பேருதவி இது.

**412.** மெய்யான சீடனாக இருந்து, ஒளிகண்ட உள்ளத்தனாக விளங்குவானேயானால் கதவை அடைத்து எந்த இருட்டறையில் இருந்தாலும் கதவைத் திறந்துகொண்டு வந்து காதில் உபதேசங்களை ஊட்டுவிப்பார்கள்!

413. ஊட்டுவிப்பார் கோடியென்றாற் கோடியல்ல
உத்தமனே யானாக்காற் சரணஞ்செய்வார்
தீட்டுவிப்பா ரதிசயங்கள் மெத்தஉண்டு
செகசாலக் கூத்தெல்லா மெத்தவுண்டு
ஆட்டுவிப்பார் நடனங்க ளாடிடாதே
அம்மம்மா வென்றேநீ பாடிடாதே
நாட்டிவிப்பார் அசையாதே நில்லுநில்லு
நம்முடலை மறவாதே நினைவில்நில்லே.

414. நில்லேதான் நினைவிலே நிற்கும்நிற்கும்
நீள்மதியும் வட்டமிட்டு ஆடுமாடும்
புல்லேநீ திரியாதே திறமாய்நில்லு
புத்திகளு மெத்தவுண்டு சித்தர்சொல்லு
வல்லேநீ யென்றாலும் விடமாட்டார்கள்
வாய்மதங்கள் பேசாதே வாயும்நீளும்
அல்லேபோ லிருக்காலே சோதிபோலே
ஆசைமெத்தக் காணுமடா அப்புஉப்பே.

---

413. ஊட்டுவிப்பதும், தீட்டுவிப்பதும், ஆட்டுவிப்பதும், நாட்டிவிப்பதுமான குருவருளைப் பாடுகிறார்.

414. அந்தக் குருவருள் கிட்டும்போது நிலை குலையாமல் நடந்துகொள்ளவேண்டிய முறை கூறியவாறு. திமிறினாலும் விடாமல் அருள் செய்வார்கள் என்கிறார்.

## உச்சி நீரிறங்குந் தன்மை

415. அப்புஉப்பு யெங்கிருந்த ருசியாம்உள்ளே
அப்படியே நீர்கசியும் வாருபோல
துப்புஅப்பு நீரெல்லாந் துப்புவாய்நீ
சுகசோதி வரும்போது தூங்குவாயோ
இப்புகைப்பு பச்சைநீ ரிறங்கும்மண்டை
யிருந்துநீ ரெல்லாமும் வாயாற்தானே
செப்புமொழி நாவழியே கொட்டும்நீரே
தினந்தினமா வோர்நாளிற் கொட்டுந்தானே.

416. கொட்டுமடா பச்சைநீர் வலிக்கும்பல்லு
குமட்டுமடா வயிறுவலிக்கும் மயங்கிடாதே
தட்டுமடா வாந்தியொடு உச்சிமுட்டி
தான்பிறழும் உடலிருந்த நீர்களெல்லாம்
வெட்டுமடா வெளியேற முட்டித்தானே
மேலேற மாட்டாமல் உடல்வலிக்கும்
முட்டுமடா வாய்வழியே பிரண்டுருண்டு
மோகமங்கை கெற்பமதிற் பிள்ளைபோலே.

---

415. உச்சியிலிருந்து ஞானநீர் எப்படிக் கசியும், நாவிலே எப்படிச் சொட்டும் என்பதைக் கூறியவாறு.

416. கர்ப்பம் தரித்த பெண்ணுக்கு வாந்தி வருவதுபோன்ற அனுபவம் ஏற்படும் என்பதை விரிவாகப் பேசியவாறு.

417. கெற்பத்தாற் பிரசவித்த மங்கைபட்ட
கெற்பமங்கை யெல்லோரும் பட்டபாடே
அற்பத்தால் யின்னீரால் பிராணதுன்பம்
ஆதலினால் நீரொழிய ஒளியும்வீசும்
நற்பத்தால் நீரொழிந்தார் சித்தர்தானும்
நரகமே நீக்கிவிட்டுச் சித்தர்கூடி
உற்பவித்தார் ஒளியுடனே தானும்வந்து
ஓங்கினதை யென்னசொல்வேன் சமயந்தானே.

418. தோணுமே கூடிவிளை யாடலாகும்
தூங்குதற்கு நேரமில்லை துணையுமுண்டு
பேணுவது நாமல்ல தானேபேணும்
பெரும்பேறு வந்ததினாற் பின்னாற்தானே
காணுவது வருத்தமல்ல ஓர்நாள்தானும்
கண்டுகொண்ட நேரமது யிதுபோலப்பா
நாணுவது நமக்கென்ன அருளேவந்து
நடிக்குமல்லோ நொடிப்புகண்டு மெச்சினோமே.

---

417. உடலிலுள்ள தீய நீரெல்லாம் அகன்று நரகம் நீங்கும். சித்தர்கள் ஒளியுடனே வந்து அருள்பாலிப்பதை எப்படிச் சொல்வேன், என்ன சொல்வேன் என்று ஆனந்தம் மேலிட்டுப் பேசியவாறு.

418. அழகான பாட ல். அந்தப் பேரின்பம் வந்து கூடுகிற வரலாறு பேசப்படுகிறது. பேணுவது நாமல்ல. தானே பேணும். நமக்கென்ன நாணம், அருளே வந்து ஆடுகிற தன்மை அது!

## தேவி அருள்பெற்ற விபரம்

419. மெச்சினோம் ஆண்டிரண்டு சொல்லிவந்தாள்
மேன்மையருள் வாலையவள் வித்தைசொன்னாள்
கச்சிநோய் தானகற்றி மலத்தைப்போக்கி
பனஉடலை லேசாக்கிப் பிலத்துவாசி
உச்சிநீர் நீர்மலமும் லேசாய்த்தள்ளி
உண்ட அன்ன மலக்கசட்டைப் போக்கிவித்தாள்
மச்சிமா நங்கையவள் நரகம்போக்கி
மாவுடலை வளர்த்தெடுத்தாள் மெச்சிக்கொண்டாள்.

420. கொண்டவளுந் தன்கருத்தின் படியேசெய்தாள்
குடிகேடி கூச்சலிட்டாள் பாலுமீய்ந்தாள்
கண்டவரு மெந்தனுக்கோர் சேதிசொன்னாள்
கதவுகளைத் திறந்துவி வந்தேனென்றாள்
உண்டவளு மேல்வாசல் திறக்காவிட்டால்
ஊடுருவி வெளியில்வராள் எல்லைதாண்டி
திண்டவளும் வெகுமுறடி உச்சிவீட்டில்
திருநடனம் வட்டமிட்டு ஆடினாளே.

---

419. இரண்டு ஆண்டு அனுபவம் இது. நோய் நீக்கி, மலம் அகற்றி, கனத்த உடம்பை இலேசாக்கி, படிப்படியாக வாலையாள் மாமேனி வளர்த்தாள்!

420. அவள் 'கதவு திறந்திடு, நான் வந்தேன்' என்று சொல்லி எப்படியெல்லாம் ஆட்கொண்டாள் என்பதை மெய்சிலிர்த்துப் பாடியபடி.

421. ஆடினதோர் கணக்கறிந்து நானும்பாடி
அவளோடு நான்கூடிக் கெலித்துநின்றேன்
பாடினதை யறிந்தவளு மாடினாள்பார்
பக்குவமென் றென்னைக்கை தூக்கிவிட்டாள்
கூடினாள் நான்சேர மாட்டேனென்றேன்
குமரிவேச மாறியவள் கிழவியானாள்
ஓடினே னென்னைவிட மாட்டேனென்றாள்
உத்தமிக்கு நான்தேவை நில்லென்றாளே.

422. என்றாளே என்தாயும் யெமதுரூபி
என்கருத்தி லிருந்தவளும் வெளியேவந்தாள்
அன்றாளே யின்றிருந்தாள் பழமாதேவி
ஆருக்கு மடங்காம லேயிருப்பாள்
குன்றாளே யென்றிருந்தும் வயதேமிஞ்சி
குமரிபோ லேயிருப்பாள் கொடுங்கோபத்தாய்
நன்றாளே யாகிடுவாள் சேர்ந்தோருக்கு
நாவினாற் பாடிடுவாள் கேட்டதெல்லாம்.

---

421. என்னோடு அவள் கூடி ஆடிய கதை இது - என்று அதைப் பேசுகிறார் சித்தர். ஓடித் தப்ப முயன்றேன், அவள் விடவில்லை என்கிறார்.

422. அழகான பாடல். என் அன்னை அவள்! என்னை நேசித்து எனக்குப் பாலூட்டிய தாய். கேட்டதெல்லாம் தருகிற பாடகி அவள்!

**423.** கேட்டதெல்லாம் பாடியவள் நாவாற்றானே
கிருபைவர மீவாளே சித்தரூபி
தேட்டதெல்லாந் தந்திடுவா ளிருந்ததெல்லாம்
க்ஷணத்திலே முத்தியது கைகண்டாப்போல்
ஆட்டதனை நாவாலும் நடிப்பதாலும்
அங்கைகொண்டு சொல்லாலும் விழியினாலும்
பூட்டதனைத் திறந்திடுவாள் வாசியாலும்
பூரிக்கச் செய்திடுவாள் ஆகாதுண்டோ.

**424.** ஆகாதா உண்டவர்கள் கண்டபேர்கள்
அடைக்கலமாய்ச் சேர்ந்தவர்கள் யோகப்பேர்கள்
தாகாதா நமதண்டை நமதுசார்பில்
தக்கதெது கொள்வதெது தகாததேது
போகாதா நீர்வந்தா லெம்மைச்சேர்ந்தால்
புதுக்கருவி நில்லாதா பொய்போகாதா
வேகாதா மறுபிறவி தீய்ந்திடாதா
வெளிபோலே ஒளியதனிற் கூடினாலே.

---

423. நாவாலே பாடி வரம் ஈவாள். சொல்லாலும் செயலாலும் அருள் வழங்கும் ஆழில் பேசப்படுகிறது.

424. ஆனந்தக் களிப்பிலே அந்த அனுபவத்தின் வெளியீடு வகைவகையாய் வருகிறது.

425. கூடினா லெம்மைப்போல் நீருமாவீர்
குழந்தைகளே கண்டகனாப் பலித்தாற்போலே
தேடினா லாகாது கிட்டயெட்டா
தீங்கிலா தெவருக்குந் தானேயப்பா
நாடினால் வெகுதூரம் சித்தர்சொல்லார்
நாம்நாடி யேயிருந்தாற் தானேவிள்வார்
ஓடியே போகாதே விட்டிடாதே
உள்ளவர்த்த மானமிதைத் உரைசெய்தேனே.

## நூலடக்கம்

426. செய்தேனே யின்நூலைப் பதனம்பண்ணு
சித்தர்களும் வந்திருந்து கேட்பாரப்பா
வைவேனே நூல்கெடுத்தாற் தோசமாகும்
மக்களே சாபமிட்டார் சித்தர்முத்தர்
செய்வேனே நான்சாபஞ் செப்பவில்லை
திருவருளை முற்றிலுமே காணாமட்டி
நொய்யனே சாபமிட்டான் குறையுமென்றே
நுண்ணறிவோர் தானஞ்சி ஒழித்திட்டாரே.

---

425. கூடிக்கொண்டால் எமது நிலை உமக்கும் கிட்டும். நாம் நாட்டம் செலுத்தினால் சித்தர்கள் அருள்கூர்ந்து சொல்வார்கள். ஓடாமல் ஒளியாமல் உய்த்துக்கொள்ள வேண்டும்.

426. யாருக்கும் அஞ்சாமல் இந்த உண்மைகளை வெளியிட்டுச் சொல்கிறேன். வாலையின் தன்மைகாட்டிச் சிலம்பொலியை உணர்த்துகிறேன்.

427. ஒழித்திட்டார் ஒளிகுறையு மென்றுஅஞ்சி
உத்தமர்கள் தானாகி முழுதுங்கண்டால்
கழித்திட்டுப் பேசுவர்கள், ஒளியைவென்றார்
கவலையதிற் சொல்லார்கள் சீவருக்கே
அழித்திட்டார் நூற்சொல்லிக் கிழித்தாற்போலே
அய்யய்யோ முனிவர்களு மப்படித்தான்
விழித்திட்டு முக்கண்ணைத் திறந்தோரானால்
மேலென்ன நூல்குறையாத் தொட்டார்யார்க்கே.

428. ஆருக்கு மஞ்சாமற் சொல்லிவைத்தேன்
அவதிவரு மற்றோர்கள் சொன்னாரானால்
பாருக்குட் சித்தர்களு முனிவராதி
பாரத்தை யிட்டுடுவான் நம்முன்னாலே
சீருக்குள் வாலையவள் தன்னைக்கட்டிச்
சிலம்பொலியை வித்துண்டேன் சொன்னேன்மெய்யாய்
நீருக்குள் சலந்தாண்டி ஒளியைத்தாண்டி
நின்றவளைத் தாண்டஅவள் கணவன்கண்டே.

---

427. பல சர்ச்சைகளுக்கு இடையே ஞானக் கல்வி வழங்குகிறதிலுள்ள சிக்கல்கள் பேசப்படுகின்றன.

428. யாருக்கும் அஞ்சாமல் இந்த உண்மைகளை வெளியிட்டுச் சொல்கிறேன். வாலையின் தன்மைகாட்டிச் சிலம்பொலியை உணர்த்துகிறேன்.

429. கணவனொடு கணவியவள் அதற்குமேலே
கருவில்லா உடலில்லா வெளியைக்கண்டு
உணவில்லாத் தெய்வமதைக் கண்டதாலே
உடல்கண்ட சித்தர்களுக் கஞ்சிடேன்யான்
மணவனொடு கூடிவாழ் தெய்வமேலே
மறைசொன்ன தெய்வத்தைப் படைத்ததெய்வம்
வினையில்லா உருவாகும் வெளியார்தெய்வம்
மேல்வெளியே நம்முடலே கலந்ததாலே.

## முனியானோர் கண்ட காட்சிகள்

430. கலந்ததால் வெளிநமக்கே சொல்லும்விள்ளும்
கர்த்தன்பகை யாகினனே சிறுவன்சித்தன்
உலர்ந்ததால் அப்புமண்ணும் நமக்குப்பேசும்
ஊடுருவி விளையாடுங் காற்றும்பேசும்
மலர்ந்ததால் மதியுடுக்கள் சூரியோரும்
மாதவசி பேசிடிலோ கனிந்துசொல்லும்
வளர்ந்ததால் பிரமபூத மைந்துந்தானே
வல்லவர்கள் பெற்றதினால் முனியானாரே.

---

429. கூடுதல் என்ற ஞானக் கல்வியின் பண்புகளைப் பேசுகிறார். 'கணவி' என்று கணவனுக்குப் பெண்பாற் பெயர்ச்சொல். மணவன் என்று மணவாளனுக்கு ஓர் ஆண்பாற் பெயர்ச்சொல். வியப்போடு கொள்ளுதற்குரியன.

430. இந்த ஞானக்கல்வி கிட்டியதால் இனிமேல் நெருப்பும் நிலமும் நம்மோடு பேசும். காற்றும் பேசும். வானமண்டலத்தோடு உரையாடலாம்.

431. முனியாகி முனிபதத்தின் மேலேதானே
மோகிப்பார் பிரமபதம் திதியாஞ்சிருஷ்டி
இனிவாகச் சம்மார மூன்றுங்கூடில்
இப்பரமே பிரமபதம் இதனின்மேலே
தொனியான பிரமஉடல் பஞ்சபூதம்
சொன்னஅப்பு உப்புடனே வாயுந்தீயும்
பணிவான வெளியுடனே அஞ்சுந்தானே
கலைவாசி யென்றமுனி சபித்தால்மாறும்.

432. மாறுமே யிதுபோலே நடையில்லாமல்
மருவில்லா உடலதுவுங் கெவுனம்பாயும்
சீறுமே கண்தூர திஷ்டிதானே
செவிதூரங் கேட்டிடுமே க்ஷணத்திற்குள்ளே
வாறுமே அண்டபிண்ட வெளிகள்தோறும்
வலையுட லேகிடுமே அண்டபிண்டம்
தேறுமே சராசரங்கள் லெகுவேசெல்லும்
தெருவிலே மானிடர்கள் நடந்தாப்போலே.

---

431. ஐம்பூதக் கல்வி சொல்கிறார்.

432. இந்த உடம்பில் கமனசித்தி தோன்றும். கண் தொலை காணும். காது தொலை கேட்கும். இதெல்லாம் கைகூடுகிற சித்திகள்.

433. நடந்தாற்போல் பறக்குமடா உடலின்சித்தி
நயனக்கண் சித்தியது யிதுபோற்பாயும்
குடந்தானே உருண்டதுபோல் வெளியிற்தானே
குருசித்தர் நடப்பதுவும் பாதைதானே
திடந்தானே கூடுவிட்டுக் கூடுபாய்தல்
சென்மாந்திரங் காணலைப்போல் நினைவைக்காணல்
புடந்தானும் போட்டெடுத்த புத்தியாலே
பூமிமண்ணு மாந்தர்களின் நினைவுகாண்பார்.

434. காண்பார்கள் விலங்குமரம் மலைபறவை
கனநீருக் குள்ளியிரும் மனிதரோடு
பூண்பார்கள் ஊர்வனவும் தோற்றமேழில்
பொருந்துநடை சீவர்களில் நினைப்பையெல்லாம்
ஊண்போர்கள் காண்பதல்ல வாலைகண்டோர்
உச்சரிக்குஞ் சொல்லறியாற் யெப்பாசைக்கும்
எண்பாஷை கண்டுவிடுஞ் சித்திபாஷை
இதுபாஷை பரிபாஷை வாலைபாஷை.

---

433. நடப்பது எப்படியோ அப்படியே பறப்பது கைகூடும். கூடுவிட்டுக் கூடுபாய்தலே சித்திக்கும் என்கிறார்.

434. உறவும் உரையாடலும் நிகழும். நிற்பன, நடப்பன அனைத்துடனும் நிகழும். உச்சரிக்கிற மொழி எல்லா மொழிக்கும் அடிப்படையான சித்திமொழி. சங்கேத மொழியான வாலையின் மொழி.

435. பாசையென்றாற் பதினெட்டோ கனத்தபாஷை
பரைவாலை கண்டவர்கள் பாஷையென்ன
வீசையென்ன திரிகால வர்த்தமில்லா
வேதர்களே சாஸ்திரியே குருவானீரோ
பாசையென்ன திரிகால வர்த்தபாஷை
பரமபதங் கண்டவர்கள் பேசும்பாஷை
ஓசையென்ன சிருஷ்டிதிதி சம்மாரங்கள்
உற்பவித்த மந்திரங்கள் பாஷையேதே.

436. பாசையென்ன சமஸ்கிருத வடமாம்பாஷை
பரிச்சுழியைக் காட்டிடுமோ முத்தியீமா
ஆசையென்ன தமிழருத்தம் அதுவும்ரெண்டோ
ஆணும் வேறலவே வார்த்தைபேதம்
காசையென்ன கொடுத்திடுமோ காசுகேட்க
கையேந்தி நிற்கவைக்கு மந்தப்பாஷை
ஓசையென்ன நீட்டிடுவீர் நாவின்சத்தம்
உச்சரித்த மந்திரமும் அரியேதானே.

---

435. பாஷையென்றால் பதினெட்டு என்ற கணக்குக்குள்ளேயோ? இது முக்காலமும் பேசுகிற மொழி. பரமபத மொழி. ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களின் மந்திரமொழி இது!

436. இது வடமொழியா? தமிழா? இந்த மொழிகள் எல்லாம் காசுக்குக் கை ஏந்தும் மொழிகள். இந்த ஞானமொழி இவற்றையெல்லாம் கடந்த நாவின் ஒலி! மந்திர நாதம்! அதுவே கடவுள்!

## வேத விபரம்

437. அரியென்றால் அறியாமல் வார்த்தைசொன்னீர்
அச்சரத்தை வேறுவிதம் பிரித்தீர்கெட்டீர்
விரியென்ற வெளிபோலே வேதமென்றீர்
வேதமென்ற அரிச்சுவடி யுமக்குத்தானோ
பிரியென்ற கயிறுதிரித்தால் போலேநீளம்
பொய்யல்லோ வேதமென்றால் வார்த்தைதானே
சிரியென்ன நாங்களிடும் வார்த்தைபோல
தேர்வடத்தைப் போட்டவரே பேசக்காணீர்.

## பூணூல் விபரம்

438. காணீரே யோகபூணூல் சொல்லிவாரேன்
கலையென்ற மூக்கின்வழி சுவாசந்தானே
போனீரே மூக்கின்வழி பொத்தல்காணீர்
பொதுவிருக்கும் நம்மூக்கைப் பிடித்துக்கொள்வீர்
வீணீரே பூசிடுவீ ருட் காராமல்
விருதாவி லேயிருந்து குந்தியேதான்
மானீரே நீரிரைத்து ஒட்டுத்திண்ணை
மண்தரையில் நீரிரைத்துத் திரும்பிப்பார்ப்பீர்.

---

437. அரி என்றால் என்ன பொருள்? வேதம் என்றால் அது வார்த்தை. நாம் சொல்லுவது அது அல்ல.

438. யோகப் பூணூல் ஒன்று உண்டு. அது வேறு. மூக்கைப் பிடித்துத் தண்ணீர் இறைக்கும் காரியமில்லை அது.

## பூஜை விதி

439. திரும்பாமற் பிறர்சத்தங் கேளாப்பக்கம்
செவிடூமை போலிருந்து சம்மணமேயிட்டு
குரும்பாமல் உடல்கழுத்து தலையும்நேராய்
குருவாக வேணுமென்றால் மனதைப்பாரு
அரும்பாகு மூக்கின்வழி சுவாசமோடும்
அதைப்பார்க்கச் சொன்னாரே நாங்களுந்தான்
விரும்பாமற் செய்தீரே நூலைத்தொட்டு
மேலானோ ரெதினாலே கிரந்தத்தாலோ.

440. கிரந்தமென்ன அகத்தியன்சொற் பாஷைதானே
கிழக்குருவுஞ் சத்திரியர் வசிட்டர்தானே
பிறந்தமென ராமர்வீடு தனிலிருந்தார்
பிணஞ்சுடுஞ் சக்கிலிச்சி கர்ப்பம்பெண்ணாள்
மறந்தமென வியாசர்பாண் டவர்கள்வீட்டில்
வாய்நிறைய உண்டவருஞ் சூத்திரன்றான்
சுறந்தமென்ற கிருஷ்ணனுமே கோனாராகும்
சூத்திரரே யிவர்களைநீர் பூசிப்பீரே.

---

439. பிறர் சத்தம் கேளாத இடத்தில் ஊமையும் செவிடும் போல் இருந்து செய்கிறீரே இதுவா பூஜை?

440. அந்தணர் என்று சொல்லி நீங்கள் வழிபடுகிற கடவுளர்கள் அனைவரும் சூத்திரர்!

441. பூசித்தார் முன்னோர்கள் நல்லோர்தானே
பொய்வேசம் போட்டுமே மறந்துபோனார்
வாசித்து யிருந்ததினால் வருவதேது
மக்களைப்போற் யாவரையும் பாவியாமல்
பேசித்தான் குருவென்ற தன்மைவிட்டு
பெருநாழி யுண்டிடுவோர் குருவாவாரோ
ஏசித்தா னுபாதானம் பூரியென்பார்
யிதுவென்ன பிச்சைசெம்பைத் தூக்குந்தானே.

## வேதம், உலக பேதம்

442. தானேதா னோர்காலம் உலகபேதம்
சந்திப்பு வந்துவிடும் பிறர்க்கேவேதம்
கோனேதான் குருவோடு குருவானோரை
கொடியமது விறைச்சியுண்பார் அகுதோர்காலம்
வானேதான் வெளிமறையு மகுதோர்காலம்
வசனிப்பா ரெல்லோருந் தமிழைத்தானும்
தேனேபோல் வானமொழி தித்தித்தோரே
சிவந்திருப்பா ரெல்லாரும் ஒன்றுபோலே.

---

441. பேதங்கள் சொல்லுவது தவறு என்பதை இவ்வாறு பாடுகிறார். எல்லாரையும் மனிதர்களாகப் பாவியாமல் ஏற்றத்தாழ்வு பாராட்டி நிற்பது குருவின் நிலையாகுமா? ஆகாது.

442. ஒவ்வொரு வழக்காறு ஓரோரு காலத்தின் நிகழ்ச்சி என்பதை மொழிந்தபடி.

443. ஒன்றுபோல் வேதமது யெல்லோர்க்குந்தான்
ஒருபாஷை யாகிவிடும் யாவருக்கும்
இன்றுபோல் நாளுமிரா இருதோர்காலம்
இப்படியே கர்ப்பாந்திர மேநில்லாது
அன்றுபோ லின்றுநாளும் வேதம்நில்லா
ஆசாரம் பாஷையொடு நடைகள்தானும்
மன்றுபோல் பழக்கமெது வதுபோல்ஞாயம்
மாமனிதர் உலகநடை வாறிவ்வாறே.

444. இவ்வாறு காலத்தே தர்மபேதம்
எத்தனையோ அத்தனையு மெண்ணிலாதே
ஒவ்வாறு யென்செயலாங் காலபேதம்
ஒற்றுமையு மில்லாட்டாற் சரிவராது
அவ்வாறு தானிணங்கா மாந்தர்தானும்
அவதிமெத்தப் பட்டிடுவார் படுகளத்தில்
செவ்வாறு சீராய்ந்து கூடிடாமல்
சீரழிந்து நின்றவர்கள் மெத்தஉண்டே.

---

443. வேதம் என்பது எல்லோருக்கும் பொது. எல்லாருக்கும் ஒரேமொழி. அது ஒரு காலம். என்றைக்கும் இப்படி இராது. காலம் மாறும் நடையிலும்.

444. காலதருமம் என்பது மாறிவரும். எத்தனையோ மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. முக்கியம் என்னவென்றால் ஒற்றுமையும் ஒருமைப்பாடுமே துணை நிற்பன. மற்றவை சீரழிவில் உய்க்கும்.

445. உண்டேதான் குருகுலமும் கலப்பைதொட்டே
உழவுதொழிற் செய்யுகிற கர்ப்பம்உண்டு
கண்டேநான் குருவானோர் கருமாதிக்கே
கையரிசி திதியரிசி புண்யதானம்
சென்றேதான் யாககுண்டம் யெக்யஓமம்
சீவ'னத்துக் காகவரார் ஓர்காலத்தே
இன்றேதா னெவர்வந்தார் சொன்னதுக்கே
இக்குறைக ளுண்டவர்கள் நிற்பார்தானே.

446. நின்றேதான் போயிடுவார் ஓர்காலத்தில்
நீள்விசும்பு மாறிவிடும் ஓர்காலத்தில்
குன்றேதான் மாறிவிடும் ஓர்காலத்தில்
குமுறாமல் மேகமழை ஓர்காலத்தில்
என்றேநீ கேட்டதெல்லாம் எப்போதில்லை
இடுகாடு மாறிவிடுஞ் சுடுகாடில்லை
கன்றேதான் பால்குடியாக் கெர்ப்பமில்லை
கவலையுண்டு மெப்போது மாறிடாதே.

---

445. மனித ஆசாரங்கள் மாறுபட்டவை. அன்றிருந்தது இன்றில்லை. இதுதான் உலகவழக்கு.

446. வானம் மாறும், குன்று மாறும், பருவங்கள் மாறும். மாறாத தன்மையது எது என்றால், பால் குடிக்காத கன்று இல்லை. மனக்கவலைக்கு மாற்றமில்லை.

## மனம் சத்தி

447. மாறாது மனக்கவலை மண்ணுள்ள காலம்
மறைநான்கு மேழெட்டு மிருந்துமென்ன
கூறாது மறைவந்து உளத்தேதானே
கூர்மனதும் நில்லாது வாசிதானே
பாராது தானிருந்தால் மனமும்வேறே
பரவாசி மூச்சிருந்தால் மனம்பிராணன்
சேராதா யிருதயத்தின் பிராணன்தானே
சிந்தினது மனதென்ற அறிவுதானே.

448. அறிவென்றாற் பிராணதெளி வதுவில்லார்க்கு
அசுத்தஉயிர் தானாகும் மனமாஞ்சீவன்
தெரிவென்றா லாகாது மனதுள்ளோர்க்கு
சீக்கிரத்தி லறிவெய்தால் அசுத்தமாகும்
பிரிவென்றாற் தானெடுக்க யினிமேலாகா
பிறக்கும்போ தேஉயிரே அறிவேஆன்மா
மரியென்றா லறியாத மனதுள்ளோரே
மாமயக்க முள்ளவரே மனமுஞ்சத்தி.

---

447. மனக்கவலை மாறாது. மண்ணுள்ளே காலமட்டும் இதற்கு மாற்றமில்லை. வேதங்கள் எத்தனை இருந்தாலும் பயனில்லை. வாசி ஒன்றே மனத்தை மாற்றவல்லது என்பது பொருள்.

448. உயிரே அறிவே ஆன்மாவே. மனதுள்ளவன் மனிதன். அதற்குரிய ஆற்றல் வாசி யோகமே என்பது கருத்து.

## ஆன்மா

449. சத்தியது பெலப்படுமே மனத்தின்சத்தி
சங்கரிக்க லாகாதே யாவராலும்
முத்தியென்றா லறிவிருக்கும் பிறக்கும்போதே
முறைவாசி சீவனல்ல ஆன்மாதானே
சித்தியென்றா லான்மாவுந் தானேவந்து
சேர்ந்திடுமே ஞானமட்டும் ஞானமெட்டும்
உத்தியென்றா லாசார உயிரேஆன்மா
உரு வெடுக்கும் பத்தமுத்தி சித்திதானே.

450. தானென்ற மோச்சத்தில் வந்தபேர்க்கு
தாகமுண்டு மோகமில்லை சந்தேகங்கள்
வானென்ற உருவில்லை உள்ளமில்லை
வாயரைய நாவுண்டு பகையுமில்லை
ஏனென்ற சத்தமில்லை கேள்வியில்லை
எம்மக்க ளானாலும் பழக்கமில்லை
தூனென்ற தம்பத்தில் வேலையில்லை
துணையுண்டு கலக்கமில்லா யிருப்புத்தானே.

---

449. மன ஆற்றலைக் கொல்ல யாராலும் முடியாது. அத ஆன்ம ஆற்றலாகப் பரிணமிப்பதே யோகம். அதுவே சித்தி.

450. தான் என்ற முத்திநிலை, அதாவது உடம்புக்குள்ளே இறைமை காணல் என்ற பேறு கிடைத்தவர்களுக்குத் தொல்லை எதுவும் இல்லை. ஐயமில்லை. கேள்வியில்லை. சண்டையில்லை. அவர்களுக்கு எப்போதும் துணை உண்டு. கவலையோ, கலக்கமோ இல்லாத ஞானப் பெருவாழ்வு அதுவேயாகும்.

## ஆன்மாயிருப்பிடம்

451. இருப்புத்தான் வாசியிடம் ஆத்மபீடம்
இயங்காமல் இருப்பதுவே சமாதிகூடம்
பொருப்புத்தான் அறிவினிலே கண்டார்காணார்
போனதையே நாடார்கள் வருதல்பார்ப்பார்
குறிப்புத்தான் சுகமதனிற் கண்டகாட்சி
கோளாமற் பார்ப்பாரே யெந்தநாளும்
விருப்புத்தா னில்லாரே விருப்பம்போல
மெய்யுடல முள்ளவரை விரும்பார்போலே.

452. விருப்பம்போற் திரிவார்கள் விருப்பமில்லை
மேதினியில் நானிருந்தே னனேககாலம்
இருப்புத்தான் கண்டதுண்டு ஆண்டுமூன்று
கங்குலைப்போ லிருந்தார்கள் கவலையுற்றே
இருப்புத்தன் விடமன்றியா துங்காணார்
யாதுமே யில்லாரே யானார்காலம்
பொருப்புத்தா னில்லாமற் பந்தமற்று
பொய்யுலக ராயினரே பொசிப்பில்லாதே.

---

451. வாசியிடம் என்பதே ஆன்மாவின் இருத்தையாகும். அது இயங்காமல் சலனமற்று இருப்பதே சமாதியோகம் என்பது.

452. விருப்பம் என்பதன்று பொருள். நான் அனேக ஆண்டுகள் இருந்தேன், இப்படி முனிவர் சொல்வதன் நோக்கம் இந்த உடம்பிலேயே முத்திநிலை பெற்று வாழமுடியும் என்பதை உணர்த்தவே.

453\. பொசிப்பில்லா தென்னசெய்தார் புசுண்டநாதா
பூரணத்தாய் கண்டவரே புசுண்டமூர்த்தி
பசிப்பில்லை யேய்ந்தர்காண் ஒரேயாண்டு
பழங்கிழங்கைத் தின்றனர்காண் மற்றோராண்டு
இசிப்புல்லே மச்சைகளைப் பிடுங்கித்தின்றார்
இதன்மேலே கிணற்றுநீ ரில்லையில்லை
புசிப்பில்லை யெவ்வகைக்கும் நீருமில்லை
போயினரே சீவர்களும் விருச்சம்வெந்தே.

454\. சீவர்களும் விருச்சமுடன் நீருமில்லை
திரைகடலும் நீரிறுதித் திரைகள்மட்டே
யாவர்களு மலையேறி யிருந்தோருந்தான்
அம்மலையுங் காய்ந்துவிட வைந்தாமாண்டில்
அவர்களு மில்லாமல் சத்தமின்றி
ஊர்வலமும் போயினவே மிருகமாதி
ஓவெனவுஞ் சத்தமிட்டு ஊனைத்தின்று
ஒளிகுறைந்து கண்மயங்கி உயிர்விட்டாரே.

---

453\. உயிர்வாழவேண்டும் என்ற விருப்பத்தோடு வாழ்கிறவர்களின் நிலையென்ன? அதைப்பாடுகிறது இந்தச் செய்யுள்.

454\. ஒவ்வொரு பஞ்சமாக வந்தது. கடைசியில் 'ஓ' என்று அலரி ஊனைத்தின்று பிறகு ஒளி குறைந்து கண்மயங்கிய நிலையில் உயிர் விட்டார்கள்.

455. ஆறாண்டு நாண்டியபின் ெ:ன்மேல்தானே
ஆறாண்டு யாருமில்லை ஆறேயாண்டு
பாராண்டு உள்ளிருந்தார் வெளியேவந்தார்
பசித்தவரைப் பாராம லுயிரேவிட்டார்
நீராண்ட மச்சமுண்டு கடலுமுண்டு
நீண்டமலை நெறியாமல் நின்றதுண்டு
கூருண்டு மண்மலையுஞ் சமுத்திரந்தான்
கூடினது மூன்றுமன்றி தீய்க்கண்டேனே.

456. கண்டேனே யிவ்விதமாய்ப் பனிரெண்டாண்டில்
காலைமாலை யுண்டுண்டு உருமீனுண்டு
பண்டோனே ஆகாசக் கருப்புண்டோசொல்
பார்விசும்பில் மேற்கருப்பு குறைவேயில்லை
சென்றோனே கருப்பதுவு மதிகமாகும்
தியொளிகள் மாறாமற் கதிர்மதிக்கு
இன்றோனே ஒளிபெருகக் கண்டேன் காலம்
இப்படியோர்/கால்பார்த்துக் கூவினேனே.

---

455. இரு அழிவுகளையெல்லாம் பார்த்த மகான் காகபுகண்டர் அருட்காட்சிகளைச் சித்தரிக்கின்றார்.

456. பன்னிரெண்டு ஆண்டில் ஏற்பட்ட மாறுதல்களைத் தமது கண்ணால் பார்த்தவாறு எடுத்துச் சொல்கிறார் முனிவர்.

457\. கூவியே நானழுதேன் முத்தரோடு
குறைகேட்க யாருமில்லை தனியேகூவி
ஆவியே தான்பதறி நைந்துஅந்தோ
ஆகூகா வென்றழுதேன் பொருமிவிம்மி
தாவியே கேட்பதற்கு அடுத்தோரில்லை
சந்ததிக ளில்லாதா லிக்கேடுற்றேன்
மேனியே யெனைத்தேட யாருமில்லை
விரதம்விட்டாப் போல்நாட்டை விட்டிட்டேனே.

458\. விட்டேதா னிமையகிரி வடபாகத்தின்
மேலிருந்தேன் கூடுநைந்தேன் மெய்யுநைந்தேன்
நட்டேனே தோலெலும்பு சதையுங்கூடும்
தலைமயிரும் விலாவெலும்பும் புலாலுமில்லை
ஒட்டேனே சதையன்றி யெலும்புதானும்
ஊடுயிரும் வெளியில்வருங் காலந்தன்னில்
மட்டேனே கிழவனுயிர் நடையில்லாது
மறலிகையில் வருஞ்சமயம் உயிர்லாபந்தான்.

---

457\. இந்தச் சோகமான காட்சிகளைக் கண்டு தாங்கமுடியாமல் அழுதேன். கேட்பார் ஒருவருமில்லை. என்னைத் தேடுவதற்குக் கூட ஆளில்லை. இடம் விட்டு இடம் பெயர்ந்தேன்.

458\. இடம் பெயர்ந்து இமயமலையில் வடப்பக்கத்தில் மேவியிருந்தேன் கூடு நலிந்தேன். எலும்புந்தோலுமாக இருந்தேன். எமன் வரவேண்டிய வேளை உயிர்தப்பினேன்.

459. உயிர்லாபம் பெற்றெழுந்து வெளியேவந்தேன்
உயிரொழித்த மன்வருஷம் பனிரெண்டுக்குள்
கயிறுபோலே யொன்றுபட்டு உயிர்களெல்லாம்
காக்கியனா மென்னிடத்தே கலந்துகொண்ட
வயிறுபோலே நான்பெருத்தேன் உடலேகூடு
வாய்த்தனவே அன்றுமுதல் மறுபிறப்பு
துயர்போலே நானிருந்தேன் முன்னேசொன்ன
சூழுலக சீவர்கலை யெண்ணித்தானே.

460. யெண்ணினதாற் துன்பமென்று யிதற்குப்பேரு
இதுகடக்க உபாயமது வெகுவில்வாயா
உன்னித்தான் மருமலையே வந்ததாலே
உயர்மலையில் நானிருந்தேன் கவலையில்லை
நன்னித்தான் பார்ப்பதில்லை கன்னால்வந்து
நாடினதை யான்பாரேன் முனிகோக்கேதான்
கன்னிதா னிச்சையுரு மனதேரூபம்
கவலையில்லை மனதுருவ மில்லைதானே.

---

459. பன்னிரண்டு ஆண்டுகள், முந்திய காலத்தில் அழிந்த உயிர்கள் அனைத்தும் எனது வயிற்றுக்குள் சென்றதுபோல நான் உப்பினேன். அன்றுமுதல் எனக்கு மறுபிறப்பு.

460. மலையுச்சியில் விசனங்கள் இன்றி நானிருந்தேன் என்கிறார் முனிவர். இங்கே அவருடைய பேச்சு உருவகமாகும்.

461. இல்லையே யிச்சையுண்டு மனதுமுண்டு
இம்மனது இச்சைவழி ரெண்டுமென்று
வில்லையோ முன்பாகம் பார்த்தபோதே
மாநெஞ்சந் துடிக்குமது பதைப்புயிச்சை
கொல்லையோ பயிர்முளைத்து தீரத்தாலே
குமுறுகின்ற நெஞ்சசைவு பதைப்புஆசை
கல்லையோ உடைத்திடலாம் நெஞ்சம்பொட்டல்
கண்டுகொள வேணுமென்றால் நெஞ்சசைவாகா.

462. ஆகாது நெஞ்சசைவு துடிப்புமார்க்கம்
அய்யய்யோ சுகதுக்கம் மனமதாகும்
போகாது பார்த்தளவிற் கேட்டலோடு
பொங்குதிரை யலையடித்தால் போலேவுள்ளம்
நோகாது யிருக்கவென்றாற் நெஞ்சிற்பிராணன்
நுணுக்கமாய்த் தட்டிவிடும் பிலமேயக்கும்
சாகாது விட்டிடுமோ சடலந்தன்னை
சந்ததிகள் செய்யாதோ லெகுவாய்த்தானே.

---

461. நெஞ்சத்தில் ஆசையில்லை. ஆட்டமில்லை அப்படி ஒரு நிலை.

462. கடலிலே பொங்கிவருகிற நிலையிலே அலைகள் அடிக்கும் அல்லவா? அப்படியிருந்தால் இந்த உடம்பைச் சாகடிக்காமல் இருக்குமா? அப்படி நடக்கவில்லை.

463\. லெகுவாய்த்தா னுடல்முளைத்து உயிரேபூத்து
நீண்டமனன் காயாகிப் பழுத்தரிந்தே
பருவாவாய்த்தா னறிவுமுளை கிளம்பிச்சூச்சய்
பாரறியும் நினைவுடலைப் பகுந்துகாணும்
தகுவாய்த்த சித்தியிதிற் பிரிந்துகாணும்
தன்னுடலி லுயிர்அறிவுக் குள்ளேதானே
எகுவாய்த்தே முளைத்தெழுந்த சித்திதானும்
ஈசுரனு மால்பிரமன் யிடங்காணாப்போல்

## அணிமாசித்தி

464\. ஆனாப்போல் அணிமாதி மூலஸ்தானம்
அரையிடுப்பு போகர்சித்தி கோஷந்தண்டில்
மானாற்போற் தூரதிஷ்டி நெற்றிக்கண்ணில்
மறைவேதங் கேட்டசெவி அண்டங்களு
நானாசென் றெனைக்கண்ட கண்ணேசித்தம்
நாசிமூக்கு கட்டினதால் எகவுனம்நாசி
ஊசினாரிற் கண்டஒளி புருவமத்தி
உயரநின்ற அண்ணாக்கு அருளண்ணர்க்கே.

---

463\. இத்தனைக்கும் நடுவில் உடலில் உயிர் இருக்கிறது. உயிர் கருவுக்குள்ளே தங்கி நிற்கிறது. மாலும் பிரமனும் காண முடியாத ஈஸ்வரனைப்போல உள்ளது இது.

464\. இதன் நுட்பத்தை விளக்குகிறார் முனிவர். நாசி மூக்கு தட்டினதால் ஏற்பட்ட விளைவு. புருவமத்தியில் கண்ட ஒளி. உள்ளத்திலே பெற்ற அனுபவம். இவையே காரணம்.

465. ஆக்கிருன்ற அதினுடனே பிடரிகண்ணு
ஆகெவனம் நித்திவிடும் பிடரிதானது
தூக்கிநின்ற யிவ்வேமும் அணிமாசித்தி
தொன்றுதொட்டுச் சொன்னார்கள் பிடரிகண்டார்
நோக்கிநின்ற யெட்டுவிதம் சித்தாம் ஆனி
நுவலுகின்ற சாஸ்திரத்தி னிடத்தைப்பாரு
பாக்கிநின்ற சித்தியெல்லா மிதற்குள்தானே
பகரவென்றால் வெகுவிதமே அறுபத்துநாலே.

## குருபத்தியால் 65 சித்திகள்

466. அறுபத்து நால்விதமும் மேன்மையோர்க்கு
ஆகாதோ புத்தியுள்ளோ ராகினாக்கால்
குருபத்து வைத்திருந்தால் அறுபத்துநாலும்
கூடாதோ ஆறுபத்து நாலுந்தானே
மறுபத்து வந்திடுமே அறுபத்தைந்தாய்
மாவுடலம் பெலத்திடுமே சுகமாம்வீடு
திருபத்து வைகுண்டங் கயிலாசங்கள்
சேர்ந்திருக்கு மிக்கூட்டில் அள்ளலாமே.

---

465. இதற்குமேலே பிடரிகள் பற்றிக் கூறுகிறார் சித்தர். பின் மூளை ஒன்று முந்திய பகுதியில் இதன் விளக்கம் காண்க.

466. குருவின் அருள் கிட்டிவிட்டால் அறுபத்தைந்து சித்திகள் கைகூடும் வைகுண்டபதவி கைலாய பதவி எல்லாம் இந்த உடம்புக்குள்ளேயே துய்த்திடலாம்.

467\. அள்ளலா மப்பொருளைக் குருவானோர்கள்
அவர்கொடுக்க வாங்காதே நமக்குமுண்டு
மொள்ளலா மவர்பக்கம் நமதுஅன்பால்
மோனியரு மறவார்கள் நல்லேரைத்தான்
கள்ளெல்லாங் குடித்தாலுந் தள்ளிப்போடு
கள்ளமன மிருக்குமிடந் தேடிப்பாரு
உள்ளெல்லா மொழிந்திருக்கும் உடல்களெல்லாம்
ஒன்றுமற வேண்டாம்நீ கண்டுகொள்ளே.

468\. கண்டுகொண்டாற் குருவுடனே தூரநில்லூ
கண்ணெதிரே நில்லாதே விலகிநில்லு
உண்டுகொளப் பின்னேயிரு முன்னேறாதே
ஓடாதே ஒழியாதே விலகிடாதே
தொண்டுபண்ண வையார்கள் யெல்லாமுண்டு
தூங்கினரைப் போலிருக்கார் பெலன்தானுண்டு
விண்டுகொள்ள மாட்டார்கள் சாஸ்திரம்போலே
மெள்முழுது மருளடைந்தார் விவேகியோரோ.

---

467\. மனத்திலே கள்ளமில்லாமல் தேடிப்பார்த்து அழித்துவிட்டு குருவானவர்களின் பக்கம் அன்பு செலுத்து என்பதே உபாயமாகும்.

468\. குருமார்களின் தன்மையும் அந்தத்தன்மைக்கு ஏற்ப மாணவன் நடந்துகொள்ள வேண்டிய முறைமையும் ஓதுகிறார்.

469. விவேகிபோ லேயிருப்பார் சாஸ்திரம்போலும்
மெய்போலுந் தானிருப்பார் யெல்லாம்உள்ளோர்
சுவேகிதான் கரையில்லாக் கணக்கில்லார்கள்
துன்பமறச் சொல்லிடுவோர் சோதிகண்டோர்
தவேகி ஒளிகண்டால் வேதம்வாயே
சாஸ்திரங்கள் பயப்படுமோ அவரைக்கண்டால்
அவேகியரேல் காணார்கள் விவேகிகாண்பார்
ஆரிவரோ முத்திவீட்டை வைத்திருப்போர்.

470. இருப்பார்க ளிருந்திந்த விடங்களெல்லாம்
எங்குமவர் ஊராரும் வசமேயாவார்
பொறுப்பார்கள் ஒன்றினிலும் பற்றில்லாதார்
பொருட்பற்று ஒன்றுண்டு அருட்பற்றேதால்
வெறுப்பார்கள் கைப்பற்று மனதில்யில்லார்
மேதினியிற் தமைத்தேடும் பற்றுள்ளோர்கள்
ஒறுப்பார்கள் மற்றதெலலாம் அருளாற்தானே
அருட்டற்று நீங்காது நல்லோருக்கே.

---

469. விவேகிக்கும் மூடனுக்கும் உள்ள வேறுபாடு என்ன? ஒளி கண்டநிலை என்பது என்ன? முத்தி வீடு எவரிடம் இருக்கிறது. இவற்றை விளக்குகிறது இந்தச் செய்யுள்.

470. எதிலும் ஒட்டாமல் இருப்பார்கள் யாதும் ஊர் யாவரும் அவருக்கு வசம். எல்லாப் பற்றும் வெறுப்பார்கள். ஒரே ஒரு பற்று உண்டு. அது அருட்பற்று.

471. நல்லோரிற் தமையறிந்த யிருவர்சேரில்
நாம்பேசு முறையதுபோல் சபையுங்கூடி
அல்லோரில் உரைநிறுத்திச் சும்மாநின்று
ஆருக்கு மொத்திருப்பார் பெரியார்போல
வில்லோரில் வல்லவரே பெரியோர்க்குள்ளே
வல்லபங்கள் மெத்தவுண்டு கோடிக்கொன்று
இல்லாத மனிதர்பல கோடிக்கொன்று
இப்படியே சித்தரிலுங் கோடிக்கொன்றே.

472. கோடியிலே ஒருவனல்லோ சீவன்முத்தன்
குறைமுத்தன் அரைநிஷியே தவசிற்பாதி
வாடியிலே போகாதார் பத்தர்தானே
மனதிலே போக்காதார் பித்தனாகும்
கூடியிலே வாராதார் பள்ளத்தாரே
குளித்துக்கரை யேறாதார் அழுக்குள்ளாரே
பேடியில் குறியிருக்க ஆணாகார்கள்
பெண்கொண்டால் போலல்லோ தேறாமாறே.

---

471. இரண்டு நல்லவர்கள் கூடினால் என்ன நடக்கும்? அற்பர்கள் கதை என்ன? வில்லாளிகளில் வல்லவர் கோடிக்கு ஒன்று என்பதுபோலே சித்தர்களும் கோடிக்கு ஒருவரே.

472. அரைகுறைகளில் எத்தனை விதம்? எந்தெந்தத் துறைகளில் எல்லாம் இந்த அரைகுறைகளைக் காணுகிறோம்? இவர்களைச் சொல்லி அஞ்ஞானம் எது என்பதை விளக்குகிறார்.

473\. மாதென்ற விளக்கமா ராசாரங்கள்
மக்களே செருப்பென்ன உட்ல்காப்பென்ன
சேரென்ன குழுந்துவிடும் நாயும்பேயும்
தீண்டாமற் காத்திருக்கும் வைத்திடத்தே
வீரென்ன மூதேவி கழுதைதானும்
மெய்நலிந்த யேகாலி துன்பங்காக்கும்
ஆரென்ன சென்றுமுத்தி குருவுந்தொட்டு
ஆகாயம் பறப்பனபோற் றேடுவாரே.

474\. போவார்க ளப்படியே குருவுந்தானே
போயேற மாட்டாமல் முற்றுந்தானே
வாயேறப் பறப்பார்கள் உள்ளடங்கி
வல்லபங்கள் முழுவருளுங் கிட்டுங்கிட்டும்
தாயோற மிருக்கார்கள் முழுதும்வாரா
சத்ததிக ளானாக்கால் முழுதும்வைப்போம்
போயோரம் நில்லாதே புருவமேலே
பூட்டுமை த்துங் காணாரே பொருள்காண்பரே.

---

473\. இந்தப் பாடலும் அடுத்தப் பாடலும் சில எழுத்துப் பிழைகளுடன் காணப்படுகின்றன சொற்சிதைவும் இருக்கக்கூடும். பொருள் மயக்கம் காண்கிறோம்.

## பூட்டுத்தாண்டிப் போக அதிசயம்

475. காணீரே புருவவாசல் பூட்டுத்தாண்டி
கணக்குடனே போவீரே மூக்குநேரே
பூண்டீரே மூக்குமுனை புருவமத்தி
புகுந்துகொள்ளும் வாசலது மணியுங்கேட்கும்
ஆண்டீரே யிதிலிட்டுத் தூண்டுதூண்டு
அரகரா வெனமுழங்கும் காதிற்கேட்கும்
ஞானவீடு காட்டிவிடும் மத்தளங்கள்
நடிக்குமல்லோ பேரிகையும் அடங்கசசத்தம்.

476. சத்தமொடு தம்பட்டங் கேட்டலோடு
தாளமென்ன தித்தியொடு புல்லாங்கோசை
வெத்தியென்ன செயகண்டி மேளதாளம்
மென்மேலும் உப்பரிகை மெத்தவுண்டு
கத்தியென்ன நீபாரு யாருங்காணார்
கனலொளியும் வீசிவிடு மன்னேசோதி
மத்தியென்ன யிதுவென்ன வாசல்தாளம்
மனைவழியே நடக்கையிலே தோணுந்தானே.

---

475. புருவ வாசற் பூட்டுப்பற்றி ஏற்கனவே சொல்லப்பட்டுள்ளது. இந்த அனுபவத்திலே பிறந்த நாதங்கள் கூறப்படுகின்றன. மணியோசை மத்தளம் பேரிகைமுழக்கம் முதலியன கேட்கும் இந்த அனுபவத்தைத் திருமந்திரமும் கூறுகிறது.

476. ஒளிக்காட்சியோடு இந்த ஒலிக் கேள்விகளும் நிகழ்கின்றன.

477. தோணுங்காண் மற்றதெல்லா மறைந்திருக்கும்
துாம்பிக்கை யோன்முருகன் துலங்குவார்கள்
பேணுங்கா னிதுவழியே நின்றிடாதீர்
பிரபலங்கள் மெத்தஉண்டு கேட்கவேண்டாம்
மாணுங்காண் கண்டிடலா மிதுமேற்தானே
மக்களே கோடிசத்தி வருகும்பாரு
வீணுங்காள் பெண்சத்தி மாயாரூபம்
விரித்துரைக் கயெட்டாது தடுக்கும்பாரே.

478. தடுக்குமே கோடான கோடிசத்தி
தான்வந்து போராடி மாழுமாழும்
அடக்குமே பின்னாலே அதுவும்வந்தே
அய்யய்யோ யெத்தனையோ யெண்ணவுண்டோ
விடுக்குமே வாசல்வழி தடைகள்தானே
மேலேற வொட்டாது ஒளிவிற்சிக்கும்
கொடுக்குமோ முத்தியென்ற திரிகாலத்தைக்
கூறாது தடுத்துவிடும் மேலேயேறே.

---

477. இந்த அனுபத்தின்போது மேலே முன்னேறிச் செல்ல வேண்டும். வழுக்கிவிடக்கூடாது என்பது மிகமிக முக்கியமாகும்.

478. பல இடையூறுகள் வரும். எண்ணற்ற தடுமாற்றங்கள் ஏற்பட வழியுண்டு. ஏமாந்துவிடக்கூடாது.

479. யேறுவது பிசகாமல் விலகிடாமல்
யிருந்தயிடந் தாண்டிநீ யேறுயேறு
மேறுவது லெகுவாகும் யேறுவாய்நீ
மெய்புருவம் நடுநெற்றி விரைந்துயேறு
தேறுவது அவ்வழியே வாசல்கண்டு
சிறுவாசல் வந்தவழி முத்தியாகும்
கோறுவது புருவத்தில் பூட்டைக்கண்டு
குருவாகி வந்தாக்காற் சேருவீரே.

480. சேருவீர் சுழிமுனையார் தெருவின்வாசல்
சிக்கருத்து உச்சிவழி சிறுந்தவாசல்
போருநீர் போடுவீர் புருவவாசல்
பூட்டிருக்கு மேடையது வலுவுமெத்த
காருநீ நெஞ்சிருக்கும் பிராணன்தானே
கதவையுமே திறந்துவிடும் போவீருள்ளே
நீருமே மெய்ப்புருவத் தமர்க்குள்ளேகி
நினைவையுமே யதிலிட்டுத் தூண்டுவீரே.

---

479. முன்னேறிச் செல். இந்த இடத்தைத்தாண்டி மேலும் ஏறிச்சென்றால் சிறு வாசல் வழியே செல்லலாம் அதுவே முத்திவாசல்.

480. சுழுமுனையாம் ஒரு வாசல் அது. முன்னேறிச்செல் கதவைத்திறந்து உள்ளே போகவேண்டும். மெய்ப்புருவ ஓட்டைக்குள்ளே நினைவு முழுதும் செலுத்தித் தூண்டுவாயாக.

481. தூண்டுவீர் தூண்டையிலே புருவந்தட்டும்
துயர்செய்யும் காதடைக்குங் கண்ணுமூடும்
ஆண்டுபா ருடல்மயங்கும் கிருகிருக்கும்
அத்தனைக்கும் உடல்வலிக்குந் திறக்கும்போது
கூண்டுபார் நடுநடுங்கும் புலன்களெல்லாம்
கொட்டாவி விட்டாற்போற் சீரணிக்கும்
மாண்டுபா ரந்தயிடஞ் சும்மாதானோ
வல்லவர்கள் காண்பார்கள் மற்றோர்தாண்டார்.

482. தாண்டுவா ரிதுபெரிதோ யோகியானால்
தாண்டலாம் புருவமத்தி தாண்டலாகும்
மாண்டதினா லென்னபலன் குருவாய்வாரும்
வையகத்தோ ராகாமல் வந்துசேரும்
பாண்டதனா லேயிருக்கும் மரணந்தானே
பாரென்ன யித்தனைக்குஞ் சாம்பல்தானே
கூண்டிதனா லித்தனைக்கும் லேசுதானே
கூறினோம் நெத்திமத்தி புருவப்பூட்டே.

---

481. தூண்டும்போது புருவம் தட்டும். வேதனை செய்யும் தாது அடைக்கும் கண் இருளும் உடம்பு மயங்கும். கிறுகிறுக்கும் இதைத்தாண்டக் கூடியவர்கள் வல்லவரே.

482. தாண்ட வேண்டும். யோகியானால் தாண்டுவது பெரிதில்லை பலன் கருதின் பலப்பல.

483. பூட்டென்ன பொருளிருக்குந் திருந்துஉள்ளே
பொக்கிஷங்கள் மெத்தஉண்டு களவுயில்லை
மூட்டென்ன சொன்னாரே முறைகள்சொல்லி
முனைமூக்கு மேலேதான் நேரேபாரு
திட்டுநீ உட்புகுந்தால் வெளிச்சங்காணும்
தீபவொளி கண்டிடலாஞ் செங்கண்ணேதான்
ஆட்டுவதி லேநுழைந்து யிருந்துகொண்டால்
ஆதித்தன் கோடியொளி யமர்ந்துநில்லே

484. நில்லப்பா யிப்படியே உச்சிமட்டும்
நேராக யேறையிலே வினோதங்காணும்
கல்லப்பா உன்மனது யெங்கேபாரு
கவலையெங்கே அலைவெங்கே துன்பமெங்கே
செல்லப்பா மானிடனோ வேலையெங்கே
திருவெங்கே குருவெங்கே சீஷனெங்கே
மல்லப்பா யெதிரெங்கே மனிதர்க்குள்ளே
மாமனிதன் சிறுகுழந்தை வசனிப்பானே.

---

483. உள்ளே திறந்துசென்றால் பொக்கிஷங்கள் ஏராளம் வெளிச்சம் காணலாம். தீபஒளி கண்டிடலாம்.

484. இப்படியே நிலை நிற்கவேண்டும் இதன் விளைவு அடாரமானது மனிதரில் மாமனிதன் ஆவாய்.

## மனிதர் செய்கை

485. வசனிப்பான் சொல்லெல்லாந் தெய்வமார்க்கம்
வாயாலே சொல்வானே அன்னாவாலே
விசனிப்பான் மக்களையே யெண்ணித்தானே
வேறுவித யெண்ணமில்லை கவலையில்லை
வசனிப்பான் கருமார்க்கம் விதியின்மார்க்கம்
மங்கையர் ளேயறுத்த புலம்பம்போல
விசனிப்பான் தன்னருகி லிருந்தோர்புத்தி
வேறாகும் நாளறிந்து நாடுவாரே.

486. நாடுவார் மரணத்து நாளறிந்து
நம்முடலைச் சாம்பலென நினைவிலெண்ணி
கூடுவார் தாண்டுதலே தர்மமாகும்
குமரிவந்தால் மலைத்தனயே கட லேகோடே
பாடுவார் வந்தாக்காற் தாலிபோட்டு
பாடகத்தை யிட்டாப்போற் விலங்கேயிட்டு
ஆடுவா' யெப்பொழுதும் உபதேசங்கள்
ஆச்சரியஞ் சொல்லெல்லாம் புதிதுதானே.

---

485. பேசுகிற பேச்செல்லாம் தெய்வ வழியேயாகும். மக்களுக்காகக் கவலப்படுவான். மக்களுக்காக வருந்துவான். தன்னைச் சூழ்ந்துள்ளார் நலத்துக்காக.

486. இந்த உடம்பில் நிலையாமையெண்ணி இந்நிலையைத் தாண்டுதலே அறமாகும்.

487. புதுப்புதிது நகைபுதிது புதிதேஆடை
பொங்குநடை யெங்கும்உடை மின்னற்தோடை
புதுப்புதிது சொற்புதிது விரிந்தகூந்தல்
பையரவம் புத்தல்லோ உடையும்ஆடை
விதுப்புதிது அரைபுதிது தளிரேமேனி
மெய்புதிது இடைபுதிது விலையும்புதிது
அதுப்புதிது இசைபுதிது ஓசையும்புதிது
அழகான அங்கமது புதிதுமாச்சே.

488. மாசுவெகு தூள்புதுசு சோடியான
மாதவரும் வந்தாக்கால் தெய்வம்நீரு
ஆசுயிது யில்லறத்திற் காயப்பெண்ணே
அங்கமெல்லா மாபரணம் வீசும்பெண்ணே
வீசுயிது அணிதுணியும் சேலைதானே
மெய்சிலிர்க்கும் நடைமயிலே அன்னமாதே
காசுயெது பாசுயிது நேசுயீது
காணாத மோசுயிது கரைகண்டாரே.

---

487. உள்ளும் புறமும் எல்லாம் புதிது. அத்தகைய மாறுபடும் மாற்றம். புதிது புதிது என்று அனைத்தும் புதுமை.

488. காயமாகிய பெண்ணின் அணிமணிகளை என்னென்று சொல்ல அழகு அழகு அப்படி அழகு.

489. கரைகண்டோ மென்பார்கள் களத்துவீரர்
கரையென்ன காண்பீரோ மனதில்லாரே
விரையென்ன விரைத்தாலும் பூமியோர்க்கா
மேனியைப்போ லிப்பூமி யேற்குமோதான்
துரையென்ன காண்பீரோ மனதுசேர
துரியபதங் கண்டிடலா மிதுகாணாது
மறையென்ன சொல்லிடுமோ வேதங்காணார்
மங்கையரைக் காண்பதற்கு மனமோஆழும்

490. ஆழமே மனதாழங் கருத்தினாழம்
ஆரறிவார் கிட்டிருந்துங் காணமாட்டார்
பாழமே பாதாளம் பெண்கால்மத்தி
பார்ப்பதுண்டோ முற்றிலுமே விவகாரத்தை
நீடியே யிதுபெரிதே நெற்றிக்கண்ணாம்
நேர்வரவுந் தான்சிறிதே விபகாரங்கள்
ஊடிமே விதையெடுக்கும் யித்தைபோல
ஊராது சதைதிரண்டால் துணையொட்டும்.

---

489. கரைகண்டோம் என்பார்கள். என்ன கரை என்ன கண்டீர் தெரிகிறதா? தூய பரமே கண்டிடலாம்.

490. இப்பாடலிலும் சில சொல்லாட்சிகளில் மயக்கம் உள்ளது.

491. ஊனையொட்டு மெய்சிலிர்க்கும் நடையோடாது
உச்சரிக்கும் பல்திறக்கும் வன ஈயுந்தாழும்
ஆணையிட்டும் குருவைவிட்டும் சாஸ்திரம்விட்டும்
ஆகாய வெளிமட்டுங் கவலையொட்டும்
ஏனைவிட்டு நீங்குவது யிந்தநாளாய்
என்னாகும் நீங்காது சாகும்நாளோ
வாலைவிட்டு நீங்காத யிருளேபோல
வந்துவந்தும் போகாது மயக்கந்தானே.

492. மயக்கந்தான் பெண்சுகமே மேடைகூடம்
வாய்த்தாலும் உப்பரிக்கை கூடகோபுரம்
இயக்கந்தான் போதாது வெளியேதானே
ஏகினா லிப்படியே வெளியுந்தோணும்
தயக்கந்தான் கேட்டதெல்லாம் வேணும்நாணா
தாதிகளும் சேடிகளும் சோடிமாதும்
வயக்கமே யிவர்களுக்குப் பூஷணந்தான்
வாயாலோ ஆபரணஞ் சொல்லல்யேதோ.

---

491. ஒளியும் இருளுமாம் இருநிலையான கூட்டம் இது. எச்சரிக்கை தேவை.

492. இந்திரிய சுகபோகங்கள் போன்ற ஒரு நிலை. கவனமாகச் செல்ல வேண்டும்.

493. ஏதுசொல்லப் பூமியின்மேல் விளைந்தபெண்ணு
இவள்பூமி செங்கைமலை யிதனிற்தானே
வாதுசொல்ல யடிதுவோ விண்ணாஞ் சந்திரன்
வாரியதை விட்டாலும் நதைதானாகும்
ஈதென்ன பெரிதோதான் குற்றஞ் சொல்வார்
இத்தனையுஞ் சுமந்திடுவாள் பாடுபாரி
போதுசொல்லக் காணுது அந்தரங்கம்
புலாஉடலில் மூலசுகம் யென்னவுண்டோ.

494. உண்டோதான் அளற்பூமி சம்சாரிக்கே
உழுதுழுது பலன்காணா உகமையேதோ
மிண்டரே சுகமதனில் கண்டஞாயம்
வெள்ளாண்மை யெடுக்கனென்றாற் கொடுக்காயேயா
விண்டவர்கள் சொன்னதெல்லாஞ் சோர்த்துப்பார்த்தால்
மெய்பெரிதோ உயிர்பெரிதோ நினைவாய்ப்பாடு
கண்டோர்க ளெத்தனைபேர் ஆயிரத்தின்மேல்
கன்னிகையை மணம்புரிந்தும் பாக்கிதானே.

---

493. இந்தப்பாடலும் அடுத்த பாடலும் எதுகை நோக்கி வந்த சொல்லாட்சியிலே மருட்சி காண்கின்றன.

பொருளை வாங்குவதில் மயக்கம் ஏற்படுகிறது.

495. பாக்கியே தீர்வதென்ன உயிரேசேர்ந்து
பக்குவத்தால் மனம்ரெண்டுங் கூடிமாளும்
தாக்கியே மனம்பிரிக்க யெட்டாதய்யோ
தங்கச்சி யானாலுந் துணையாம்பெண்ணு
நோக்கியே யில்லாட்டால் மனந்தான்ஆறு
நூறாணும் ஓர்பெண்ணும் வேணுங்காணும்
ஆக்கியே அக்கினியே நீரேசேர்ந்தால்
அமைதியெனும் பாவனையே விருப்பச்சொந்தம்.

496. சொந்தமென்ற ஆண்மனதும் உயிரந்தானே
தொல்லுலகிற் பெண்மனதும் உயிருஞ்சேரும்
கந்தமென்ற உடல்கலந்தாற் பொழுதுபோக்கும்
காரிழையும் வீரனுமே ஆண்பெண்ஆன்மா
தொந்தமெனச் சோடியது பிரிக்கக்கூடா
தொல்கண்ட மவ்வளவு மிப்படித்தான்
பந்தமெனத் தானிருக்கு மனமுஞ்சீவன்
பழங்கதைகள் சொல்லுவதுகோ லல்லதானே.

---

495. இதுவுமது.

496. இதுவும் அவ்வாறே.

497. அல்லஅல்ல யெம்மூர்த்தி தனியாய்நின்றார்
ஆகாகா வாலையவள் நம்மைச்சார்ந்தாள்
சொல்லல்ல பெரியோரும் பெண்ணேயென்றால்
துகளடியில் வீழ்ந்திடுவார் மன்ந்தான்சாதி
நில்வல்ல சித்தர்களும் பெண்ணூற்சிக்கி
நேர்வழியே திரும்பிவர வெகுநாளாச்சு
இல்லவல்ல நாமென்ன தொந்தம்போக்க
எத்தணித்தா லுடலுயிரு மனமுந்தானே.

498. உடலுயிரு மனந்தானே உடலைநத்தும்
உயிர்நத்து மனந்தனையு மொன்றாய்ச்சேரும்
கடலிலுரு நீருலுப்பு கூடினாப்போல்
காலடியிற் சேர்வதுவே சுகமேவீதி
அடல்செய்யும் ஐம்பூத நினைவேயாதி
ஆச்சரிய மல்லவிது அண்டில்போல்
கொண்டுடலும் மாய்கையால் மோகந்தானே.

---

497. பெண் மயக்கம் எத்தனையோ பெரியோர்களைக் கேடில் ஆழ்த்தியது. நிலையிலே வல்ல சித்தர்களுமே பெண்ணுற் சிக்கிப் பிறகு வழிக்கு வருவதற்கு நீண்ட நாள் ஆயிற்று நாம் என்ன எம்மாத்திரம்.

498. பசியினால் வயிறு உணவை நாடுவதுபோல் மனத்தின் இயல்பு மோகத்தில் ஆழ்கிறது. ஆகவே மிகவும் கவனமாக முன்னேற வேண்டும்.

499. மோகந்தான் மறப்பதற்கு முடியாமற்தான்
முனிபதத்தைக் காணாமல் விட்டோம்விட்டோம்
தாகந்தா னிதுவிடாது யெந்தக்காலம்
சாக்காடு வந்தாலும் பின்னாற்செல்லும்
யூகந்தான் வீணாகு மறிவுள்ளோரக்கு
உற்றதனைத் தள்ளுதற்கு லேசுதானோ
பாகந்தா னிதுவன்றி வேறேபந்தம்
பையரவம் போலவுமே வேறேயுண்டோ.

500. உண்டேதான் கோவில்குளம் மூலஸ்தானம்
ஒருபெண்ணோ அல்லமெத்த உண்டுஉண்டு
மண்டேதா னறியாமற் குளத்தில்வைத்து
முறுநீரைத் தானறியத் தெரியாதேபோல்
உண்டேதான் பலநாளும் தீர்த்தயர்த்திரை
ஊடாடிக் கோவில்குளம் பார்த்துங்கேட்டும்
தின்றேதா னறியீரோ கல்லோநீரே
தேவடியாள் கோலிருக்கு அம்மைகொண்டே.

---

499. நச்சுப்பாம்பு போன்ற ஆகவே ஆகாது. ஆனால் எளிதில் இதைக்கடத்தல் இயலாது.

500. புலிப்பயணம் செய்கையிலே நேர்கிற விபத்துக்களை அறியீரோ அவ்வாறுதானே நிகழ இடமுண்டு.

501. கொண்டேதா னிருக்காரே சாமியென்பார்
குமரியில்லாக் கோவிலுண்டோ சுத்திப்பாரு
சென்றேதான் மெய்யென்றாற் தள்ளுவார்கள்
சிறுபிள்ளை குழந்தையுண்டு வாசல்தானே
மொண்டேதா னிருப்பார்கள் குடும்பந்தானே
மொய்குழலார் பெண்ணுக்கே கோவில்வீடு
கண்டேதான் நாமிருந்த பொருள்களெல்லாம்
கதவடைத்து வைத்திருந்த தெல்லாமீந்தோம்.

502. ஈந்தோமே கோவிலுக்கோ சாமிக்கோதான்
இவர்மனைவி அம்மையவள் பெண்ணுக்கோதான்
நாந்தாமே யீந்தோமே பட்டருக்கோ
நாம்வைக்க யிமதுயில் லாததாலோ
தாந்தாமே ஒவ்வொருவ ரீந்ததாலே
தன்வயத்துக் கெட்டாதே தேவஸ்தானம்
ஆந்தமே மத்தளங்கள் கரியாம் யானை
ஆர்பொருளை யுண்ணுதது முத்தியுண்டோ.

---

501. எண்ணிப்பார்த்தால் பெண்களுக்காக நாம் செய்த பாடுகள் பட்ட கலவரங்கள் ஒழிக.

502. கோவிலுக்குச் செய்தவை கோவிலுக்கா சாமிக்கா பெண்ணுக்கா? எண்ணிப்பாருங்கள்.

503. முத்தியே நாம்தேடச் சாமியுன்னை
மோகித்தோம் நாமறித் தோணுதில்லை
சித்தியோ வருவதில்லை திரிகாலங்கள்
செபமில்லை திரிகாலந் தோற்றுதில்லை
தத்தியே யேகுதில்லை சாங்காலங்கள்
தானிருந்து மெய்யுடற்குத் தானுந்தோண
உத்தியோ செருதில்லை யுடற்கர்மந்தான்
உடலையே தேடினது மனதுதானே.

## பொய்க்குரு

504. மனதென்ன பொய்க்குருவே யுகங்கள்தோறும்
மடங்கட்டுஞ் சாமிகளே சாமியாரே
நீதென்ன ஆச்சிரம முத்தியுண்டோ
நீர்நிற நாமிருப்ப தெந்தக்காலம்
உனதென்று நீயிருக்க நாங்கள்வந்தோம்
ஒருபலனுங் காணமினி உண்மைசொல்லும்
தனதென்று நாமிருந்தோம் நீருஞ்செத்து
சாகும்நாள் கொடுப்பீரோ மனத்துப்பூட்டே.

---

503. முத்தியைத்தேடி மோகித்தோம். ஆனால் கடைத் தேறவில்லை. உடலின் செயல் மனத்தின் காரியம் கீழே இழுத்தது.

504. பொய்யான குருமார்களின் செயலும் நிலையும் கூறத் தொடங்கியவாறு.

505. மனத்துள்ள பூட்டதனைத் திறக்கமாட்டோம்
வாய்கொண்டு சொல்லிடுவோம் வார்த்தைகேட்டு
புனத்துள்ள மாமுள்ளு யெடுக்கமாட்டோம்
பொய்யுடற்கு நெய்யுண்டு சடைவளர்ப்போம்
கனத்துடலே யில்லாட்டாற் சண்டைசெய்வோம்
கையிலே தர்க்கமுண்டு குறடுபோலே
வனத்துள்ளே யாம்போகோம் நீரேபோகும்
மலடிமகன் சன்யாச மெடுத்துக்கொண்டே.

506. எடுக்கொண் டேயோடி யிங்குவந்தர்
எங்கள்மனம் நோகாம லிருப்பதற்கோ
தடுத்துக்கொண் டோடிவந்தீர் முத்திகொள்ள
தானடிக்குஞ் சண்டாளர் போலேயல்லோ
அடுத்துக்கண் டாருயிரை வேரைப்பற்றி
மாவாசி யிருட்டிலிலே கன்னமிட்டீர்
உடுத்திக்கொண் டிருந்தீரே கோவணத்தை
உத்தரிய மெங்தேவைத்தீர் அங்கவஸ்திரமே.

---

505. மனப்பூட்டைத் திறக்கமாட்டோம். வேடங்கள் இடுவோம் கேடுகள் செய்வோம்.

506. என்னென்ன ஏமாற்றுவித்தைகளை நீர் செய்தீர் பொய்குருமாரே என்று சீறியவாறு.

507. வஸ்திரங்கள் மெத்தவுண்டு குல்லாமலே
வாசலிலே திறவானே திறந்தபின்பு
அஸ்திரங்கள் வைத்தாப்போல் அங்குவைத்தே
அலையுற்றேன் பொருளுண்டு தெருவிலேதான்
மெஸ்திரங்க ளெனக்கில்லை வெரும்பாழுண்டு
வேணுதெல்லா மதிலுண்டு பழம்பாழுள்ளே
முஸ்திரங்க ளெத்தனையோ பெற்றபேர்கள்
முறித்தோடிப் போனவர்கள் அனந்தமாமே.

508. அனந்தமுண்டு அவ்வாசல் திறக்கமாட்டார்
அதுவழியே நூல்படியே யேணியேத்தம்
அனந்தமுண்டு வாசலிலே காவற்பாப்பார்
அங்கங்கே தடைசெய்வார் காவல்காப்பார்
அனந்தமுண்டு நாம்மீறிப் போனாற்தானே
அவர்களையுங் காணாதே அழிந்துபோவார்
அனந்தமுண்டு அதிசயங்கள் வேலையில்லை
அப்பாழே பாழ்பாழே பாழேவீழே

---

507. வேடங்களின் பொய்ம்மையையும் மெய்யான வழியிற் செல்லாமையையும் பலபடியாகக் கூறுகிறார்.

508. வழிவாசல் மெய்ம்மையான முறையிலே உண்டு. அவ்வழி ஏகார் எல்லாம் பாழடிப்பார்கள்.

## முப்பாழ்

509. வீழென்றும் பாழதனில் உச்சிப்பாழை
மெய்சிலிர்க்கும் கண்ணமுர்தம் அமுர்தக்கள்ளு
ஊழென்றும் பிறகென்ற உடலின்கர்மம்
ஊழ்பாழே மனம்பாழே உச்சிப்பாழே
வீழென்று சொன்னாரே பாழாம்வீட்டில்
மெய்யரே வந்திடுவீர் குருவேஅய்யா
ஆழென்று சொன்னாரே அப்பாழப்பாழ்
அப்பாழைக் கடப்பதற்கு முப்பாழ்தாண்டே.

510. முப்பாழே முக்கண்ணை மறைத்திருக்கும்
மோகக்கண் திறந்திருக்கு முன்னேதானே
இப்பாழே தாண்டாமல் அப்பாழ்தாண்ட
எத்தினிப்பீ ருச்சிப்பாழ் தாண்டுதற்கே
துப்பாழே யாகாது ஒழிப்பாழ்கண்டு
தூங்காமற் தூங்கிவிடு ஒளிக்குள்ளேதான்
கைப்பாழே ஒளிதாண்டி வெளியிற்சென்றால்
கரையில்லா வொளிவீசும் உச்சிக்கீழே.

---

509. வீழ்வாய் என்றார் பாழிலே. ஆழ்வாய் என்றார் தனிப் பாழ்வெளியில். பாழானவைகளை வெல்லுவதற்கு பாழைத் தாண்ட வேண்டும்.

510. குணத்தை மறைத்திருப்பது பாழ். அதிலே காணலாம் ஒளி. கரையில்லா ஒளி.

511. உச்சியதின் கிழிருக்குங் கபாலவட்டம்
ஊடேதான் நீயிருந்து ஊஞ்சலாடு
கச்சியதன் கிளிமொழியாள் ஊஞ்சலாட்டக்
காலிட்ட மண்டபத்தில் தொட்டிலிட்ட
மச்சிலையின் பாலுண்டு வாமப்பாவை
பகுத்துண்டு நீயிருந்து தூங்குவாயேல்
செச்சையதின் வீடிதுவே அழகாமேடை
தீபவொளி கண்கூசுந் தூங்கிடாதே.

512. தூங்கிடா தேயிருப்பீர் ஒளியாற்தானே
தூங்குமோ ஒளிக்கண்ணு தூங்கிடாது
வாங்கிடா தேயிருப்பீர் சுகத்தாலே
வல்லபங்கள் மெத்மெத்த ஒளியாற்தானே
ஏங்கிடா தேயிருந்தார் கண்டோரெல்லாம்
எங்கேயென்று கேட்டாலுந் தானேதோணும்
ஓங்கிநின்ற மறைப்பெல்லாம் தானேமாளும்
உச்சரித்தா ரெச்சரிக்கை யுன்னுட்தானே.

---

511. உச்சிக்குக் கீழேயுள்ள கபாலவட்டத்தில் ஊஞ்சலாடல் என்பது யோகத்திலே மிக உயர்வாகப் பல சித்தர்களும் கூறுகிற இன்ப அனுபவம். வாலையார் ஆட்டுகிற ஊஞ்சல் அது! ஞான ஊஞ்சல்.

512. அந்த ஒளிக்குள்ளே விழிப்பாகப் பார்க்க வேண்டும். இதில் தூங்கிவிடக்கூடாது. உன் எச்சரிக்கைவேண்டும்.

513. தானேயான் கண்டதொரு ஒளியினாலும்
தமர்வாசற் றிறப்பாலும் உச்சியாலும்
கோணாதே ஆன்மாவில் நின்றதாலும்
குருநாடி சாதனையா யேறலாலும்
வானா மேல்நோக்கிப் பார்த்ததிலும்
மனங்கண்ணும் புருவமத்தி புகுந்ததாலும்
ஊனாடி கோபுரத்திற் சென்றதாலும்
உயிர்மனமும் புருவவழி உச்சியாலே.

### கபாலநாடி

514. உச்சியா முடலுச்சி சுழினையுச்சி
உண்ணாக்கு அண்ணாக்கு மேலேஉச்சி
இச்சியாம் இருப்பிடையிற் பீசமத்தி
இதுநாடி நடுநாடி கோசந்தண்டு
குச்சியாங் கோசமீச தண்ணம்தோட்டு
குருநாடி நாக்குவரை கயிரேபோல
நச்சியே கோய்ப்பாரு நாக்கண்ணாக்கு
நடுமண்டை உச்சிவரை கபாலநாடி.

---

513. அழகான பாடல். உயிரும் மனமும் புருவஉச்சியிலே ஏறிநிற்றல் என்பதுவே யோகநிலை. அது எப்படிக் கைகூடிற்று என்பதைக் களிப்போடு பாடுகிறார்.

514. கீழே பீஜநாடியிலிருந்து உச்சிவரை நடு நாடியும் மேல்நாடியும் ஒரேபாலம் கயிறுபோல ஏறுகிற பாதை அது.

515. நாடியே யின்னாடி நாடிப்பாரு
நம்மறியும் உடலுயிருந் தாங்கும்நாடி
ஓடியே பிராணனது ஆடும்நாடி
உத்தமனா யிருக்கின்ற நாக்குநாடி
தேடியே நவத்துவாரஞ் செய்தநாடி
சிறுநாடி உருநாடி குருவாம்நாடி
பாடியே பேசுகின்ற திந்தநாடி
பையுடலி நடுநாடி வார்த்தைநாடே.

516. வார்த்தையே நாடியென்ற மூலநாடி
வாய்ச்சங்கு நெஞ்சுவயறு கோசபீசம்
ஏர்த்தையே யின்னாடி அண்ணாவிற்தான்
இதுதுடர்ந்து உச்சிமுட்டி கோசமுச்சி
பார்த்தையே ஆதியந்த மிந்தநாடி
பலபேருஞ் சொல்லவில்லை நானேசொன்னேன்
நேர்த்தியே யாதுவழியே மூலப்பிராணன்
நேரேனும் நிமிர்ந்திருந்து உட்கார்ந்தாலே.

---

515. இந்த அற்புதமான நாடி உடலுயிரைத் தாங்குகிற நாடி. பிராணன் ஆடுகிற நாடி. சிறுநாடி உருநாடி குருவாம் நாடி என்று முனிவர் அதைக் கொண்டாடுகிறார்.

516. இந்த நாடியின் நுட்பத்தை வேறுயாரும் இப்படி வெளியிட்டுச் சொன்னதில்லை நான் கூறுகிறேன் இதில் நிமிர்ந்து உட்காருவாயாக.

517. உட்கார்ந்தால் உடலசையா மார்க்கத்தாலே
ஊடுருவி யேறிவிளை யாடும்பாரு
உட்கார்ந்தால் நாடியது நிமிருந்தானே
உயரவே மேல்நோக்கும் நாடிமார்க்கம்
உட்கார்ந்தால் மண்டைசுத்தும் முன்னேதானே
உன்முகத்தில் புருவமத்தி உன்னிமுட்டும்
உட்கார்ந்தால் முட்டியந்தப் புருவமத்தி
ஊடேதான் ஓடிவரும் கபாலஉச்சி.

518. உச்சியிலே வந்தபின்பு யிறங்காமற்தான்
உருண்டுவிளை யாடுமது வட்டமிட்டு
மச்சியிலே மேலிருக்க யிடமும் உண்டு
வாலையென்று சொல்வார்கள் முத்தரெல்லாம்
அச்சியிலே சுத்தலைப்போல் வட்டமாடும்
அம்மம்மா அதனழகு யென்சொல்வேன்
பச்சியிலே கிளிபோலே வர்ணங்காணும்
பலவிதமே சோதியொளி வாலைரூபம்.

---

517. அப்படி இருப்பதன் விளைவுகளைக் கூறுகிறார்.

518. வாலையின் இடம் அது. அங்கே உள்ள சுகத்தை எப்படிச் சொல்வது. கிளிப்பச்சைபோன்ற வர்ணங்களும் பலபல ஒளியாக அங்கே காணலாம்.

அகிலஉலக மெய்ஞ்ஞான சபை என்ற தியசாபிகல் சொஸைடி உட்குழுவினர் தங்களது ஆன்மப் பயிற்சி குறித்து வெளியிட்டுள்ள சில நூல்களில் இந்த வண்ண ஒளிகள் பேசப்படுகின்றன. லெட்பீடர், பளவாஸ்கி அன்னிபெஸன்ட் போன்றவர் அனுபவங்களிலும் இதைக் காணலாம்.

519. ரூபந்தான் திரண்டுருண்டு வாலையாகும்
நொடிக்குள்ளே சுத்திவரும் மனவேகந்தான்
தூபந்தான் ஒளிமிகுதி கோடிசூரியன்
தூண்டாத ஜோதியொளி வீசும்பாரு
சாபமொடு வரஞ்சொல்லும் மேன்மைசொல்லும்
தங்குதற்கு யிருப்பிடமுங் குறியுஞ்சொல்லும்
தாபந்தான் போக்கிவிடும் குருதானெங்கும்
சங்கித்தார் சினேநகரைப்போல் சொல்லும்பாரே.

520. பெயர்சொல்லும் ஊர்சொல்லும் வீடுஞ்சொல்லும்
பின்புவரும் காரியங்க ளெல்லாஞ் சொல்லும்
துயர்சொல்லுஞ் சொல்லாது சுகமேயாகும்
துன்பம்வருங் காரியத்தை முன்னேசொல்லும்
அயல்சொல்லுங் கேளாது தன்னைப்போல
அண்டினரைச் சேகரிக்குந் துணையுஞ்செய்யும்
மயல்சொல்லும் வாராது செயலினாலே
மனம்வென்றால் மனமானாள் வாலையானாள்.

---

519. இந்த ஒளி யனுபவங்களோடு ஒலி கேட்கும் அனுபவமும் ஏற்படும். தாபத்தைப்போக்குகின்ற குருவாக்கியம் கேட்கலாம். இதமும் துணையும் தருகிற செய்திகள் வரும்.

520. வருங்கால வர்த்தமானங்கள் உரைக்கும் காரியங்களை முன்னே சொல்லும். மிகமிகப் பெரிய துணை அது.

521. ஆனாளே உடல்வாலை யாக்கிக்கொண்டாள்
அதுவென்ன யிதுதானே நாடிக்குள்ளே—
ஆனாளே உயிர்மூச்சு சிவன்ஆன்மா
அம்மனமதும் அறிவுடனே புருவந்தாண்டி
ஆனாளே நெற்றிவழி உச்சிமார்க்கம்
அத்தடைகள் நீங்கிவிடும் வாலையாகும்
ஆனாளே உச்சிவரப் பாதைதானே
அறிவித்தேன் புருவமதற் குள்ளேயேற.

522. ஏறப்பா ஏறையிலே வழுக்கும்பாதை
எல்லோரும் போகும்வழி யார்க்குஞ்சொந்தம்
வேறப்பா பாதையில்லை சோதிகாண
மெய்யுடலத் துச்சியிலே தீபம்பாரு
நீரப்பா உள்ளிருக்குந் தடைகள்தானோ
நீங்கிவிடிற் பேரொளியே நிமிஷங்காணும்
தேரப்பா சொன்னவழி பாதைகண்டு
தெருவீதி யேவருவாய் தேர்ந்தால்தானே.

---

521. இந்த உடம்பை வாலை தனது இருப்பிடம் ஆக்கிக் கொண்டார். தப்பாம் இந்த உச்சிப் பாதையில் மேன்மை மகிமை.

522. பாதையிலே ஏறு! வழுக்கும்! ஆனால் வேறு வழியில்லை. முன்னேறிச் செல்.

523\. தேர்ந்தால்தான் நீயொருவன் சித்தர்க்குள்ளே
செகசாலங் கண்டுகொள்வாய் முனிவர்நேர்மை
நேர்ந்தாக்கால் யானொருவ னதனுக்குள்ளே
நெடுநாளே காத்திருந்தேன் உன்னைக்காண
ஓர்ந்தக்கால் வந்திடுவீர் ஒளியின்கூட்டம்
உள்மறையே தேடுதல்லோ மறக்கலாமோ
சார்ந்தாக்கால் யெல்லாருங் கூடலாமே
தம்பியரே அண்ணாவி தமையன்போலே.

524\. போலவே யெண்ணுகிறோம் முன்னோருந்தான்
புகழுகின்ற பின்னோரும் பொருந்தினாலே
சாலவே கூடுடையு மட்டுந்தானே
தமர்போலே வாடுவாரே நல்லோரோடு
மாளவே யெத்தனிக்குந் துன்பத்தார்க்கு
வசனிக்க மாட்டாரே விசனிப்பார்கள்
தாளவே சம்மதமே யானோருக்கு
சதாசிவனு மாலாலு மாகாவாறே.

---

523\. இந்தத்தேர்வை நீ பெற்றால்தான் சித்தர் குழுவில் சேர்வாய். நான் நீண்டகாலம் உன்னைச் சந்திப்பதற்காக இமிநிலை காத்திருக்கிறேன். வா, எல்லாரும் ஒன்றுகூடுவோம், ஒளிக்கூட்டம். அண்ணன் தம்பி, அண்ணாவி மாணவன்.

524\. முன்னேரும் பின்னேரும் சேர்ந்து புகழ்கின்ற உலகம் இது. இதன் உயர்வை தெய்வ சாத்தியம் என்று சொல்வதற்கில்லை. அத்தனை மேலானது.

525. ஆகாதுபிரமனொடு ரிசிகளாலும்
ஆசித்த முனிவரோடு தவசியாலும்
வேகாது பக்குவங்க ளில்லாதார்க்கு
வெரும்பொய்யே சாஸ்திரமுங் குருவும்முத்தி
போகாது பக்குவர்க்கெவ் விதத்தினாலும்
புழுக்குழவி யாம்போலும் விட்டிற்றீபம்
சாகுமே அதுபோலக் குருவினாலும்
சந்ததிகள் தழைத்துவிடு மெந்தநாளும்.

526. எந்தநா ளும்பதங்க ளில்லாவீணர்
எருவடுக்குஞ் சாம்பலுக்கோ கட்டைத்தீய்க்கோ
வெந்தறியார் பார்த்திருந்து மண்ணேதிண்ண
வெரும்மண்ணாய்ப் போகுதற்கோ ஆற்றுநீர்க்கோ
பந்தயங்க ளிட்டாப்போல் மிருகத்திற்கோ
பாரிலுள்ள அக்கினிக்கோ யிடிமின்னற்கோ
தொந்தங்கள் வைத்தாரே குருவுஞ்சாஸ்திரம்
தொன்றுதொட்டுப் பார்த்தறியார் தள்ளினோமே.

---

525. பிரம்மராலும் ரிஷிகளாலும் ஆகாது. பக்குவம் இல்லாதார்க்கு இது கூடிவராது. பக்குவர்களுக்கு நழுவிப்போகாது.

526. மண்தின் பதற்கும் தீ உண்ணுவதற்குமோ இந்த உடம்பு மிருகத்திற்கோ அக்கினிக்கோ எதற்குத் தானே? தாங்கள் எல்லாம் இதே கதைதான்.

527. தள்ளினோ மெங்கள்மேற் குற்றமில்லை
தவமில்லை அறிவில்லை சாதனங்கள்
துள்ளினோ மவரைவிட்டு அப்பாற் தானே
தூரத்தே போனோமே கண்ணிற்கெட்டோம்
தெள்ளினோ மெங்கள்மனந் தெளிந்ததாலே
தெளிவில்லா மனத்தோர்கள் சேரில் ஒட்டோம்
அள்ளினோ மருட்கமலை மொண்டுஉண்டோம்
ஆகாச வெளியைப்போற் சுகமேதானே.

528. சுகமென்ற சுகமதுவு மாறாதய்யா
தூங்கிடிலு நடக்கையிலுந் தொழிற்செய்தாலும்
அகமில்லை யதனாலே மனமேசாந்தம்
ஆனதினா லறிவானோம் அறிவேரூபம்
சகமென்ன அறிவிருந்தாற் தெய்வம்போலே
சாதிக்கும் யாவருமே மனிதரெல்லாம்
யுகமென்ன யெப்போது மிப்படித்தான்
உற்றுணர்ந்து பார்த்திருந்தேன் வசிஷ்டர்நாதா.

---

527. நாங்கள் வீணர்களைத் தள்ளினோம். எங்கள் மேல் குற்றமில்லை. தெளிவில்லாத மனத்தார்களைச் சேரவிடோம். அருட்கடலே அள்ளினோம், மொண்டு உண்டோம்.

528. என்ன சுகம் என்ன சுகம் அது மாறாத சுகம். தூங்கும்போதும் நடக்கும் போதும் தொழில் செய்யும்போதும் எப்போதும் அது இயங்கும்.

529. நீதானே யென்றுரைக்க வசிஷ்டநாதர்
நேர்விசும்பும் பாதாளங் கண்டநாதா
சூதனே கபடமற்ற புசுண்டநாதா
தொல்லுலகே பூதஉடல் உலகந்துன்பம்
மாதனே வேதத்தின் தாயேயான
மறையோனே புசுண்டனெனுங் காகநாதா
வேதனே கண்டிருந்தீர் பார்த்துங்கேட்டும்
மெய்யுடலை வைத்திருந்தீர் வெகுநாள்மட்டே.

530. மட்டில்லாக் காயமதிற் கண்டகாட்சி
வசனத்தீர் கேட்டவுடன் காலந்தோறும்
வெட்டில்லாக் காலமில்லை யென்றுசொன்னீர்
விரித்துரையும் நல்லோர்க ளெப்போதுண்டு
நட்டில்லாக் காலமில்லை லாபநஷ்டம்
நாட்டிலே யெப்போதும் உண்டுஉண்டு
துட்டில்லாக் காலமில்லை சுகதுக்கங்கள்
சூழ்ந்தவெளி வட்டம்போ லுண்டுஉண்டே.

---

529. காகபுசுண்டர் இவ்வாறு சொன்னதும் அவர் மகிமையை வசிட்டநாதர் போற்றிப்பாடுகிறார். இந்த வசிட்ட நாதரும் வசிஷ்டரும் ஒருவரா என்பது ஒருகேள்வி.

530. மட்டில்லாத காலத்தை வசனித்திர் என்று சொல்லி விரிவு கேட்கிறார்.

531. உண்டேதான் கலகங்கள் ஞாயந்நியாயம்
உலகுண்டு வெளிகாகு மட்டுந்தானே
நண்டேதா னிங்குவந்தேன் மலைமேல்நின்றேன்
கண்தெரிந்தேன் அறிவுள்ளோ ரிங்குயில்லை
பண்டேதா னிருக்குதல்லோ மிருகசாதி
வாயிரையேயாகுதற்கோ யிங்கேவந்தேன்
தொண்டேதான் செய்யாமற் குருவேயானேன்
துறையறியா மானிடனுங் குருவாகானே.

532. ஆகாது பஞ்சபட்சி சிப்பிசாஸ்திரம்
அரைகின்ற மனையடியாம் கொளரிதமொடு
சோகாது கொக்கோகம் வயித்தியஞ்சோசியம்
சொல்தவறா மனுநீதி குலமாந்தர்தம்
வேகாது காயசித்தி யோகமார்க்கம்
மெலிவாகும் யோகமுறை பத்தியமார்க்கம்
தாகாது முப்பதின்மேல் ஆறுபதுக்குள்
சந்ததிகள் வரும்போது பத்தியமேதே.

---

531. கலகங்கள்நியாய அநியாயங்கள் நிரம்பிய உலகத்தில் எல்லாம் கண்டுதான் வந்தேன். வெறும் சாப்பாட்டுக்காகவா வந்தேன். இல்லை.

532. நூல்களின் விரிவைக் கூறுகிறார். பஞ்சபட்சியிலிருந்து தொடங்கி யோகம் வரை குறிப்பிடுகிறார்.

533. பத்தியமே யில்லையடா முப்பதின்மேல்
பாரினிலே யாருக்கும் யேனென்றாக்கால்
சத்தியமே உடல்தளரும் பிராணன்குன்றுந்
தவறுமே நாடியஃது நரம்புங்கூடப்
புத்தியுமே தான்மறையும் புசிப்புங்குன்றும்
புலாவெலும்பு ரோமமுதல் நிறமேமாறும்
அத்தியுமே தான்மெலியும் பிராணநாட்டம்
அசைந்தாடும் லெகுவாகும் மெலிவுதானே.

534. மெலிவேதா னுடல்நொந்த காலந்தன்னில்
மெய்யிலே பத்தியங்க ளிடவும்வேண்டாம்
கடலிலே மழைபெய்த காலந்தன்னில்
கல்லுப்பும் விளையாது பசித்தபோது
உடலிலே பத்தியத்தால் உணவைத்தள்ளில்
உன்பெலமுங் குறைந்துவிடும் பிராணன்குன்றும்
திடலிலே மழைபெய்யக் குடநீர்போலே
தெளிந்தநீர் வந்தாப்போல் மலத்தைத்தள்ளே.

---

533. ஞானமுன்னேற்றத்தின் அறிகுறிகளைச் சொல்லியவாறு.

534. மெலிந்துவருகின்ற திருக்காலத்தில் உடம்புக்குப் பத்தியம் செய்து தளர்ச்சி ஏற்பட்டுவிடக்கூடாது. மழைத் தண்ணீரைக் குடத்திலே வாங்குவதுபோலே மலத்தைத் தள்ளித் தெளிவைக் கொள்ளுவாயாக!

## பத்தியம் மலம் போக்க

535. தள்ளவே பத்தியங்கள் மலத்தைப்போக்கும்
தள்ளிவிடு மலம்போக்கச் சலனம்போகும்
மெள்ளவே பெருந்துடையும் யிடுப்பின்மேலே
மேனியெங்கும் பிடரிவரை மலந்தானிற்கும்
உள்ளவே உடல்முழுது முன்பின்னெல்லாம்
ஊடாடி நிறைந்திருக்கும் கண்வாய்மூக்கும்
கிள்ளவே மலக்கட்டும் போக்கினாக்கால்
கிருபைமெத்த யோகமுறை வாசிவாய்க்கும்.

## சகுன விபரம்

536. வாய்க்குமே பட்சிகளுங் குறுக்கேபாய்ந்தால்
வல்லபங்கள் மெத்தவுண்டு வலத்திற்பாய்ந்தால்
ஏய்க்குமே கரிநிறமாம் பட்சியெல்லாம்
யிடமிருந்து வலம்பாயில் மறைக்கச்செய்யும்
சேய்க்குமே பிள்ளையென்றாற் பகையேயாகும்
திருவாணை குருவாணை மெய்யேசொன்னேன்
நாய்க்குமே முப்போது தடுக்குமானால்
நாரணனா லாகாது துன்பஞ்செய்யும்.

---

535. மலக்கட்டு நீங்குவது மிகப் பெரிய அவசியம். யோகமுறைக்கு இது முக்கியம். அதனால் வாசி வாய்க்கும்.

536. பட்சிகுறுக்கே பாய்தல் கருநிறப்பறவை இடமிருந்து வலம் செல்லல் முதலிய பட்சி சாஸ்திரச் சகுனங்களைக் கூறுகிறார்.

537. செய்யுமே பசுவரத்து யெதிரேவந்தால்
சீரியே ஓடிவர யெதிர்நின்றாக்கால்
பையுமே தன்கிளையில் மரணம்ஒன்று
பலிக்கேதா னிரையிட்ட பெண்ணாளாகும்
கையிலே ஒன்றில்லை யெமனுக்கங்கே
கால்நடையி லேறிவந்தான் வினாவினோம்
மெய்யிலே யெமன்வரத்துச் சகுனம்போல
விதவிதமாய் வருவானே லேசாய்த்தானே.

538. தானென்ற ஏமனவன் வருகுங்காலம்
தரைதனிலே பலவிதமே யேமரூபம்
வானென்ற வெளிதனிலே சீவர்க்கெல்லாம்
வாயன்னம் நஞ்சிடுவான் தொண்டைவிக்கி
கோனென்ற தண்டம்போற் கரூபமாவான்
குழந்தையெறி கல்லெறிபோல் அதனில்நிற்பான்
தேனென்ற உண்ணலது செமியாவாறு
செய்திடுவான் பலதொழிலு மிருளைப்போலே.

---

537. பசு எதிரே பாய்ந்துவருதல் உறவினர் மரணம்.

538. எமன் எப்படியெல்லாம் வேலை செய்கிறான் என்றவாறு.

539. இருள்போல மயக்கமது பித்தம்போல
ஏகிடுவா னுள்நுழைந்து மரணகாலம்
மருள்போல வந்திடுவான் கோபரூபம்
மனிதர்களி லெமரூபந் தானுமாவான்
இருள்போல வொளிமறைப்பான் கபாலந்தன்னை
யெப்போதும் உடலுண்ணும் உயிரேயிச்சை
திருள்போலக் கள்ளனவன் மெய்யேசாய்த்து
சீரணிக்கச் செய்திடுவான் காலனாமே.

## காயசுத்தி விபரம்

540. காலனுக்கு உயிருண்ணும் வேலைதானே
காலனுண்ட உயிரெல்லா மேவல்தானே
சூலனுக்குச் சூரனா யிருக்கவேணும்
துணையுண்டு காயசுத்தி யெமனேகாரான்
வேலனுக்கோ குற்றங்கள் யிரையோவிட்டால
வேகாது பிராணனுமே வெந்துகாயா
பாலனுக்கோ பசிநீங்கும் கோழைபோகும்
பசியொழியுங் காமனுயிர் பறந்துபோமே.

---

539. எமன் உடம்புக்குள் செய்கிற மரண உத்திகளைக் கூறுகிறார்.

540. காலனுடைய வேலை உயிரை உண்ணுவது. இதற்கு மாற்றாகக் காயசுத்தி செய்ய வேண்டும் என்றபடி.

541. பறந்துபோம் மூலப்புளி தின்றாயானால்
பசிக்கையிலே அன்னமுண்டு பசிதீர்ந்தாப்போல்
சிறந்துபோந் தன்னுடனே காயசுத்தி
தேறிவிடில் வென்றிடலாம் யெமனார்கோழை
சுறந்துபோம் ஞானாமிர்தம் உடலந்தன்னில்
தோன்றிடுமே ஞானவொளி சோதிதானும்
இறந்துபோ மனவிருளும் வெளிச்சங்காணும்
இல்லறத்தி லிருந்தாலு முத்திதானே.

## முத்தி சித்தியடைய

542. முத்திதான் கபங்கோழை யீளைபோனால்
முத்திசித்தி வாய்க்குமடா மோகமில்லை
சித்தியே யில்லாட்டாற் தெய்வம்வேறே
சிவன்வேறே மால்வேறே பிரமன்வேறே
சத்தியே பஞ்சதொழில் தெய்வங்கூரு
தான்வேறு நாம்வேறு முத்திவேறு
வெத்தியே வடிவேலைக் கண்டாக்கன்றி
வேணசித்தி வாராது மெலிகுவாயே.

---

541. மூலப்புளி உண்ணுவதன் பயன் சொன்னார். இல்லற முத்தி அது என்கிறார்.

542. கபங் கோழை சளி போனால் உட லுக்கு முத்தி சித்தி வாய்க்கும் என்பதைக் கூறுகிறார்.

543. மெலியாமற் சொல்லுகிறேன் போகாமற்தான்
மேனியெங்குந் தேடாமற் புருவம்பாரு
மலியாமற் பார்த்தாக்கால் யெதிரேதோணும்
வாய்ப்பகட்டா லாகாது குளிர்ந்தஞானம்
சலியாமல் நீபாரு தானாகத்தான்
தந்திமுகன் சேவடியைத் தனியேபாரு
நலியாம லிருப்பதற்குச் சொன்னார்நல்லோர்
நாம்தேடாக் காரியமேன் நாடுவீரே.

544. நாடுவீர் சொந்தமனை விபகாரங்கள்
நாட்டிடுவீர் சத்துருவை ஒட்டிடுங்கள்
தேடுவீர் பொன்வெள்ளி பஞ்சலோகம்
வாசிமங்கை வாழுதற்கு வாலைக்கீவீர்
போடுவர் மத்தளங்கள் புஷிகக்கோலம்
பூவணையு மாடிமுதல் சோடிணைக்கீவீர்
கூடுவீர் சாதனங்கள் அடியோடி
கும்பிட்டுக் கூத்தாடிச் செத்துப்போவீர்.

---

543. உள்ளுக்குள் ஆன்ம ஆற்றலைத் தேடுவதை முன் பாடலில் வேலவன் சேர்க்கை என்றார். இங்கே தந்திமுகன் என்று விநாயகரைக் குறிப்பிடுகிறார்.

544. வெளிவேடங்கள் அலங்காரங்கள் மரணத்தை வெல்ல மாட்டா!

545. செத்துப்போங் காலம்வந்தால் சிரிப்பார்பார்த்து
சிரியாத மனந்தானுஞ் சிரித்துயேய்க்கும்
வித்துப்போம் நாமிட்ட பயிருஞ்சாமி
வெள்ளாண்மை யாகாது மலடுமாகும்
கொத்துப்போங் கூட்டோடே குலமுஞ்சாவி
குருகுலமே யாகாது வெந்துகோகும்
இத்துப்போம் வெள்ளாண்மை நாமேசெய்த
ஏரிரை நஞ்சைபுஞ்சை திட்டுத்தானே.

546. திட்டுத்தான் பிறர்நகைக்க முத்தரெல்லாம்
தொண்டுபோற் தானிருக்கப் பிலமாஞ்சித்தர்
விட்டுத்தான் போயினரே மேலோரெல்லாம்
வெள்ளாட்டி தள்ளிவிட்ட குப்பைபோல
கட்டுத்தான் செய்தாலே சிவத்தால்முத்தி
காணுமென்று சொன்னாரே நோயற்றரோ
பட்டுத்தான் போனாரே சினமேசெய்தோர்
பரிவாசி காணாதார் மெலியச்சொன்னார்.

---

545. சாகும்காலம் வராதபடி காக்க வேண்டும். வந்துவிட்டாலோ நாம் செய்த ஆன்ம வேளாண்மை அத்தனையும் நாசமே!

546. பரிசாசியாகிய மூச்சுப் பயிற்சி தெரியாவதர்களின் கதி கூறியவாறு.

547. சொன்னார்கள் மெலிந்தோர்கள் கோடாகோடி
துன்பமென்று விட்டாரே கோடாகோடி
மின்னார்கள் வேசமதாற் கோடாகோடி
எண்ணாமற் செய்தறியாப் பாவங்கோடி
மெய்காளாத் தோசத்தார் கோடாகோடி
எத்தனையோ சொல்லிவைத்தார் முறைகள்கோடி
நன்கைச் சாதித்துக் காணாரெல்லாம்
நாடினார் மெத்தசித்தி யில்லைதானே.

548. சித்தியில்லை ஆணடொன்று பழக்கமில்லை
செத்தபின்பு மறுபிறவி காணலாமோ
முத்தியது கண்டோரும் பிறவிகாணார்
முழுமோசத் தானறிந்தால் மெய்யதாகும்
மத்தியென்ன நாமறிதல் குருவாங்காணும்
வல்லபங்கள் மெத்தவுண்டு குருவினாலே
செத்துமென்ன முத்தியது யெங்கிருக்கும்
சிறுவர்சொன்ன அம்புலிபோற் தேறுவீரே.

---

547. சொல்லி வீணானவர்கள் பல கோடி, துன்பம் என்று இந்தப் பயிற்சியை விட்டவர்கள் பலகோடி. இப்படிச் சித்தி பெறாதார் வரலாறு பலகோடியாம்!

548. செத்த பிறகு முத்தி என்ற பேச்சுக்கு இடம்இல்லை குருவினால் வரக் கூடிய வல்லமைகள் பல. விட்டுவிடக்கூடாது.

549. தேறுவீர் முறைகொண்டு செயலைக்கண்டு
தீபவொளி காணுதற்குத் தூண்டுநாதி
சாருவர் மேலோரைச் சார்ந்தாற்தானே
சந்ததிபோற் சேகரிப்பாற் தேனேயினார்
கோருவார் தன்கிளையைக் குமரிபாலை
கொட்டுவிப்பார் பாலமுர்தம் ஊட்டுவிப்பார்
நேருவார் குருவென்று சொல்லார்வந்து
நிமிஷத்தில் ஆளடிமை செய்குவாரே.

550. செய்துகொள்ள யிதுபெரிதோ பெரியோரானால்
சிறுபிள்ளை கூடாதோ தேறும்பிள்ளை
வைதுகொள்ள வையாதே குறையேதொட்டால்
வாய்கட்டிக் கேளாதே வருகுந்தானே
நைதுகொண்டு போகாரே யிவர்க்கேஞானம்
நாடுமே நவிலுமே குருவேஞானம்
பெய்துகொண்டு தானிருக்கும் பிறவிக்கூட்டில்
பெரியோர்போ லேயிருப்பார் பேருள்ளோரே.

---

549. இந்த முறையைக் கண்டு தேருங்கள் தேறுங்கள். தீபஒளி காண்பதற்குத் தூண்டுகிற நெறி இது. கிளைவளர்க்கும் குமரிப்பாலை அமுதமாக ஊட்டும். குருவைஅண்டி உய்யுங்கள்!

550. செய்தவற்குப் பெரிதில்லை இது. குருவை நாடுவது வையாதே. குறை சொல்வோர் பேச்சைக் கேளாதே குரு ஞானத்தைப் பெய்துகொண்டிருப்பதை விட்டு விடாமல் பயன்படுத்திக் கொள்வாயாக!

551. பேருள்ளா ரஞ்சுவரோ பெரியோர்ஞாயம்
பெருமைமெத்த வுண்டதனாற் பெலத்தவீரர்
மேருள்ளார் மலைபோலே அசையாரய்யா
மென்மேலும் வளர்ந்திடுமே மெய்யைக்காண்பார்
தாருள்ளார் கண்டாலும் ஓடிப்போவார்
சந்ததிகள் கண்டாக்கால் விடுகுவாரோ
சீருள்ளார் சேர்ந்திடுவர் விரதம்போல
இனிபசி யாறுமட்டும் விரதந்தானே.

552. விரதவகை குருநெறியே விதம்நோன்பு
மேன்மக்க ளானாக்கால் விரதம்பூண்டு
சுரதவகை கண்டுகொண்டு துன்பமற்று
தூங்காமற் தூங்கியவர் சுகத்தைக்கொண்டு
இரதமெனத் தேடாம விரதந்தானே
யெப்போதுந் தொட்டவரும் விரதம்நீங்கார்
பரதமென ஆடாரே உலகோர்போல்
பரந்தடித்த பந்தெழும்பும் பந்துபோலே.

---

551. பெருமை மிக்க ஆற்றலுடையது. எனவே அஞ்ச அவசியமில்லை. சாதாரண மனிதர்களே அஞ்சுவார்கள். மெய்யுணர்ந்தோர் அஞ்சார்கள்.

552. குருநெறியில் விரதம் காத்து, துன்பமற்று தூங்காமல் தூங்குகிற நிலையிலுள்ளோர் அவர்கள்.

553. பந்துபோற் திரண்டுருகும் பாவனைக்கே
பாவாணர் சொல்வினைக்கும் பத்தியார்க்கும்
வந்துபோய் சேகரித்து வளர்ப்பார்பாரு
மதியுடையோர் விதியறிவீர் மரணத்துன்பம்
இந்துபோற் தானிருக்கு மிந்தக்கூடு
இதுவுடைய யெத்தனைநாள் யெண்ணிலாதோ
சிந்துபோல் நீர்த்தூவி வெள்ளையுப்பைச்
சிந்தினபார் அலைவீசித் திரையைப்போலே.

554 திரைபோல மனமுருண்டு திரண்டுஆடும்
திருவான அறிவதனைக் கெடுத்துக்கொல்லும்
உரைபோல ஓடியது விழுங்கிக்கொள்ளும்
உவமைசொல்ல முடியாது பிருள்போலாகும்
கரையென்ன வெளியகலம் நீளம்சுத்து
கதவடைத்து மறைத்தாலும் அப்பாற்செல்லும்
கரையென்ன நவவாசல் வழியேசென்று
தொந்தோமென் றாடுமிந்தச் சுருதிபாரே.

---

553. உலகமாந்தரின் நிலை எவ்வாறு தாழ்ந்ததாக இருக்கிறது என்பதைச் சொன்னவாறு.

554. உலக இச்சைகளைசித்திய உலகோர் வாழ்வில் காக மனிதர் உடம்பு ஒன்பது வாசல் வழியாக விவரிக்கிறது.

555. சுருதிபா ரித்தனைக்கு மாதாரங்கள்
சொல்லியினி யென்னாலே முடியாதய்யா
மிருதிபா ரிதனாலே சொன்னதெல்லாம்
வேணதுண்டு சோதனை விபரமெல்லாம்
உறுதிபார் மனமறிய விபரமாகும்
உற்றுப்பார் ஓடாமற் கூர்ந்துபாரு
அறுதிபார் ஒளிகண்டு கூடுமட்டும்
ஆசானைக் கூடவைத்து விட்டிடாதே.

556. விட்டிடா தேசுருதி குருவைத்தானே
விபரத்தைக் கண்டுகொண்டு மெலிந்திடாதே
சுட்டிடா தேசடத்தைப் பட்டினிபோட்டு
தூங்காமற் பாராதே தவம்நேராது
குட்டிடா தேமாய்கை கோலம்பாரு
குமரிகட்கு அஞ்சாதே கிழவிப்பூணு
நெட்டிடா தேயிருந்தா லென்னசெய்வோம்
நீங்காம லேயிருந்து தூங்குவாயே.

---

555. இத்தனை உண்மைகளைச் சொன்னதற்கு ஆதாரம் சொல்லப்புகுந்தால் அது முடியாத காரியம். உற்றுப்பார்த்தால் எல்லாம் புலனாகும். ஆசானைவிடாமல் பிடித்துத் துணையாக வைத்துக்கொள்.

556. குருவை விட்டுவிடாதே. இந்த உடம்பை வருத்தி பலவீனப்படுத்தி வீணடித்துவிடாதே.

## யோகியிருக்கிமிடம் சாதனகாலம்

557. தூங்குவாய் வாசிகயிறு ஊஞ்சலேறு
தொக்குஉடல் காயமிதிற் சூத்சுந்தானே
தேங்குவாய் கண்டதனில் விட்டுப்பாரு
தெருத்திண்ணை யாகாதே அரையாமூலை
ஓங்குவா யுள்ளிருந்து பார்க்கச்சித்தி
உருமத்தி யாகாதே சாதனங்கள்
வீங்குவா யுண்டஅன்னஞ் செரிக்குமுன்னே
மேனியதில் வயிறுநிறைய உண்ணொன்னாதே.

558. உண்ணவேண் டாமென்று தடுக்கவில்லை
உயர்நெஞ்சு தத்தளிக்கும் குருவிமானும்
எண்ணவேன் டாம்நினைவு செபந்தியானம்
இருந்தஇட மசையாம லிருந்துபாரு
கண்ணிரண்டும் ஒட்டிடுமே புருவம்திதி
கால்வீசி மண்ணிடுமே காலைமாலை
விண்ணிருந்த யிடமதுவே நோக்கிப்பாரு
வேதுண்டு மூன்றாண்டில் விழலாகாதே.

---

557. வாசியாகிய கயிற்றிலே ஏறி ஊஞ்சல் ஆடு என்று அழகாகச் சொல்கிறார் முனிவர்.

558. நெஞ்சு தத்தளிக்கும்படியும் கருவிமானும்படியும் விடாதே உண்ண வேண்டாம் என்று சொல்லவில்லை.

559. ஆகாதே போனாக்கால் நாமென்செய்வோம்
அல்லாருஞ் சொன்னதெல்லா மறிந்துநில்லு
வேகாதே நீயனலிற் சாம்பலாக
வெந்துதூ ளாகுமன்னே விரைவாய்ப்பாரு
நீகாதல் கொண்டலைந்து வெகுநாள்சென்று
நிசங்காணத் தெரியாட்டாற் கேலியாகும்
போகாதே விடுவிட்டுப் புருவம்பாரு
பொங்கியது தத்தளிக்கும் புருவப்பூட்டே.

560. புருவமே சிறுவாசற் கதவின்தாளைப்
போக்கினாற் தெரியுமடா சொர்க்கமெல்லாம்
தெருவமே னவ்வாசற் கெதிராம்வாசல்
கேட்டவரங் கொடுக்குமல்லோ நேர்மூக்குச்சி
பருவமே தொட்டுவிடில் லேசதாகும்
பகர்ந்தாரே மனமிரங்கி உந்தனுக்கு
அரூபமே காணுதற்கு என்னசொன்னார்
ஆர்சொல்வார் தாய்தந்தை சொல்லிடாரே.

---

559. நீ உன் உடம்பு அளவிலே வெந்தழிந்துபோகாமல் காப்பாற்ற வேண்டும் பெரியவர்கள் வார்த்தை செவிசாய்த்துக் கேட்பாயாக. புருவம் பார். வெல்லுவாய்.

560. புருவ வாசலின் கதவைத்தாள் திறந்து நுழைந்து பார்த்தால் சொர்க்கமே தெரியும். விட்டுவிடாதே இதை.

561. சொன்னார்கள் பெரியோரும் யெளியோர்பேரில்
துயர்வைத்துச் சொன்னாரே பழிக்கேயஞ்சி
மின்னார்கள் சிற்றின்பந் தானேகொலும்
மேலின்பால் கண்டவர்க்கே யல்லாதுண்டோ
பொன்னார்கள் கோவில்குறம் புழுக்கூடெங்கும்
புலாலிறச்சிக் குள்ளிருக்குஞ் சோதிமுத்தி
நன்னார்கள் கண்டதனைக் கிரிரேதி
நவின்றதனைப் பாராட்டால் யென்னசொய்வோம்.

562. என்செய்வோம் பாடுபட்டார் பலனடைந்தார்
இப்பொருளைக் காணாட்டா லென்னசெய்வோம்
பின்செய்வோ மென்றாக்கால் கிழமாமூப்பு
பெருந்துணையாய் நடந்துவரும் தொடர்ந்துகூடி
முன்செய்வோ மென்றாக்கால் முப்பதுக்குள்
முன்மறந்து பின்நினைந்து முறைமையாச்சு
கன்செஞ்சர் நினைவிருக்கு மிருளாங்காடு
காடுவெட்டித் திருத்துவதற் கென்செய்வோமே.

---

561. பெரியவர்கள் எப்பாரும் எளியவர்கள்மீது இரக்கம் வைத்த காரணத்தால் இந்த அரிய மெய்யுணர்வுகளை எடுத்துச் சொன்னார்கள்.

562. பாடுபட்டவர்கள் பயன் அடைந்தார்கள். கொஞ்சம் வயது ஆனபின்பு செய்து கொள்ளலாம் என்று தள்ளிப்போட்டால் மூப்பு பிணி வந்துவிடும். முப்பது வயதுக்குள் பயிற்சியில் ஈடுபட்டு விடலாம் என்றால் முன் மறந்துபின் நினைந்த கதையாகி காடுவெட்டித்திருத்த வேண்டிய நிலை ஏற்படும்.

563. என்செய்வோம் புத்திசொல்லி அமுர்தம் வார்த்தும்
இனங்காத மடையருக்கு அபராதங்கள்
பொன்செய்தும் வலுமைதந்தும் புழுக்கூட்டிற்கு
பொதுவனார் வந்திடித்தும் புலைநோய்வந்தும்
மண்பசியாந் தீயிட்டும் பித்தங்கோழை
வாதமுடன் தொந்தித்து நலியச்செய்தும்
மின்செய்த நரைமூப்புச் சாக்காடேதான்
மேலிட்டுந் தோணறியார்க் குரைப்பதேதோ.

564. உரைப்பதெது சொல்வறியா ரிணங்குவாரோ
ஒருமொழியை நம்பாட்டாற் குருவென்செய்வார்
விரைப்பதெது தென்னையன்றிச் சொல்வதேது
மேனியுட லறிவார்க்கு மெல்லியில்லம்
கரைப்பதெது அவர்மனதைக் கரைக்கலாமோ
காசினியில் வெளிமறைத்தால் மனமேமாளும்
சிரைப்பதெது அறிவன்றி மனமேமாள
தீயருக்கு யெட்டாது அறிவின்சோதி.

---

563. அறிவுரைகள் கூறி இன்மையாகச் செய்தும் இணங்காத முட்டாள்களுக்கு என்ன செய்ய! நோய்நொடிகள் வந்து வயதாகிச் சாக்காடு தான் முடிவாகும்.

564. என்ன சொல்வது அவரின் மனத்தைக் கரைப்பது எப்படி? தீயவருக்கு அறிவின் ஒளி எட்டாது.

565. அறிவினொளி சோதிகண்டோர் சோதிகாண்பார்
அய்யாகேள் கோடிமதி கோடிசூரியன்
பிரிவினொளி கொண்டல்லோ சோதிகாணும்
பெருஞ்சோதி சிறுஒளியா மனக்கண்ணாலே
குருவினொளி காண்பதற்கு அறிவின்கண்ணால்
கொண்டுணர வேணுமல்லோ நாமென்செய்வோம்
தருவினுரு காண்பதுவும் கண்ணேபோல
தன்னுருவைப் பார்ப்பதற்கு அறிவேசோதி.

## அறிவே சோதி

566. சோதியென்ன பெருஞ்சோதி அறிவாற்தானுந்
துலங்குவது வேதப்பொருள் பொருளாம்விண்ணு
பாதியிதிற் கண்டிடலா மறிவாற்தானே
பழம்பாதி சொல்லவென்றால் வாலைவந்தே
சேதியதிற் சொல்லிவைப்பாள் தினமுந்தானே
தினந்தினமும் வந்தாலும் ருசிமயகாணும்
கோதியவள் சொருகிடுவாள் முடியாள்வாலை
கோவணத்தை யீந்தாலும் பிடுங்கிக்கொள்வாள்.

---

565. அறிவன் வெளிச்சம் தெரிந்தவர்கள் அருளின் வெளிச்சம் காண்பார்கள். பெரிய சோதி சிறுவெளிச்சமாக மனக்கண்ணில் தோன்றும் அறிவின் கண்ணால் கொண்டுரை வேண்டும். நாம் என்ன செய்வது. ஒரு மரத்தைப் பார்ப்பது தனது கண் என்பதுபோல தன்னைத்தான் காண்பதற்கு அறிவே ஒளியாகும்.

566. ஆன்ம இன்பம் என்னும் வாலையின் ஞானமுயக்கம் கூறுகிறார்.

567. கொள்வதோடு முக்காலுங் கொடுக்கேனென்பாள்
கோவணம்போ லல்லவது பெருநீளந்தான்
மொழிவதென்ன யென்னம்மை லேசாய்த்தானோ
மோகினியுங் காணாது பெண்ணும்போகா
தழுவலென்ன கண்ணாரக் கண்டகாட்சி
சாகும்வரை பார்த்திருப்பாள் முழுதும்பார்ப்பாள்
அழுவதென்ன அவள்வந்து தானேயாகி
ஆக்கைதனைக் கைக்கொண்டு ஆட்டுவிப்பாள்.

568. விப்பாளே தன்பொருளை யடக்கிவைப்பாள்
மேனியதைக் காட்டிடுவாள் பொருளைக்காட்டாள்
முப்பாழே வாவென்பாள் நான்தானென்பாள்
முறைமையது தவறாளே வெகுநாள்போகி
அப்பாலே வந்தாக்காற் கிட்டவைப்பாள்
ஆர்சொல்லுங் கேளாளே அதன்மேலப்பா
எப்பாலே யேதுமில்லை மடிமேல்வைத்து
எந்தனுக்கு நாயகனே எனச்சொல்வாளே.

---

567. வாலையின் அருள் என்னென்பது. முடிவுவரை விடாமல் யாக்கையை ஆட்கொண்டு ஆட்டுவிப்பாள்.

568. அவள் செய்கிற அரிய முயக்கங்களைக் கூறுகிறார் வேறு எப்படிச் சொல்லுது! மடிமேல் தூக்கி வைத்து எனக்கு நாயகனே என்று கொஞ்சுவாள்.

569. சொல்வாளே அதில்யேங்கிச் சிக்கவேண்டாம்
தோகையல்லோ அருளுருவே கவனமாய்நில்
வெல்வாளே சித்தர்களைப் பழையநீலி
வேதத்தை உடையாக உடுத்திக்கொண்டு
மல்வாளே நானிருக்கே னென்றுசொல்லி
வயற்றெரிச்சல் பட்டிடுவாள் ஓடிப்போவாள்
கைப்பாளே யாகாது கட்டிப்பாரு
கதவிடித்து வாசிகட்டக் கெஞ்சுவாளே.

570. கெஞ்சுவாள் மெய்மெலிந்து நொந்துநைந்து
கிறுகிறென்று தான்சுழன்று பதறிச்சுற்றி
அஞ்சுவாள் பேய்ப்பறைச்சி பிழைப்பில்லாமல்
ஆருக்கு மெட்டாளே விட்டுத்தொட்டு
மிஞ்சுவாள் நகைத்தாக்கால் மூண்டியாகி
வேணதெல்லாஞ் தாரேனென்று ஓடிப்போவாள்
மஞ்சுபோற் தானிருண்ட இருளைப்போல
மாபறைச்சி கனவனத்தி ரூபமாறி.

---

569. அவருடைய ஆன்ம விளையாட்டுகளைக்கூறி அவளைப் பிணைத்து நிற்கும் வழியைச் சொல்கிறார்.

570. அவருடைய லீலைகள் எப்படி என்பதை விளக்கி மாபறைச்சி, கனவனத்தி, ரூபமாறி என்றெல்லாம் கொஞ்சுகிறார் முனிவர்.

571. மாறியே பெண்ரூபம் ஆணேவாகி
மௌனியா யலியாகி வாயைமூடி
கூறியே கைகட்டி வாயைப்பொத்தி
குடுகுடென்று ஓடிடுவாள் திரும்பிப்பார்ப்பாள்
தேறியே தான்வருவாள் மோகமென்பாள்
சிங்காரத் தோடிருந்து நடித்துரூபி
கூறியந்தச் சொல்லாலே வெகுநாட்சென்று
குறுகை காட்டிடுவாள் வெட்கமாவாள்.

572. வெட்கியவள் போலிருப்பாள் ரூபங்காணாள்
மேதகைய உடல்தொடவும் எட்டாள்கிட்டாள்
துட்சியவள் சொல்லடங்காள் மதன்போலுள்ளாள்
தூங்கவிட ஓடாளே விழித்திடாளே
மட்கியே போலிருப்பாள் வசனியாளே
வாய்வார்த்தை கேட்பதற்குத் தவமேவேணும்
சொக்கியே போகாதே அவளேவந்தால்
துன்பம்வந்து நேர்ந்துவிடும் நினைவாய்நில்லே.

---

571. அவருடைய ஊடலும் கொஞ்சலும் அன்பு விளையாட்டுகளும் எப்படி எப்படி என்பதை விரிவாகக் கூறியவாறு.

572. அவளுடைய பசப்புகள் கொஞ்சல்களில் எச்சரிக்கையாக இரு என்று சொல்லித் தவத்தின் குறிக்கோளை வற்புறுத்துகிறார்.

573. நினைவென்ன அவள்தானே உள்ளிருந்து
நேரிலே வெளியேறிக் குதித்துநிற்பாள்
துணையென்ன பேசிடுவாள் சுழித்துப்பார்த்தால்
தூரத்தி லேகிடுவாள் கண்ணுக்கெட்டாள்
இணையென்ன நாமிருந்தா ளவளுந்தானே
ஏதிட்டுப் பாராளே சம்பிரதாயம்
மனையென்ன உட்காரச் சொனாலந்த
வாயென்ன மூடுமுன்னே மறைகுவாளே.

574. மறைகுவாள் வந்திடுவாள் உல்லாசிப்பாள்
வந்ததையும் போனதையும் மறைத்துநிற்பாள்
திறையென்ன உடலநிறமும் உருபுமாறி
சிறுகன்னி பெருங்குமரி கிழவியாவாள்
தறையென்ன ஓர்நிலையில் நிற்காளந்தத்
துணைவள்ளி யெவ்விதமும் விடுகாள்நம்மை
பறையென்ன இவள்தானே நமக்குமுன்னே
பரியாசஞ் செய்தாற்போற் சாலஞ்செய்வாள்.

---

573. தோன்றுவதும் மறைவதும் வருவதும் ஏகுவதுமான அவளுடைய எழிற் செயல்களை பாடுகிறார்.

574. மறைவாள் தோன்றுவாள், உல்லாசம் செய்வாள் குமரியாவாள் கிழவியாவாள் ஒரு நிலையில் நிற்க மாட்டாள் அந்தத் துணை வள்ளி! எப்படியும் நம்மை விடமாட்டாள். அவளுடைய ஜாலம் இப்படி.

575. சாலங்கள் விளையாட்டு அனேகஞ்செய்வாள்
தாயவளும் குட்முன்னே தாலியில்லாள்
கோலங்கள் பலரூபம் யெடுத்தேயாடி
கோடியென்ன பலகோடி தொழிலுமாடி
ஆலங்க ளிட்டிடுவாள் அழகில்லாளே
அடித்தாலும் வையாதாள் வந்தாற்பேசாள்
தூலமிதி லிப்படியே யிவள்சொரூபம்
சொல்லுமே சொல்லாளே வாய்திறந்தே.

576. வாய்திறந்து சொன்னாக்கால் முத்திசித்தி
வல்லபங்கள் பேசிடலாஞ் சித்திதானே
தாய்தொண்டு பேசரியார் சித்தராகார்
சமுசாரி போலாகும் வாலைகண்டால்
நோய்கொண்டு யிருப்பார்கள் பேச்சில்லாட்டான்
நுண்ணறிவு யிருந்தாக்கால் பேசுவாளாம்
பாய்கொண்டு போவார்கள் யெங்கேகாண்பார்
பத்தினியைக் கண்டாக்காற் பேசுவீரே.

---

575. வாய்திறந்து பேசாமல் உருவ லீலைகள் இத்தனை செய்வாள்.

576. வாய்திறந்து பேசினால் முத்தி சித்திகளை விளக்கமாக பேசலாம். சித்தி கிட்டும். ஆனால் அவளுடைய முன் விளையாட்டுக்கள் இப்படியெல்லாம் அமையும் என்கிறார்.

577. பேசவே நான்காணேன் வெகுநாட்சென்று
பேர்பெரிய சோதித்தாய் ரூபத்தாலே
கூசவே யெனைக்கண்டு கூசவேண்டாம்
குமரியல்ல நான்கிழவி சேரவேண்டாம்
காசுமே லிச்சையுண்டு யெனக்குங்கூட
கன்னிசட மெடுத்தாக்கால் ஆசைபொங்கும்
தூசுபோ லிடம்பொருளைச் சேகரித்து
துன்பமற்று யென்னுடனே வாழென்றாளே.

578. என்றாளே வாணிசொல்ல யானுங்கேட்டு
இடம்பொருளைச் சேகரிக்க யெத்தனித்தேன்
குன்றாளே யவள்தானுந் திரும்பிவந்து
குடிகெடுக்கும் பின்னிடுவாய் நானேனென்றாள்
அன்றாளே யின்றுவரை கிழவிதானே
ஆருக்கு மாகாளே நல்லோர்க்குத்தான்
இன்றாளே நான்கண்டு தெண்டம்பண்ண
எத்தனித்தேன் உச்சரிக்க ஓடினாளே.

---

577. நீண்டநாள் கழித்து என்னோடு அவள் பேசினாள். என்னைக்கண்டு கூச வேண்டாம். நான் கிழவி, குமரியில்லை. சேரவேண்டும் என்ற எண்ணம் வேண்டாம். எனக்கும் காசுமேல் இச்சை உண்டு சேகரித்து என்னோடு வாழ்க்கை நடத்து என்றாள்.

578. இதைக் கேட்டு நானும் இடம் பொருளைச் சேகரிக்க முயன்றேன். வருவாள் ஓடிவிடுவாள் - இப்படி நடந்தது.

579. ஓடினாள் பேசுவாயா வென்றுகேட்டேன்
ஒருபொழுது சிறுநகையாற் தந்தங்காட்டி
மாடிமே லெறினாள் யானுஞ் சென்றேன்
மருமனைவி நீபோபோ யென்றுசொன்னாள்
கூடினா ளெனைக்கூடி முத்தமிட்டாள்
குமரியெந்தன் கன்னத்தி லிச்சையுள்ளாள்
பேடிநீ யென்றுசொன்னாள் போடியென்றேன்
பேச்சறிந்து பேசாமல் கிருக்கானாளே.

580. ஆனதினால் மயிர்பிடித்து அறைந்துகையை
அடிவயித்திற் கட்டென்று விரல்நானிட்டு
வீணதனால் துன்பமிட்ட பதியேபெண்ணே
மெல்லழகி நீநில்லு யெனக்கேனென்றேன்
தூணதனில் முதுவில்நடுத் தம்பத்தோரம்
துணையிருக்கே னுடலோரம் யிடக்கொடென்றாள்
பேணதனை நீயிருக்க வேணுமென்றால்
பிலாவெலும்பி லூடதனைப் பிலவென்றேனே.

---

579. ஓடினாளே என்னோடு பேசமாட்டாயா என்று கேட்டேன். புன்முறுவல்செய்தாள். பல்லைக் காட்டினாள் மாடிக்குள் ஓடினாள். மனைவி என்றாள் கூடினாள் முத்தமிட்டாள்.

இதில் உள்ள மாடி முத்தம் முதலிய சொற்கள் உருவக மொழி. மாடி என்பது சிரத்தின் உச்சி, முத்தம் என்பது உள்ளுக்கு கொண்டு தொழுகிற செயல் முதலியவை.

580. யோகநிலையிலே உன்னோடு மருவி நின்றேன் என்று உட்பொருளோடு கூறுகிறார். தூள் என்பது முதுகுத்தண்டு.

581. பிலக்கச்செய் யெந்தனுட காயந்தன்னை
பிலக்கவே நீயிருந்து தூங்குயென்றேன்
வலக்கச்செய் யென்றசொல்லவளுங்கேட்டு
வாயில் மண்ணைப் போட்டாயே யென்றாள்கூவி
பலுக்கச்செய் காயசித்தி நிற்பேனானால்
பரிவாசி நிலைத்துவிடும் நிற்பாய்க்கல்லாய்
மெலுக்கச்செய் யெந்தனுக்குத் துணையுந்தானே
வெள்ளாட்டி தோழிப்பெண் சகியென்றாளே.

582. என்றாளே பாவிபழி காரநீலி
இத்தனைக்கும் பெண்ரூபி தனமிருந்தும்
மன்றாளே வாய்நடை அழகுள்ளாலும்
மருவிநமைத் தேடியவள் துணையுங்கேட்டாள்
தின்றாளே கருவிகளைச் செமித்பாவி
சித்திரத்தைப் போலிருந்தும் துணைவாவென்றாள்
மினறாளே வெக்கமில்லை குறியிடத்தில்
வேண்புண்ணை வைத்திருந்தாள் கண்டுகொள்ளே.

---

581. என்னுடைய உடம்பை வலுவாக்கி இதிலே நீ தூங்கு என்றேன். காயசித்தி கூறினாள். நான் உனது வெள்ளாட்டி தோழி சகிப்பெண் என்றெல்லாம் சொன்னாள்.

582. அவளை மருவிய விதம் சொல்லிக் குறியின் நுட்பம் கூறுகிறார். ஆசான் தொட்டுக் காட்டுகிற வித்தை அது.

583. கண்டுகொண்டு அதினாலே தள்ளிவைத்தேன்
காயப்பெண் நீயல்ல சூத்திரச்சி
மொண்டுகொண்டே னுன்னருளு மெனக்குவேண்டாம்
மோகத்துக் கெதிராகு முனிசீயென்றேன்
பண்டுகொண்டாள் பலரிடத்தும் படுக்கைப்பாவி
பார்த்தவர்கள் விட்டிடல்போல் யானும்விட்டேன்
தொண்டுதொண்டாள் வெகுநாளே பாவிநீலி
துணையெனக்கு இல்லையென்றாள் வெட்கமாச்சே.

## சத்தி பூநீர் செயநீர்

584. ஆச்சப்பா யான்கேட்ட வரத்திற்கஞ்சி
ஆகூவென் றேயழுதாள் ஏழைநீலி
ஏச்சப்பா முன்புத்தி பின்னாம்புத்தி
எப்புத்தி கற்றோர்க்கு மேழையாவாள்
நீச்சப்பா நாமில்லாக் காலந்தன்னில்
நிகழ்கால மெங்கிருக்கு மிவருஞ்சாவாள்
போச்சப்பா தந்திரங்கள் விழவாய்ப்போகும்
பொக்கிஷங்கள் திறந்துவிடி லேசுதானே.

---

583. அவளைத் தள்ளிவைத்தேன். ஊடல் புரிந்தேன் பிறகு அவள் தொண்டு கொண்டு எனக்கு வேறுயாருமிலை என்றாள். வெட்கம் அடைந்தேன்.

584. நான் கேட்ட வரத்துக்கு அஞ்சிக் கூச்சலிட்டாள் தந்திரங்கள் வீணாகாமல் பொக்கிஷம் திறக்க வகை செய்வாயாக.

585. பொக்கிஷக் கோற்திறவு வுள்ளேதானே
புதுக்குடுசு ஒன்றுண்டு புத்திதானே
கக்கிஷக் கோலுண்டு தீரவேணும்
கணவகையே பிராவாவே கட்டுகட்டு
திக்கிஷச் சோருண்டு பூ நீருண்டு
தினந்தினமு அமுர்தப்பால் கொடுப்பாருண்டு
செக்கிஷச் சொக்கியவள் சொக்கினாளே
தீராது மாயவலை தன்னிற்பாரே.

586. பாரப்பா யிவ்விதமே சித்ததெல்லாம்
பரியாசங் காணாமல் மயங்கினார்கள்
தேரப்பா யிவள்தானும் பெண்ணுமல்ல
சித்திரத்தைப் போலுடையாள் ரூபமல்ல
ஏறப்பா சென்னிமலை உச்சிமேலே
இவளிருக்கும் மிடந்தாண்டு குடிசையில்லை
நேரப்பா சொல்லவில்லை சித்தரெல்லாம்
நேர்நிமிர்ந்து பார்த்தாலும் விடேனென்றாளே.

---

585. பெட்டகம் உடம்புக்குள்ளே இருக்கிறது. திறவு கோள் உள்ளே உண்டு. தாழ்ப்பாள் திறக்கும் உபாயம் கண்டு முன்னேற வேண்டும்.

586. சித்தர்கள் எப்படி முன்னேறினார்கள் என்பதைச் சிந்தித்து நீயும் அவ்வாறு செய். சென்னி மலை மீது ஏறு.

சென்னிமலை என்பது, சென்னியாகிய தலை சிரசின் உச்சியாகும்.

587. என்றவளைப் பிடித்திழுத்துத் தாலிகட்டி
ஏகாந்த வனமிருந்த முத்தர்காணார்
அன்றவளை விட்டார்கள் ஓடிப்போனாள்
அறுத்தடைத்த வாசல்கண்டார் தானும்விட்டார்
குறைவளை யசையாமற் செய்தோர்க்கல்லால்
கோபிப்பாள் கண்டரைத் திருட்டுமூலி
சென்றவளைக் கண்டாலும் செயநீர்கண்டும்
திரும்பிமுகம் பாராமல் திருத்துவாயே.

588. திருத்துவையே யானாக்கா லெல்லாமாகும்
செயநீரைக் கொட்டிவிட்டா லேசேயாகும்
பொருத்துவையே யானாக்கால் பொல்லாப்பேகும்
புடைசூழுங் கரணங்கள் தொண்டுபண்ணும்
இருந்துவையே யானாக்காற் பனிரெண்டாண்டு
ஏகாமல் நின்றிடுவாள் சொரூபப்பெண்ணாய்
குருத்துவையே பத்தாண்டிற் கண்டுகொண்டோர்
கோடிவித்தை கண்டுகொண்டார் தொண்டானேனே.

---

587. அவளைப் பிடித்திழுத்து தாலிகட்ட வேண்டும் விட்டால் ஓடி விடுவாள்.

588. இருத்தித் திருத்தினால் எல்லாம் ஆகும். கரணங்கள் ஏவல் செய்யும். பத்து ஆண்டுப் பயிற்சியில் இந்த உண்மையைக் கண்டு கொண்டிருக்கிறேன்.

589. ஆனாளே தொண்டுசெய்தும் அடிமையாகாள்
ஆச்சரியம் அரூபியவள் கைக்கெட்டாது
வானாளே வீடுடையாள் யிறங்கிவாறாள்
வையகத்தறி படிநடக்க மனமேல்வாறாள்
கோனாளே கேட்டதெல்லா மிந்தாவென்பாள்
குமரியுரு மாறிடுவாள் வாணிதானும்
தானாளே செய்வதுண்டு கேட்டலோடு
சம்மதித்து வருவதுண்டு அகப்படாளே.

590. அகப்பட்டாள் கெஞ்சியும்வாய் பொத்தினாலும்
ஆருக்கு மெட்டாளே கைக்கெட்டாளே
வசப்பட்டாள் சேலைகொண்டு அணியும்பூண்டு
வாசனைகள் சேகரமாய் வராளேபாவி
துசப்பட்டாள் சந்தாற்போல் வாணிதானே
சொல்லையுமே தாராளே நிருவாணித்தாய்
கசப்படாள் வெட்கியவள் வந்தாற்போல
கைரெண்டும் பொத்தியரை கவிழுவாளே.

---

589. வியப்பு என்னவென்றால் இந்தப் பூமியில் அவள் இறங்கி வந்தாள். வானிலிருந்து! கேட்டதெல்லாம் தந்து போனாள்.

590. அகப்பட்டாள் எவ்வளவு கெஞ்சினாலும் வரக் கூடியவளா அவள்! 'நிருவாணித்தாய்' என்று ஒரு வார்த்தை போடுகிறார் ஞானி. அதாவது உருவமற்ற நிலையிலே அருவ ஆற்றல்கள் புலர்வதை இப்படிப் பேசுகிறார்.

591: கவிழுவாள் வாழ்வந்தாள் வாழாக்கற்பு
கருத்துடையாள் நெறியுடையாள் கவலைரூபி
தவிழுவா லெல்லோர்க்கும் நானேதானோ
தரைதனிலே முனிரிஷிகள் சித்தர்க்கெல்லாம்
அவிழுவாள் விரிசிலை யுடுத்திக்கொள்வாள்
அங்கங்களே ஆபரணம் விரித்துக்காட்டி
உவிழுவாள் உள்ளபலநா வின்பல்காவி
உத்தரியச் சேலைதனை யுதறிநீட்டி

592. நீட்டியே உத்தரியே மடியாஞ்சீலை
நேர்முகமாய்க் கவிழ்ந்திருந்து நிமிர்ந்தகொங்கை
ஆட்டியே அசையாமல் சிமிளைப்போல்
ஆபரண மேலேற்றிக் கொசுவமிட்டாள்
ஊட்டியே தாம்பூலம் படுக்கையாடை
உண்டபின்பு யித்தனைக்கும் சமர்க்களத்தி
நீட்டியே பேசாமற் சகியோமென்று
நெடுந்தூரம் நடப்பவர்போல் பின்னிட்டாளே.

---

591. அவள் தனது கொங்கைகளைக்காட்டுகிறாள் என்று சொல்லி, ஞானஉறுப்புகளின் காட்சி புலனானதைச் சொல்கிறார்.

592. அவளுடைய ஆன்ம முயக்கு கூறியவாறு.

593. பின்னிட்ட மெல்லழகி முன்னாற்றூரம்
பெரியஅடி வையாமல் சின்னப்பாதம்
முன்னிட்டுப் போகாமற் றனியேநின்று
மோகமிட்டுப் பாராதே எமனானென்றாள்
கன்னிட்டுத் தான்திரும்பி வெளியேவந்தேன்
கால்நடையாய்ப் போனாளே அவளைக்காணேன்
என்னிட்டு என்னிடமே பின்னால்வந்தாள்
ஏமகிரி ராட்சதன்போல் வாலைதானே.

## வாலையின் தன்மை

594. வாலையோ யிவள்தானோ நம்பக்கூடா
மயங்காமல் நிறாக்காற் சித்தியாகும்
பாலையே சொரிவதுபோல் நமனார்தானே
பரதேசி யென்றவளைச் சினேகிப்பாரோ
கோலையே ஊன்றாளே கிழவிதானும்
கொடியஅனல் நனைத்தாலுங் கெட்டுப்போவாள்
சீலையே நினையாதீர் குடும்பம்வேண்டாம்
சீச்சீசீ தேவடியாள் வாலைதானே.

---

593. தோன்றியும் மறைந்தும் அவள் செய்த செயல்களை இயம்பியவாறு.

594. இவளை நம்பக் கூடாது, வாலையை கோல் ஊன்றி நடக்காத கிழவி. அதாவது முதுகுத் தண்டைத் தூணாகப் பற்றினாலும் எளிதில் நடந்து வராத கிழவி. அதாவது அத்தகைய கிழமை தன்மை உடையவள்.
தேவடியாள் என்றது சிலேடை.

## நான்கு காலம் சாதனை

595. வாலைகான் பெண்ணாகு மரணம்வேண்டாம்
மனவேண்டாம் தனவேண்டாம் நினைவுவேண்டாம்
சீலைதான் ரெண்டாகும் பட்டுவேண்டாம்
சினம்வேண்டாங் குருவேண்டாந் தீர்த்தம்வேண்டாம்
பாலையே வேண்டாமே மேடைவேண்டாம்
பரமபதம் வேணுமென்றா லறிவேபோதும்
காலையே அந்திசந்தி உச்சிராத்திரி
காரிருளைப் போக்குதற்குப் போதுமறிவே.

596. போதுமே அறிவோடு குருவாஞ் சாஸ்திரம்
புதைத்தபொரு ளெடுப்பதற்குச் சாதனங்கள்
யேதுவே யீதாகும் வனமே வேண்டாம்
இல்லறத்தி லோர்மூலை யெங்குமுண்டு
சாதுவோ யிவ்விடத்தே கண்டுகொண்டார்
தனித்திருந்து பார்த்ததினாற் பலன்பெற்றோர்கள்
கோதுவே தாராதே குற்றமில்லை
குமரியிட மிருந்தாலும் பத்தியங்களிலையே.

---

595. வெளிப்பகட்டுகள் உள்ள வழிபாடுகள் வேண்டாம். காலை, அந்தி, சாந்தி, உச்சி இரவு ஆகிய வேளைகள் பயிற்சிக் குரியவை.

596. துறவியாகக் காட்டுக்குப் போகவேண்டாம். இல்லறத்தில் இருந்தவாறே இந்த யோகம் பயிலலாம். ஒரு மூலை இடம், அதிலே தனித்திருந்து பயின்று பலன் பெறலாம். பத்தியங்கள் கிடையாது.

## 30 வயதுக்குமேல் பத்தியமில்லை

597. இல்லையே முப்பதின்மேற் பத்தியங்கள்
இடம்வேணும் பொருள்வேணு மேவல்வேணும்
வல்லையே முப்பதுக்குள் வந்துதானால்
வலுக்குமே பத்தியங்கள் வேணும் வேணும்
தொல்லையே பத்தியங்கா ளதனாந்தானே
சுகமில்லை சாதனங்கள் விட்டுப்போட்டார்
கல்லையே யெறிந்தாப்போலெதிர் முன்னாலே
காரணங்கள் பத்தியம்போல் சொல்லிவைத்தார்.

598. வைத்தாலே சொல்லியவர் தேறுவாரோ
வயதேறிற் பத்தியங்கள் விடவேவேணும்
பைத்தாறை விட்டாலே வருஷம்ஆறு
பையனதில் விழுவானே பனிரெண்டாண்டு
நொய்தாரைக் கண்டானே யதனாலப்பா
நுண்ணறிவோர்க் கித்தனையு மல்லஅல்ல
நைதாரைப் போலவுமே அறிவுள்ளோரும்
நடுநாடி கண்டறிந்தார் பெரியோர்தானே.

---

597. முப்பது வயதுவரை சில கட்டுப்பாடுகள் வேண்டும். பின்னர் அளவேதும் இல்லை.

598. நடு நாடியிலே செய்கிற பயிற்சியின் காலவரையறைகளை எடுத்துக் கூறுகிறார்.

## 30 வயதுக்குள் பத்திய விபரம்

599. பெரியோர்க்கு முதியோர்க்கு சிறியோர்க்கும்
பேசுகின்ற அறுசுவைகள் முப்பதுக்குள்
கரியோர்க்கும் புளியுப்பு ருசியாம்பாகம்
கண்டமதில் நெஞ்சடைப்பு கோழையீளை
அரியோர்க்கு அதுவகலப் பத்தியங்கள்
ஆக்கினார் முப்பதின்மேற் சாதனங்கள்
பரியோர்க்குச் சாதனங்கள் முப்பதுக்குள்
பலிக்காது பலிப்பதற்குச் சுவையைத்தள்ளே.

600. தள்ளவே வேணுமடா தவசியானால்
தவம்பூணுங் குருவேணுஞ் சாஸ்திரம்வேணும்
மெள்ளவே குடிசையது வேணுங்காணும்
வெட்டவெளி தனிற்தவசு சித்தியாது
கொள்ளையே திரிவார்கள் மடமேவேண்டாம்
கொடுங்குமரி வருமுன்னே தொடவேவேணும்
இல்லையே பத்தியங்க ளறிவுள்ளோர்க்கு
இல்லறத்தி லிருந்தாலும் வனஞ்சென்றாலே

---

599. ஆறு சுவைகளில் வயதுக்கேற்றபடி கட்டுப்பாடுகள் வேண்டியதன் வழிகளைக் கூறியவாறு.

600. தவம் வேண்டும் நேரிலே இருந்த பயிற்சியைக் கற்பிக்கவும் மேற்பார்க்கவும் வல்ல ஆசிரியர் வேண்டும். திறந்தவெளியில் பயிற்சி கூடாது ஒதுக்கமான குடிசை வேண்டும்.

601. சென்றாலே மலைவனங்கள் ஊர்கள்தோறும்
சிறுவர்கவி பாடுகின்ற விளையாட்டேபோல்
நின்றாலே மணற்சோற்றை ஆக்குவார்போல்
நெடுநாளே திரிந்தாலும் பலனேயில்லை
குன்றார்க்கு வீடிருந்துந் தவமேசித்தி
குடிசையென்ன செய்யுமடா அறிவுள்ளோரே
மன்றாடி யிப்படியே திருந்துகெட்டார்
மனுவுழுது வுண்டஅன்னந் தின்னத்தானே.

## பொய்த்தவசி

602. தானென்ற மனங்கொண்டு ஊர்ச்சோறுண்டு
தவசியெனத் தானிருந்து குறடுபூண்டு
ஊனென்ற உடல்வளர்த்துச் சடைநாணிட்டு
உத்தமர்போ லேதாடி உவமைபூண்டு
தேனென்ற மொழிபேசி பாவியிட்டுத்
தெருவெங்கும் பாடிடுவார் திவசச்சோற்கு
மானென்ற அபிமானங் காசேகொண்டு
வாய்மதங்கள் பேசுவார் தன்னைக்காணார்.

---

601. சிறுவர்களுடைய விளையாட்டுப் போரிலே நடக்கிற கதை இது. குன்றாமல் தவம் செய்வார்க்கு இல்லறத்திலுமே சித்தி.

602. போலித் தவசிகள் எப்படியெல்லாம் மோசம் செய்வார்கள். வேடமிட்டு வளையவருவார்கள், என்பதைப்பாடியவாறு.

603. காணார்கள் கண்டபலன் இரைதான்அன்னம்
கையோடே வைத்திருப்பார் பாத்திரமென்பார்
ஊணோடே கையோடே மனமூம்ஓடே
உதறுகால் நடைபோடே ஊறுநாடே
வீணோர்கள் குடும்பமதை யழித்தே
வேறுமனை கெடுப்பதற்கோ வேசம்பூண்டார்
சாணோர்கள் கடல்வலியே பசியேசோரே
தாரித்திரம் பிச்சைக்கஞ்சி ஆண்டிதானே.

604. ஆண்டியே பண்டாரச் சாதியோரே
அறிவுதனை விட்டவரே நீசமாரே
தோண்டிவேசம் போட்டவரே தவங்கெட்டோரே
தொல்லுலகில் வந்தவரிற் சுகங்கெட்டாரே
வேண்டியென்ன அறுசுவைக்கு யலைந்தீர்நீரே
மெய்மறந்தீர் பொய்யறிந்தீர் விதவையானீர்
பாண்டியெனப் பேர்கொண்டும் ஆண்டியாவீர்
பரதேசி யானதென்ன பிச்சைச்சோறுக்கே.

---

603. ஆண்டி வேடத்திலே என்னென்ன செய்கிறார்கள் இந்தப் போலிகள் என்பதைப் பாடுகிறது இந்தச் செய்யுள்.

604. பிச்சைச் சோற்றுக்காக என்னென்ன நாடகங்கள் எல்லாம் நடத்துகிறீர்கள் என்று சீற்றத்தோடு வருகின்ற சொற்கள்.

605. சோறுக்கோ அறுசுவைக்கோ துணிக்குத்தானோ
சுகம்வேணுமடி யிவ்வளவுங் கையையேந்தி
திருக்கோ ஓடேந்தி வாசல்நின்று
நிமிர்ந்தாக்கால் நீரிடார் தலைகவிழ்ந்தே
பாருக்கோ பாதமதைப் பார்த்தேநின்று
பரிவாகி காணாமற் கூசிநின்று
மோருக்கோ நின்றிருப்பீர் வாசல்தோறும்
மொய்குழலா ரிட்ட அன்னம் வீடுதானே.

606. வீடுதான் சோறுதருங் காடுதாரா
மேன்மக்கள் மலையேறில் புசிப்பிணங்கா
கூடுதான் தவமிணங்கா மண்நீர்சேறா
குருவிருந்த யிடந்தனிலே யெல்லாமுண்டு
பாடுதான் வேண்டாமே குருவேபோதும்
பசித்திருக்க வையாதே சித்தியானால்
மாடுதான் போற்திரியும் யெருதாங்கோவில்
மாபோ லேதிரியு மெங்குந்தானே.

---

605. இதுவுமது.

606. வீடுதான் உறவு கொடுக்கும் காட்டில் சோறுகிடையாது. எனவே ஊருக்குள்ளே இத்தனை மோசடிதரும் செய்கிறார்கள் போலித் தவசிகள்.

607. எங்கெங்குஞ் செல்லுமடா அண்டகோளம்
ஏகவெளி ஐம்பூத மெங்குந்தானே
அங்கங்கே அருளிருக்குந் துணையுஞ்செய்யும்
ஆர்வேண்டு மவர்களுக்கு மக்களுக்கும்
இங்கங்கு எவ்விடமுஞ் சென்றார்ச்செல்லும்
இச்சைவைத்தோர் சென்றிடங்கள் ஏவல்செய்யும்
வங்கங்கள் மனம்உருகும் உடலினாலே
மாவறிவு கொண்டுமண்மேல் திரிகின்றோமே.

608. இன்றாமே நாளைமுத லெந்நாளும்
எங்கள்முளை குலதர்க சாதிமார்க்கம்
நன்றாமே நாம்நினைக்க வந்துசேரும்
நாட்டுள்ளோர் நமைநினைக்க வந்துசேர்வோம்
சென்றாமே யாம்போகோம் நினைத்தாற்போவோம்
தேசத்தி லிப்படியே சேதியோரே
அன்றாமே யெங்களுக்கு யிந்தவேலை
ஆதித்தன் போலவுமே தினமுந்தானே.

---

607. முயற்சி செய்து எங்கெங்கும் திரிந்து இவ்வாறு இச்சையற்றுச் செயல்கள் புரிகிறார்கள் என்பதைக் கூறியவாறு.

608. தினந்தோறும் பொழுது விடிந்தால் இதே வேலை ஆதித்தனைப்போல நாள்தவறாமல் நடக்கிறது.

609. தினந்தானே நாள்வரவு யெண்ணித்தானே
தினத்தினமுஞ் சதுர்யுகமும் யுகமாமந்தம்
மனந்தாலே யாமல்ல அறிவேமேலாய்
வாய்த்தறிவு பேரறிவு அறிவுமுற்றும்
சினந்தானே சாபமெனக் கையிற்கொண்டு
தெருவெங்குந் திரிவோமே கையிலுண்டு
முனந்தானே யெம்மறிவு கண்டுகொள்ளு
மூர்க்கருக்கு அஞ்சாதே மேலோர்க்கஞ்சே.

610. அஞ்சுமே நல்லோர்க்கும் ஞாயத்தோர்க்கும்
அகடிதங்கள் பேசாமே வரமேயீவோம்
கெஞ்சுவோம் வரங்கொடுக்கந் தானேநத்தி
கிளறுவோம் உள்ளிருந்த ஒளிப்பையெல்லாம்
மஞ்சுபோற் குளிர்ந்திடுவோம் வாய்கையாலே
மறுபிறவி யில்லர்க்குக் கண்டுதானே
பஞ்சுபோல் நாமிருப்போ மேருவாவோம்
பார்த்தவர்க்குச் சிறுபிள்ளை கைலாசந்தானே.

---

609. செயல்களைச் சொல்லி நாம் அஞ்ச வேண்டியது பெரியோர்களுக்கேயன்றி போலிகளுக்கு இல்லை என்கிறார்.

610. நல்லவர்களுக்கும் நியாயமான பெரியோர்களுக்கும் அஞ்சி நடப்போம். மேகம்போல் குளிர்ந்து பொழிவோம்.

## கயிலாசம்

611. கயிலாச மென்னவென்றால் திதியுஞ்சிருஷ்டி
களறுகிறோம் சம்மார மூன்றுந்தானே
பயிலாக நம்மிடத்தில் ஞானக்கண்ணில்
பாரிந்த முன்றுசித்த நம்முள்ளுண்டு
ஒயிலாக வைத்திருப்போம் பொருளைத்தானே
ஒருபோதும் நம்மைவிட்டுப் போகாயேகா
வெயிலாக நாமிக் கோலந்தானே
வெந்துதல்லோ மேகமது சாபந்தானே.

612. சாபம்போல் வரமுண்டு கேட்டாலீவோம்
தாரித்திரம் நம்மிடத்தே யில்லையில்லை
பாபம்போற் சொல்லிவிட்டோம் குழந்தைநம்மை
குருவென்று யெண்ணாதாற் றூசனித்தோம்
கூடம்போல் நீரிருந்தீர் அன்னீரன்றி
குழந்தைகளே யுங்களுக்கு மேகமன்றி
தேகந்தா னுண்டோசொல் லின்பமுண்டோ
சிறுகன்னி சந்தோஷத் தானுமுண்டோ.

---

611. கயிலாயம் என்பது என்ன? ஆக்கல் காத்தல் அழித்தல் என்னும் மூன்றும் நம்மிடத்தில் ஞானக்கண்ணில் இயங்குகின்றன ஒருநாளும் நம்மைவிட்டு ஏகமாட்டா.

612. சாபம் எப்படியோ அப்படியே வரமும். கேட்டால் தருவோம். நம்மை ஆசான் என்று அடைந்தால் அருள் பாலிப்போம்.

இதெல்லாம் கயிலாய நிலையாகும்.

613. உண்டோதான் மாடமொடு கூடகோபுரம்
உப்பரிக்கை தாளமேள வாத்தியங்கள்
மண்டேதா னுங்களுக்கு நீரேயன்றி
வையகத்தில் நீரன்றி மனுக்களுண்டோ
கண்டேதா னெனைவிட்டீர் நானுமீயேன்
கர்மமுள்ள மானிடரே மேகமீயேன்
விண்டுநான் சொன்னேனே யெனக்கேமேகம்
மெய்மண்ணு உங்களுக்கு மேகமெந்தனுக்கே.

614. மேகத்தை நான்விற்பேன் கிரையம்செய்வேன்
மெல்லியற்கு அஞ்சியல்லோ கொளுசம்மீந்தேன்
தாகந்தான் கேட்டாலும் நான்கொடுக்கேன்
சந்ததிகட் கஞ்சியல்லோ தூரச்செய்தேன்
சோகந்தான் நாமடைந்தோன் நீரோஷேமம்
துரியபதம் பெற்றவரை அறைதியென்றீர்
காமந்தான் நீரல்லால் உங்கள்ஷேமம்
கதவடைப்பேன் மேகமிட்டுக் கெட்டிபூட்டி.

---

613. நீங்கள் உங்களுடைய உடல் கொண்டு பாடுபட்டுச் சாதிக்க வேண்டும். இதைப் புரிந்து கொள்ளுங்கள்.

614. வாசித்து வருவதில்லை சித்தி என்பதை இப்படியெல்லாம் பலபடக் கூறியவாறு.

615. பூட்டுடைக்க வல்லவரை நீரும்வாரும்
புத்தியில்லா மானிடற்குப் பெரியவீடோ
சாட்டையில்லா நாக்கயற்றா லடிப்போன்சாபம்
சந்ததிகள் போனாலும் பெற்றுக்கொள்வேன்
கோட்டைவிட்டு நீர்வருவீ ரெனைப்போல்தானே
கொடுமேக மில்லாவிட்டால் இல்லம்ஆண்டி
தாடிகமா யாண்டியென்றால் அழிப்பேன் மேகம்
அல்லோரும் ஆண்டியா யிருப்போம்நாமே.

616. நாமுமே கோபத்தாற் சொன்னோமப்பா
நன்குணர்வீ ரெனைக்கண்டு கேட்டீக்கொள்ளும்
தாமளுமே என்னலேசாய் மதிப்பிரானால்
சந்ததிகள் வேண்டாமே யெனக்குத்தானே
நீமனாமே வாழுதற்கு யெனதுசித்தி
நேர்தவத்தை ஈடுவைக்க லேசாய்ச்சொன்னீர்
கோமளமே கருநிறமே மேகசூதம்
குமரிகன்னி யென்மனைவி கெற்பமீயேன்.

---

615. பூட்டை உடைக்கத்தெரிந்தவர்களே வாருங்கள் ஒன்றுகூடி ஒன்றாய் இருந்து முன்னேறுவோம்.
பூட்டை உடைத்தல் என்பது பிணைப்பை அறுத்தல் என்றும் யாக்கையில்உள்ள வாசலைத் திறத்தல் என்றும் பொருள்தரும்.

616. நீரே சென்று நீரே கதி பெறவேண்டும் செய்து கொடுப்பதில்லை இது.

617. ஈய்வோனோ மும்மூர்த்தி உலகஞாயம்
எப்படியென் றெண்ணுகிறீர் பொதுவுமாகும்
சாய்வனோ மண்மலையுங் கடலுந்தானே
சந்ததிகள் தங்களுக்குப் பொதுவதாகும்
ஓய்வானோ வெளிவாய்வு மேகமோடு
உதித்திடுஞ் சந்திரனும் பொதுவதாகும்
காய்வனோ வெளிதானே பொதுவில்நின்ற
கங்குலைப்போ ேலகருத்த மேகம்நின்றே.

618. நின்றுதே மேகமொடு வெளியுந்தானே
நிலைதவறி நிற்கவில்லை ஞாயமுண்டு
அன்றிதே யின்றுமுதல் வெகுநாள்தொட்டு
ஆகாயம் நிற்பதைப்போல் நாலுபூதம்
மன்றிதே நிற்கவில்லை ஞாயமில்லை
மறையில்லை மறையிருந்தால் மாறுமோதான்
கன்றதுவும் பால்குடிக்கத் தாயேகாண
கர்த்தனுமே படைத்தானே பஞ்சபூதமே.

---

617. எல்லாருக்கும் இந்த உலகமும் இந்த ஞானமும் பொது, விண்மீன், சூரியன், சந்திரன் எல்லாம் பொது. ஆகவே பொதுவில் நின்று வெளிகாணும் என்றவாறு.

618. ஐம்பூதப்படைப்பு எதற்காக? கன்று பசுவை நாடி பால் குடிப்பதுபோல் என்று புரிந்து கொள்வீர்.

619. பூதென்ற பிரம்பூதம் அஞ்சினுள்ளே
பொறியில்லாப் பூதமொன்று வெளியிற்தானே
ஓதென்று சொல்லாதே ஒன்றுங்கேழா
உவமையில்லாத் தெய்வமது வெளியேசோதி
காதென்ற பெண்ணைப்போற் கவலைசெய்யும்
கனுமண்ணும் வாய்வுத்தீ மேகமோடு
சூதென்று செய்துவிடும் நான்குபூதம்
துரியபதங் கண்டவர்க்கும் சிறியோர்க்கேதே.

620. ஏதொன்றுஞ் செய்யாத பூதமொடு
இருந்ததினா லிப்பூதஞ் செய்யுந்தானே
ஊதென்று உட்காத்துக் கண்டதாலே
ஊடுருவி யான்கண்ட சேமத்தாலே
சூதென்று கண்டேனே நான்குபூதம்
தொல்லுலகில் யாவருக்கும் பொதுவில்லாதே
ஏதென்று கேட்டேனே முனியில்லாதே
எங்கள்நிலை தவறினமே யெனச்சொன்னாரே.

---

619. ஐந்து பூதமும் அமைந்ததோடு ஐவருக்கு வெளியே பொறியில்லாத பூதம் உள்ளது. விசுவ மனம் என்றும் பரவெளிச்சிந்தனை என்றும் சொல்வதைக் குறிப்பிடுகிறார்.

620. வாசியோகத்திலே பூத ஒழுக்கம் நிகழ்வதை உருவகத்திலே கூறுகிறார்.

621. சொன்னதனைக் கொண்டுமே விசாரித்தேன்யான்
துரியபத வொளிகண்ணாம் ஞானக்கண்ணில்
இன்னதனில் விபகாரம் மண்ணும் அப்பும்
இடுகாற்று தன்னுடனே தேய்வுநாலும்
என்னதனில் ஞாயமில்லாப் பக்கஞ்சாய
ஏதென்று கேட்பற்குக் கூப்பிட்டேனான்
முன்னதனில் வந்திருந்தார் நாலுபேரும்
முறைதவறும் நால்வரையுந் தட்டினேனே.

622. தட்டினே னிமேலே வெளியேபோலத்
தங்குதா பரமுடனே புற்பூண்டாதி
எட்டினே னென்னோடு சீவரெல்லாம்
இதிற்கண்ட யாவருக்கும் பொதுவுமண்ணே
தொட்டினேன் நீசஞ்சம் போயொழித்தாய்
சிறுபிள்ளை மணற்சோற்றுக் கிச்சையேபோல்
மட்டிநாய் நீபோபோ மண்ணேமண்ணே
மருமண்ணே காக்கிடுவேன் சமமாய்நில்லே.

---

621. மனத்தின் நிலையினை ஞானக்கண்கொண்டு கண்டுதெளிகிற பயிற்சியின் தன்மை கூறுகிறார்.

622. உலகில் உள்ள நிற்பன நடப்பன அனைத்தோடும் உறவுகொண்டு யோகம் பயின்றேன். இதை உணராத மக்கள் வீணானார்கள் என்பதைக் கூறுகிறார்.

623. நில்லென்றால் நிற்காயோ நிற்பாயோநீ
நீள்பிராணன் நாணொடுக்கில் யென்னதென்று
கல்லென்றால் னண்ணாகு மென்சொல் நாவால்
கவலையை யொழித்தனனே ஒளியுமானேன்
சொல்லென்றாற் சொல்லிடுவேன் பகலேராவாய்
சொல்பெரிதோ பகல்பெரிதோ துணிந்துசொல்வேன்
வில்லென்றாற் சதைபிழைக்கா தென்சொல்லாவே
விரிகதிரும் கரிப்ஊரு மேனியென்னே.

## சூரியசாப விபரம்

624. என்னாலே எனக்காக வைத்திருக்கேன்
என்றாலு மொருசாபஞ் சொல்லிவாரேன்
முன்னாலே யிதுவென்று முடிந்திருக்கு
முழுகதிருங் குறைவதற்குச் சொல்லிவாரேன்
தன்னாலே யாகுதி கலியாம்ஆண்டில்
தாடைக்கும் அய்யயிர ரெண்டுபத்து
மண்ணாலே நீர்வறளும் மாரிநீர்போல்
வருஷமூன்று சேரஅதி சயங்கேட்பாயே.

---

623. யோகம் பயின்ற நுட்பத்தைப் பாடுகிறது இச் செய்யுள்.

624. இதில் சொல்லப்படும் கல்வி அதுக்குரியனைப் பற்றியது என்பதற்குமேல் தெளிவோடு உட்கொள் இயலாதவாறு சொல்லாட்சி செல்கிறது.

625. கேளப்பா அய்யாயிரம் ரெண்டுபத்து
கெடிமூன்று சேரஅதில் மாதஞ்சித்திரை
பாழப்பா நாள்தேதி மூன்றுதொட்டு
பகருகிறேன் மூன்றுநாள் கதிரேயில்லை
ஊழப்பா சூரியர்க்கு விதிதான்வந்த
உச்சரித்த காலைவிதி பூஜைபாக்கி
சூளப்பா ஆகாமற் சொரூபம்நின்ற
சொக்கிநின்ற பிராணனைப்போல் வருவார்பின்னே.

626. பின்புபார் மற்றோரா மாண்டுதன்னில்
பேசரிய காரணங்கள் வானிற்தோணும்
முன்புதான் கதிர்ஞாயம் வெளிச்சம்போல
முன்தோன்றிப் பின்மறையும் வெளிச்சங்காணும்
என்புபோல் வரிப்பிளப்பு மதிலேகாணும்
எல்லார்க்குந் தோன்றுமது மூன்றாகத்தான்
அன்புபோல் ஒட்டிருக்கும் ரெண்டுசித்து
ஆருக்குந் தோற்றாது யெமனாந்தானே.

---

625. இதிலுள்ள கணக்கு ஆய்வுக்குரியது.

626. இதுவுமது. இந்தப் பாடல்களில் சொல்லப்படுவதுபோல் காகபுகண்டர் சில இடங்களில் ஆன்மப் பயிற்சி முறையில் சில அனுபவங்களைக் கணக்கு மொழியிலே பேசுகிறார். இந்தக் கணக்குகளைப் பற்றிய ஆய்வு மேலும் மேலும் நிகழ்ந்தாலன்றி நுட்பங்கள் புலப்பட வழியில்லை.

627. தானென்ற அறுநூற்றி யிருபத்தாண்டில்
தாய்மண்ணே அப்புடனே வாய்வுந்தீயும்
ஏனென்று கேட்டேனே நீங்கள்நா ல்வர்
எப்பொழுதும் வெளிமறையா தைந்தேசார்ந்து
ஊனென்ற உடம்பெடுத்த நீங்களானவர்
உம்மரிலே வெளிபொதுவே நீயுந்தானே
கோனென்ற வொளிதானே பொதுவதாகும்
குருவாகி மாருதமே பொதுவாங்காற்றே.

628. காற்றோடு மேகமழை பொதுவுதானே
கண்டவைந்து பூதமதில் பொதுவாம்பூதம்
ஊற்றோடு ஆற்றுநீர் பொருந்தினாப்போல்
உறைநீரும் பெளியுடனே தீயுமேகம்
மாற்றோடு மாற்றொட்டல் போலத்தானே
மறைவேதந் தெய்வம்போல் உயிர்வாக்கேபோல்
காற்றோடு வெளிசேரல் மின்னல்வேகம்
கண்டுபா ரித்தனையும் பொதுவதாமே.

---

627. இதுவுமது.

628. மனிதர்கள் செய்யும் யோகங்கள் அனைத்துக்கும் கருவிகளாகப் பயன்பட வேண்டியவை எல்லாருக்கும் பொதுவான பூதப் பொருள்களே.

## மாயாசத்தி பூமியின் தன்மை

629. பொதுவேநீ யிதுபோல மற்றோர்பூதம்
பொய்மாய்கை நின்றிருக்கு மண்ணாம்பூமி
எதுவோநீ யாருக்கும் பொதுவல்லாமல்
எங்களைப்போ லானோர்க்கு மில்லாமற்தான்
அதுவோநீ தெய்வமல்ல மாய்கைபூமி
ஆறிலொரு கட்டையது கோனுக்கீந்தாய்
மதுவோநீ யிருளானாய் பூமிமண்ணை
வையகத்தி லேபாதி ஏழையாமே.

630. ஏழையோ மண்பூமி யில்லாதாலே
எளியோரு மானார்கள் ஆண்டியானார்
பழையோ மனுப்பதரே துரோகபூமி
பாரினிலே மண்பூமி பெருத்தாற்சிமான்
நாளையே யிப்படியே துரோகபூமி
நாரைமுதற் தின்றுமல்லோ துரோகபூமி
வேளையோ மன்மதன்போற் துரோகபூமி
மேவிட ஒட்டாது எளியோரைத்தானே.

---

629. எல்லாம் பொது என்றாலும் நமக்குள் எத்தனை மாறுபாடுகள் உள்ளன. வையகத்திலே பாதி ஏழையல்லவா?

630. மனித வர்க்கத்திலே ஏற்றத் தாழ்வுகள் எப்படி ஏற்பட்டன. பயிற்சி பொது. சாதனங்கள் பொது. எனினும் ஏனிந்த மாறுபாடுகள்?

631. எளியோர்தன் யேக்கமெல்லாம் பூமிகொள்ளும்
எப்பொழுது மிப்பூமி ராசாவாகும்
எளியோரை அருமையெனச் செய்துவைக்கும்
இப்பூமி பெருந்தொல்லை பிறர்க்குத்தானும்
எளியோரைப் போக்கடிக்கும் வலுத்தோர்தம்மை
எங்கிருந்தும் வரவழைத்துக் கொள்ளுஞ்சாரும்
எளியோரை எளியோரா யாக்கிவிட்டு
இருந்தவிட மசையாமல் நிற்குந்தானே.

632. நின்றிருக்கு மிப்பூமி யிந்தப்பூதம்
நேர்விசும்பில் நீர்மேகம் வாய்வுத்தீயும்
ஒன்றிருக்கும் வெளியதுபோல அசையாதப்பா
உண்டாகும் நீர்மேகம் வாய்வுந்தீயும்
நன்றிருக்கும் சார்மதியும் உடுக்கள்தீயே
நரருக்கு மேபொதுவே புற்பூண்டுக்கும்
சென்றிருக்க மேகமது வாயுந்தான்
திரைசீவர் புல்பூண்டு தங்களுக்கே.

---

631. எளியோருடைய ஏக்கங்களை இந்த மண் வாங்கிக்கொள்ளும். எளியோரைப் போக்கடித்து வலியோரை வரவழைத்துக் கொள்ளும்.

632. வெளி உலகிலே எல்லாமே கைக்கு எட்டும்படி பொதுவாகத்தான் நிற்கின்றன. மேகமும் மழையும் எல்லாருக்கும், புல் பூண்டுகளுக்கும் பொதுவன்றோ?

633. தங்களுக்கு மேபொதுவே வாய்வுமேகம்
சஞ்சரித்து விளையாடும் எல்லோருக்கும்
உங்களுக்கு மெங்களுக்கு மெல்லோருக்கும்
ஒத்துவரும் பொதுசமனாய் நாலுபூதம்
எங்களுக்கு முங்களுக்கும் எல்லோருக்கும்
ஏறிவிடு மிறங்கிவிடும் தாளும்நீளும்
அங்களுக்கும் போகாது யிந்தப்பூமி
அசைந்தாடு மண்மலையும் கடலுமாய்கை

634. மாய்கையே யிதுவப்பா மூன்றுதானே
வல்லபங்கள் மெத்தஉண்டு நிலைநில்லாத
மாய்கையே யோரிடத்தில் நிற்காதையா
மற்றந்த நால்பூதஞ் சமனாய்நிற்கும்
மாய்கையே பூமியொரு மாயாசத்தி
மாகடலின் பள்ளம்போற் பள்ளஞ்செய்யும்
மாய்கையே மலையைபோ லுயரச்செய்யும்
மாமண்ணும் நீண்டாப்போல் நீளுந்தானே.

---

633. உங்களுக்கும் எங்களுக்கும் கார் முகிலும் இயங்குகின்றது. எல்லோருக்கும் இவை பொதுவுடைமை.

634. இதுதான் மாயை எப்பாருக்கும் எல்லாம் பொது என்றாலும் மலை உயர்கிறது. கடல் தாழ்கிறது. மனிதருளத்தில் எத்தனை மாறுபாடுகள்.

635. நீளுமே மண்மலையுங் கடலுமப்பா
வெகுநாளே ஒத்திருந்தாற் கோனேயாகும்
பாழுமே யிதுதானே ஓரிடத்தில்
பதுங்கினதால் நாம்ஏழை அடிமையானோம்
கோழுமே பொய்ப்பூமி சாபமீவேன்
குருமுனியே யானாக்காற் சமமாய்நில்லு
வாழுமோ உன்னுடலுந் துரோகத்தாலே
மானிடற்குக் குஷ்டம்போல் கல்லீவேனே.

636. ஈவேனே சத்திரிய வசிஷ்டாகேளு
இயம்புமே காகாசி புசுண்டர்சொல்லும்
மாயுமே கல்லுமுள்ளு மண்மேல்வந்தால்
மானிடர்க ளெங்கிருப்பார் சொல்லுமய்யா
ஓயுமோ ஓயாது மானிடங்கள்
உத்தமர்கள் தானிருப்பார் உலகத்துள்ளே
காயுமோ பழங்கனியு முதிர்ந்திடாது
கனிந்தபின்பு காயோடு வற்றிமாளுமதே.

---

635. வேறுபாடுகள் தமக்குள் ஒத்திருந்தால் தொல்லையே இல்லை.

636. இந்தப் பாடலில் உள்ள நுட்பம் ஆய்தற்குரியது.

## கலியுகம் ருசூச யக்குள் ஞானம் தங்கும்

637. மாழுமே சதுர்யுகமோ அறுபதாச்சு
மறையாச்சு சூரியனார் கோவிலாச்சு
பாழுமே போக்குதற்குத் தீர்த்தமாச்சு
பலபேத முண்டாச்சு அறுகாச்சு
கேளுமே யிதுகதை கலியுகத்தில்
கிளறுகிறே னையாயிர நாற்பதுக்குள்
வாழுமோ யிப்பூமி மண்மேடாகும்
மறைநிலைக்குங் கதிர்நிலைக்கும் ஞானர்தங்கும.

638. தங்குமேயோசனைதான் ரெண்டுமேலே
தார்பூமி யொன்றிருக்கும் ஒரேயொன்று
மங்குமோ மரியாதை பொங்கும்பொங்கும்
மானிடர்கள் தவறார்க ளய்யாஅய்யா
எங்குமே ஊரானாற் கலகம்வீணே
இக்கரிக்கு முன்னாலே கதிராங்காலம்
அங்குமே முன்சொன்னேன் முன்னாம்பாகம்
ஆதியந்தம் நடுமத்தி ஆய்ந்துபாரே.

---

637. கலியுகக் கணக்கு பேசப்படுகிறது. புதிதாக இப்போது நடைபெறுகிற புதைபொருள் ஆய்வுபோல் இதுவும் ஆராய்ச்சிக்குரியது.

638. இதுவுமது.

## சாதன விஷயங்கள்

639. ஆய்ந்துபார் பத்தியங்கள் முறைகள்பாகம்
அமைத்திருக்கே னின்நூலி லெவ்விடத்தும்
ஓய்ந்துபார் தனித்திருந்து உற்றுப்பாரு
ஊர்சுற்றுங் கண்ணோடு மனக்கண்பாரு
மாய்ந்துபார் விடியுமுன்னே நாலாஞ்சாமம்
மக்களே யானாக்கா லெழுந்திரிந்து
தேய்ந்துபார் புலன்கருவி மனமொன்றாசி
தீவிதிண்ணப் பல்லாசையும் வாருபோலே.

640. போலவே குந்தாதீர் சம்மணங்கள்
பொழுதுபுறப் படுமுன்னே பிறர்காணாமல்
சாலவே பிறர்சத்தங் கேளாப்பக்கம்
தனித்திருந்து பார்க்கையிலே சாய்ந்திடாதே
உலவே சத்தமிட்டுத் தூங்கிடாதே
உண்மையென்ன அச்சரத்தைக் கத்திடாதே
ஏலவே கால்கரங்கள் நீட்டிடாதே
இருப்பதனைக் கோணாதே தலைநேர்நில்லே.

---

639. உணவு உண்ணுதற்கு நாட்டம் கொள்ளுவதுபோலே இந்த நூலில் நான் கூறியவற்றை உட்கொண்டு படிப்பாயாக. விடிவதற்கு முன்பு நான்காம் ஜாமத்தில் எழுந்து புலன்களைச் செலுத்திப் பயின்றுபார்.

640. இருக்கை, நிலை, நாட்டம் முதலியன சொல்லிப் பயிற்சி முறையை விளக்குகிறார்.

641. நில்லப்பா கண்ணதனை மூடிடாதே
நிமையதனை மேல்நோக்கு கவிழ்ந்திடாதே
வில்லப்பா கையிரண்டுங் கட்டிடாதே.
விரித்துநீ யேந்தாதே சவமாய்நில்லு
சொல்லப்பா கேளாதே தடுப்பாய்காதை
துன்பமென்று யெண்ணாதே ஆண்மூன்று
கல்லப்பா நிற்பனபோற் சரீரம்பாரு
கதவடைக்கத் திறப்பனபோற் புருவந்தட்டும்

## மூலப்புளி வைத்தியம்

642. தட்டுமே ஒருமுகூர்த்த மிருந்துபாரு
சாதிப்பாயாண்டொன்று ஆண்டுரெண்டு
கொட்டுமே தேளுருப்போல் விட்டிடாதே
குமரியாசை கொண்டவன்போற் கோருவாய்நீ
வெட்டுமே மனமசையும் அசைந்தால்மாளும்
வேறுதுரை யேராதே வாராயோநீ
முட்டுமே பசிக்கொடுமை யாலேதான்
மூலப்புளி தேடாதே வயித்தியந்தான்.

---

641. கண்களை மூடிவிடாமல் மேலே செருகி இந்தப் பயிற்சியைச் செய்யும் முறை பேசப்படுகிறது. இதனை ஆசான் எதிர் நின்று பயிற்ற வேண்டும். பாடப்புத்தகத்தைக் கையில் வைத்துக்கொண்டு ஆசிரியர் கற்பிப்பதுபோல் இந்நூலைக் கையாள வேண்டும்.

642. பயிற்சி முறையும் காலமும் நீளமும் கூறியவாறு.

643. வயித்தியமே யாகாது யோகத்தோர்க்கு
வல்லபங்கள் ரெம்பவுண்டு வாய்வின்சேட்டை
பயித்தியங்கள் போலிருக்கும் பித்தமாளப்
பாழ்மனது மாள்வதற்கு மூலங்கட்டும்
உயித்தியங்கள் செய்தாப்போல் உடலேதுன்பம்
உயிர்நொந்து உடல்வலிக்கும் கபாலங்குத்தும்
வயித்யங்க ளாகாது அபானவாயுவால்
வயிறுநொந்து குடல்பிரண்டு முறுமும் வாயுவால்.

644. வாலென்ன தோலுரித்தாப் போலேகாணும்
வாயிலே போட்டாக்கால் கசப்பேகாணும்
காலென்ன மொழிக்குமொழி திருக்காணும்
கால்பிரளுங் கண்ணுருளும் கண்டம்நோகும்
சேலென்ன நீர்குதக்கு மேகம்போலே
சிறுநீரும் மலக்கட்டுந் திரண்டுஆடும்
ஆலென்னப் போய்விரியும் பானவாயு
அடைத்தாப்போல் நின்றுவிடும் வாசிமூச்சே.

---

643. யோகம் பயில்கிற மாணவனுக்குப் பல உடல் உபாதைகள் ஏற்படும் மருந்துகளை உண்டு இவற்றைத் தீர்த்துக் கொள்ளலாம் என்பது ஆகாது. யோகமுறையிலயே மாற்று உண்டு என்பது கருத்து.

644. கால் பிரளும், கண் உருளும் கண்டம் நோகும். நீர் கட்டும். இப்படி வரும் உடம்பின் இடையூறுகள்.

645. மூச்சோடா முனைநாசி முட்டிப்பாயும்
முன்னின்றுங் காணாது விழிமேல்நோக்கும்
பாச்சென்றும் வேண்டாமே தானேபாயும்
பரிவாசி செயவாசி பரதேசி
கூச்சென்று முக்குணமும் புருவம்நாடும்
குருநெறியே வாத்தியார் கொண்டகோலம்
ஏச்சென்று பாராதே யிந்தநூலை
என்மக்க ளானாக்காற் தள்ளிடாரே

## கபம் வழலைசுத்தி

646. தள்ளாரே தள்ளுவரே யானாற்தானும்
தாரணியி லென்மனுக்கள் தள்ளுவாரோ
கொள்ளுவா ராணாக்கால் முத்தரூயம்
கூறுமே ஆதியந்த மட்தபாரு
மொள்ளுவார் ஞானநீ ரமுர்தந்தன்னை
முகூர்த்தமதிற் சேகரித்து உண்ணுவார்கள்
கள்ளுநீர் போலிருக்கும் ருசியுந்தேனாம்
கால்நடையின் நெய்யதுங் கருப்பஞ்சாறே.

---

645. மூச்சிலும் சில இடர்கள் தோன்றும். ஆசான் இருந்து போற்றிய நேர்முகப் பயிற்சி இது. எச்சாக விட்டுவிடாதே. இந்த நூலைத் தள்ளிவிடாமல் பயிற்சியிலே முன்னேறிச் செல்.

646. இந்த நூல் தள்ளிவிடாமல் இதில் கூறியுள்ள பயிற்சிகளைச்செய்தால் ஞான நீர் பற்றலாம் அமுதம் அது. கள் போல் இருக்கும். கரும்பின் சாறுபோலவும் சுவைக்கும்.

647. முள்ளுபோற் தடித்திருக்கும் பக்கந்தானே
முழிபிதுங்கு மச்சனமே மயங்கிடாதே
வள்ளுவ போற்குலைக்குஞ் சாந்தீபண்ணு
மக்களே மருமகளைத் தள்ளிவைப்பீர்
கொள்ளுவீர் மருமக்கள் தானேநானே
குமரியே யானாக்காற் தள்ளிடாதே
துள்ளுமே மனதடங்கச் சாதத்தேரு
துன்பமற்று யிருந்திடலாம் ஞானக்கண்ணே.

648. ஞானக்கண் நெற்றிக்கண் உச்சிக்கண்ணு
நயனக்கண் மேலேதான் யோகக்கண்ணூறு
ஊனக்கண் சதைக்கண்ணு விழியானகண்ணு
உளமறியாத் தோசியற்கு பேச்சுமூச்சோ
வானக்கண் கண்டாக்கால் பேச்சேயாகும்
வசனித்தாற் சொல்லெல்லாம் பலிதமாகும்
ஈனக்கண் பெற்றாக்கால் வார்த்தைதானே
இவ்வார்த்தை மனவார்த்தை கலகவார்த்தை.

---

647. விழி பிதுங்கிச் சில வேதனைகள் ஏற்படும் மயக்கம் அடைந்து தள்ளிவிடாதே. சாதித் துன்பத்தை வென்று பேரின்பம் அடையலாம்.

648. ஞானக்கண் என்பது நெற்றிக்கண். உச்சிக்கண் நயனக் கண்ணின்மேலே யோகக்கண் உற்றது அதைத்தெரிந்து கொள்.

649. வார்த்தையே சொற்கலகம் மனமுந்தானே
வையாழி தீபாடுமல்லோ கலகநெஞ்சு
போர்த்தையே பீச்செறிந்து நெஞ்சைவெட்டி
பிழைதிருத்தி வனமாக்க மரத்தைவெட்டி
கோர்த்தையே! ஊசிமணிச் சறடேபோல
குருமஞ்சரியை ஊசிவழி உச்சிநூலில்
ஏர்த்தையே யிக்கண்ணாம் சதைக்கண்ணாலே
என்குருவின் சாஸ்திரத்தை நம்பிப்பார்த்தே.

## ஒளிகண்டால் மோட்சம்

650. பார்த்தாலும் இப்பழக்கம் விட்டிடாதே
பக்குவமாய் சொன்னவைகள் மறந்திடாதே
வேர்த்தாலுங் குளத்தாக்காற் சொரியவேணும்
மெல்லியர்க ளானாலும் மந்தம்வேணும்
சீர்த்நாக்காற் ரசிப்பதற்கு மந்தந்தாதே
தனமிருந்து பார்த்துவர நாட்டந்தானே
வர்த்தாக்கா 'லொளி' காணு முடிவுதானே
எப்போதும் ஒளிகண்டால் மோச்சந்தானே.

---

649. மணியைக் கோப்பது போல குருவின் மொழிகளை ஒன்றுகூட்டிப்பார். பயன் பெறுவாய்.

650. நாள்தோறும் பயிற்சிசெய்கிற பழக்கந்தை விட்டுவிடாதே. இப்படிச் செய்துவந்தால் ஒளி காண்பாய். எப்போதுமே ஒளி கண்டால் அதுவே மோட்சமாகும்.

651. மோச்சந்தான் ஒளிகாணச் சித்திக்கும்பார்
மோனஒளி காணுமட்டுஞ் சாதனங்கள்
கூச்சந்தான் ஞானகுரு ஒளிகாணமட்டும்
கூசாதே சாஸ்திரங்கள் ஒளிகாணுமட்டும்
பேச்சுந்தான் மனமென்ற மூடத்தாலே
பேசாதே ஒருநாளும் அறவேமாய்கை
ஆச்சுதா னென்றாலு மனதாலாகா
அவ்வறிவு பேரறிவு அதனாலாமே.

652. ஆகுமே அறிவைவீட்டார் சலனத்தாள்வார்
அவ்வாசி யோகம்மிட்டார் சத்திகிட்டா
போகுமே யெனைவீட்டார் சாஸ்திரங்கெட்டார்
பொய்கெட்டார் மெய்யாவார் புருக்கையாவர்
ஏகுமே உயிர்விட்டார் மயானந்தொட்டார்
எல்லாருந் தொட்டாரே அச்சமில்லார்
ஓகுமே கண்ணீரே வடிதல்சொந்தம்
ஊழ்வினையென் றிடிப்பாரே துடிப்பினாலே.

---

651. மோட்சம் எப்போது சித்திக்கும்? 'ஒளியை'க்காணக் காணச் சித்திக்கும். பேச்சைவிடு. அறிவு என்பதே மாயை. பேரறிவு என்பதே மெய்யறிவாகும்.

652. அறிவை மீட்டால் சலனம் மாயும். யோகப் பயிற்சியை விட்டுவிட்டால் சித்தி கிட்டாது.

653. துடிப்பென்ன உறநெஞ்சு மத்ததன்னில்
தூளெனவும் புகையெனவும் புதைந்தபூதம்
நடிப்பென்ன கண்டிருந்தும் பாராமல்தான்
நாயகனைக் கண்டவள்போல் கவிழுவீர்கள்
நொடிப்பென்ன அடிக்கடியே மார்புபள்ளம்
நொடித்துவலு வடித்தஉயிர் சுருண்டுசுற்றி
அடித்தஉயிர் யிருதயத்தின் பள்ளந்தன்னில்
அடிக்கடியே சுற்றித்தான் சுழலும்வாயுவே.

654. வாய்வென்ன அச்சுழியிற் சுழல்வதாலே
மனதென்றும் நினைவென்றுங் குறிப்பதென்றும்
ஆய்வென்றும் விபகாரத் தொந்தமென்றும்
ஆகாய அறிவென்றும் மறப்பதென்றும்
காவென்றும் ஞானமொழி குளிர்ச்சியென்றும்
கங்குல்பக லற்றவிடங் கருத்தேயென்றும்
நோயென்று மனமாய்கை சலனமென்றும்
நுவலுவார் பொய்யிருக்கு விடமென்பாரே.

---

653. காற்றினுடைய இயக்கம் உடம்பினுள் எப்படியெல்லாம் சுற்றுகிறது, சுழலுகிறது என்பதைக் கூறுகிறார்.

654. இந்தச் சுழற்சியைப் பல பெயர்கள் இட்டு அழைப்பார்கள். நோய் என்றும் மனமாயை என்றும் சலனமென்றும் பலபடியாகச் சொல்லுவார்கள்.

## மனதின் பெருமை

655. இடமென்பார் தலமென்பார் தீர்த்தமென்பார்
எல்லொரு நாமிருக்கு மீவடமென்பார்
கடமென்பார் புந்திநடு சித்தமென்பார்
கடத்தறிவு பெருயூகம் தெளிவாமென்பார்
குடமென்பார் கருவுடலே மனமாமென்பார்
கோடான கோடிசித்து மனதினாலே
அடமென்பார் வயிராக்கியஞ் சமமாமென்பார்
ஆர்கண்டு சொல்வார்கள் மனத்தின்பேற்றே.

656. மனப்பேற்றைச் சங்கர்ப்பத் தளவென்பார்கள்
மருகால மறிந்துணரும் வருத்தமென்பார்
இனப்பேற்றைச் சொல்லுதற்கு இதுதான்ஞாயம்
இதுபாயம் அதுபாயம் யெண்ணச்சொல்லு
தனப்பேற்றை நினைப்பதென்றும் மிச்சையென்றும்
சகலருக்குஞ் சம்பந்த பந்தமென்றும்
குணப்பேற்றைக் கண்டறியக் கள்ளமென்றும்
கும்பிடுதல் கோவில்குளம் குருசன்யாசம்.

---

655. மனத்தினுடைய ஆழ நீள அகலங்களை யாரே சொல்ல இயலும். இடம் என்பார், தலம் என்பார், தீர்த்தம் என்பார், இன்னும் எப்படியெல்லாமோ சொல்வார்கள்.

656. மனப்பேற்றைச் சங்கற்பத் தெளிவு எ"றும் சொல்வார்கள். இனப்பேறு தனப்பேறு குணப்பேறு என்று வகைப்படுத்தி அதனதன் பிற பெயர்களை அடுக்குவீர்கள்.

657. சன்யாச மனமென்றும் குடும்பமென்றும்
தவமென்றும் பலமென்றுஞ் சாயலென்றும்
சன்யாச மதனாலே கண்டுகொள்ளச்
சாரூப முதலாகச் சானதாக
சன்யாசச் சரிகையொரு கிரியையோகந்
தான்கண்ட பலனாலே ஞானமென்று
சன்யாச சாலோக சாமீபத்தே
சாரூப சாயுச்யத் தின்பேராலே.

658. பேராலே ஊராலே பொருளினாலே
பின்னுமுன்னு நால்புறமுந் துணையினாலே
கோராலே சீராலே பத்தியாலே
பொடுப்பாவந் தானகற்றும் புத்தியாலே
ஏராலே உழவாலே மண்ணினாலே
எங்களுக்கு ஆள்த்கணையு மதுபோற்தானே
நூறாலே படுகளத்தே சாம்பல்வீடு
நோக்குநாள் வருமட்டு மண்ணாபேரே.

---

657. சாலோக, சாமீப சாரூப சாயுஜ்ய விளக்கங்களின் விரிவைக் கூறியது.

658. போராட்டங்கள் நிரம்பிய வாழ்வின் செயல் வகைகளையும் எண்ணங்களையும் பிணைத்துக் கூறுகிறார்.

659. பேரென்ன மனதேபோம் நினைவேபோல
பேர்நினைவை யெண்ணல்போல் மனத்தின்பேரு
ஊரென்ன யிப்படியே சீவர்பேரு
உலகமதிற் புற்பூண்டு விருட்சப்பேரு
தாலென்ன மனப்பேரு மிப்படித்தான்
தங்குகடல் வவாரிமலை பெயரனந்தம்
பேரென்ன காற்றுதுவின் பெயரனந்தம்
வீசுதுழீ மேகப்பே ரனந்தந்தானே.

660. அனந்தமே இரவிமதி யுடுக்கள்பேரு
அதன்மேலே கருப்புடலே ஆகாயத்தே
அனந்தமே வெளியகலம் அண்டகோலம்
அந்தமண் திடல்மேடே இந்தமண்ணே
அனந்தமுண்டு யிதற்குள்ளே வெளிக்குள்ளேதான்
ஆச்சரியம் யெண்ணில்லை மனதின்பேதம்
அனந்தமுண்டு நினைப்பதெல்லா மனதின்பேறு
அய்யய்யா வென்றாலு மருள்பெற்றாலே.

---

659. பெயரும் ஊரும் மனத்தின் சுழற்சிகளிலே எப்படியெல்லாம் பல்குகின்றன என்பதை அடுக்கிச் சொன்னவாறு.

660. மனத்தினுடைய பேதங்கள் எண்ணில் அடங்காதன நினைப்பது நினைத்தும் மனத்ன் பேறு அல்லவா?

661\. அருள்பெற்றால் மனவுடலுந் துணையாய்நிற்கும்
ஆகுமது வென்றாலும் நம்மாலாகா
இருள்பற்றி வந்தாலு மெடுத்துப்போகும்
ஏமன்வரு நாளறியுங் கோலாய்நிற்கும்
பொரளுபற்று வந்தாலும் தானேகிட்டும்
புலாவெலும்பு நைந்தாலும் தானேகட்டும்
மறுபற்று வாராது யெந்தநாளும்
மனமுண்டு உயிருண்டு உடலுமுண்டே.

662\. உடலுண்டு உயிருண்டு அதனாலேதான்
ஊடாடு மனமுண்டு அதிலேதானே
கடலுண்டு குதிரைபோல் யெண்ணல்லாத
கார்மேகம் போற்கிளம்பு மனமுந்தானே
திலுண்டு கட்டுமெட்டு மனமும்உண்டு
தீங்கில்லா மனமுண்டு தனம்போற்றதாலே
மடலுண்டு பீடுங்களியா யீடத்தைக்கண்டு
மாமனத்தோ ரானார்கள் யிடங்கண்டோரே.

---

661\. அருள் கூடிவிட்டால் மனமும் உடலும் துணையாய் நிற்கும் அறிகுறிகள் நன்கு புலனாகும். மறு பற்று வாராமல் மனம், உயிர் உடல் ஒன்றி இயங்கும்.

662\. இடம் வசமானவர்கள் மாமனத்தோர் ஆகுங்கள். கடலை உண்டு மேகம் கிளம்புவதுபோல் குதிரையாகக் கிளம்புவதுபோல் மனம் எழுந்து செயற்படும்.

663. கண்டோர்கள் மனங்கண்டு கர்மந்தாண்டு
காமமனும் யோகமுனும் ஞானம்நாடும்
தொண்டர்கள் பண்டுபொருள் களவுசெய்தார்
தூங்காமற் தூயநிலை பெரியோரானார்
தொண்டர்கள் மனமறியார் சிறியோரானார்
அடிப்பவரைக் காத்திருந்து உண்ணலானார்
மீண்டோர்கள் யெக்காலம் பூமியுண்டு
மேலோர்க்கு யெக்காலந் தாழ்வுமுண்டோ.

664. உண்டோதான் குறைநிறைவு காலந்தோணார்
உட்புகுந்து பார்த்ததனைக் கேட்பாரானால்
எண்டோர்கள் சொற்பலிதம் குறைவுதோனும்
பாரதனை நன்றாக நிறைவுகாண
தண்டார்கள் பூமியிலே கோடாகோடி
தான்பிறந்து படர்முள்ளுச் செடியேபோல
எத்தனையோ ஈயெறும்பு போலத்தானே.

---

663. மனத்தைக் கண்டவர்கள் கர்மத்தைத் தாண்டுவார்கள். காமம் நீங்கும். யோகம் கூடும், ஞானமும் சேரும். மேலோர்கள் ஆனார்கள். ஒரு தாழ்வும் இல்லை.

664. இப்படி இல்லாத மக்கள் ஈயும் எறும்பும் போல படர்கிற மட்செடியைப்போல நிலத்திலே பிறந்து முடிவில்லாமல் செல்கிறார்கள்.

665. போலத்தான் மாந்தரெல்லாங் கொசுவேபோல
பொங்கினார் தங்கினார் பொருமினார்கள்
காலத்தால் விளைந்தவர்கள் மயானக்காட்டை
தானுடைந்தார் மேலடையச் சமத்தில்லாதார்
மீளத்தான் தெரியாதார் பூமிப்பாரம்
மேலிட்டுத் தாங்காமல் விளைவோகொஞ்சம்
வாழத்தான் காணாமற் போரேயிட்டு
வயிராலே அக்கினியே கோபமாமே.

666. கோபமே தீப்பற்றி உச்சிவாய்வு
கொடுங்கனலா லிந்திரியஞ் சாம்பலாச்சு
தாபமே மேலிட்டு நீறமேமாறி
சந்ததிகள் பழமுறைமை தப்பினார்கள்
கூபமே மண்டிருந்த கிழத்தின்மண்டு
கூக்குரலைத் தானொடுக்கி அடங்கினாபோல்
ஞாபகமே தானொழிந்து மயக்கமாக
நானிலத்தில் மானிடருந் தூங்கினாரே.

---

665. கொசுக்களைப்போல வாழ்ந்து மயானக் காட்டை அடைகிறார்கள், மாந்தர்கள். மீளத் தெரியாமல் பிறவிச் சுழலில் சிக்கியுள்ளார்கள்.

666. இந்திரியம் பற்றி தாபமே மேலிட்டு உலகிலே உழன்று மாண்டுபோகிற நிலையைப் பற்பலவாகச் சித்தரிக்கிறார்.

667. தூங்கினார் தெய்வபயங் கோணின்அச்சம்
துடர்பிரம சாபபயம் தொக்கினோயால்
ஏங்கினாற் குடற்பசியால் தாரித்திரத்தால்
எல்லாரு மாண்டார்கள் துன்பம்மிஞ்சி
வாங்கினார் சொற்பிலத்தை மனுப்பீலத்தை
வாயாட ஒட்டாமல் செமித்தாப்போலே
தூங்கினார் விழித்திருந்து நமனைக்கண்டார்
துன்பமற்று வாழ்வதென்னாள் சொல்லுவீரே.

668. சொல்லுவிர் ஒளிதாண்டி உலகந்தாண்டி
சொற்பிழைகள் தாண்டினபேர் சுகமுற்றோர்கள்
கெல்லுவேன் வெகுநாளாய் நினைத்திருக்கேன்
கேடிதனைத் தப்புவிக்க நீரேவந்தீர்
நில்லும்நீ ரிப்பிழைகள் நீங்குமட்டும்
நீங்காதோ நீரிருந்தால் நீங்கும்நீங்கும்
மல்லுநீர் யுத்தக்களஞ் சாம்பலாகும்
வகையுடனே நாமிருப்போம் போக்கிடீரே.

---

667. எத்தனை அச்சங்களுண்டு மனித வாழ்வில் அதையெல்லாம் நயமாக அடுக்குகிறது இச்செய்யுள்.

668. ஒளியைத்தாண்டி உலகைத்தாண்டி சொற்பிழைகளும் தாண்டியவரே சுகம் பெற்றவர்கள் கேடுகளிலிருந்து உம்மைத் தப்புவிக்க நீண்ட நாள் யெண்ணியிருக்கிறேன் வாருங்கள்.

669. போக்கினாற் கைலாசம் பொதுவுமாகும்
புணர்சென்மம் நீங்கிவிடும் பொதுவேயாகும்
வாக்கினாற் சொன்னாக்காற் புகைபோலாகும்
வாசல்வழி திரும்புவரோ மறைந்துபோவார்
நோக்கினாற் போதாதீர் காடேயாகும்
நீராண்டி லக்கண்டம் கடலதாகும்
போக்கினா வக்கண்டம் புழுதிச்சாம்பல்
புற்பூண்டு தீயெரிய யிறைச்சிதெய்வம்

670. தெய்வமே யானாக்கா லிறைச்சிதின்னார்
தேவடியா ளங்குண்டு வீடுதோறும்
நைவமே கற்பிருக்கும் நாங்கள்தானே
நமனுக்கு மஞ்சோமே யிறைச்சிக்கஞ்சி
பெய்வமோ மழைபேயோம் கல்லேபேய்வோம்
பெருந்தூர மலையாவோம் முள்ளுமாவோம்
கொய்வமோ ஆளிருக்கச் சுரமேந்து
கொண்டுபோம் நாளில்லை நாளைதானே.

---

669. இந்தத் தீமைகள் போய்விட்டால் கயிலாயம் பொதுவாகும். மறுபிறப்பு நீங்கிவிடும்.

670. இந்தப் பாடல் நமனுக்கும் அஞ்சாத நிலையிலான மனத்தை வேறுபடுத்திப் பேசுகிறது. பாவில் சில சொற்கள் மயங்கி வருகின்றன.

671\. நாளேதா னேதய்யா புசுண்டமூர்த்தி
நாயமே யென்னாகும் போற்றிசெய்தேன்
தாளேனே யென்மனது உம்மையன்றி
சகியேனே ஓர்பொழுதுந் தவறிலேனே
மாளேனே உமைநினைந்த வசனத்தாலே
வருவேனே நீருரிருக்கு மிடத்துக்கேதான்
கேளேனே பிறர்சத்தங் கேள்வியொடு
கேட்டதையே நான்கொடேன் நானீவேனே.

672\. ஈவேனோ நீர்கொடுத்த வரத்தையானும்
ஈபனோ தருபவனா யெமனைவெல்ல
ஓய்வேனோ நான்மறந்து தூங்குவேனோ
உள்மனதைக் காணாமல் வெளிபோவேனா
காய்வேனா நீரிருந்தும் காணாதார்கள்
கஞ்சிகஞ்சி யென்றலைவார் மாறுவேனா
தாயேனோ தந்தைகொண்ட மாதிருக்க
தமரேனோ யெனைமறந்தால் சமாதிதானே.

---

671\. காகபுசுண்டரிடம் சரணம் புரிகின்ற சீடனுரை.

672\. எமனை வெல்லும் முயற்சி பயிற்சி இவற்றை இவற்றை உரையாடுகின்ற வாசகங்கள் இவ்வை. இந்தப்பாடலிலும் சில சொற்கள் மயங்குகின்றன.

## சமாதி நிலை

673. சமாதியே சொல்லுகிறேன் வசிஷ்டநாதா
சந்ததிக ளத்தனைக்கும் தெளிவதாக
சமாதியே நீயானாள் வெகுநாள்யோகி
சாகும்நாள் தெரிந்தவரே சமாதிதன்னில்
சமாதியே மண்மூடல் அரையாங்கல்லில்
தான்வைத்து மூடலல்ல ஒளியுமல்ல
சமாதியே பிறர்காணா மறைவுமல்ல
தானிறந்து உயிர்விடலு மல்லதானே.

674. அல்லவென்றால் சமாதிநிலை உயிராம்மூக்கில்
அசைந்தாடுஞ் சீவனுயிர் பிராணமூச்சு
சொல்லவென்றால் நூல்தோறும் சொல்லிவைத்தார்
சுகமுடனே தானிருந்து ஏங்கிடாமல்
நில்லவல்ல பேர்களுமே மூக்கோடாமல்
நிறுத்திடவுந் தடுத்திடவும் உள்ளேதானே
செல்லவல்ல பேர்களுமே சிவன்மால்போல
தெந்தனமென் றாடலுமே உயிரின்சித்தே

---

673. சமாதி என்பது என்ன என்பதைச் சொல்லுகிறேன் அது மண்மூடிக் கட்டுகிற கல்லறையில்லை. இறந்த பின் செய்கிற அடக்கமில்லை.

674. சமாதி என்பது உயிரின் சித்து. நிலைநிறுத்த வல்லவர்கள் மூச்சு ஓடாமல் நிறுத்திடவும் தடுத்திடவும் அகத்தினுள்ளே புகுந்து சென்று செய்கிற சாதனையாளர்களின் ஒடுக்கமே சமாதியாகும்.

675. சித்தியா மிதுதானே சமாதியாகும்
சிவனாணை மாலாணை சித்திதானாம்
முத்தியே யிதுதானே சீவன்முத்தி
முனிமுத்தி காயசித்தி யோகசித்தி
வெத்தியே யிதுதானே நரகந்தன்னை
விரட்டுவதுந் துரத்துவதும் உயிரைவைத்து
புத்தியே யிதுதானே மற்றதெல்லாம்
புலாவுடம்பைக் காப்பதற்கே மத்திதானே.

676. மத்திதான் புத்தியெல்லாம் பொருளைத்தேடும்
மனிதர்புத்தி சீவனுயிர் பிரிதல்காணும்
சத்திதான் பிரிந்தாலே யென்னவாகும்
தவஞ்செய்த உடலல்லோ எமனுக்கஞ்சா
சித்தியே யுடல்வேண்டு மரணத்தாலே
சீவனுயிர் பிரிவதற்கு உடல் நடுங்கும்
நத்தியே தானிருக்கும் அறிவேமத்தி
நாயகரின் பாரிமத்தி சிசுவைப்போலே.

---

675. சித்தி என்பது இதுதான் சிவனானை திருமாலானை இதுவேதான் முத்தி இதுவே அனைத்தும்.

676. புத்தி பொருளைத் தேடுவது இயல்பு. அது எம வாதனை உள்ளது. தவம் செய்த உடம்பானது எமனுக்கு அஞ்சாது. சித்திபெற்றவன் நிலை அதுவன்று.

677. சிசுவில்லாத் தாய்தந்தை சினேகம்போல
சீவனுடல் அறிவன்றித் துன்பமாகும்
பசுவில்லாச் சாணத்தா லிட்டாற்போல
பல்லிடுக்கி வீரம்வர ஊத்தைபோலும்
நேசமில்லார் ஆடைகட்டித்தி ரிந்தாப்போல
நீள்மனமும் ஊடாடுஞ் சலித்துத்தள்ளும்
கொசுவில்லா உயிர்முட்டை யில்லாவீட்டில்
கொண்வர்தன் நித்திரைபோற் குரும்பர்தானே.

678. குரும்பரே சாஸ்திரங்கள் லேசாய்ச்சொன்னார்
குமரிமுகில் கல்லாகும் வாரேயென்ன
அரும்பரே நூல்சொல்லக் குருவானாரோ
ஆருக்கு மஞ்சாமல் முத்திவிட்டு
வெரும்பரே துன்பத்தைச் சொன்னார்பாழாய்
வேராுக்கச் சொல்லாமல் அழுகைசொன்னார்
திரும்பரே சொன்னாக்காற் திருவைச்சொல்லு
செத்தபின்பு அழுகைவருந் தானேதானே.

---

677. தாய்தந்தையருக்குக் குழந்தையில்லை என்றால் எப்படி? சீவனுக்கும் அறிவுக்கும் உடலுக்கும் அறிவு அப்படி. இதேபோல் இன்னும உவமைகள் கூறுகிறது இச் செய்யுள்.

678. ஆழமாகச் சொல்லாமல் மேலோட்டம் போல் சொன்னதால் நேர்ந்த துன்பத்தைக் கூறியவாறு.

679. தானேதான் அழுகைவரும் சுகமுந்தானே
தன்னாலே வருகாது சீவன்முத்தி
கோனேதான் நாடன்றி வருகாதாலே
குமரிசுகம் ஆணையன்றி வருவதுண்டோ
வீணேதான் சொன்னாரே குருவல்லாமல்
எவரும்பிலுக்காய்ச் சரடிட்டார் எலும்புக்காக
தானேதான் பார்த்தறிந்தாற் தானேகாணும்
சொலத்தெரிந்தால் தான்தெரியுஞ் சுகவாழ்வாமே.

680. வாழ்வீரே தனையறிஞ் சாஸ்திரங்கள்
வாய்கொண்டு பாடாதே மனதால்பாரு
சேய்கொண்டு தானுண்ணல் போலத்தானே
தெருவீதி பார்ப்பீரே உம்மைப்பார்ப்பீர்
நோய்கொண்டு போவீரே யென்சொல்பாரு
நோக்கியே பாராட்டால் யீதென்செய்யும்
பேய்கொண்டு போவீரே நீரேதானும்
பின்னுமுன்னு மறந்தறினாற் தாரைதானே.

---

679. அழுகையும் சிரிப்பும் தாமாகவே வரும். ஜீவன் முத்தி அப்படியில்லை. குருவில்லாமல் அது கூடிவராது.

680. தன்னை அறிகிற நூல்களை வெறும் பாடமாகப் பார்த்து ஒப்பிக்கக் கற்றுக்கொண்டால் போதாது மனத்தினால் பார்க்க வேண்டும்.

681. தாரைதான் வார்த்தாப்போல் உடலேதாரை
தமர்தாரை நீர்வார்த்தீர் யெமனார்ஞாயம்
ஊரேதா னிப்படியே வெளித்திக்கெல்லாம்
ஊடாடுஞ் சீவர்களும் மயானநாடே
பேரேதா னிட்டீரே பெருமான்பேரை
பிள்ளைதின்னுங் கர்த்தனே யெமனார்தானும்
வேராதா னறுத்தானே யெமனார்தானும்
மேல்பெருமான் கூடிருந்து தூக்கினாரோ.

682. தூக்கினார் சிவனாரோ பெருமாள்பிரமன்
துணைசெய்ய யிந்திரனோ குலத்தினாரோ
பாக்கினார் கிரகங்கள் நவமிதானோ
பாரிந்தக் குலதெய்வப் பூசைதானோ
சேக்கினா ரறுபத்தி மூவர்தானோ
திருமைந்த ரிருவருமோ கிழவிதானோ
நோக்கிநே ரெமன்வரவே தெய்வமெங்கே
நுவலுவீர் யெமன்வந்தால் தெய்வமேதே.

---

681. எமனுக்கு உடம்பைத்தாரை வார்த்தீர் என்று சொல்லி மரணத்தை உறுதிப்படுத்தினீர்பெருமானும் பக்கத்திருந்து தூக்கினார் போலும்.

682. எமன் வருவது உறுதியாயிற்று. எமன் வருவானேயானால் தெய்வம் எங்கே போயிற்று.

683. தெய்வமே யெமன்தானே தெய்வநாமன்
தேசத்தி லவன்சிறிது தள்ளல்வேண்டும்
நைவமே மார்க்கண்டன் தனையேயெண்ணி
நடுக்காட்டி லிருந்தவரும் புலிவாய்முன்போல்
செய்வமே நாம்தவமும் தவத்தைவிட்டு
சிறுபுலிக்கு அஞ்சுவர்கள் புலியிற்தொட்டே
தொய்வமே பெரும்புலியும் யிரையே செய்யும்
துயர்கொண்ட தெய்வமது நம்மைத்தின்னும்.

684. திண்ணாமல் வைத்திருக்கோ தெய்வம்
செத்தபின்பு பூசைக்குத் தேடுந்தானே
உண்ணாமற் தானிருக்கோ தெய்வமெல்லாம்
ஊடாடும் மக்கள்வழி பிதிரோயண்டும்
எண்ணாமல் முன்செத்த பேரைத்தானே
என்மகனே யென்றுசொல்லிப் பூசைவாங்கும்
நண்ணாம லிப்படியே தெய்வகூட்டம்
நாம்சாகத் தெய்வங்கள் சாகாதுண்டோ.

---

683. மார்க்கண்டனை நினைத்துக் கொண்டு யமனுக்கு ஆளாகிறோமோ?

684. சாவு இப்படி வாழையடி வாழையாக வருகிறது என்றால் தெய்வக் கூட்டங்கள் என்ன செய்கின்றன? அவை சாகாமல் நாம் சாவதுதான் நடப்பாக இருக்கிறதோ?

## எமன் கோழை

685. சாகாத தெய்வங்கள் செத்தபேரை
தான்சொல்லி மக்களிடம் பலியேகேட்கும்
வேகாத மனிதர்களைப் பார்த்தல்லை
வெந்தணலைத் தாண்டினபேர் நாரதாதி
போகாத மனிதர்களும் யெமனார்முன்பு
போய்வருகார் திரும்புவரோ தெய்வந்தானோ
நோகாது வைத்திருக்குஞ் சடலத்தாரை
நுட்பமாய்ச் சுட்டுவிடும் எமனாந்தீயே.

686. தீயென்றா லொதுங்கிடலாம் மண்ணாதாலோ
தீனிதின்ன நினைத்தாக்கா லென்னசெய்வோம்
வானேதா னடிநம்மைத் திண்ணவென்றால்
வாயாலு மென்செய்வோ மெண்ணலுண்டோ
தாயென்று நாம்நினைக்க நீரேகொல்லத்
தாரணியிற் தப்புவது லேசோவாச்சு
நோயென்றால் மாளென்று நூறுக்குள்ளே
நுரைநுரையாய்ப்பொங்கிவரும் கோடிகோழை.

---

685. சாகாத தெய்வங்கள் செத்தவர்களைச் சொல்லிப் பலி கேட்கும். எமனிடம் போய்த் திரும்பி வந்தவர் யார்?

686. தீயென்றால் ஒதுங்கிவிடலாம் ஆனால் நம்மைத் தின்ன வருகிறதிலிருந்து எப்படித் தப்புவது.

687. கோடிபொற் குற்றங்கள் யெண்ணிப்பார்த்தால்
கோழையே பலகோடி அய்யாஅய்யா
நாடியே குற்றங்கள் சமனாய்நில்லா
நடுநாடி யென்செய்யும் யெமனார்தூது
போடியோ நம்மறிவு தூரதிஷ்டி
பேர்பெற்ற திரிகால பவ்ர்த்தப்பூமி
வாடியே போனதுவோ போனாலெங்கே
மாவுடலை நீக்குதற்கோ மறைந்திட்டாரே.

688. மறைந்துமே போகாம லவரைக்கண்டு
மண்திண்ணக் காரணமே தென்றுகேளு
கரைந்துமே போகுமுடல் கரையாவண்ணம்
காயசித்தி யெங்கிருக்கு தென்றுகேளு
உரைந்துமே னாமிருக்கு மிடத்தைக்கேளு
ஊன்விடவும் ஞாயமுண்டோ வென்றுகேளு
திரைந்துமே போனாக்கால் மானந்தானே
தினந்தினமு மெமன்வரநா ளில்லைதானே.

---

687. எமனார் வரும்போது என்ன நேர்கிறது உடம்பிலே என்பதைச் சுட்டி உரைத்தவாறு.

688. கரைந்து போகிற உடல் கரையாவண்ணம் காயசித்தி எங்கே இருக்கிறது என்று விசாரணை செய்வாயாக.

## அறிவே குரு

689. இல்லையே யெந்தெந்த நாளுமுண்டு
எம்பிரான் நாமுண்டு தன்னைக்கண்டால்
தொல்லையே வாராது சுகமதாகும்
துக்கமில்லை நாமுண்டு தூங்கலாகும்
வல்லையே நாமறியக் கண்ணேகாண
மனமுருக அறிவான குருவேகாண
நெல்லையே பொரித்தீரே வித்தேயாமா
நீள்குருவே காயசித்தி நெடுநாள்தானே.

690. நெடுநாளே வாழ்விருக்கும் யோகஞானம்
நீள்விசும்பு ஒத்திருக்கும் சித்தியோகம்
விடுநாளே முன்தெரியா பின்னாற்தோற்றா
வசனித்தால் நாவிருந்து மொழிகுவாளாம்
விடுநாளே நடுநாளுந் தனக்குத்தோற்றும்
மெய்நாளே தோற்றாது கொல்லாநாளே
கெடுநாளே ஒவ்வொருநாள் கிலேசமான்நாள்
கேட்டவரங் கொடுக்காது தன்னாற்தானே.

---

689. குருவின் துணையிருந்தால் காயசித்தி உண்டு துக்கமில்லை தொல்லையே வராது.

690. வாழ்வு நெடுநாளிருக்கும் சித்தியோகம் வானளாவி நிற்கும். வசனிக்கும்போது நாவிலிருந்து அவன் மொழிவான்.

691. தன்னாலே தானீயும் பிறரேகேட்டால்
தாரித்திரம் முன்சொல்லும் பின்னேதானே
மண்ணாலே பெண்ணாலே பொன்னினாலே
மாமனது யிச்சையெல்லாம் தானேசொல்லும்
என்னாலே யாகாது கொடுக்கவென்றால்
இடம்வேணும் பொருள்வேணும் யேவல்வேணும்
நின்னாலே யென்னாலே புத்தியாலே
நீள்விசும்பின் சம்மதங்கள் வேணும்பாரே.

692. வேணுமே குலதர்ம ஆசாரங்கள்
மென்மேலும் நல்வேளை பொருந்தவேண்டும்
காணுமே யில்லத்திற் பெரியோருண்டு
கவலையற்ற யிடந்தனிலே யிருப்பதுண்டு
தோணுமே யவர்களுக்குப் பாதிதானே
தொந்தமுண்டு அவர்களுக்குப் பிச்சைதானே
நானுமே யவர்களுக்குக் கர்மந்தானே
நாயகனும் நாயகிபோல் வாழுவாரே.

---

691. மூவாசையும் மாமனது ஆசையும் தானே சொல்லும் எதற்கும் நீள் விசும்பின் சம்மதம் வேண்டும் அதை எண்ணிப்பார்.

692. மேலும் மேலும் நல்வேளை பொருந்தும் கவலையற்ற இடம் இருக்கையாகும்.

## யோகம் 12 ஆண்டு செய்ய

693. வாழுவா ரில்லறத்திற் பெரியோர்தானும்
வாய்கொண்டு சொல்லிடுவார் மறையின்ஞானம்
கோளுபார் மறைஞாயஞ் சொல்லாவிட்டால்
குமரிமுகில் பந்ததுபோற் கல்லுதானே
தேளுபார் ரிஷி விஷமிருந்தும் யில்லமில்லை
தெருவிதி தானிருந்தும் பலனோயில்லை
நாளுபார் பனிரெண்டு வருஷமாமா
நாயகனை நாம்கூடிக் கலப்பதற்கே.

694. கலப்பதற்கு வெகுநாளே கண்டாலப்போ
கவலையிட்டு யிருந்தாக்காற் சுணத்திற்சித்தி
பலப்பரே மனமில்லை துன்பமில்லை
பரிவாசி வேண்டாமே யோகம்வேண்டாம்
தலப்பதே கண்டுகொண்டால் தானேவந்து
சம்சாரி யென்சிசுவே யென்றுசொல்லார்
மலைப்பதே யாகாது அவரலதானே
வருவாரே தன்காரியம் வந்தாற்காரே

---

693. இல்லறத்தில் வாழ்வோரில் பல பெரியோருண்டு திரிகால பருவ காலம் சொல்லுவார்கள்.

694. அவரே வந்து அருள் சுரக்கும் வழியிலே எந்தப் பயிற்சிக்குமே அவசியமிராது.

695. காரப்பா அவர்காக்க நீயுந்தேறு
கங்குகரை யில்லாத அன்பேசாரும்
பேரப்பா சொல்லாதே குருநேரத்தே
பிழையென்று நில்லாதே தெளிவாய்நில்லு
ஊரப்பா நானிருக்கேன் வெளியில்நீரே
ஊர்ச்சோற்றே உண்டீரே யெனக்குவேண்டாம்
நாரப்பா கள்குடி எனக்குவேண்டாம்
நம்பினவன் தன்மனதே வேணும்பாரே.

696. வேணும் அவன்நல்ல பிள்ளையில்லை
மேன்மகனே யெந்தனக்குத் தொல்லையில்லை
ஆணுமே அவள்தானே பெண்ணும்நானே
ஆண்டடிமை கொண்டிடலா மில்லந்தன்னில்
வீணுமே யாகாது மக்கள்வேண்டாம்
மெய்வேணும் பொய்மக்கள் வேண்டாமப்பா
காணுமே பொருளொடுக்கம் பின்னைவந்து
கண்டுகொள்ளுந் தம்பலத்தை மென்றிடாதே.

---

695. நமக்கு வேண்டியது நீ தெளிவாய் நிற்க வேண்டும் என்பதே நம்பிக்கையோடு வடிய மனத்தினனாக நீ இருப்பதே நமக்கு வேண்டியது.

696. பொய்மக்கள் வேண்டாம். மெய் மக்களே வேண்டும். அவன் நாயகன் நான் நாயகி என்ற குரு நிலை வீணாகாது இந்த உறவு.

697. தல்பலமும் பல்லிடுவில் நாறல்போக்கும்
தாரித்திரம் வேண்டாமே குழந்தைஞானம்
உன்பலமு மென்பலமு மிருந்தாற் போதும்
உறுபிலமே நானிருக்கேன் நீயேபாரும்
தன்பிலமே பிலமல்லாமல் பிலமாம்வேறே
சயத்துக் காகாது சமர்க்களத்தில்
என்பிலமே கொண்டிருந்தும் மயங்கிடாதே
என்மக்க ளானாக்காற் சீஷன்வேண்டாம்.

698. சீஷனா மென்றுசொன்னாற் சிரிப்பாள்வாலை
சிறுபிள்ளை யுந்தனுக்குச் சீஷனுண்டோ
பாசனா மென்னிடத்திற் சேராத்தோசி
பரிவாசி முற்றிலுமே காணாமாசி
மாசனா முந்தனுக்குக் குடும்ப ந்தானே
மல்லாந்து பெற்றபிள்ளை சீஷன்றானே
வேசனாம் பெற்றபிள்ளை கொள்ளிவைக்கும்
வெறுங்கையை மூடாதே குருவேபோடா.

---

697. என் மக்கள் என்றாகிவிட்டாய்போலும் என்ற ஒரு நிலையை எடுத்து இயம்புகின்றார். இந்தப் பாடலிலும் சொல் மயக்கம் உள்ளது.

698. இதுவுமது. இந்தப் பாடலில் மயக்கம் இருக்கிறது.

699. குருபோடா அருள்தாடா நாந்தானே
கோனானாய் கோன்நானே கோனும்நீயே
மதிமாட மீதிருந்தா யிங்கேவந்தாய்
செத்தசவ மானாயே தெருவில்நீயே
இருமாட மீதிருந்தாய் நீநானென்றே
யெப்போதுஞ் சரியில்லை யிப்போதானே
பொருள்மாட மெங்குவைத்தாய் பயந்துதானே
பொல்லாப்பு வைத்தாயே தந்தபின்னே.

700. பின்னேது முன்னேது அருளொன்றேதான்
பேசினே னருள்கொண்டு பாதிபெற்றேன்
நினேது யென்னேது யெனக்குனக்கும்
நெடுநாளே காத்திருந்தேன் ஒன்றுதானே
மண்ணேது மனமேது திருவருட்கு
மாதங்கை வந்தாக்காற் பெருசங்கேது
தன்னேது பின்னேது சரியோபத்து
தான்வந்து பித்தாக்கால் வயதுஒன்று.

---

699. இந்தப் பாடலும் இதற்கு அடுத்த பாடலும் மயக்கம் தருகின்றன. சொற்களில் வைப்பு முறையில் ஏதோ மாறியிருக்கலாம். என்றாலும் ஆழமான ஞானியின் குரல் அந்தச் சொல்லொலியிலே கேட்கிறது என்பது உண்மை.

701. வயதொன்று வாலையவள் வந்தாற்தானே
வாரிகடல் மலைமுதலாய் தெரிவாள்கண்டு
தயையென்று மில்லாளே கிழவிதானே
தன்னிடத்தில் வைத்திருந்தாள் பொருளைத்தானே
கயையென்று நீட்டிடுவாள் காலாற்தானே
கண்டவரைக் கரைத்திடுவாள் காலினாலே
அயையன்று மில்லாளே பொட்டல்ரூபி
ஆருக்குஞ் சொல்லாளே சொரூபிதானே.

702. சொரூபதம் பெற்றாலே போத்போல
சொல்லெல்லாம் வேறாகும் தினமும்வேறே
அருபதம் வந்துவிடும் தினநாள்காலே
ஆர்க்குஞ் சொல்லாதே தானேநாளே
உருபதம் வந்துவிடல் பெய்யோமெய்யோ
ஊறுகின்ற உச்சரிப்பு தாந்தானே
கெருவபத மில்லாது வந்ததானால்
கேலிபோ லேயிருக்கும் சிரிப்பாய்த்தானே.

---

701. வாலையவளின் வல்லமை பேசுகிறார்.

702. சொரூப பதம் பெறுதல் உருவ பதம் பெறுதல் அருவ பதம் பெறுதல் ஆகிய நிலைகளைப் பாடுகிறார்.

703. சிரிப்பென்ன திரிபுரமுஞ் சேமந்தானோ
செகசால சித்தருக்குத் திதியாம்திஷ்டி
மரிப்பென்ன சம்மாரம் நினைத்தாற்போதும்
மக்களே தந்தையவள் பிள்ளைபோல
தரிப்பென்ன யெங்கவளும் நில்லாள்சொல்லாள்
தாபரத்தி லேயிருக்காள் வானிலில்லாள்
குறிப்பென் கண்டுகொண்டால் நமக்குள்ளே
கொடுந்தனலைப் பொருக்காமல் கூடுவாளே.

704. கூடுவாள் குலக்கொழுந்தி விழ்த்துப்பாரு
கொங்கையில்லாள் மார்பில்லாள் கொழுந்திநல்லாள்
தேடுவாள் நம்மையுமே யோடிப்பாரு
தெருத்திண்ணை யாகாது மூலைசேரு
பாடுவா ளனுராகம் மோடிதோடி
பச்சிலைகள் தளிர்போலே பலவாம்ரூபி
நாடுவாள் விட்டாக்கால் நம்முட்தானே
நாயகனே நீபோவென் றொளிகுவாளே.

---

703. வாலையின் இயல்புகளை அறிந்துநாம் அவருடைய அருளைக் கொள்ளவேண்டும் என்பதற்கேற்ப நிலைகளைப்பாடியவாறு.

704. ஒளியனுபவத்திலே எப்படி ஒலி அனுபவம் உண்டாகிறது என்பதை வாலையின் இசையாகக் கூறுகிறார்.

705. ஒழிப்பாள்காண் நம்முடலைச் சேரணித்து
உண்டிடுவாள் நம்மனைவி உலகம்போல
விழிப்பாளே நாமழிய யிடமில்லாதே
மெய்சோர்ந்து தனைமறந்த தாலுஞ்சாவாள்
குளிப்பாளோ புருஷரன்றிப் பெண்ணேயானால்
குமரியில் கோதைகுயில் குணிருங்கன்னி
அளிப்பாளோ தபுனிடய வேறேநண்ணி
ஆரையுமே யென்னாளே மனநினைந்தே.

706. நினைந்தேதான் வேருடலைத் தேடிப்பார்ப்பாள்
நீதியல்ல வென்றாளே நிசமேயானால்
அணைந்தேதான் சேர்ந்திடுவாள் நல்லோரானால்
ஆரையுமே யெதிர்பாராள் குறையைப்பார்ப்பாள்
புணைந்தேதான் சூடிடுவாள் ஒருவரன்றிப்
பொல்லாப்பே கள்ளாப்பு பூட்டுபூட்டு
இணைந்தேதான் மூக்குநெற்றி புருவமத்தி
இருந்தவிடம் பட்டொன்று யென்சொல்வேன்.

---

705. தேர்ந்து சேர்ந்துவிட்டால் பிறகு அவள் உறுதியாக உண்மையோடு நம்முடன் ஒன்றிவிடுவாள் என்பதைச் சொல்லியவாறு.

706. அவருடைய இயக்கத்திற்குரிய மையங்களில் அவருடைய திருவருள் விளங்கி விளையாடுவதைப் பாடுகிறார்.

## பூட்டு விபரம்

707\. சொல்வேனோ பூட்டதனைச் சொல்லாமோ
சொல்லினாற் பெருஞ்சோதி நெற்றிக்கண்ணு
சொல்வேனோ தீயொளியை நெருப்புக்கண்ணைத்
தூண்டாத சோதியினைச் சுழினைவாழ்க்கை
சொல்வேனோ பெருஞ்சோதி நிமையின்சோதி
சுடரில்லாச் சோதியது தமரின்சோதி
சொல்வேனோ காலவர்த்த மானசோதி
சுடர்கோடி யென்றாரே சூர்யனாரே.

708\. சூரியனார் உடலில்லாக் கண்ணேயானார்
தூண்டினாற் கோடிகண்ணு சுழினைதன்னில்
ஏரியனார் யெம்மிடத்தை வருவாரானால்
எக்காலும் நம்மிடத்தே பேசுவார்கள்
கோரியனார் கண்டுகொள்ளும் சுடலைதானே
குருவாமா அறிவாமா பொருளேபூமா
ஓரியனார் கண்தூரம் உடல்தூரமாமே.

---

707\. சோதியை வியந்து பாடுகின்றார். அது தீயொளி நெருப்புக்கண்ணினுடைய தூண்டாத சோதி. சுடரில்லாத சோதி.

708\. உடம்பு இல்லாத தாள் என்றார். அந்தநிலை ஒருமுறை வந்துவிட்டால் பிறகு எப்போதும் நிலைபேறாக நிற்கும்.

709. உடல்நாராம் உளம்நாராம் சென்னிநாராம்
உத்தகட மத்தனையும் நாராகும்
படல்நாரா மள்திரையே அண்ணாப்பூட்டு
பார்திறக்கப் பாருவையே உண்ணாமூட்டு
கடல்நாராம் உச்சிமட்டத் திரையேதிட்டு
கால்நாராம் மொளிமுட்டு பாதப்பூட்டு
ஓடல்நார மிப்படியே விலான்பூட்டு
ஊருதுடை மலப்பூட்டு மூலப்பூட்டே.

710. மூலமதே மலப்பூட்டு நெஞ்சின் பூட்டு
மோகனமே உண்ணாவே தாளேபட்டு
கோலமதே அண்ணாவி லோரந்தானே
கொடுநாவே உண்ணாலி செல்லும்அப்பா
பாலமதே யவ்வாசல் மேலேவாசல்
பளீரெனுஞ் சோதியொளி நின்றவாசல்
ஞாலமதே யிவ்வாசல் மோனவாசல
நாதனார் வாழ்ந்திருக்கும் வீடுதானே.

---

709. உடம்புக்குள்ளே குரு மாணவனுக்குத் தொட்டுணர்த்துகின்ற பூட்டுமையங்களை அடுக்கிச் செல்கிறார்.

710. இதுவுமது. உள்ளுக்கு கண்ணுக்கு என்றும் அமுதவாசலைச் சொல்லி இவ்வாசம் மோனவாசல் என்றும் நாதனார் வாழ்ந்திருக்கும் வீடு என்றும் கூறுகிறார்.

711. வீடுதா னவ்வீடு முனிமேல்வீடு
மேதக்க முத்தர்களுங் காணாவீடு
கூடுதான் காத்திருக்கும் அருளின்வீடு
கும்மென்று தானிருக்கும் அருளின்கோதி
பாடுதான் பட்டதனாற் திறந்துபூட்டை
பாலகளத் துப்பிவிட்டு மேலேநோக்கி
ஆடதான் கண்டதன்மேற் தோனைத்தள்ளி
அப்பாலே நானேறி ஊஞ்சல்தொட்டே.

712. ஊஞ்சல்தொட்டு உயரேறிப் படுக்கைதள்ளி
உன்னதமாஞ் சங்கிலியை ஒட்டியேறி
பாஞ்சதனில் மேலேரி மேடைகண்டே
பையரவம் படுத்திருக்கு மதனைத்தள்ளி
மாஞ்சதனிற் கோகாமல் கால்வையாமல்
வலக்காலைப் பின்வைத்து யிடக்கால்நீட்டி
ஓஞ்சதனில் நில்லாமல் ஒட்டிமுட்டி
ஊஞ்சலதின் மெத்தையின்மே லுட்கார்ந்தேனே.

---

711. இந்த உடம்பாகிய கூடு எந்த வீட்டுக்காக் காத்திருக்கிறதோ அந்த வீடு அருளின் வீடு அது.

712. உச்சியாகிய மேடையிலே ஊஞ்சல் ஆடுவதாகிய வாசியோகத்தைப் பாடுகிறார்.

713. உட்கார்ந்தே னுச்சிமண்டை கபாலஓட்டில்
உறசினே னென்னுயிரை உடையாமற்தான்
சட்கார்ந்தே சம்மனமே மூலம்உச்சி
தானோடி நின்றிடவும் யோகம்விட்டேனே
மட்கார்ந்தே நான்படுக்க வில்லைநேரே
வாயாலே சொன்னதெல்லாம் வாலைவாழ்வு
துட்கார்ந்தே துஷ்டர்களு மடங்கிப் போனார்
துடியடங்கி நானிருந்தேன் துடியாய்த்தானே.

714. துடியென்ன உச்சிமூலம் வாய்வுதானாம்
தூண்நின்ற தம்பம்கோற் தூரேயூனி
அடியென்ற நாக்கினடி மூலபீசம்
அவ்விடத்தி லேயிருந்து யெழும்பிமேலே
இடியென்ற கொடிபோலே உச்சிமட்டும்
ஏறநின்று விளையாடிக் கபாலஓட்டில்
மடியெனற விரிபரத்திக் கபாலமெல்லாம்
வாயாக உச்சரித்தாள் யான்கேட்டேனே.

---

713. கபால ஓட்டிலே உயிரைக் கூட்டுகிற யோக தந்திரம் எப்படி யோக ஒழுக்கத்தில் ஒன்றச் செய்கிறது என்பதைப் பாடுகிறார்.

714. இதுவுமது.

711. வீடுதா னவ்வீடு முனிமேல்வீடு
மேதக்க முத்தர்களுங் காணாவீடு
கூடுதான் காத்திருக்கும் அருளின்வீடு
கும்மென்று தானிருக்கும் அருளின்சோதி
பாடுதான் பட்டதனாற் றிறந்துபூட்டை
பாலகளத் துப்பிவிட்டு மேலேநோக்கி
ஆடதான் கண்டதன்மேற் றோனைத்தள்ளி
அப்பாலே நானேறி ஊஞ்சல்தொட்டே.

712. ஊஞ்சல்தொட்டு உயரேறிப் படுக்கைதள்ளி
உன்னதமாஞ் சங்கிலியை ஒட்டியேறி
பாஞ்சதனில் மேலேறி மேடைகண்டே
பையரவம் படுத்திருக்கு மதனைத்தள்ளி
மாஞ்சதனிற் கோகாமல் கால்வையாமல்
வலக்காலைப் பின்வைத்து யிடக்கால்நீட்டி
ஓஞ்சதனில் நில்லாமல் ஒட்டிமுட்டி
ஊஞ்சலதின் மெத்தையின்மே லுட்கார்ந்தேனே.

---

711. இந்த உடம்பாகிய கூடு எந்த வீட்டுக்காக் காத்திருக்கிறதோ அந்த வீடு அருளின் வீடு அது.

712. உச்சியாகிய மேடையிலே ஊஞ்சல் ஆடுவதாகிய வாசியோகத்தைப் பாடுகிறார்.

713\. உட்கார்ந்தே னுச்சிமண்டை கபாலஓட்டில்
உறசினே னென்னுயிரை உடையாமற்தான்
சட்கார்ந்தே சம்மனமே மூலம்உச்சி
தானோடி நின்றிடவும் யோகம்விட்டேனே
மட்கார்ந்தே நான்படுக்க வில்லைநேரே
வாயாலே சொன்னதெல்லாம் வாலைவாழ்வு
துட்கார்ந்தே துஷ்டர்களு மடங்கிப் போனார்
துடியடங்கி நானிருந்தேன் துடியாய்த்தானே.

714\. துடியென்ன உச்சிமூலம் வாய்வுதானாம்
தூண்நின்ற தம்பம்கோற் தூரேயூனி
அடியென்ற நாக்கினடி மூலபீசம்
அவ்விடத்தி லேயிருந்து யெழும்பிமேலே
இடியென்ற கொடிபோலே உச்சிமட்டும்
ஏறநின்று விளையாடிக் கபாலஓட்டில்
மடியென்ற விரிபரத்திக் கபாலமெல்லாம்
வாயாக உச்சரித்தாள் யான்கேட்டேனே.

---

713\. கபால ஓட்டிலே உயிரைக் கூட்டுகிற யோக தந்திரம் எப்படி யோக ஒழுக்கத்தில் ஒன்றச் செய்கிறது என்பதைப் பாடுகிறார்.

714\. இதுவுமது.

711. வீடுதா னவ்வீடு முனிமேல்வீடு
மேதக்க முத்தர்களுங் காணாவீடு
கூடுதான் காத்திருக்கும் அருளின்வீடு
கும்மென்று தானிருக்கும் அருளின்கோதி
பாடுதான் பட்டதனாற் றிறந்துபூட்டை
பாலகளத் துப்பிவிட்டு மேலேநோக்கி
ஆடதான் கண்டதன்மேற் தோனைத்தள்ளி
அப்பாலே நானேறி ஊஞ்சல்தொட்டே.

712. ஊஞ்சல்தொட்டு உயரேறிப் படுக்கைதள்ளி
உன்னதமாஞ் சங்கிலியை ஒட்டியேறி
பாஞ்சதனில் மேலேரி மேடைகண்டே
பையரவம் படுத்திருக்கு மதனைத்தள்ளி
மாஞ்சதனிற் கோகாமல் கால்வையாமல்
வலக்காலைப் பின்வைத்து யிடக்கால்நீட்டி
ஓஞ்சதனில் நில்லாமல் ஒட்டிமுட்டி
ஊஞ்சலதின் மெத்தையின்மே லுட்கார்ந்தேனே.

---

711. இந்த உடம்பாகிய கூடு எந்த வீட்டுக்காக் காத்திருக்கிறதோ அந்த வீடு அருளின் வீடு அது.

712. உச்சியாகிய மேடையிலே ஊஞ்சல் ஆடுவதாகிய வாசியோகத்தைப் பாடுகிறார்.

713. உட்கார்ந்தே னுச்சிமண்டை கபாலஓட்டில்
உறசிவே னென்னுயிரை உடையாமற்தான்
சட்கார்ந்தே சம்மனமே மூலம்உச்சி
தானோடி நின்றிடவும் யோகம்விட்டேனே
மட்கார்ந்தே நான்படுக்க வில்லைநேரே
வாயாலே சொன்னதெல்லாம் வாலைவாழ்வு
துட்கார்ந்தே துஷ்டர்களு மடங்கிப் போனார்
துடியடங்கி நானிருந்தேன் துடியாய்த்தானே.

714. துடியென்ன உச்சிமூலம் வாய்வுதானாம்
தூண்நின்ற தம்பம்கோற் தூரேயூனி
அடியென்ற நாக்கினடி மூலபீசம்
அவ்விடத்தி லேயிருந்து யெழும்பிமேலே
இடியென்ற கொடிபோலே உச்சிமட்டும்
ஏறநின்று விளையாடிக் கபாலஓட்டில்
மடியென்ற விரிபரத்திக் கபாலமெல்லாம்
வாயாக உச்சரித்தாள் யான்கேட்டேனே.

---

713. கபால ஓட்டிலே உயிரைக் கூட்டுகிற யோக தந்திரம் எப்படி யோக ஒழுக்கத்தில் ஒன்றச் செய்கிறது என்பதைப் பாடுகிறார்.

714. இதுவுமது.

715. கேட்டேனே உச்சியெனுங் கபாலந்தானே
கிருகிரென வட்டமிட்டான் அமர்ந்துபோனான்
மாட்டேனே யென்றாலும் பிடித்துச்சொன்னாள்
வலியஅவ ளென்னைவி டுடுக்குத்காரி
விட்டேனே நானாக வைத்துக்கொண்டாள்
வெள்ளாட்டி வெள்ளாட்டி யென்துணைக்கே
ஆட்டாளைக் கண்டுகொண்டு பிழைத்தேன்கூவி
அய்யய்யோ வென்றவளும் அருகினாளே.

716. அருகிலே நானாக அவளும்நானே
ஆகாகா சொல்லெல்லா மதிசயந்தான்
உருகினா ளெனைக்கண்டு நீயாரெனறாள்
உத்தமியே யாளென்று கெஞ்சநானே
தெரியாதான் போலிருந்தான் தனியேநின்றேன்
தினந்தினமு மெந்தனையே மறவாதென்றாள்
அருகிலா தேயிருந்தா லென்னசெய்வோம்
அம்மையே யென்னைவிடு குமரியென்றே.

---

715. ஆட்கொள்ளுதல் என்பது தடுத்தாட்கொள்ளுதல் என்பதேயாகும் அருள் சுரந்து அவன் நிற்கும்போது அவனே வலிய வந்து இன்பம் தருகிறார். மாட்டேன் என்றாலும் விடமாட்டான்.

716. அவளுடைய உருக்கம் எத்தகையது என்பதையும் அந்த உருக்கத்தின் உரையாடலையும் கூறுகிறார்.

717. என்றெனையே யான்கண்டே னவளும்வந்தாள்
யெக்காலங் குடியிருக்க வேண்டுமென்றேன்
மன்றெனைத் தடுக்காமல் தனியேநின்றாள்
வாய்கொண்டு பொத்திநின்றா ளிருகையாலே
அன்றென்னை வாவென்றாள் வலக்கையாலே
ஆஅரிமுத்துப் போகாமல் வந்திடென்றாள்
குன்றென்னை தடுத்தாளே நீ நீயென்று
குமரிவரப் பார்த்திருந்தேன் கும்பிட்டாளே.

718. கும்பிட்டா ளெழுந்திருந்து வெட்கப்பட்டு
குமரிநடு முதுகுயிடுப்பு உரமேகல்லே
வெம்மிட்டாள் தனியிருத்தே னென்றுசொன்னாள்
மேல்விளைந்த காரணத்தை யெண்ணினாளாம்
நம்பிட்டாள் முழுதிலுமே நம்பாளாதாள்
நாரதனே யாரைக்காற் கெஞ்சுவாள்பார்
அம்பிட்டா ளெந்தனுக்குக் கோழையோரம்
அகப்படா வெகுதுலையில் துலைப்பட்டாளே.

---

717. தன்னைத்தான் காணுதல் என்பதே யோகம். அதுவே உணர்வுமையங்களிலே ஒடுங்குதல். அதை தெய்வப்புணர்ச்சி என்றே பாடுவது சித்தர் மரபாகும் அந்த உருவகத்திலே சென்று வாலை என்றென்றும் நீங்காமல் நிற்க வேண்டும் என்ற கோரிக்கையைப் பாடுகிறார்.

718. இதுவுமது.

719. துலைப்பட்டாள் துகில்பட்டாள் மஞ்சளிட்டாள்
துகிலதனை மேல்விசிறி முக்காடிட்டாள்
வலைப்பட்டாள் எட்டாலைக் கொட்டக்காணாள்
வாயினாற் சம்பிரதாயம் நம்மாலேதான்
இலைப்பட்டா ளெப்போதுந் தாலிக்காரி
யென்னிடத்தி லிச்சையில்லாள் தூத்தூசிச்சீ
கலைப்பட்டாள் கம்பளத்தி வடுகச்சாதி
காப்பிலிச்சி வேப்பிலைச்சி சலிப்புகார்.

720. காரியென்ன சக்கிலிச்சி பறைச்சிஊழி
கருமாதிச் சோறுண்ணும் மயானக்காரி
நாரியென்ன இவள்பேயே வம்புக்காரி
நாட்டிலே சக்களத்தி குறத்திவாரி
பாரியெனச் சொன்னாக்காற் பாவம்பாவம்
பழிகாரி கொலைகாரியிரக்கமிலாள்
வாரியவள் மூதேவி கழுதைநாயே
வாயில்மண்ணைப் போடாதே வாடாமாடே.

---

719. வாலையோடு விளையாடுகிற ஞானியின் பேச்சு ஆன்ம ஆற்றலைப் பெண்ணாக உருவகிக்கும் எழிற் பாங்கிலே மேலும் மேலும் கொஞ்சுகிறது கவிமொழி.

720. இதுவுமது.

721. வாடாநீ போடியடி வலுவாய்நில்லு
மண்டையுடை பெண்ணரசி தூமையோனே
நாடாநீ மலையோதான் வாரியுப்போ
நமனேநீ குடுமியுள்ளாய் நாயோகொண்டை
போடாதீ யென்புழுக்கை புழுக்கைபோடி
பொல்லா துரோகியடா யெலும்புருக்கி
மாடாநீ மாட்டிறைச்சிக் கோலேபோடா
மாநெல்லு நவதான்ய அண்டேபோடி.

722. ஆண்டுபோல் நீயிருந்து என்னைச்சேர்ந்து
ஆடினாய் கூத்தாடி மக்களீன்றோம்
மண்டுபோல் நாமிருந்து கூட்டங்கூடி
மருமகனைச் சேராமற் தனையேநாடி
குண்டுபோலேயிருப்பாய் கொழுந்தா யாவாய்
குமரருமே யாகாமல் யெனக்குவாய்த்தாய்
திண்டு போலேயிருந்து தெருவில்வாராய்
செகசாலம் விட்டொழிந்து மேல்வந்தாயே.

---

721. அருள் விளையாடுகிற பாங்கு ஒரு கண்ணாமூச்சி அல்லது கண்ணாம்பொத்தி விளையாட்டேயாகும் அதன் உல்லாசங்களிலே ஏதோதோ மொழிகளைத் தூவுகிற பாடல்.

722. இதுவுமது.

723. வந்தாய்நீ யென்மகனே மகனேநீயே
வாதாடி னோமினிமேல் மருவிக்கூடி
பிந்தோம்நா முந்தோமே யொன்றேயாகி
பெருந்துறவு ரெண்டுமொன்றுங் கூடினோமே
சிந்தோமே யென்னாகுந் தெருவில்வந்து
சித்தருக்கும் நாமிருவர் செல்லாய்நிற்போம்
தந்தோமே யிப்படியே யெந்தநாளும்
சமந்ததிக முண்டானோ மினிமேற்தானே.

724. இனிமேலே நாரதர்க்கும் புசுண்டருக்கும்
இகையத்தி லூரினதை இருவருக்கும்
கனிமேலோர் சேர்ந்தாலே கூடுவார்கள்
காசினியிற் பெரியோருங் கனித்துதானே
இனிமேலோ முன்னாலோ யிதுபோற்தானே
என்னாளும் பெரியோர்கள் செய்கையாகும்
கனிபோலே பழவகையிற் தேனேவர்க்கும்
கந்தமென்ற வாசனையுங் கொடுக்குங்கூடே.

---

723. ஆன்ம முயக்கத்தையும் அதன் பின்னலியையும் உலக மரபுபோல் நாடகமாகப் பாடுகிறார்.

724. அமுத பான அனுபவம் கூறுகிறது.

725. கூடுமே யிம்மூன்று பழவர்க்கங்கள்
கூடினாற் பழமேதான் ருசியேபோல
நாடுமே யிதுபோலே பழவர்க்கங்கள்
நாட்டிலுள்ள பழவகைகள் ருசிசேர்ந்தாப்போல்
பாடுமே மனருசியே செவியோகாதோ
பாரிலுந்தன் மனப்பழமே கனிந்துதானால்
தேடுமே முக்கண்ணின் ருசியைத்தானே
சேர்ந்தவர்க்குத் தித்திக்கும் பழம்வர்க்கந்தான்.

726. வர்க்கமே திரிகாலம் பழமாமுத்தி
வசனித்த சொல்லெல்லாம் வித்தேசித்தி
வர்க்கமே பொழியுமல்லோ வேதமாகும்
வசனித்த சொல்லாலே சொரூபசோசியம்
வர்க்கமே யதுவொழிய வயித்தியந்தான்
வாய்வழிந்த பல்லிளையிற் சொல்லுத்தானே
வர்க்கமே யழிவார்தம் நூல்களெல்லாம்
வாய்கொண்டு சொன்னவரும் போனார்மாண்டே.

---

725. மனமொழியாகிய பழம் கனிகிற அனுபவம் இது முக்கனிகளின் சுவை அப்படியிருக்கும். அது தித்திக்கும். எப்படிப்பட்ட தித்திப்பு என்பது சேர்ந்தவர்க்கே தெரியும்.

726. முக்காலமும் கனிந்து நிற்கிற மனக்கனி அது. அதிலிருந்து பிறப்பதே ஞானமொழி.

727. போனாக்கா லவர்வாக்கும் பொய்த்துப்போகும்
புதிதுதா னில்லாட்டால் புதிதுதானே
ஆனாக்கா லவர்வந்தார் நம்மினுள்ளே
ஆவியுயிர் விட்டமநுப் பிறவிபோலே
வீணாகப் போகாமல் நம்மைச்சார்ந்தார்
வீணிலே திரிந்த உயிர் நானேகண்டு
கோனாக வாழ்ந்தவர்கள் பெரியோரென்றே
கொண்டுவந்தே னென்தலையில் வைத்துக்கொண்டே

728. வைப்போனே நாரதனே நம்மையன்றி
வைப்பவரார் பார்ப்பவரார் வெகுநாள்முத்தர்
தைப்பேனே உயிர்விட்டு வெளியேநின்று
தவமுனியே நம்மைப்போ லொற்றார்தங்கள்
கைப்பேனோ அவருயிரே வெளியிருந்தார்
ககற்றோடு சேராமல் நானேசேர்ப்பேன்
வைப்பேனே யென்னுச்சி பிரமரந்திரம்
வாரியண்ட மலைதானு மிருந்தபீடம்

---

727. முற்பிறவிகளின் அனுபவங்களும் முன்னோர்களின் அனுபவங்களும் ஒன்றுகூடித் தமது அனுபவமிகப் பரிணமிப்பதைப்பாடியவாறு.

728. பிரமாந்திரத்தில் அவர்கள் என்றும் நாம் என்றும் வேறுபாடற்ற நிலையில் ஞானிகள் அனைவரின் உள்ளங்களும் ஒன்றுசேர்ந்து அந்த இயக்கமே தனது உச்சியில் இயங்குகிறது என்பதைப் பாடுகிறார்.

729. பீடமே யென்னுச்சிப்பிரமமலம்
பேருச்சி வானுச்சி கோணினுச்சி
கூடமே கோபுரங்கள் மேளதாளம்
கொண்டிருக்கு மாடமதின் பூஜையுய்த்தே
ஒடுமே வெளியுதனி லோடுங்கப்பல்
உளமதனைக் கண்டவர்க ளுச்சிவாரி
மாடமே வைத்திருப்ப நானும்மட்டும்
மாதவசி நாரதனே நமக்கார் சொல்லே.

730. சொல்வீரென் றெனைக்கேட்ட புசுண்டயோகி
சொல்வதென்ன பிரமமன்றிப் பிரமமுண்டோ
கெல்வீறோ யெனைப் பழிக்கச் சொன்னிர்நீரும்
கேட்டதற்கு உத்தாரஞ் சொல்வதாரு
சொல்வீரே சொல்லுக்குப் பதிலுமுண்டோ
துணையுண்டோ யீடுமக்குச் சோடியுண்டோ
சொல்வீரேயானாக்கால் கேட்போம்நாங்கள்
தெதியென்ன நீரிருந்தீர் நான்றின்றேனே.

---

729. நாரதரோடு உரையாடுதல்போன்று நாதானந்த இன்ப அனுபவத்தைப் பாடுகிறார்.

730. இதுவுமது. இந்தப் பாடல்களில் முன்பு வந்த சில பாடல்களிற் போலே ஒருமயக்கம் காண்கிறது.

சொற்கள் எதுகைநோக்கி முன்பின்னாக வருவதும் சேர்ந்து இதை அதிகப்படுத்துகிறது.

731. நின்றேனே நான்நெடுநாள் உம்மைக்கண்டேன்
நீர்தவசி யானதையுங் காணேன்பின்னான்
சென்றேன் வெகுதூரம் உமைப்போலொற்றேறார்
தேசத்தும் பாதாளமாகாயத்தும்
நின்றேனே நானறிந்த மட்டுந்தானே
நீள்வயதைக் கண்டறியே னும்மைப்போல
அறோனே யின்றிருந்நீர் வெகுநாள்மத்தி
ஆகும்நாள் அருண்ன் நாள் சொல்லுவீரே.

732. சொல்லுகிறேன் சதுர்யுகமே ஆறபாச்சி
சோதியுங் சூரியர்க்கு யுகமும்நாலு
கெல்லுவே னதுகடந்தாற் சுக்கிரவெள்ளி
கிளறுமே சூரினள்போல் வட்டமாகும்
நில்லுவேன் சொன்னதனிற் சொன்னவெள்ளி
நீள்விசும்பில் வருமார்க்கம் விள்ளவேணும்
உல்லுமே ஒளிநீங்கும் வகையேபோல
அருள்வார் சிறுவெள்ளி ஞாயந்தானே.

---

731. இந்த முயக்கத்தில் ஏற்படுகிற சுவைகளுக்கு வயது ஏது? அன்று தொடங்கிய நாடகம் இன்றுவரை நடக்கிறது. இன்னும் நடக்கும் இதையே நாரதரிடம் பேசுகிறார் முனிவர்.

732. இதுவுமது. இதிலும் அந்த மயக்கம் துவங்குகிறது.

## இந்நூலின் பெயர்

733. ஞாயமே சிறியவெள்ளி பெரியஞாயம்
நழயிரெனும் ஞழயமதையிதனில் முன்னே
காயமெனு மின்னலே ஞானசூரியன்
காணுமே ஆதியந்தம் உற்றுப்பார்த்தால்
தோயுமோ சந்திரனுங் கதிருன்வெளி
துலங்குமே யின்னூலே ஞானசூரியன்
மாயுமே சூரியனா ருதிப்புதோறும்
மங்கையர்கள் கெர்ப்பமுள்ள மட்டுந்தானே.

734. தானென்று யிடிமின்னல் கோதியோடு
தங்குதா பரமுடனே அசைவினோடு
வானென்ற வெளிதனிலே உலாவலோடு
மண்மேலே சுழல்காற்று வாய்வுதேய்வு
ஏனென்ற மேகநீர்க் குருனோடு
இத்தனையும் ஆதியந்தம் உற்றுப்பாரு
கோனென்ற குருவறியும் அருளுங்காணும்
கூப்பிட்டாற் தெரியாதே குருவின்றாலே.

---

733. இந்த நூலை ஞானசூரியன் என்று சொல்கிறார். சூரியன் சந்திரன் வெள்ளி மூன்றையும் சொல்லி ஆன்ம மண்டலமாகிய உச்சி மண்டலம் என்பதை அடிக்கோடு இட்டுக்காட்டுகிறார்.

734. வானம் பூமி விண்மீன் சூரியாகரர்கள் வெள்ளி மற்றும் நிற்பன நடப்பன ஆகிய அனைத்தும் அளாவி நிற்கிற நிலை இது.

735. ஆனாலே குருநெறியும் ஆசனங்கள்
அடுத்தடுத்த நோன்புகளும் மாசாரங்கள்
மானாலே சேர்முறைகள் குருவின்வர்க்கம்
வகையான யினனூலில் சுருக்கமார்க்கம்
ஈனாளே யெட்டுடனே மாவைச் சேர்த்து
எங்கள்மன முங்களுக்குப் பனிரெண்டாக
ஊவாகும் ஆஔவ்வும் பனிரெண்டாகும்
உட்கருத்து அத்தனையு மிதனிற்தானே.

736. இதனிற்தா னித்தனையு மின்னமுண்டு
என்யோக நின்யோகம் வசிஷ்டர்யோகம்
இதனிற்தா னிக்கோடு விசுவாமித்திரர்
இம்மலையில் வியாசரிஷி சுகரின்யோகன்
இதனிற்தான் காக்கியரும் நாரதர்காசி
என்னோடு காசிபருங் கும்பநாதர்
இதனிற்தான் தெஷணத்தார் யோகமோடு
இல்லறத்தி லிருந்தார்கள் பாகத்தோடே.

---

735. குத்தும் அட்ச ரகசியங்களைக் கூறுகிற செய்யுள் இதன் நுட்பமே மறைந்துநிற்கும் பொருள். ஞானிகள் இதை வெளிப்படையாகச் சொல்லாமல் ஆசானிடம் உணர்ந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் இரந்து பாடுவர்.

736. காகபுசுண்டர் சீடர்கள் வசிட்டர் விசுவாமித்திரர் வியாசர் சுகர் காக்கயர் காசிபர் கும்பநாதர் முதலிய அனைவரும் பயின்ற யோகம் இது இல்லறத்தில் இருந்துகொண்டே இயற்றுவது இது.

737. பாகமொடு தவசிரிஷி மனுமாந்தாதி
பார்சித்தர் முனிகளொடு அதற்குமேலே
தாகமொடு சென்றவர்கள் தவசில் வல்லோர்
தாதுசடம் சிஷ்டிதிதி சம்மாரந்தான்
ஏகமொடு மித்தனையு மிதனுக்குள்ளே
ஏர்விட்டு உழுதுபரம் படித்தார்போல்
ஆகமொடு அந்தரங்கந் தூணியிட்டு
அனலிட்டு வெளியதனில் வளியைத்தொட்டே.

738. தொட்டந்தக் கொட்டாவி உயிர்யோகங்கள்
தொந்தங்கள் மனஅறிவு கருத்துயூகம்
எட்டந்தத் தெளிவுடனே தந்திரங்கள்
இதையபுத்தி யெல்லாமே யிதனுக்குள்ளே
கட்டாவி கொட்டாவியில்லாமனப் போய்விடாமல்
காலரைக்கால் வீசமெனப் போய்விடாமல்
தொட்டாவி முட்டுமுன்னே யினிற்தானே
சொக்காமற் பார்ப்பதற்கு மிச்சமின்னூலே.

---

737. இரகசியங்கள் அனைத்தையும் ஏர்கொண்டு உழுது பரம் படித்ததுபோல் எல்லா தந்திரங்களையும் பொதிந்து வைத்துள்ளதாகச் சொல்கிறார்.

738. இந்த நூலின் விரிவைக்கூறியவாறு.

739. மிச்சமே தானிருக்கு வெகுநூலைமிச்சம்
வேளாண்மை செய்தமண்ணில் மிச்சம்போல
சொச்சமே மலைமண்ணில் மிச்சம்போல
தொந்திரையுங் கடலதனிற் திடலேபோல
அச்சமே தான்கொடுக்கு மிச்சம்சொல்ல
ஆருக்கு மெட்டாது வெளியேசொல்லும்
சொச்சமே யில்லாது வெளியே சொல்லில்
தொடர்ந்தெழு துமெட்டாது யிதனைப்பாரே.

740. பாருமே யித்தோடு பாதாளங்கள்
பார்விசும்பு மேலுள்ள கீழுங்காணும்
கூருமே யின்னூலே ஞானசூரியன்
தொட்டுமே அண்டச்சி வரப்பாத்தாலும்
தேருமே பார்த்திடவுந் தெளிவுதோணும்
சிந்தைமனம் உயிர்அறிவு மொன்றேயாகும்
ஆறுமே தேறிடலா மறிவுள்ளோரே
ஆரிந்தந் காயத்துக் கனுகூலத்தார்.

---

739. மிச்சம் சொச்சம் உண்டு என்று சொல்லி அதற்குரிய நியாயத்தையும் இயம்பியவாறு.

740. காயமாகிய இந்த உடல் கொண்டு செய்கிற தவமுறைகளைக் கூறுகிறது இந்நூல் அணுகுகிற முறையில் அணுகினால் சிந்தை அறிவும் தங்கமேயாகும்.

741. அனுகூலந் தாலல்லோ குறையாம்விட்ட
ஆச்சரியந் தொன்றுதொட்டு அப்பியாசிக்கும்
மனுகுலத்தி னாலந்த வித்தைவந்த
மாமுனியுந் தெய்வபதம் தெய்வம்நானும்
எனுகூல மிப்படியே யாதுங்காண
என்னையே பாறீரே யென்னூல்பாரீர்
தனுகூலம் வாசிவலு பெலத்தவீரர்
சந்ததிகள் தானாகச் செய்குவாரே.

## ஒளிவெளி விபரம்

742. கொள்வார்க ளெப்படியென் றெண்ணிவிடாதே
குருவாகும் நாள்வந்தா லிதனைப்பாரு
கள்ளுவார்கள் சேராதார் தோசமில்லை
சந்ததிக ளானாகால் தோசமுண்டு
கைவாய லுண்பார்போல் னிமுந்தானே
காகியனும் புசுண்டனுமே வசிஷ்டநானே
மெய்வாயே தமர்திறக்சப் புருவபூட்டு
வில்லங்க மதுகடந்தால் ஒளியுஞ்சொல்லும்.

---

741. இந்த நூலைப் பாருங்கள் எனது நிலையையும் பாருங்கள் வாசியின் வலிமை பெற்ற ஒரு திருக்கூட்டத்தை நிலைபெறச் செய்யுங்கள். ஞான வம்சமாக.

742. கையும் வாயும் சேர்ந்து உணவு உட்கொள்வதுபோல நாள் தோறும் இந்தப் பயிற்சி முறைகளை இயற்றிப் புருவப்பூட்டைத் திறந்துசெல்லும்போது ஒளி சித்திக்கும்.

743. ஒளிசொல்லும் வெளியதனில் நின்றரூபம்
உற்றுப்பார் மேல்நோக்கிப்பு ருவமத்தி
அழிவெல்லுங் காகனுமே மறைத்தகோட்டை
அதில்நுழைந்தாற் திரும்புவதோ நமனுங்காணான்
பழிகொள்ளும் நமனார்க்குப் பழியாம்வாசல்
பதியான பிரமபதி நெற்றிக்கண்ணு
வழிசொல்லு முன்பின்னும் பிரார்த்தகர்மம்
மாயையோ மறைந்துவிடும் ஒளிமுன்னால்.

744. முன்னாலே செல்லாது பின்னால்நிற்கும்
முறைபிசகா நல்லோரைக் கண்டாலஞ்சும்
தன்னாலே சாகாது ஒளியாற்சாகும்
தான் பிறந்த நாளதுவும் ஒளியினாளும்
அன்னாளே இவ்விரண்டும் ஓர்நாள்தானே
ஆகையினா லவ்வொளிக் குயிருளுமஞ்சும்
இன்னாளே ஒளிகண்டு யிருளைப்போக்கி
எக்கால மிப்படியே ஒளியில்நில்லே.

---

743. இந்த ஒளி வாசல் எமன் வராத வாசலாகும் வினைகள் எல்லாம் அழிந்து விடும் மாயை மறைந்துவிடும் ஒளி இன்பம் கூடும்.

744. இந்த ஒளி யனுபவத்தைப் பெற்று இருளை நீக்கி எக்காலமும் இந்த ஆனந்தத்தைத் துய்த்து நிற்பாயாக.

745. நில்லப்பா சஞ்சார காலத்துள்ளும்
நேர்விசும்பிற் சென்றாலு மறந்திடாதே
கல்லப்பா நாடிகலை பிராணசீவன்
காலனெனச் சொல்வார்கள் சித்தமேனி
வில்லப்பா யெய்தாப்போல் நாணேறிட்டு
விறைந்தவலு கயிறுநிமிரே தடியேநின்ற
அல்லப்பா யிருளகலச் சோதிகாண
அடிவயிற்றை நிமிர்ந்திருந்து வில்நாணேற்றே.

### நடனங்காண

746. ஏற்றவே மேலெழும்பி மூக்குதொட்டு
இடதுபுறம் வலதுபுறம் ஓடாமற்றான்
போற்றவே நடுநாடி மூக்கின்தண்டு
பொந்துபுகும் பெருச்சாளி போனாற்போல
ஏற்றவே மூக்குநடு நாசியுச்சி
இப்படியே நடுநாடி யிசைப்பாயப்பா
போற்றவே காண்பீரே முனையாம்வாசி
பொதுவிருந்து நடனமிடும் பொந்திற்பாரே.

---

745. முதுகிலே நாண் பூட்டுதல் என்று முதுகந்தண்டு கொண்டு இயற்றுகிறயோகத்தை ஞானியர் அழைப்பார்கள் இதில் இருள் அகலும். சித்தமேனி என்னும் உள்ளத்தின் உடலிலே ஒளியின்பம் பெருகும்.

746. பெருச்சாளி கொண்டு போட்டுச் செல்வதுபோல பொந்துப்பயணம் செய் என்கிறார். பொதுவிலே நடனம் காணலாம்.

747. பாரப்பா கண்ணிரண்டுஞ் சிவந்துபோகும்
பாதமொடு ஆசனங்கள் கடுப்புக்காணும்
தூரப்பா நாள்தினமும் லேசாய்ப்பாரு
நுண்ணறிவிற் காணுமல்லோ செந்தீக்காலே
வேரப்பா காணுகிற தூரகீறல்
மேனியதி லிருபிளப்பு இடுப்புகாலே
சீரப்பா நடுவான இடுப்பில்நின்று
தீபவொளி காணுமட்டுந் தீட்டுதீட்டே.

748. தீட்டுங்கள் வெந்தயமே கடுகோடுள்ளி
சேர்வகைக ளத்தனையும் சேர்ந்துசாரு
கூட்டுங்க ளத்தனையுங் கொட்டஅன்னம்
கொடியருசி தேனமுர்தம் பால்நெய்மோரும்
நாட்டுங்கள் பழவகைகள் கற்கண்டோடு
நற்பாகு யித்தனையும் ருசியாகாது
வாட்டுங்கள் செய்தநன்றி வர்த்தமானம்
வகையென்ன தீபவொளி வார்த்தைதானே.

---

747. இரண்டு கண்களும் சிவந்து விடும் நாள்தோறும் இந்தப் பயிற்சியை நிதானத்தோடு செய். தீபஒளி காண்பாய்.

748. நியமத்துக்குரிய உணவுச்சாறு சொல்லி நியமம் உணர்த்தியவாறு.

749. வார்த்தைதா னேதென்றாற் றிரிகாலந்தான்
மாயோக வல்லபத்தால் ஒளியாம்ஞானம்
வார்த்தைதான் காட்டுமல்லால் மவுனங்காட்டா
மாவொளியிற் றான்பிறந்த வர்த்தங்காட்டும்
வார்த்தைதா னேதென்றாற் றிரிகாலத்தே
வல்லபத்தைக் கண்டிடலாம் வாக்கிற்சித்தி
வார்த்தைதான் லேசாமோ பலிதஞ்சொல்ல
வாய்ப்பலித மென்னவென்றால் முத்திநானே.

750. முத்திதான் காட்டுவது முகத்திற்காட்டும்
முறைகாட்டும் உரைகாட்டுங் கடமேகாட்டும்
சித்திதா னுடல்காட்டும் செங்கைகாட்டும்
தீபவொளி காணும்மட்டும் உடலேகாட்டும்
நத்தியே பார்த்தாக்கால் வெளிச்சங்காட்டும்
நரைமூப்புச் சாக்காடு முன்னேகாட்டும்
உத்தியே யுகங்காட்டும் ஆதியந்தம்
ஊடுருவி பார்திரையே புருவப்பூட்டே.

---

749. முக்காலங்களுஞ் கேட்கும். பார்வையிலே கேள்வி பிறக்கும் ஒளியும் ஒலியும் இந்த யோக அனுபவம் அது.

750. முத்திநிலை அதாவது ஜீவன்முத்தன் என்பதை முகம் காட்டும் நடைமுறை காட்டும், உரைச் சொல் காட்டும் செங்கை காட்டும் உடம்பு காட்டும்.

புருவப் பூட்டைத்திறந்து செல்வதால் இத்தனை விளைவுகள் சித்திக்கின்றன.

## புருவமத்தி திறவுகோல்

751. பூட்டுடைக்க வல்லவரே புருவம்வாரும்
புகுந்துகொள்ளும் புருவமத்தி திறவுகோலை
நட்டுடலை நிமிர்ந்திருந்து சம்மணமேயிட்டு
நேராகத் தலைகழுத்து உடலுட்கார்ந்து
பூட்டுடலை வாசிவர மூச்சைக்கண்டு
புகுந்திருவே பொந்திருக்கும் புலியேபோல
வீட்டிலிருந் தேகுகையாய்த் கதவடைத்து
வெறுமாயை யுண்ணாமல் மந்திரமுண்ணாதே

752. உண்ணாமல் மறவாமல் அசைந்திடாமல்
உற்றமுகம் கண்விழியுஞ் சொருகிடாமல்
கண்ணாமற் பிறர்சத்த ங்கேளாக்காதாய்
நயனத்தை மூடாமல் நடுங்கிடாமல்
உண்ணாவில் உயிர்வாசி பொழிந்திடாமல்
உளவிருந்தோர் கிட்டவந்து பேசிடாமல்
அண்ணாவிற் மேனமுர்தம் உண்ணத்தானே
அருளொளியா மல்லிஉத்தே வரசிமூட்டே.

---

751. புருவ நடுவிலே பார்வை செலுத்தி யோகம் இயற்ற வேண்டிய முறையைக் கூறுகிறார்.

752. உண்ணாமல் மறவாமல் அசைந்தாடாமல் பார்வை செலுத்த வேண்டும். கண்விழி செருகி விட்டால் இதைச் செய்யவேண்டும்.

753. மூடய்யா காலைமாலை மூக்குவாசி
முனைமூக்கு ஆடிடவே யிரண்டுதாழை
நாட்டவே மேல்நோக்கி பாரித்தாயானால்
நயனத்தி நேர்மத்தி புருவமத்தி
கூட்டப்பா வாசியுயிர் புருவந்தட்டும்
குருவென்ன சொல்லிடுவார் யிவிடந்தானே
ஓட்டந்தா னேகிடுமே குருவிக்கூட்டம்
உற்றமனந் தான்திறக்கும் ஒளியாம்வீடே.

754. வீட்டிலே புருவமத்தி நாமமத்தி
வெள்ளாட்டி அய்ஙனுட பொட்டுமத்தி
காட்டிலே யவ்விடத்தே குருவின்பத்தி
நடுநாமப் பாதைவழி மூச்சுஓடும்
ஏட்டிலே எழுதலையோ புருவப்பூட்டே
இப்பூட்டைத் திறப்பதற்குக் குருவேஆசான்
மாட்டிலே காலைசெய்தார் மனுவாமாந்தர்
மாடிதுவே வாசியுயிர் வாசிதானே.

---

753. யோகம் இயற்றுகிற முறையைச் சொல்லி மனந்திறக்கும் ஒளியாம் வீடு கிட்டும் எனவும் கூறுகிறார்.

754. ஏட்டில் எழுதிய புருவப்பூட்டை மேலும் விளக்கிச் சொல்லி ஆசானுடைய நேர்முக இலக்கத்தைக் குறிப்பிடுகிறார்.

## வாசி திறவுகோல்

755. வாசிதான் கோலாகுந் திறவுகோலு
வசனித்த சொல்லெல்லா மந்திரங்கள்
நேசியே குருமுறையே ஆசாரங்கள்
நேசித்தார் வல்லவர்கள் சிததரானார்
தோசியே போயலைந்தீர் தன்னைப்பாரீர்
சுடுகாடு போக்குதற்கு நம்மாலாகும்
பேசியே தானிருந்தீர் சுபமாங்தோழை
பெருஞ்சித்தா லாகாது தன்னாலாகும்.

756. ஆகுமோ சாஸ்திரத்தாற் குருவாலாகா
ஆச்சரிய மந்திரராற் செபத்தாலாகா
பாசமோ உப்பன்றி செயநீராகா
பார்த்தவர்கள் கண்டுகொள்ளும் பருவந்தன்னில்
ஆகுமோ பருவமன்றிக் காலமன்றி
ஆஊவும் ஏஐயும் ஆசனங்கள்
ஓகுமோ ஈயுடனே ஔவுந்தானே
உத்தமர்கள் அரிநமோத்து சித்தந்தானே.

---

755. சுடுகாடு போக்குதற்கு இந்த வழி ஒன்றினாலேதான் கூடும் சந்தேகமில்லை.

756. வெறும் ஜெபத்தினால் பயனில்லை சூக்கும அட்சர நிலைகளைத் தெரிந்து கொண்டு இயற்ற வேண்டும் என்பதை சூக்கும எழுத்துக்களையே சொல்லி வற்புறுத்துகிறார்.

757. அரிநமோத்து சித்தமென்றும் அரியோமென்றும்
அரிச்சுவடிச் சுழியென்றுங் காப்பதாகும்
மரியோம்நா மென்பதற் குத்துணையேகாப்பு
மால்சுழியோ திருசுழியோ யெதுதான்முந்திக்
கரியோநாம் துதித்த சுழிக் கொம்புகாப்போ
காமமான் நாமா சைக் கொம்புகாப்போ
உரியோநாம் தயிரெடுக்க உற்சாகத்தால்
உளமறிந்து உட்கண்ணை ஊன்றித்தூண்டே.

758. தூண்டியே சுழிமுனையாம் சுவடிகொம்பே
சுழித்த சுழி அரிச்சுவடி ஆதிகாப்பு
ஆண்டியே ஆகாமல் சுழினைபாரு
அ..ிச்சுவடி ஆதியிலே சுற்றைப்பாரு
தோண்டியே பார்ப்பதற்கு உடலுள்ளேதான்
சுழிமுனையின் கொம்புதனை சுழித்தவாய்வை
ஏண்டியே யென்றுசொல்லி வாலைகோரி
என்தாயைச் சுரிக்காற்றாற் கட்டுவாயே.

---

757. அட்சரங்களை விளக்கமாகச் சொல்லுகிற முனிவர் உள்ளத்துக்குள்ளே உணர்வு செலுத்தி உட்கண்ணை ஊன்றித் தூண்ட வேண்டும் என்கிறார்.

758. காற்று கொண்டு பந்தனை செய்கிற முறையைக் கோலமாகக் காட்டி அதன் இன்றியமையாமையை அழுத்துகிறார்.

759. கட்டுவா யஞ்சோடு மூன்றுநாலுங்
கயிறுதிரித்துப் போடுவையே பனிரெண்டாலே
எட்டுவாய் பனிரெண்டு ஒருச்சாண்நீளம்
ஏருமே மூக்கின்வழி உயிர்தானிமூச்சு
கொட்டுவாய் னிந்னிமு மூக்காம்நாசி
குருசொல்லத் தட்டிடுமே மூச்சேயோடி
எட்டுமே மூச்சோடி யேகந்தானே
என்மக்க ளானாக்காற் மூச்சைப்பாரே.

760. குருவாக வேணுமென்றால் மூக்கின்சீவன்
குலக்கொழுந்தே முக்கேற்று நெற்றிமேலே
திருவாக யிப்படியே பார்த்தாயானால்
தினமென்ற நாள்செல்ல யோகியாவாய்
மருவாக மாட்டாயே உயிரைப்பாரு
மாதவசியாகிடலா மேலேநோக்கு
உருவாக வாசிவலு உயிர்தான்மெத்த
உயரேறப் பிலத்துவிடும் யோகந்தானே.

---

759. காற்றாகிய கயிறு கொண்டு கட்டுவதற்குரிய என் கணிதம் சொல்லி தம் சீடர்களுக்கு இது என்று கூறுகிறார் முனிவர்.

இந்தச் கணக்குகளை ஏட்டில் பார்த்துப் புரிந்துகொண்டு செய்யத்தொடங்குவது ஆபத்து எதிரில் குரு இருந்து வழி நடத்த வேண்டும்.

760. யோகியாவதற்கும் மாபெரும் தவசியாதவற்கும் இதுவேவழி மேலே நோக்கு முறைப்படி இந்த வாசியோகத்தைச் செய்.

## யோகம் காண சரநூல்

761. யோகமே காண்பதற்குச் சரநூல்சொன்னார்
உளமறிந்தோர் சடமறிய உடற்கூளேதான்
தாகமே கொடாக்கால் உடற்கூர்பாரு
சாதித்தால் யோகமென்றும் பெலததால்ஞானம்
நாகமேதீண்டஉயிர் வேறானாப்போல்
நாதனே யாகிடலாம் மாய்கைபாகும்
ஆகமே சொல்லாகும் வேதமாகும்
அய்யேயோ நம்முள்ளே அரையாம்வூடே.

762. வீட்டிலே கூட்டிலுள்ளே முத்தியுண்டு
மெய்யிலே சோதியுண்டு திரிகாலங்கள்
பாட்டிலே யில்லையிது நாட்டிலுண்டு
பரிவாசி கண்டவர்க்கும் காட்சியுண்டு
ஏட்டிலே எழுதிவைத்தார் முன்னோரெல்லாம்
எங்களுக்குஞ் சந்ததிகள் வேணுமென்று
பூட்டிலே கண்டெடுக்கத் திறவுகோலை
பொக்கிஷத்தில் வைத்தாரே சாஸ்திரநூலே.

---

761. யோகம் பயிலுதலும் அதன் விளைவும் கூறியவாறு இந்த உடம்பே திருமறையாகிவிடும் என்கிறார்.

762. எழுதிவைத்தார் நூல்களை திறவுகோல்களை எங்கே வைத்தார் பத்திரமாகப் பொக்கிஷத்தில் வைத்தார். இந்தக் காலத்தில் 'லாக்கரில்' நாம் வைக்கிறோம் அல்லவா அப்படி.

763. நூலென்ன உங்களுக்குப் புத்திக்காக
நுண்ணறிவை நாட்டிவைத்தார் சாஸ்திரத்தாலே
பாலென்ன நெய்யிருக்க மூடினாப்போல
பறைவாலை காண்பதற்கு நூலாதாரம்
வேலென்ன சத்துருமே லேவிரைப்போல்
மெய்யதனி லொளிகாணச் சாஸ்திரந்தான்
நூலென்ன உடலறியத் தெய்வங்காண
நுட்பமாய் சொல்லிவைத்தார் பெரியோர்தானே.

764. பெரியோரும் நம்மைப்போற் சிறியோராகி
பேசியே குழந்தையது வளர்த்தாப்போல
அறியோர்களறியாம லறிந்தார்பின்னே
ஆனதினா லறிந்ததுவுந் தெரிந்துசொன்னார்
கரியோர்கள் நினைவழிந்து மனதைவென்று
கவலையற் றதினாற் பெரியோரானார்
விரியார்கள் மனதங்கித் தன்னைகண்டு
தமக்குள்ளே தத்துவங்கள் தன்னைவென்றே.

---

763. நூலிலே எழுதிவைத்தது எப்படி? பாலுக்குள் நெய் இருப்பதுபோலத்தான் நூலுக்குள் நுண்ணறிவு இருப்பது பாலைக்காய்ச்சிக் கடைய வேண்டும் அதுபோலத்தான் நூலறிவைப் பயன்படுத்தினால் அனுபவம் கிட்டும்.

764. பெரியவர்கள் எல்லாம் எப்படிப்பெரியவர்கள் ஆனார்கள்? குழந்தை பேசி வளர்ந்து பக்குவம் பெறுவதுபோலத்தான் அறியாமல் இருந்து பின் அறிந்தாதர்கள்; அதைச் சொன்னார்கள்; மனத்தை அடக்கி மெய்க்குள்ளே தன்னை வென்று தத்துவங்களைக் கண்டார்கள்; இதுவே அனுபவஞானம்.

765. வென்றதினாற் கவலைமனம் விட்டொழிந்து
மெய்க்கருவி யெல்லாமே சுத்தமாச்சு
இன்றதனை நீர்காண நீரும்வாரும்
எத்தனிதா லாகாதா நீரேவுள்ளும்
குன்றதனி லேறிமலை யுச்சிநின்றே
குடல்நடுங்கக் குத்ததாப்போல் பிழைத்தேலர்யோகி
மன்றதனில் நின்றவரிற் கோடிக்கொன்று
மறையோகிதிருவாகி குருவாய் நின்று.

766. குருவானாற் திருவாகும் கோணாநாணா
கோன்போல வாழ்ந்திடலாம் சித்தர்க்குள்ளே
பொருவானாள் திருத்திவிடற் பொல்லாப்பேகும்
போனசென்மந் தான்தெரியும் புதல்வரைப்போல்
மறுவானா ளெடுப்பதற்கு ஞாயந்தோற்றும்
மலடிபிள்ளைப் பேர்பெற்ற வாறுபோல
உருவாரை லாகாம லென்செய்தீர்கள்
உத்தமரைக் காணாம லொழிந்திட்டீரே.

---

765. தன்னை வென்று கவலை விட்டொழிந்து மெய்யைத் தூய்மைப்படுத்திகண்டார்கள். நீங்களும் வாருங்கள் அவ்வாறு பாடுபட்டுத் தேறுங்கள்.

766. மலடி பிள்ளைப்பேறு பெற்றதுபோல நீங்களும் மறு பிறவி எடுப்பதற்குள் உத்தமரைக் கண்டு தெளியுங்கள்.

## முத்திகாண இருக்கவிதி

767. ஒழிந்திடா தேயிருநீ வெளியேறாதே
ஊனுறக்க மின்பதுன்பம் பொதுவாய்நில்லு
அழிவில்லா தேயிருக்க முத்திகாண
அம்பட்ட னாவிதனாற் சிரைத்திடாரே
உளியில்லா தேயிருந்து மலையேகல்லாய்
ஒட்டொட்டாங் நொருக்கிவிட்டஉகமைபோல
தெளிவில்லா தேயிருந்தா லென்னசெய்வோம்
சீவனங்கள் செய்வதற்குத் தியங்கினீரே.

768. தியங்கினார் தன்னைவிட்டு அறிவைவிட்டு
தேசத்திற் பொளறியாத் தோசிமாடு
மயங்கியே மானிடாகள் லேசாயானார்
மாண்டதினா லென்னபலன் மரணந்தோணா
கசங்கினா ரிப்படியே கலகநெஞ்சால்
கலைவாசி மனமறியார் அறிவுங்காணார்
வயங்கினா ரென்னாளுங் காலன்கண்ட
மாந்தரையே நாடாமல் மறந்திட்டாரே

---

767. சாதாரண ஊன் உறக்க வாழ்க்கையில் சிக்கி ஒழிந்தால் எப்படி முத்திகாண முடியும்? உளியில்லாமல் மலையை உடைப்பது எப்படி..?

768. மெய்யை உணராமல் வீணாகும் மாந்தரின் அவல நிலையைப் பாடியவாறு.

769. மறந்திட்டார் தன்மரணஞ் சரீரசிட்சை
மறந்திட்டார் நோய்வலுப்பு பித்தமூடம்
துறந்திட்டார் அறிவேறுந் திரிகாலத்தார்
தூண்டாத சோதியுட வெளிச்சங்கண்டார்
கறந்திட்டார் மானிடர்போற் காயகற்பம்
கண்டவர்கள் அமுதுண்டு காயசித்தி
கறந்திட்டார்காயசுத்தி பிராணசுத்தி
சூட்சமதைக் கண்டவர்கள் சுருக்கந்தானே.

770. சுருக்கந்தான் விட்டகுறை பிறந்தமாக்கம்
தூண்டியே சொல்லுகிறேன் பிறந்தார்பின்னே
இருக்குந்தான் தாய்தந்தை குலவாசாரம்
என்இந்த மக்களுக்குத் தலவிசேடம்
பொருகுந்தான் கோவில்குளம் தீர்த்தஞ்சால
பொய்க்குருவை விட்டகலு மெய்யேசால
வெருக்குந்தான் பொய்ப்புகலல் அய்யாஅய்யா
மேன்மக்க ளாக்கு முத்திவீணே.

---

769. திரிகாலத்தார்கள் காயசித்தி பிராணசித்தி ஆகிய நுட்பங்களைத் தேர்ந்தவர்கள். தூண்டாத சோதியின் வெளிச் சத்தினைக் கண்டவர்கள் அவர்கள்.

770. பொய்யான ஆசானை நாடிப்பொய்யான ஆசாரங்களிலே உழன்று மேன்மக்கள் ஆகாமல் வீணாகிற மக்களுக்கு முத்தி எப்படிச் சித்திக்கும்.

771. வீண்முத்தி யாகாது மெய்யேதொட்டு
மெய்க்குருவால் பொய்க்குருவை வீணென்றெண்ணி
சாணென்று தானறிந்து வயிறேசோம்பல்
தன்வயிற்றை நிரப்புதற்கு அறிவில்லாதார்
மான்மழுவைத் தரித்தவரைக் காணமாட்டார்
மக்களுக்குச் சொல்லுதற்குக் குருவானாரோ
தேன்மொழியுந் துருமொழியு மிதற்குவேறோ
தேறுவான் வேறுவிதம் மாறுவானே.

772. மாறுவான் பொய்க்குருவை வாயாற்தட்டி
மரணத்து நாளறிவான் தூரதிஷ்டி
கூறுவான் நானாரு நீதானாரு
குருவென்றாற் சொல்லிடுமே உம்மைக்கொண்டு
சாறுவான் திரிகால வர்த்தமோடு
சமத்ததிக முள்ளானே மெய்யுள்ளானே
கோறுவான் யெட்டுரெண்டும் பத்தேயென்பான்
குருவானாற் சொல்லுமென்று கூறுவானே.

---

771. வயிற்றை நிரப்புவதற்கு விழியாக்க் குருவிடம் தாங்கி மக்களை இனிப்புச் சொல்லால் பசப்புகிற போலிகளின் திறன் கூறுகிறார்.

772. குரு என்றால் மெய்யான வினாக்களுக்கு விடைசொல்லட்டும் எட்டும் இரண்டும் பத்து என்று சொல்வதற்கு ஒரு ஞானகுரு வேண்டும்.

## அகஸ்தியர் சொல்விபரம்

773. கூறுமே யாம்நினைந்த சங்கற்பத்தைக்
குரவானாற் சொல்லிடுமே அடியரால்வோம்
யாருமே யெட்டுரெண்டும் பத்தென்றார்கள்
யார்சொன்னா ரகஸ்தியரே விரித்துச்சொன்னார்
தாருமே மாந்தர்களு மயங்கினார்கள்
தமர்சித்த ரானாக்காற் சொல்லுவார்கள்
கோருமே நீர்கேட்கச் சொல்லிவாரேன்
குருவாகு மந்திரங்க ளீதுதரனே.

774. மந்திரங்கள் பிறந்தவிடம் வேதமொடு
வாய்ச்சொல்லு வல்லபங்கள் உயிரினோடு
தந்திரங்கள் பிறந்தவிடம் பூசையோடு
தாமான யிடம் பிறந்த அறிவினோடு
யந்திரங்கள் பிறந்தவிடம் மணநாவோடு
அறுத்தடைத்த வாசரோடு நாசியூடு
உள்திறங்கள் ளென்திறங்கள் பொதுவினோடு
ஊடாடி உயிர்விளங்குஞ் செபத்தினோடே.

---

773. என் உள்ளத்தில் உள்ளதைச் சொல்லுமேபார்க்கலாம் பெரிய குருவென்று வந்திருக்கிறீரே என்றால் குட்டு வெளிப்பட்டுவிடும். எட்டும் இரண்டும் என்ற தொடருக்கு பொருள் சொன்னது யார்? அகத்தியரே.

774. மந்திரங்கள் வேதத்தோடு பிறந்தன. தந்திரங்கள் பூசையோடு பிறந்தன. எந்திரங்கள் பிறந்த இடம் மணிநாவே.

775. செபத்திலே தவம்விளையு மிடத்தினோடு
செல்காலம் வருங்கால மத்தியோடு
அபத்திலே போகாம லுச்சியோடு
ஆச்சரியம் அண்ணாக்கு மணிபோற்தொங்கும்
இகத்திலே யாவருக்கு மிதுதானில்லார்
இக்கூடு ஊமையென்றும் அடைப்பதன்றும்
யுகத்திலே ஒளிபிறந்தார் கிட்டவில்லை பீடந்தானே.

776. பீடமே மேல்வாசல் உச்சிவீடு
பிரமாந்திர உச்சிக்கண் காலஓடு
கூடமே மேல்வாசல் கொடியண்ணாக்கு
கொடியென்று தொங்குதடா அண்ணாக்கேபார்
மாடமே யொன்றிருக்குங் காலங்கீழே
மக்களே அண்ணாக்கு மேலேதானே
ஓடமே கப்பலுண்டு நீரேயேற
உச்சிக்கொடி யண்ணாக்கு வாசல்பின்னே.

---

775. செபத்தின் விளைவு தவத்தின் விளைவு. தவத்திலே காலம் போகாமல் உச்சியின் தேர்ந்து உள்ளுக்குள் இரகசியம் தேர்ந்து முயன்றால் ஒழிய இடம் வசமாகாது.

776. இடம் என்பது மேல் வாசல் எச்சிவீடு பிரமாந்திரம் கபால ஓடு. மேல் வாசற் கொடிகண்ணுக்கு இப்படி உடம்பின் ஞானத்தலங்களை சொல்லியவாறு.

777. வாசலே தொங்குநாக்கு பின்புறத்தே
வாசலொன்று கோழையது வரும்வாசல்
ஏசலே கபால நீரிறங்கும்வாசல்
இவ்வாசல் நீர்களெல்லா மிறங்கிற்றானால்
பேசலே பாசியிந்த உயிருதானே
பெரியமண்டை யேகிழுமே குளிகையாகும்
பூசலே யாகிவிடுங் குளிகைசித்தி
பொய்க்கண்ணும் மெய்க்கண்ணும் நெத்திக்கண்ணே.

## நெற்றிக்கண்

778. நெத்திக்கண் திரிகால வர்த்தஞ்சொல்லும்
நீண்டசித்தி கண்டவுடன் திதியுஞ்சிஷ்டி
முத்திக்கண் விளைவிதுவே பெருளேசித்தி
மொய்க்குமல்லோ சம்மாரம் தன்னைச்சுத்தி
வத்திக்கண் ணாகாது யெந்தநாளும்
வறுமையது பேகிடுமே கண்ணுக்கெட்டா
வெத்திக்கண் ணிப்படியே செவியாந்தூரம்
மேல்விளைவே தறிந்துவரும் கேட்டும்பார்த்தே.

---

777. பாலநீர் இங்கும் வாசல் புலப்படுவதே ஞான அனுபவம். அதுவே மெய்யுணர்வு.

778. நெற்றிக்கண் என்பது முக்காலமும் பேசும் சிருஷ்டியும் திதியும் சம்மாரமும் கண்டது அது.

779. பார்த்தகண் செவிதானே அண்டஞ்சென்று
பறந்துவருந் திரிகால வர்த்தம்போல
ஊர்த்துவருங் கண்குளிர்ச்சி செவிதானெட்டும்
உலகயெல்லை சூரியர்க்கு மப்போற்தானே
தூர்த்துவரும் அண்டச்சுவர் வெளிக்கப்பாலே
தென்வடக்கு கிழமேலும் சுத்திஆயிம்
நேரத்துவருங் காரியம்போலா தியந்தம்
நிமிஷத்தி லுள்ளதெல்லாம் சொல்லுந்தானே.

780. உள்ளதெல்லா மித்தோடு உயரேமேலே
ஊடுருவிச் செல்லுமல்லோ வர்த்தத்தாலே
மொள்ளவல்ல வல்லர்க்குங் கதிராமேலே
மூடுவெள்ளி பரப்பிருக்கு மதியின்மேலே
தெள்ளவல்ல வல்லவர்க்கு மேகம்மேலே
திரண்டுவிடுஞ் சுழற்காற்று வாய்வுமேலே
கொள்ளவல்ல வாசிஉயிர் குளிகையாலே
கொட்டிவைத்த வதன்மேலே கருப்பைத்தொட்டே.

---

779. சூரியனுக்கு அப்பால் பார்க்கவல்லது அது. திசையனைத்தையும் சுற்ற ஆராய வல்லது நேரிலே பார்ப்பதுபோல ஆதியந்தம் வினாடிக்கணக்கில் சொல்லக்கயிறு.

780. மண்டலங்கள் அனைத்தும் அளாவி நிற்கும் அதன் தன்மை கூறியவாறு.

781\. தொட்டந்த ஆகாய அண்டவட்டம்
சுற்றிவந்து ஊடுருவி வெளியைப் பார்க்கும்
கொட்டுமந்தத் தேள்கொடுக்கு நோக்கல்போலக்
கூத்தாடு மெதிர்நோக்கும் பொட்டாற்போகும்
விட்டந்த யோகமுனி நினைப்பானானால்
மீளாது பாக்கியதை முழுதும் நோக்கும்
சுட்டந்தத் தன்னறிவால் விளைத்தபேதம்
தூங்காமற் தூங்கியது நிமைகூடாதே.

## நெற்றிக்கண் திறந்தோர்கள்

782\. கூடாதா நெற்றிக்கண் திறந்ததானால்
குருமுனியே யாகலையா நாதராதி
வாடாதா மனந்தானுந் தாழுந்திடாதா
வசிஷ்டரென்ன அகஸ்தியரும் விஸ்வாமித்திரன்
நாடாத கொங்கணவன் போகநாதன்
ஞாயிறுபோ லேவீசுங் காசிநாதன்
போடாதே திரிகால புசுண்டநாதன்
பொம்மையொட்டிக் கண்டதிரு மூலநாதர்

---

781\. யோகியான முனிவனின் நினைப்பு என்ற ஆற்றல் அவனுடைய எண்ணம் எத்தகைய வல்லமையுடையது என்றவாறு.

782\. இத்தகைய வல்லமை நெற்றிக்கண் திறப்பதால் உண்டாகிறது என்பதைச் சொல்லி இந்த ஆற்றல் பெற்ற பெரியோர்களின் வரிசை பேசப்படுகிறது.

783. நாதனெனப் பெற்றானே ததீசிநாதன்
நரம்புபோ லேயிருந்த கூர்மனோடு
போதனே யானானே கிருஷ்ணக் கோனே
புளுக்கச்சி வியாசனுமே கூடிநானே
ஆதனே அத்திரியும் புலத்தியோனும்
ஆகையினாற் சிஷ்டிதிதி சம்மாரங்கள்
வாதனே கெவுனமாதி லேகினானே
வல்லபஞ்செய் வள்ளுவ நாதன்றானே.

784. நாதனேஇடைக்காடன் மதியதேய
நாள்சொலும் நாளறிந்தான் கணிதவதிதை
பூதனே ராகுவரும் நாளேசொன்னாள்
பொய்சொன்னாப் போலேயல்ல மழையேசொன்னான்
வேதனே கலைக்கோட்டான் வந்தாற்தானே
மேகமெல்லாந் திரண்டுவரும் யேவல்செய்யும்
சூதனே யின்னமொன்று சத்திரியர்க்குள்
சூடாலை காலமதில் நளாக்கினிக்கே.

---

783. இந்த ஆற்றலை நன்கு விளங்கிக்கொண்டு அரிய செயல்கள் புரிந்த முனிவர்கள் ஞானிகள் பெயர்களை மேலும் கூறுகிறார்.

784. இதுவுமது. முக்கியமான இடைக்காடருடைய வானமண்டல ஆய்வு குறிக்கப் பெறுகிறது. இதையொட்டி சித்தர் இலக்கியம் முதலாவது தொகுதியில் வருகிற விதியின் விதி என்ற சிறுகதை பார்க்க.

785. வருத்தினார் சூரியரும் வந்தார்பின்னே
வல்லபங்க ளிதுவல்ல மரணமாகா
துருத்தினால் வெளிப்படவே யாகாஆகா
தொண்டுதொட்டு முனிகளுமே ரிஷிசித்தாதி
பருத்திநூல் தள்ளுதல்லோ லுயிரைவிட்டார்
பரமபதங் கண்டவரோ பறைச்சிமக்கள்
இருத்தினு லிருக்கிவிட்ட புசுண்டநாதன்
யெப்படியோ நின்றானே யெண்ணிலாதோ.

786. எண்ணிலாக் காலமது கண்டகோளன்
எவர்களுக்கும் வல்லவரே பதினெண்சித்தர்
நண்ணிலார் நாணமுற்று யிவருக்கஞ்சி நரைமூப்புச்
சாக்காட்டைக் தேடிட்டாரே
வெண்ணிலா மதிகுறைத்து காலங்கண்டோர்
மெய்வலுவில் சூரியனா ருதிப்புமுன்னோன்
நண்ணிலிலாத் தோளெலும்பு வலுத்தகூடன்
நரைமூப்புச் சாக்காட்டைத் துறத்திவென்றானே.

---

785. இந்த ஞானிகளைச் சொல்லி இவர்கள் பருத்தி நூல் தள்ளுதல்போல் உயிர் விட்டதையும் கூறுகிறார். அதோடு புசுண்டர்எண்ணிலாத ஆண்டுகள் இருந்த சிறப்பும் பேசப்படுகிறது.

786. பதினெண் சித்தர்களின் வல்லமை பேசப்படுகிறது.

787. வென்றானே தன்மரணம் யெமனார்கூட்டை
வேறொன்றைப் படைத்தானே திஷ்டியாலே
நின்றானே சதுர்யுகமோ கோடியப்பா
நீள் விசும்புக் கெட்டாதான் உருவிலுள்ளான்
குன்றானே உடல்நீளான் குறுகான்தட்டை
குருபோலத் தானிருக்கான் கிழவனாகான்
மன்றானே மண்மலைகள் கடல்ாங்காலம்
வாய்த்திடுமே எந்தனுக்கு ஆயுசென்றானே.

788. ஆயிசோ யென்னயிது அதியந்தான்
ஆதித்தின் பலஉருக்கள் கண்டமெய்யன்
வாய்ச மென்றபேர் கொட்சித்தன்
வாய்மூக்கு நீண்டதினால் காகனாதன்
ஆய்ச மொன்றுமில்லான் நரைமூப்பாலே
அனேகருமே சொல்லிவைத்தார் முனிநாதராதி
போய்சை கண்டுகொண்டார் பிடித்துக்கொண்டார்
புரிதிரிக்குங் கயிறுபோலே பிணைத்தானே.

---

787. இதுவுமது.

788. புரிதிரிகிற கயிறு போல பிராணன் முறுக்கேறுகிறது என்று சொல்லி காகநாதன் ஆயசமில்லாமல் அசிதி இல்லாமல் இருந்தது பேசப்படுகிறது. இந்தப் பாடலில் சொற்பிறழ்ச்சி உள்ளது.

789\. பிராணனையே கயிறுதிரித்தார் புரிமூன்றாகப்
பெருமூச்சி லோடுமுயிர் மூச்சாடாமல்
பிராணனையே மூக்குநுனி யாடிடாமல்
பெருவாசல் ரெண்டடைந்து நுனியடைத்து
பெருவாச லேற்றிவிட்டார் உச்சிவாசல்
பெருமண்டை நின்றுவிட்ட குளிகையாச்சு
பெருமண்டை உச்சியேறி ஒளியாய்த்தேறிப்
பெருந்தூரந் தூக்கிடுமே கெவுனம்பாய்ந்தே.

790\. கெவுனமே யிப்படித்தான் பிலமேமூச்சு
கெதியென்ன முத்தியிட பொருளிதாகும்
மவுனமே யிப்படித்தான் செய்யும்பொய்யோ
வாயக்குதே காயத்திரி வலுவேசெய்யும்
கெவினமே மேல்கிளம்பித் தொழிலேதானே
தேசரத்தலேற்றிவைக்கும் சித்திதானும்
மவுனமே யென்றுசொன்னார் முன்னோரெல்லாம்
வந்தவர்கள் கண்டுகொண்ட வகையிதாமே.

---

உயிரை உச்சிமீது ஏற்றி மரணத்தை வென்ற உத்தி பேசப்படுகிறது.

மௌனத்தின் ஆற்றல் மூச்சுப் பயிற்சியின் வலிமை கமனசித்தி என்கிற மேலே கிளம்பிச் செல்லும் சக்தி முதலியவற்றை இந்த யோக நெறியின் விளைவுகளாகக் குறிப்பிடுகிறார்.

**791.** வகையீது தொகையீதுவே கண்கோமெத்த
வல்லவர்கள் மெத்தவுண்டு தொழிலுண்டு
பகையீது காயத்து வேறுமுண்டோ
பைங்கூழைக் கடப்பதற்கு வேறேயுண்டோ
தொகையீது கண்டவர்கள் வெகுபேருண்டு
சொல்சொல்லாய்ச் சொல்லிவைத்தார் மேன்மேலாக
நகையீதே உடலுக்குத் திரியாம்மந்திரம்
நாம்கண்ட சந்தோஷம் வேறேயேதே.

**792.** ஏதென்று வேறேவகை தொகைகள்தானே
எண்ணியெண்ணிச் சொன்னாரே யெண்ணிலாதார்
வானிலுள்ள நட்சேத்திரம் விளைதல்போல
வசனித்த வாக்குகளே மறைநூலாச்சு
கோனென்று வந்தாலே சொல்லலாகும்
குருவாக வேணுமென்றால் முழுதுங்காணு
தானென்று வந்தவர்கள் யேறவில்லை
சம்பிரதாயங்களென்ன சலனந்தானே.

---

**791.** உடம்பின் சித்தங்களைக் கடப்பதற்கு ஒரே வழி இதுதான் பைங் கூழைக்கடக்கும் உபாயம் என்பதும் இதுவே.

**792.** இன்னும் ஏதேதோ உத்திகளைப் பேசியுள்ளார்கள். வானத்திலுள்ள நட்சத்திரங்கள் போல அவை மின்னத் தொடங்கின. குருமார்கள் எத்தனை உயரம் ஏறினார்கள் என்பது ஒருபுறமிருக்க சம்பிரதாயங்கள் பல்கின.

793. சலனந்தான் நெஞ்சதனிற் பள்ளத்தன்னில்
தானாடும் நெஞ்சிலுயிர் பிராணன்சுற்றும்
சலனந்தான் நெஞ்சுபள்ளம் சுற்றுந்தானே
தானேறில் தொண்டைசுற்றிப் பேசுமப்பா
பலனந்தான் பங்குதொட்டு மேலேயேறி
தானந்தப் புருவமத்தி நிற்குமாகில்
சலனந்தான் கும்பிடுமே யோகஞ்செய்யும்
தானேறி நெற்றிவழி யுச்சிமுட்டே.

794. உச்சிமுட்டி வாசிஉயிர் சீவன்தானும்
உயிரி'ருந்து வட்டமிட்டு ஓடிச்சுற்றும்
நச்சியதைப் பார்த்தாக்கால் ஞானமாகும்
நான்சொன்ன வாசிஉயிர் பிடறிவந்தால்
கச்சியந்த வாதபித்த சிலேத்மநீரை
கால்வாசி வாங்காது பித்தம்ஓங்கும்
மெச்சியிந்தப் பித்தமொடு பிராணன்ரெண்டும்
மேன்மக்கள் கூடினாப்போல் சேருந்தானே.

---

793. சலனமாக இருந்தபிறகு சலனமான ஒரு யோகமாசிச் சலனமே மேலே ஏறிச் சென்று சலனமே புருவமத்தியில் இயங்கிச் சலனமே யோகமாயிற்று.

794. உச்சியிலே போய் முட்டிஉயிர் விட்டுவிடும்; ஓடிச் சுற்றும்; அதைப்பார்க்கக் கற்று விட்டால் ஞானம் கூடும்; பிறகு பித்தம் ஓங்கும்; அதை உயிரோடு ஒடுக்குதல் யோகமாகும்.

795. சேருமே சேர்ந்ததுவுங் கீழிறங்கில்
திரிமூர்த்தி யானாது மரணமாவார்
வாருமே உச்சியிலே நிற்கவேணும்
வாய்கொண்டு பேசினாப்போலுச்சிசொல்லும்
கோனுமே நடுநாமப் பாதைமார்க்கம்
கூர்ந்துபார் புருவமத்தி மூக்குநேரே
தோறுமே யவ்விடத்தி லொளியோகாணும்
தேய்வதற்குப் பொட்டுநாம மிட்டார்தானே.

796. தானேதா னிட்டாரே காலைமாலை
தானறிந்து பிறர்சத்தால் கேளாமுன்னே
வானேதான் மனமாகி ஆசனங்கள்
மனம்உடலு மிணங்கியதே ஆசனங்கள்
நானேதான் கண்டுணர்ந்தேன் வெகுநாள்சென்று
நாட்டிலே தானிருந்தேன் மலை யோசெல்வேன்
கோனேதா னாவதற்குத் தேறுதற்கும்
குருவாக நான்தெளியத் தேறினேன்.

---

795. மேலே ஏறியது கீழிறங்கினால் மரணமாகும் அது உச்சியிலே நிற்க வேண்டும். ஒளியை அங்கே பார்க்கலாம்.

796. காலையிலும் மாலையிலும் தன்னறிவோடு இதைச் செய்ய வேண்டும் என்பது கூறித் தாம் இதைச் செய்து இந்த மெய்யுணர்வைத் தமது சொந்த அனுபவமாகப் பெற்று குருமேன்மையை அடைந்தமை கூறுகிறார்.

## சாதனம் 22-ம் ஆண்டு தெய்வங்கண்டது

797. தேறினே னிரண்டுபத்து ரெண்டுஆண்டு
தெய்வத்தை நான்சேரக் காத்திருந்தேன்
ஆறினே னென்மனதைச் சாந்திபண்ணி
அங்குஷ்ட அகத்தியரை நோக்கிநின்றேன்
கூறினார் குன்மவலி தெஷணாயன்
குடுகுடு கஞ்சாலின் சத்தம்போல
மாறினா லென்காதிற் சத்தங்கேட்க
வெள்ளாள மேன்கொண்டு வந்தார்முன்னே.

798. இருவென்றே னதுகேட்டு இருந்தார்முன்னே
இறைஉடலில் விட்டவருன் உயிரைத்தானே
பொரளென்ற அருந்தவசன் முடிமேல்நின்று
பூரித்துப் பொங்கியதோர் இடம்போல
மருவொன்று மில்லாத அரளே ஆன்மா
வாசிவலு சித்திவலு வென்னகைச் சேர்த்த
பொளொன்றும் நானறியாக் காலந்தன்னிற்
பொய்யுடலு மெய்யாகப் புதுமையாச்சே.

---

797. இருபத்திரண்டு ஆண்டுகள் யோகத்தவம் இயற்றி மனத்தை அடக்கிய தமது வரலாறு கூறுகிறார் பிறகு அகத்தியரை அழைத்ததும் அவர் வரவும் கூறுகிறார்.

798. அகத்தியர் செய்த அரிய செயலைச் சொல்லி பொய்யுடன் எப்படி மெய்யாகிப் புதுமை பெற்றது என்று கூறுகிறார்.

799. புதுமையே தென்றாக்கால் கலமில்லை
பொரிபுலனு மனஅறிவும் பொங்கிவெம்பி
புதுமையெனத் தேய்ந்தலுத்துச் சுகமேபெற்றேன்
புலாஉயில் மெய்யொளியோ பொருந்துகின்றேன்
புதுமையென்ற ஆச்சரியங் கண்டுகொண்டேன்
புரமூன்றை யெரித்தவரைக் கண்டதாலே
புதுமையென நானிருந்தேன் நெத்திக்கண்ணால்
போனது வந்தது வராதுங் கண்டேனே.

800. கண்டேனே வசிஷ்டருமிப் படியேதானே
கண்ணெதிரே நின்றாரே உடலினோடு
தண்டேனே அருந்ததியுங் கூடநின்றாள்
சரஸ்பதியும் வந்தாளே பிரமனோடு
மொண்டேனே அவர்கொடுக்க வாங்கியுண்டேன
மோரைகை யுள்ளவரை யிருவருந்தான
அண்டேனே வந்துகண்டு நானுங்கண்டு
அவர்சோடி பார்த்திருந்தே னருமையாச்சே.

---

799. புதுமை என்று நான் சொல்வதற்குக் காரணம் அந்தமாறுதலின் பொலிவு புலால் உடம்பில் மெய்யொளி புகுந்தது.

800. கண்டேன் இந்த அனுபவம். வசிட்டரும் அருந்ததியோடு கண்முன்னே நின்றார். பிரமன் சரஸ்வதி யோடு நின்றான் அவர் கொடுக்க நான் உண்டேன் அந்த இருமுது குர்வர் காட்சி எத்தகைய அருமையான காட்சி.

801. ஆச்சப்பா அருந்ததியும் பிள்ளைபெள்ளாள்
அச்சோடி சரஸ்வதியுந் தனியேநின்றாள்
மூச்சப்பா தானறிந்தே னிவரைக்கண்டேன்
முன்னிருந்தும் பேசார்கள் கண்டுகொண்டேன்
கூச்சப்பா யில்லாதான் குலக்கொழுந்து
குருவாகி நிற்பவளே பெண்ணும்மானாள்
ஏச்சப்பா வென்றுசொல்லிக் கழித்திடாதே
என்னம்மை பேர்சொன்னேன் பதனம்பண்ணே.

802. என்னம்மை பேர்சொன்னேன் ஊரேசொன்னேன்
இருக்குமிடம் ஆச்சிரமம் வசிஷ்டர்காசி
உன்னம்மை யென்னம்மை ஒன்னேயானால்
ஒளியம்மை நாம்மம்மை உடலின்சோதி
என்னம்மை யிக்கூடு காயமட்டே
எழுந்தோடிப போகும் நாள் ஓடிப்போதும்
உன்றன்மை வாய்த்தாலே ஒளியிருக்கும்
உடல்தம்மைக் கண்டாக்கால் காயசித்தே

---

801. தமது பூர்வம் உணர்த்தியவாறு இந்தப்பாடலும் சொற்பிறட்சியும் மயக்கமும் காண்கிறோம்.

802. உடலில் என்றென்றும் சடம் மெய்யாகத் துணை நிற்கும் ஒளியம்மையைப்பாடி அந்த ஒளியே காய சித்தி வழியாமாறு உணர்த்துகிறார்.

## காய சித்தி அருள்

803. காயசித்தி கற்பஉட லழியாமார்க்கம்
காட்டுகிறேன் மூன்றறையாங் கோடிகண்ணால்
தூயசித்தி கண்டார்கள் லேசாய்தானே
சொல்லாமல் விட்டுவிட்டார் துணிவில்லாமல்
போய்சத்தி நின்றார்கள் பொரியினாலே
பொங்குசத்தி வல்லபத்தால் மூழ்கினார்கள்
நீசத்தி கண்டுகொண்டாற் காணலாகும்
நேர்நில்லு மனங்குவிந்து நேரேபாரே.

804. பாரப்பா கண்கூசும் பதைக்கும் நெஞ்சும்
பளீரென்று மின்னலொளி பார்நீமுன்னே
ஆரப்பா சொல்வார்கள் வளிதான்சொல்லும்
ஆச்சரியங் காயசித்தி யருளுந்தானே
பேரப்பா சொல்லாதோ யெதிரேசொல்லும்
பின்னுமே முறையோடே பெருமையெல்லாம்
ஊரப்பா உளமிருந்து வெளியே சொல்லும்
உற்றுப்பார் கண்டதெல்லாம் பெருமைதானே.

---

803. காயசித்தி உபாயத்தைச் சொல்லாமல் விட்டார்கள் நான் அதைச் சொல்கிறேன்.

804. பயிற்சினால் உதித்தெழுகின்ற அந்த ஒளியைக் கூர்ந்துபார். அது எல்லாம் சொல்லும். நேருக்கு நேராக அதைப்பார்.

805. பெருமையே யெதிர்நின்று வெளியேசொல்லும்
பிசகாது நின்றிடலாம் பேரெபேரு
வறுமையே தாராது யோகம்யோகம்
வாய்த்தாலே போகாது வறுமையென்ன
குருவையே நேசித்தால் வறுமையேது
குருசொல்லை நினைந்தாலே பெருமையாகும்
திருவையே நோக்கியவர் உளமேகட்டி
தீயொளியைக் காணார்கள் செபமில்லை.

806. இல்லாரே வாழ்விந்த யோகம்விட்டார்
இல்லறத்தி லிருந்தாரே இதனைப்பார்ப்பார்
வல்லாரே யவர்களுக்குக் குருவேகிட்டும்
வசனித்த சாஸ்திரமும் பொருளேகிட்டும்
நெல்லாரே திறப்பனபோல் துறந்திறந்தார்
நீடித்து வாழ்ந்தாலும் அருளேதூரம்
சொல்லாரே வாய்கட்டிற் துறவுமாகார்
தூண்டினதோர் விரல்சொற்க மானாற்போலே.

---

805. எதிரே நிற்கிற அந்த ஒளியை அசையாமல் இருந்து பார்த்துப்பயிற்சி செய். எந்தவிதமான துயரமும் தராது. குருநாதனை நினைவாய்க்கொண்டு பயிற்சியில் முன்னேறு.

806. துறவிகள் பலர் இந்த யோகத்தினைக் கை விட்டார்கள். இல்லறத்தில் அருந்தவர்கள் இந்தப் பயிற்சியில் ஈடுபட்டுப் பயன் அடைந்தார்கள்.

807. போலவே பொய்க்குருவு மதுபோற்பிள்ளை
புளுக்கச்சி யாளுக்குப் புளுக்கைபோல
சாலவே வேடகுரு மனதைக்காணார்
தன்னிலையைக் காண்பதற்கு குருவோசீஷர்
ஏலவே இவ்விருவர் மனதைக்காணார்
ஏர்போலே தானிழுத்துப் பரம்படிப்பார்
வாலவே மன்மதனா லிருவர்கேசம்
வாய்கொண்டு மனமில்லார் அறிவில்லாரே.

808. அறிவில்லார் கூட்டமிந்தக் குருநாம்கூடி
அறிவுசித்து மனமழிந்து பெற்றலானும்
சொரிவில்லாச் சுரணையற்ற மாடுபோல
சுரணையுள்ள மாடுடனே சோடிபோல
நெறியில்லாக் குரு சீஷன் சோடிசேர்ந்து
நீண்தரை யேறுகின்ற யேற்றம்போல
கறியில்லாத் தோலெலும்பு இறைச்சிகண்டு
கண்மூடித் தின்னுகின்ற சனங்கள்போலே

---

807. பொய்யான ஆசிரியனைக் கொண்டு பயிலுபவர்கள் எங்ஙனம் கடைத்தேறுவார்கள். வேடகுரு மனம் என்ற நுட்பத்தை அறிந்திடுவாரோ இல்லை.

808. அறிவில்லாத இந்த ஆசிரிய மாணவ உறவினால் என்ன பயன்? மாமிசச் சத்தில்லாத வெறும் எலும்பைக்கடித்துத் தின்னுகிற நாய் போலவேதான் இவர்கள் நிலையும்.

809. அணங்கனவன் வேசரிபோல் உறுமிக்கத்திக்
தாரியது பூனைகண்டு நொங்கலேபோல்
பிணங்கனவன் யானைகண்ட சிரமம்போல
பெருஞ்சீரல் நாவெடுத்துப் பெருமையோதி
மணங்கொள்பூ வண்டடுத்த வாறுபோல
மானிடர்கள் தன்னிடம் மயங்குவார்கள்
குணங்கொள்ள வேணுமென்று குருவைத்தேடிக்
குருசீஷன் தேடினது வாதுயேனோ.

810. ஏனென்றா லிரட்டித்த மனமிரண்டு
இருவரடல் ரெண்டாச்சு ஆகநாலு
ஊனென்றா லைம்பூதம் யீரைந்தோடு
உற்றகரு விகுலங்கள் யெண்ணிப்பார்த்தால்
ஆனென்றா லிருவாகம் உடலினோடு
ஆமிந்தக் கருவிகளும் ஒன்றுசேர
நானென்றால் வந்துவிடும் லேசாய்த்தோஷம்
நாம்கூடக் கருவிகளும் கூடாப்பேதத்தே.

---

809. இதுவுமது.

810. இந்த இருவரும் கூடினால் போதுமா? வேடகுருவும் மூளையற்ற சீடனும் சேர்ந்தாலும் உடல் உறுப்புக்கள் ஒன்றுசேர்ந்து ஒளியுலகில் தொழில் செய்தால் அல்லவா கடைத்தேறமுடியும்.

811. பேதமே யெத்தனையோ யெண்ணிலக்கம்
பெருந்தொகையோ கோடியிலே பெரியபாபம்
பாதமே தேடினவர் பேதங்கோடி
பக்குவர்கள் கண்டதனைப் பரிசோதித்து
நாதமே கேட்பதற்கு ஒளியைவேண்டி
நாதனே யானகுரு வொளியைக்கண்டு
நாமே போகாமல் நிலையிற்கண்டு
காலங்கி கண்டுகொள்வான் தன்னுட்டானே.

812. தன்னுள்ளே காணாதான் குருவைக் கேட்பான்
தன்னையே மறந்தவனே குருவாமென்பான்
மண்ணிலே மாந்தரிலே குருவாமென்பான்
மறைவேதம் நாமென்பான் பொருளேதென்பான்
என்னுள்ளே தானிருக்கு வாங்குமென்பான்
என்மனயே விட்டுவிடில் காணீரென்பான்
நின்னுள்ளே காட்டுகிற னென்று சொல்வான்
நிசங்காண மாட்டாதான் நிசங்காணானே.

---

811. நாதனே நிலை பெற்று குரு அங்கிங்கு செல்ல மாட்டான் ஒளியை உணர்த்துவான். ஒளி கண்டு ஒலி கேட்டு முன்னேறச் செய்வான்.

812. இந்த வேட குரு வார்த்தையிலே சொல்வானே அல்லாமல் காட்ட முடியாதான் அவன் எனக்குள்ளே இருக்கிறது. வாங்கிக் கொள் என்பான். என்னை விட்டுவிட்டால் நீ காணமுடியாது என்றும் கூறுவான்.

813. காணாத கத்தபத்தின் குரலைக்கேட்டு
கண்தெரியாச் சீஷனுமே கருத்தில்லானாம்
நானானே சோடியவன் கூடக்கூடி
நாமிரண்டு பேரும்ஒன்றே யென்றுஓடி
காணானே வெகுதூரம் சென்றுநாடி
கல்மனதைக் கொண்டல்லோ கவலைகூடி
ஓணானே மேலிருந்து தலையசைக்க
உயரேறிப் பதுங்கிவிடும் உவமையாமே.

814. உவமையென்ன ஓர்பித்தன் பொருளைநாடி
ஊர்விட்டு வனம்பிகுந்து ஓணான்கண்டான்
அவகையொடு நின்றிருந்த மரத்தின்மேலே
அசையாகொம்பி லோர்நுனியிற் படுத்திருந்த
இலசையது இவன் சத்தங் கேட்டகேது
இருந்தகொம்பிற் படுத்திருந்து யெழுந்துட்கார்ந்து
தாவந்தந் தீர்வதற்குக் கேட்கிறானே.

---

813. காணாத கழுதையின் குரலைக் கேட்பது ஓணானை மேலிருந்து தலையசைக்கக் கண்டு நெருங்க அது ஓடிப்பதுங்குவது ஆகிய பயனற்ற செயல்களைப்போல இந்தக் குரு சீட உறவு முடியும்.

இந்தப் பாடலிலும் சொற்பிறழ்ச்சியும் மயக்கமும் உள்ளன.

814. மரத்தில் நிற்கும் ஓணானைக் கண்டு மோந்த கதையை விரிவாகச் சொல்கின்றன இந்தப் பாட்டும் இதையடுத்த பாடல்களும்.

815. கேட்பானே நீயிந்தக் காட்டிற்தானே
னிளகொம்பி லேயிருந்த சினேகத்தோனே
வாழ்பவனே யென்றைக்குக் கெதிநீதானே
வாழ்விக்க வந்தவன்போ லெதிரேநின்றாய்
தாழ்பாளைப் பூட்டிருக்கும் பொருளைத்தேடி
தானிங்கு யான்வந்தே நீயேசொல்லு
கேட்பானைக் கண்ணெதிரிற் கட்டைகொம்பில்
குடியிருக்கும் ஓணானுந் தலையசைத்தே.

816. அசைத்ததனைக் கண்டிந்தப் பித்தன்ஓணான்
அவ்விருவர் சமவாதம் சொல்லிசைக்க
இசைத்தபதி லொன்றுக்கொ டிவனசைக்க
இப்படியே யதுவசைக்க எய்தினோரும்
பகைத்தன் நீர்போல ஒன்றுக்கொன்று
பாநித நீர்ஓட்டும் பான்மையானார்
விசைத்தபடி தலையசைக்க ஓணானிட்ட
மெய்குலுக்கு அறிந்தவன்போல் விரட்டினானே.

---

815. ஓணானோடு பேசி உறவு கொள்கிறான். மறைந்துள்ள புதை பொருளைத்தேடி வந்ததாகக் கூறுகிறான் ஓணான் தலையை அசைக்கிறது.

816. அசைந்ததைப் புரிந்துகொண்டவன்போல் புதையலைத் தேடி கல்லை உருட்டுகிறான். ஓணானைப் புரிந்துகொண்டவன்போல் ஒன்றுக்கொன்று ஏதோ பேசிப் பொருளைத் தேடும் முயற்சியில் ஈடுபடுகிறான்.

817. விரட்டினான் பின்தொடர்ந்து ஓணான்நின்ற
விடமதிலே குறியிடத்தே தோண்டிப்பாத்தான்
அரட்டினா னென்றுயர்ந்த ஓணான்ஓட
அவ்விடத்தில் நீயிருவென் றருகே சென்றான்
உருட்டினான் கல்லுருளக் கல்லெறிந்து
உரண்டகல் நிற்குமுன்னே தடுத்துவிட்டான்
மருட்டினான் கண்டவந்த விடத்திற்தானே
வாயாலே கிணறுவெட்டும் வாறுபோலே.

818. போலவே யவ்விடத்திற் தோண்டத்தானே
பொய்யிதுவென் றெண்ணாதான் புரைபோனானை
சாலவே பெரிதென்று வாழ்ந்தாப்போலே
தன்குரு சங்கர்ப்பம் சீஷன்பெற்று
ஏலவே யான்கண்ட கெதிதானென்று
எண்ணியெண்ணி நைந்துமனம் அறிவிழந்தே
காலமே சூரியனுக் கெதிரேநின்று
தங்குதல்போ லானாரே கதியிழந்தே.

---

817. ஓணானைப் பின் தொடர்ந்து சென்று அது இசைத்த இடத்தில் கல்லை உருட்டிக் கிணறு தோண்டுகிறான்.

818. இது வெறும் ஏமாற்று என்று உணராமல் தோண்டுகிறான் அந்த இடத்திலே, கடைசியிலே நொந்து மனவேதனை அடைகிறான்.

819. இழந்தார்கள் குருவோடு சீஷன்தானும்
இவரிருவர் பெற்றபல னிதுவேதானே
பழந்தானே பாலிருக்க நரகில் விழுந்து
பாதைவழி தப்பினவர் பள்ளம்வீழ்ந்த
கிழந்தானே வாலிபத்தை யிழந்தாப்போலே
கிளிபூனை கைமாறு கிட்டலேபோல்
உளந்தானே கபநடுவில் யிருகிழுடி
உன்மதர் பிசாசர்குணம் கிருக்கனாவாரே.

820. கிருக்கானார் கதியினருட் சுகமேகாணார்
கேள்மக்கா ளருள்பெற்றால் உயிர்க்குராசா
உருக்காணா குடலுயிரும் வளருந்தேயா
ஊகோகோ வாய்ச்சொல்லு மூர்த்திபாசை
திருக்காணார் திருவானார்ஒளியினுள்ளார்
சென்மாந் திரபாவத்தின் வினையைவென்றார்
நருக்காணார் மனங்கண்டு உடலேகொண்டார்
நாடிநரம் பத்தனையுஞ் சித்திதானே.

---

819. குருவும் சீடனும் பெற்ற பலன் இவ்வாறுதான் பழம் பாலிருந்தும் நரகில் விழுவதுபோலவும் பாதை தப்பிப்பள்ளத்தில் விழுவதுபோலவும் கிளி பூனை இரண்டும் உறவு கொண்டதுபோலவும் உள்ளம் கபத்திலே சிக்கி வீணானது.

820. மக்களே கேளுங்கள். அருள் பெற்றவிட்டால் உடலும் உயிரும் தேயாமல் வளரும் பிறவி வினையை வென்றுவிடலாம். மனத்தைப்பார்த்து உடம்பைக் கொள்ளுதல் என்னும் பேறு கிட்டும்.

821. சித்தியே நாடிநரம் பொன்றாலொன்று
சேர்விக்கு முத்திசித்தி சேரவைக்கும்
முத்தியே கோடிவிதம் நரம்புபோல
முதுகுதண்ட முள்ளெலும்பு கோணல்போல
அத்தியே ஆள்ளீ அகலம்போல
அங்கத்தின் குறிபோல அமைந்தநாடி
வைத்தியே தானடையச் சிக்கறுத்து
மேல்வலத்தைக் கழித்தாக்கால் உடல்மோச்சமாமே.

822. மோச்சமே நரனமலப் பாண்டந்தன்னில்
மோட்ச மென்ற தனையறிந்து மலத்தைநீக்கு
மோச்சமே வலம்நீங்கச் சித்திதோனும்
முன்வாசி பாயாது வாசிமூச்சு
மோச்சமே மூச்சாகு மூலத்தண்டல்
மூலமதி லேயிருந்து முன்கால்பாயும்
மோச்சமே மொழிபறடு விரல்நிகக்கண்
முட்டிநின்று உள்ளங்கால் சுற்றிஆடும்.

---

821. உடம்பினை வசமாக்குதலும் உள்ளொளி பெருக்குதற்குரிய உபாயமும் கூறியவாறு.

822. மோச்சமாகிய சீவன்முத்தி நிலை இதுபோலாகும் மூச்சுப் பயிற்சியே மோட்சம் கூட்டுவிக்கும்.

823. ஆடுமே வாசிழுச் சாடல்தானே
அந்தரங்கம் பின்னேறி உச்சியேறும்
ஓடுமே யிப்படியே உருண்டுருண்டு
உள்ளங்கால் உச்சிமுதல் சுத்திபண்ணும்
பாடுமே உள்ளிதயம் நடனஞ்செய்யும்
பாம்புபோற் சுருண்டுவளை காடுமூலம்
கூடுமே பெருமொழியாம் முழங்கால்மீது
கூத்தாடு மிருபுறமும் எலும்பினுள்ளே.

824. எலும்பினுள்ளே ஓடிஉள்ளங் காலைத்தொட்டு
எத்திசையும் பூணும்உயி ரெல்லாஞ்சாரும்
எலும்பினுள்ளே ஓடியந்தப் பாதைகூடி
எவ்விடமுந் தானேறி உறைந்துபோகும்
எலும்பினுள்ளே உயிரமைந்து தசையைச்சேர்ந்து
ஏகாமல் நின்றுவிடும் ஏகில்ஏதும்
எலும்புஓடல் தசைநரம்பு யிறுகிப்போகும்
ஏகவே தானோக்க மிதையுங்கானே.

---

823. மூலக் கனல் படம் எடுத்தாடும் பாம்பைப்போல சுருண்டு விளையாடும் உள்ளங்காலிலிருந்து உச்சிவரை தூய்மைப்படுத்தும்.

824. எலும்புக்குள்ளே உயிர் ஒட்டித் தசையைச் சேர்த்துப் பசைநரம்பு இறுகிப் போகும்.

825. காணுமே கண்ணெதிரில் மறைந்தரூபம்
காயசித்தி யுடல்காணும் கெவுணந்தோறும்
நாணுமே உள்ளிருக்கும் எமனும்ஓடும்
நாணுங்காண் வஞ்சனையும் பில்லிசூதும்
தோணுமே கண்ணெதிர்பட் டாலேமாளும்
ாயபுத்தி சந்தேசம் விட்டாப்போலே
ஈணுமே வெளியதனி லிருந்ததெல்லாம்
என்னிடத்தே தோன்றுவி மறைந்தால்மாளே.

826. மாழுமே திரும்பிப் பிறந்தநக்கா
வையகத்தின் வெளியெல்லாம் வாங்கிவைக்கும்
கோழுமே வுருஞான முதையமானால்
குருவாதும் பரவெளியில் ஞானிசேரில்
தாழுமே யோக கமலம் யோகமாழும்
சந்ததிகள் சேராது தானேநிற்கும்
ஆழுமே பொய்பிறட்டு அதற்குமேலே
ஆகாய வெளிகடந்த அறிவுள்ளோரே.

---

825. காயசித்தி கமனசித்தி முதலியன கிட்டும் உள்ளிருந்து இருள் அகலும் எமன் ஓடுவான் நில்லான் வஞ்சனை பில்லி சூனியங்கள் எல்லாம் பார்வையிலே நில்லாது ஏகும்.

826. ஆகாய வெளி ககந்த பேருருவின் ஆற்றல் ஆட்கொள்ளும் வானளாவிய அந்த ஆற்றலைப் பாடியவாறு.

827. அறிவுள்ளோர் பொய்யாதி யந்தங்காண்பார்
ஆச்சரிய மெய்யிருளில் ஆதியந்தம்
தெரிவல்லார் செகசால மனந்தாமுண்டு
சீவனத்தில் மெய்த்தொழில்க ளனந்தமுண்டு
நெறியுள்ளா ரதனாலே தெளிவதானார்
நிமிஷத்திற் கோடிவிளை யாடல்சித்து
பொரியுள்ளா ரதினாலே அதுவானார்கள்
பொய்வாக்கு மெய்யாகப் போகுந்தானே.

828. தானென்ற யிப்பதத்திற் சொல்வார்வாக்கு
தலைதெரித்துப் போகாதே சண்டிமாடே
நானென்ற பேய்பிடித்துத் திரிந்திடாதே
நமன்கோழை போக்காத நாரிமாடே
ஊனென்ற உடம்பினுக்கு யிரையைத்தானே
ஒருகோடி தனமிருந்து முட்காராமல்
ஆனென்ற மனமெடுத்து அலைச்சலுற்று
ஆதியந்தங் காணஓடு வார்கள்போலே.

---

827. பொய் மெய்யாகி விடாது. உண்மையான மெய்யுணர்வுள்ளோர் பொய்யர்களின் சக சாலங்களைக் கண்டு கொள்வார்கள் நிமிஷத்தில் கோடிச் சித்து விளையாட்டுகள்.

828. நான் என்ற ஆணவம் மிகுந்து கெட்டுப்போகாமல் இருக்க வேண்டிய அவசியத்தைக் கூறியவாறு.

829. ஓடுவார் போற்திரியும் உள்ளத்தோரே
உரைத்தபடி நிற்பீரோ ஏசுவீரோ
நாடுவார் தங்களையும் விரட்டுவீரோ
நமன்நானென் றெண்ணியே சொல்லுவீரோ
பாடுவார் சொற்போலப் பேசுவீரோ
பரிவாசி கண்டவளைக் காணுவீரோ
பாடுவார் போற்திரிபு மனதுள்ளோரை
வாயாகச்சொன் னால் பலிக்க வேணும்பாரே.

830. வேணுமே சொற்பித்தங் கொண்டமாரே
விளக்கமா ரோனைக்குப் பேருரேளோ
தோறறுமே சொல்லறிவு சொல்லின்சேதி
துகை யன்றாற் காணுமோ கெவுனிப்பாகும்
வீணுமோ நான்சொல்ல நாளேயில்லை
விதியில்லை யெங்களுக்கு முங்களுக்கும்
பேணுமோ சொற்சோர மறியாத்தோசி
பிரபலங்கள் பண்ணாமல் பிமாய்நில்லே.

---

829. ஓடித் திரிகிற உள்ளத்தீரே சொன்னதைப் புரிந்து கொண்டிரா அதன்படி நிற்பீர்களா? பரிவாசியாகிய யோகத்தைக் கண்டவர்களைத் தெரிந்துகொள்வீர்களா?

830. உங்களுக்கும் எங்களுக்கும் விதியில்லை தொந்தமாகுவதற்கு என்ற நிலையா? அல்லது நிலையாக நிற்பாயா?

831. நில்லிந்தப் பூஞான வொளியைக்கண்டு
நேர்நில்லு நெத்திமத்தி நீளக்கூத்து
புல்லிந்தப் புஷ்பவொளி பூரிக்கத்தான்
பூணாமல் விட்டுவிட்டால் குருவென்செய்வார்
நெல்லிந்தப் பூமியுள்ள வரையிற் பெய்யார்
நீள்கதிரை யறுப்பதுண்டோ நீரேபாரும்
மல்லிரிந்த மல்லகனாற் செட்டிவேசம்
வாய்த்ததாற் தந்திரசில ம்பம் வேணுந்தானே.

832. வேணுங்கான் சிலம்பமுது மூச்சாற்தானே
மெய் யைன்ன தந்திரமே மூச்சுவாலை
பூணுங்காண் மூச்சுவிடல் யேதுகாணும்
பொல்லப்பு ஆகாது புளுக்கை தீது
தோணுங்கா னடிக்கடியே விடாதுநீவிர்
துன்பமது செய்துவிடுஞ் சூதாடல்போல்
வீணுங்கா னுங்களுக்குச் சொன்னார்கேட்டார்
மெய்வலுவைத் தேடாத விருதாக்கூடே.

---

831. பற்றிக் கொள்ள வேண்டும். இந்தப் பூ ஞான வெளியைப் பற்றாமல் நீ விட்டுவிட்டால் அதற்குக் குரு என்ன செய்வார்? நெல் விதைக்காதவன் எப்படி அறுவடை செய்யமுடியும்.

832. மூக்கினால் சிலம்பம் ஆடிட வேண்டும் அது தெரியாமல் வீணாகப் போகிறவர்களா நீங்கள்? இந்த உடம்பு விரதாக் கூடில்லை இது புரிந்ததா?

833\. கூடமே கோபுரத்தி லெழுதிவைத்து
　　கொடுஉச்சி மூளையென மறைத்திருக்கும்
மாடமே ஆறிடுக்கும் கதிநெய்யரு
　　மக்களுக்கு வேண்டியல்லொ பொருளாங்கூடம்
ஆடவே அவ்வரையில் ஒளிதான்சோதி
　　அடைத்துவைத்து வெளிப்பூட்டைத் திறந்தால்நீரும்
ஓடமே யேறிக்கரை வந்தாற்போல
　　உன்னதமாய் வந்திடுவீர் ஏற்றிவைப்பேனே.

834\. ஏற்றிவைத்தா ரெத்தனைபேர் மயங்கும்போது
　　எங்குமுண்டு இங்குமுண்டு நமக்குமுண்டு
ஆற்றிவித்தா ரத்தனையுந் தெரிந்துவந்து
　　அப்போது தூண்டிவிட்டார் நெறிநின்றோர்க்கு
போற்றிவித்தா ரவர்பிரிந்து மக்கள்தேடி
　　போனவரைமீண்டவர்கள் நினைத்தாற்காண் பார்
ஏற்றிவித்த ஒத்தாசை பதிலொத்தாசை
　　எல்லாருஞ் செய்ததென்ன செருப்புமாறே.

---

833\. ஒளியை அடைத்து வைத்துள்ள ஒளிப்பூட்டைத் திறந்தவிட்டீரானால் ஓடம் ஏறிக் கரை சேர்வதுபோல் ஈடேறுவீர்.

834\. எத்தனை பேர் இந்த விளக்கை ஏற்றுவித்தவர்கள்? எத்தனை பேர் இதை ஏற்றிக்கொண்டவர்கள்?

835. மாருபார் செருப்புடையுஞ்ந தூத்தகாலி
மக்களுக்கே செய்ததென்ன விருதாவோசி
சாருபார் நீயிருந்து குடித்தால்யானும்
தம்பிபோற் படுத்திருந்து உண்டலாபம்
வேருபோற் தானிருக்க உலகஞாயம்
வேளாண்மைத் தொழிலாளி வினையமில்லார்
சாருபோலேயிவர்க்கு யெரிச்சல்நீக்கி
தன்னுடைய அன்னமதைப் பகுந்தீய்ந்தாரே.

836. ஈய்ந்தார்க ளதினாலே துன்பமற்று
இல்லறத்தி லிருந்தவர்போற் தவமே செய்தார்
ஒய்ந்தார்கள் மனக்கவலை யுடலின் தன்பம்
ஒட்டிவிடச் செய்தாரே தவமேயின்பம்
ஆய்ந்தாரே மோனமா யிருந்துகொண்டு
ஆகாய மிருப்பதுபோல் மனமேயானார்
வுய்ந்தாரே வாசிதனை யிழுத்துக்கொண்டு
உச்சரியா தேயிருந்து சிந்தைவோய்ந்தாரே.

---

835. போலிகளைச் சாடுகிறார் இந்தப் பாடலிலும் சொற்பிறழ்ச்சி காணுகிறது.

836. செய்யத்தெரியாமல் செய்கிற பயிற்சியின் தோல்வியைக் கூறி அது வீணாவதை விசனத்தோடு கூறியவாறு.

837. ஓய்ந்தார்கள் தன்னுடலின் நினைவின் துன்பம்
உள்ளமுது வெட்டவெளி நினைவாகாயம்
பாய்ந்தார்கள் மனவெளியில் ஆகாயத்தில்
பரிவாசி பூந்தெழுந்த பலனேதென்றால்
ஆய்ந்தார்கள் கண்டுகொண்ட அதிசயங்கள்
ஆறெண்ணிக் கணக்கிடுவா ரந்தஞாயம்
வியந்தார்கள் தாங்கண்ட பொருள்களெல்லாம்
மெய்யிலே உள்ளமதில் வெளியேசொல்லே.

838. சொல்லுகிற சொல்லதுவே னூலேசாஸ்திரம்
மகயெண்ணிக் காணாரே செய்யுள்வேதம்
வெல்லவே சொன்னாரே வேதபாதம்
விரித்தழுக வைத்தாரே விளைவாய்மோனம்
மெல்லவே அங்கிருந்து யெழுந்தஞானம்
மெலெழுதப் பாடினதேயோ கமாயம்
செல்லவே சொல்வதென் பாதைதானே
திருவருளுங் காணாதே யோகத்தையே.

---

837 மெய்யுணர்ந்தோர்கள் மன வெளியில் பாய்ந்தார்கள்வாசிக்குதிரையிலே ஏறிச் சென்ற பலன் என்னவென்றால் அந்த அதிசயங்களை யாரால் கணக்கிட்டு எண்ண முடியும் எண்ணிக்கையைக் கடந்த அதிசயங்கள் அவை.

838 சொல்வதே வேதம் சாஸ்திரம் மோனம் கூடுகின்ற விரைவு வழி இது.

839. தீத்தீதீ யென்றுசொன்னாற் சுடாதுதீயே
தீயாகுஞ் சொல்பிறந்தால் யோகமென்றால்
தீத்தீதீ யோகத்தீ மூலத்தீயே
செந்தீயோ வென்றாலே பஞ்சதீயே
தீத்தீதீ உள்ளத்து மூலத்தீயும்
சேர்ந்துவிட ஆளாகும் யோகத்தீயே
தீத்தீதீ சுட்டுவிடும் உடலாங்காட்டை
திருவருளே வெகுவாகும் யோகத்தாட்டே.

840. யோகத்தாட் டெப்படியென் றெண்ணிப்பாறீர்
ஊடுருவிப் பிளந்துவிடும் உடலுக்குஆதி
யோகத்தாட் டுடலுயிரைப் பருந்துகூராய்
ஊனுறக்க மின்பதுன்பம் பேரூர்மாற்றும்
யோகத்தாட் டதினாலே பித்தமீறும்
உன்னுடலம் வெகுபதனம் நினையாய்நில்லு
யோகத்தாட் டிற்பித்த வாதங்கோழை
உரமுடனே கக்கிவிடும் யோகச்சார்பே.

---

839. தீ என்று வார்த்தையளவில் சொல்லி விட்டால் போதுமா? சுட்டுவிடுமா சுடாதுதீயை மூட்டவேண்டும். ஆறு நிலைகளிலே ஆறு தீ கொளுத்த வேண்டும்.

840. யோகத்தால் வருகிற மேனி மாற்றங்களைக் கூறுகிறார் பித்தம் வாதம் கோழை ஆகிய மூன்றும் யோகத்திலே கக்கி வெளியேறிவிடும்.

## யோக முடிவு ஆண்டு 12

841. யோகச்சார் பெத்தனையே முடிவிற்தானே
யோகதடை நீர்சுழியும் கபாலங்காணும்
யோகமோ ராண்டுபனி ரெண்டுக்குள்ளே
ஒருமூன்று அய்ந்தெட்டு பத்துரெண்டில்
யோகமே சித்தியிது புண்யலாபம்
ஒவ்வொருவர் புண்யத்தைக் கொற்றவாறு
யோகமே யிப்படியே லேசேயாகும்
உடுயயில் சிபரத்தைக் காண்கோனுக்கே.

842. காண்கோர்க்கு யோகமது முடிந்தார்சாச்சி
கண்புருவத் திடைமத்தி உயிரேஆகும்
பூண்டோர்க்கு யிதன்மேலே ஞானநோக்கு
புருவமே நெறித்துவிட்டு நிமையைநோகி
காண்பாரே மூலதண்டு நாகுநேரே
சொல்நாவை விடடுண் அண்ணாக்குச்சியே.
..................................................................
..................................................................

---

841. பன்னிரெண்டாண்டுக்கு யோகம் பயில்வதன் விளைவுகூறி ஒரொருவர் புண்ணியத்துக் கேற்றவாறு விரைவில் கை கூடும் என்கிறார்.

842. புருவ நடுவில் பார்வை செலுத்தி முறையாக யோகம் பயில்வதைக் கூறியவர்.

843. உச்சியே நடுவாசல் பத்தாம்வாசல்
ஊடுரவ யமூலதண்டு நாக்கிமார்க்கம்
பச்சியே வாசிபரி தேசிகாசி
பறை மூச்சு ஆடிருமே பரத்தின்சூது
நச்சியே காலூன்று மூலமார்க்கம்
நடுநாடி உயிர்நாடி பிராணநாடி
மெச்சியே தான்நடனநீ திருக்கூத்தாடும்
விளம்பென்றாலாருரைப்பார் தானாய்க்கானே.

844. காணிந்த மூலபீச கோசநாடி
கண்வாய்மூக் காதோடு நவத்துவாரம்
தோணிந்த மூலதலம் ரெண்ரேவே
சொல்லிவைத்த மேலேழுங் கண்டப்பூட்டு
ஆணிந்த வல்ல வர்கள் தம்மைக்கண்டு
அண்ணாடி உடல்கண்டு உயிரேகண்டு
வீணிந்தக் காயதொழில் வெளியேதொண்டு
மேலென்ன உளத்தொண்டு பண்ணுவாயே.

---

843. நடு நாடி உயிர் நாடி பிராண நாடி என்கிற நிலையிலே ஆன்ம அற்றல் நடனமாடுகிறது.

844. உள்ளத் தொண்டு என்பது இதுதான் இதுவே மனத்தின் பணி என்னும் மகத்தான யோகமாகும்.

## உடற் கூறறிய

845. வாயென்ன வல்லபங்கள் உயிரைப் பார்ப்பீர்
மக்களே யானாக்காற் உயிரைக் காப்பீர்
தாயென்ன யிவ்வுடற்று உயிருதானே
தந்தையென்ன இவ்வுடற்கு மனதுதானே
சேயின்ன இவ்வுடற்கு தரமுங்காலே
திருவென்ன யிவ்வுடற்கு அறிவுமாகும்
நோயென்ன இவ்வுடற்கு வாதபித்தம்
நோய்கோழை யிவ்வுடற்கு யேமன்தானே

846. ஏமனே சங்குதொண்டை கரங்காலெல்லாம்
இடதுபுர முன்புரமும் விலாவைச்சுற்றி
காமனே கண்ணொளியி லிதுவேநின்று
காயவுடல் நாக்கின் மேல் உச்சிமட்டும்
தாமனே யிதுவொழிந்து வுருவாய்நின்று
சூட்சஉடல் மனஉருவே காரணங்கள்
நாமனே மேலறிவே யிதனிற்கூடில்
நாயகமே நாகரு நாயகத்தே.

---

845. இவ்வுடலுக்குத் தாய் என்பது உயிர்; தந்தை என்பது மனம்; சேய் என்பது காற்று; திரு என்பது அறிவு; நோய் என்பது வாதமும் பித்தமும்; எமன் எது தெரியுமோ? கோழை என்றும் சளி அல்லது சிலேத்துமம் என்றும் கூறப்படுவது. அருமையான செய்யுள் இது.

846. இந்த உடல் நிலையிலே மேலறிவு கூடி விட்டால் ஏற்படுகிற அமைப்பு மாற்றங்களைப் பாடியவாறு.

847. தேவனென்ன தெய்வமென்ன குருவுமென்ன
திகழ்வடிவம் வேதமென்ன வாக்குமந்திரம்
சாவமென நின்றோரு மவரைக் கண்டால்
தான்றைய யேமனுரு கலங்கிமாறும்
தீபமென வொளியடுக்க யிருளேபோமால்
செங்கனலாற் தூண்டிவிட நெற்றிக்கண்ணால்
கோபமெனப் பார்த்துவிடும் பிரமக்கண்ணால்
குருதண்டு குருநாடி உயிரேகாலே.

848. காலனென் யெமகாலன் காலகாலன்
கதவடைத்தும் உள்நுழைவான் பூட்டுபூட்டு
பாலனெனப் பாரானே நல்லோர்காணான்
பரமபதம் பெற்றாலுந் தொடவேபார்ப்பான்
ஏதுவே அண்ணாக்கு உச்சிவாசல்
ஏர்வாசல் துளையறிந்து யேறுட்கார்ந்து
காலவேல் உச்சியது யேறித்தள்ளி
காலகன்று வேல்கொண்டு காலன்பாரே.

---

847. தேவன் தெய்வம் குரு என்று நிற்பவரும் கலங்கும்படி ஆன்ம ஆற்றல் மேலெழுந்து நிற்கும் எமன் அருகில் வாராமல் ஓடிவிடுவான்.

848. எமன் உள்ளே நுழையப்பார்ப்பான் அவனை விரட்டுகிற முறை இது என்கிறார்.

849. பாரப்பா சென்னியில்தீர் காலனாகும்
பார்த்தறுத்தார் சென்னியில்நீர் பித்தந்தானே
வீரப்பா வலநீரே யிருப்பில்வாதம்
மெய்யதனில் நெஞ்சுதொண்டை வலாவலின் கக்கம்
தூரப்பா மூலதண்டு நாக்குமட்டும்
சொல்மொழியுஞ் சேத்துமந்தான் சமமாய்நின்றால்
காரப்பா நாசிவழி பிராணன் பாரு
கால்வாசி நேர்நடக்க நாக்குமூக்கே.

850. மூக்காலே ஓடுகலை நாசிவாசி
முன்னாக்கு வழிவந்து பேசும்மூச்சு
நாக்காலே சங்கதொண்டை வழியேவந்து
நடுமாவு இருபக்கம் விலாவில்நின்று
நோக்காலே தானிழுத்துச் சுழன்றவாய்வு
நொடிக்குநொடி மூக்குவழி பாய்ந்தசிட்டு
மூக்காலே போயந்த வாசிரூபம்
உள்முகமாய்த் திரும்பும்வகை யோகந்தானே.

---

849. உடம்பிலே வாதம் பித்தம் சிலேத்துமம் ஆகிய மூன்றின் நிலைகளைக் கூறியவாறு.

850. மூச்சு நடக்கிற முறையை எப்படி மாற்றினால் அது வாசி யோகமாகிறது என்பதைச் சொல்லியவாறு.

## யோகம் பெற்ற ஞானம்

851. யோகந்தா னிதுபெற்ற பின்னனேஙமுனம்
உற்றுவருஞ் சொலச் சொல்வாய் ஒளிகண்டேதான
யோகந்தான்சொல்லிவரும் ஒளிதான்சுத்தி
இதுபெற்ற பேரிதிவே ஞானமுத்தி
சோகந்தான் வாராது தானேநிற்கும்
சுகம்பெற்ற வாறல்லாற் துன்பமில்லை
நாகந்தான் தீண்டிவிட்ட நாகம்மாளா
நம்மறிவு தீண்டிவிட மாளாதுமனமே.

852. மாளாது உச்சியில்நின் றிருக்கும்பிராணன்
மனமாளா அறிவழிக்கா துடல்தான்நையா
தாழாது உடற்கருவி மெலிவுதோணா
சங்கற்பஞ் செய்யாது செய்தாச்சித்தி
வாழாது மாகருவி யடங்கிநிற்கும்
மனமாட்டநற் பொருளதோ உடல்தான்மாளம்
ஆழாது தேறிவிடக் கரையேயேற
ஆகுஞ்சனம் செய்யாதே அசைவைப்பாரே.

---

851. இந்த யோகம் கை வந்தபிறகு ஞானம் சித்திக்கும் வழி தான் குத்தி என்பது அது பெற்ற பேறே ஞானமுத்தி துன்பமில்லை நாளும் இன்பமே பாம்பு மாவைத் தீண்டிபாம்பு சாகுமா? சாகாது ஆகவே நம்முடைய அறிவைத்தீண்டுவதால் மனம் சாகாது.

852. மனம் மாறாது; அறிவு இழக்காது உடல் நலியாது மாகருவி அடங்கிநிற்றதும் மனம் மாண்டால் உடம்பும் மாளும் 'ஆகுஞ்சனம்' என்று யோகமுறைபயின்றால் இது விளங்கும்.

853. அசைவையே உடலதனில் நவத்துவாரம்
ஆடுகின்ற புத்தீசல் போலத்தானே
இசைவையே மனஉடலும் அதுபோலப்பா
இப்படியே ஆக்கையுள்ள புழுப்போல்வாசி
பிசைவையே மலக்கடலிற் புழுக்கள்பூர்க்கும்
பெருகுசித்தி கெடுத்துவிடும் மலமும்மூசி
தசைவையே புழக்குடலைச் சுத்திபண்ணித்
தன்னுடலு முயிர்மனமு மறிவைக்காணே.

854. காணப்பா யிதுநாலுங் கண்டோன்முத்தம்
கால்வாசி மொழிமொழியாய்க் கண்டோன்சித்தன்
நாணப்பா உடலுயிரும் பித்தாற்தோஷம்
நமனேது உடலுயிரும் வாதம்வந்தால்
வீணப்பா உடலுயிரும் பதிதானே
மேலறிவு யென்னசெய்யும் பித்தால்மாளம்
ஆணப்பா பெண்ணில்லா அரண்மனைக்கோ
ஆச்சரியம் யேதுகண்டு அழகேறாதே.

---

853. குடலைச் சுத்திசெய்யவேண்டியது மிகவும் முக்கியம் என்பதை வற்புறுத்துகிறார்.

854. பால் என்கிற காற்றின் வாசியாகிய யோகம் இது இதுவே உயிர் பிரியாதிருக்கும் உபாயம்.

855. ஏறாது வாசிவலு விலாக்காயம்
என்னசெய்யு மண்பாண்டம் யேதுக்காகும்
தேறாது உடல்வலுத்துப் பிராணன்குன்றில்
தெய்வஒளி காணரிது தேசத்தோர்க்கு
வாராது உடலுயிர்க்கு அறிவுதானே
மனமாண்டா லுடலுயிரு மறிவென்செய்யும்
கோறாது முத்திநெறி குருவென்செய்யும்
குருசொன்ன சாஸ்திரமு நெறியும்வீணே.

856. வீணல்லாற் கத்தினது பெரியோர்மார்க்கம்
வேதாந்தஞ் சித்தாந்தம் நாதாந்தங்கள்
ஊணல்லாற் பசியிரைக்கே வேதாந்தங்கள்
உரைத்தாரே வேதமென்று பரியாசங்கள்
ஆணல்லாற் பெண்களகத்தே புருஷமுத்தி
அகப்படுமே கைவசமே நினைந்தபோதே
பேணுதல் கைப்பொருளாற் சோதிகிட்டும்
பேய்பித்தர் சுவாமியெனத் தேடுவாரே.

---

855. வாசி வலிமையோடு இயற்றவேண்டும் அந்த வலு இல்லாத உடம்புக்குப் பலன் இல்லை குருதான் என்ன செய்யமுடியும்.

856. அப்படிப்பட்ட வலிமையற்றவர்களுக்கு இந்தக் கல்வி பயன்படாது இது வீணேயாகும்.

857. தேடுவார் கண்டதென்ன லெகுவிற்கிட்டா
தெருவிலே காசுக்கு வாங்கல்போலே
ஓடுவார் குருவிடத்தில் வாங்கல்யேலோ
உள்ளமதம் உள்ளமனம் உள்ளிற்தாலோ
நாடுவார் பாதமதைக் கட்டிக்கொள்வார்
நம்குருவே நீசா மாட்டாயென்பார்
வீடுவார் நீர்கண்ட மெமக்குக்காட்ட
மெய்க்குருவே நீர்கொடுமே துறவென்பாரே.

858. துறவென்பார் யிருவென்பார் தூரநிப்பார்
தூண்டுதற்குத் தன்னாலே கருவைகாணார்
பரமென்பார் தன்னுடலே நரகமென்பார்
பரிபாஷை காணாத பாவிமார்கள்
கரவென்பா ரென்னுடனே யிருவென்பார்கள்
கால்கொள்ளக் காலறியார் முக்கால்மொள்ள
திரமென்பார் அசடகுரு சந்தேகிப்பார்
தெளிந்தகுரு காணறியார் தேவாரம் போலே.

---

857. யோகம் என்பது ஏதோ தெருவில் விற்கிற பொருளா? அப்படி எண்ணி ஓடுகிறார்கள்.

858. தானே தன்னைத் தூண்டி நுட்பத்தைக் காண இயலாதவர்களின் பாடு சொல்லியவாறு.

859. தேவார மென்னகுரு மோனமாகும்
தெளிந்தகுரு சொல்வதுவே தேவாரங்கள்
நாவாரத் தான்மொழிந்த பாஷைதானும்
நன்குணர்ந்தா ரெல்லோரும் பத்தியாகும்
தாவார மில்லாதார் கோட்டைபோல
தாரித்திரம் லெட்சுமியுஞ் சோடிபோல
ஊவார நானெடுத்த யிந்தக்கூட்டில்
உதகநீர் வார்க்காமற் தாரைகேட்பாரே.

860. கேட்பார்கள் தனம்பொருளைக் கட்டிக்கொண்டு
கெஞ்சுதல்போற் கேளார்கள் கொடுத்தார்போல்
தாழ்வார்கள் சொல்மொழிக ளிதுதான்பாரு
சம்மதம்பொய் யொப்பந்தம் தாநீயென்பார்
வாழ்வாக ளவர்கொடுக்க வாங்கிக்கொள்வார்
வயற்பசியைத் தீர்த்தவருந் தொண்டுசெய்வார்
ஆழ்வார்க ளவர்களுக்குப் புத்திசொல்வார்
அய்யய்யோ அவர்பிழைக்கச் சொல்லுவோம்நாமே.

---

859. தெளிவுபெற்ற குருவின் சொல்லே உண்மையான தேவாரமாகும்.

860. தாழ்வான மக்கள் குருவிடம் எவ்வாறு நடந்து கொள்கிறார்கள் என்பதை வேதனையோடு பாடுகிறார்.

861. நாமேதா னுன்னோடு சேர்ந்தோரெல்லாம்
நாயகனைச் சேர்ந்தாப்போல் நாதன்கண்டு
ஆமேதானவர்கேட்டுப் பதிலுஞ்சொல்லி
ஆச்சரித்து அவர்வரத்தைக் கலந்துகொண்டு
ஊமேதான் போலிருந்து அயிக்கியஞ்செய்து
உச்சரித்த மந்திரமும் உயிருங்கண்டு
ஈமென்னும் உயிர்ச் சொல்லின் சீவன்கண்டு
எப்பொழுது மேயிருக்கும் பொருளைக்கண்டே.

862. கண்டவர்க ளுடன்கூடிக் கலந்துகொண்டு
தகைகாலிய புராணமெல்லாந் தெளிந்துகொண்டு
விண்டவர்க ளுடன்கூடா மெய்யினாலே
விவேகத்தைப் போற்றிஅனு சரித்துவரவே
கொண்டவர்கள் தன்னிடத்துக் குருவைநாடி
குருபத்திக் குறைவில்லாக் குருவைநாடி
தெண்டவர்கள் கைக்கொண்டு லேசாய்ப்பாடி
சிறுநரியும் புலிமுன்னே சீறினாப்போல்.

---

861. சற்குருவும் நற்குருவும் நற்சீடனும் சேர்வது நாயக நாயகி சேர்க்கைபோலாகும் அது நிலைபேறான உயிருறவாகும்.

862. அப்படியில்லாமல் கண்ட கண்ட குருமாரோடு கூடி வீணாவதன் தன்மை கூறுகிறார்.

863. சீறினாப் போலல்லோ சினந்தாருண்டு
சிறுபுலியும் பெருங்கொம்பும் மாட்டுக்கஞ்சா
ஊறினா லட்டையது முழுந்தானேறில்
உச்சாகங் கொண்டிடுமே காலைக்கண்டு
மாறினாற் திரும்பிவரத் திசையைக்காணா
வயிறெல்லாங் கால்முளைத்த தண்டின்பூச்சி
ஏறினாற் கீழ்த்தெரியும் மேலேகாணா
இவ்வீட்டை நடந்தாலுந் தூரந்தானே.

864. தூரமே யாகிவிடுஞ் சமீபந்தூரம்
துய்யமனு நீதிநெறி யறியாதார்க்குப்
பாரமே யாகிவிடும் வேதநூல்கள்
பக்குவமே யானாக்கால் முன்னூல் விள்ளும்
சாரமே பொருந்திவிடும் முத்திபாகம்
தனித்திருந்து பார்ப்பதற்குத் தானாய்நானும்
வீரமே தானெடுக்குங் குருவைக்காணும்
மெய்வேதத் துட்பொருளை விரைவாயாயும்.

---

863. நரியும் புலியும் சீறுவதுபோல் என்று கூறி சிறு புலி பெருங்கொம்பு மாட்டுக்கு அஞ்சாது என்கிறார் அட்டைப்பூச்சி உறிஞ்சுவது போன்றததையே.

864. வேத நூல்கள் கற்றால் பக்குவம் அடைபவர்களுக்குக் குருவின் அருள் விரைவில் கிட்டும் உடம்பாகிய இந்த வேதத்திற்குள் பொருள் விரைவில் பிடிபடும்.

865. ஆயுமே தானா அறிவால் விள்ளும்
அறிந்தோரைக் கேட்கவுமே அடங்கினாணி
ஓயுமே கருவிகளும் உலாவல்விட்டு
உற்சாகத் தனைவிட்டு உள்ளேதொட்டு
காயுமே மூலகனல் கருவியாலே
காதடைக்கும் வாயடைக்கும் நாசியோடா
பாயுமே கண்ணொளியும் உன்னேநோக்கும்
பார்வையுங் கட்டிவிடும் நீர்மேல்நோக்கே.

866. நோக்கியே பார்ப்பவர்களுக்கு நோய்கள்வந்தால்
நூறநானி வயித்தியத்தா லாகாவாகா
ஆக்கியே சமைத்திருக்க உண்ணார்போல
அப்பனே சாமமனயிற் சுகங்காணாமல்
நீக்கியே விட்டிடவே விடாதுகாணும்
நீங்காமற் தானிழுக்கும் நிறுத்தக்கூடா
போக்கியே விட்டவர்கள் நோயேசார்வார்
பொய்யோக மாகிவிடும் நிசங்காணாதே.

---

865. உடம்பின் கருவிகள் எவ்வாறு மாறும் என்னென்ன விளையும் என்பதைக் கூறுகிறார்.

866. சானையில் சுகம் காணாதவர்களின் நிலையை எப்படிச் சொல்வது சமைத்து வைத்திருந்தும் உண்ணாதவர்கள் இவர்கள், உண்மை காணாமல் வீணாவார்கள்.

867. காணாது கண்டிடவுங் கடினமெத்த
கற்பமிது அற்பமல்ல கடினவாழ்வு
தோணாது நோய்விலக்கிக் கவலைபோக்கித்
துன்பமணு வில்லாமல் நிற்பதற்கு
நாணாது ஓர்நிலையில் நிற்போர்க்கல்லால்
நாடிநிலை நில்லாது நயனம் நில்லா
வாணாளைத் தானொடுக்கி மனதைக்கட்டி
மண்ணுடலை அறிவுருத்த வருத்தந்தானே.

868. வருத்தமென்ன வெகுகடினம் யோகதுன்பம்
வாயாலே சொல்வதற்கோ நினைவிலாகா
பொருத்தமென்ன யோகவுடல் செனிக்கவேணும்
பூவுலகிற் புண்ணியனாய்ப் பிறக்கவேணும்
அருத்தமென்ன யிமையறிந்தாற் தன்னுட்தானே
ஆகாதோ விட்டகுறை யமைந்தால்தானே
நிருத்தமென்ன ஆடிடுமே வேண்டாதாடும்
நீர்சொல்ல யான்கேட்டே னினிச்சொலீரே.

---

867. நாணாமல் கூசாமல் ஒரே நிலையில் நிற்க வேண்டும் இல்லையென்றால் நாடி நிலை நிற்காது கண் நிற்காது துன்பந்தான்.

868. யோகப்பிசகினால் ஏற்படுகிற துன்பம் மிகவும் கடுமையானது நல்லயோகம் கிட்டுவதும் விட்ட குறையினால்தான்.

## சரிகை முதல் சாதன விபரம்

869. சொல்லுவேன் யோகதுன்பங் கடந்தப்பாலே
சூட்சமே ஞானபதஞ் சொல்லவொண்ணா
வெல்லுமே சரியையோடு கிரியையோகம்
மெய்வேர்க்கும் நிறங்கருக்கும் விழுங்கிவிக்கும்
அல்லுமே ராப்பகலும் வேலைவேலை
அசரீரி யெட்டாது யிந்தமூன்றும்
நில்லுமே யென்றுசொல்லித் தடுத்தாப்போல
நிசந்தெரியக் காணுமட்டு மூன்றுந்துன்பம்.

870. மூன்றுபதந் தனக்கடந்து நாலாம்பாகம்
முன்சென்மக் கூறறியும் மோட்சஞானம்
தோன்றுபதந் தனைமறக்கும் பித்தாதேபல
அழலிலகப் பட்டதோர் துரும்புபோல
ஈன்றமகள் தனையறியாப் பித்தன்போல
இச்சமைய மாடிவைக்கும் நாலாம்பாகம்
ஊன்றுபதந் தனில்நின்று பித்தம்போக்கி
உச்சரியே யெச்சரிக்கை ஆண்டுஒன்றே.

---

869. யோக துன்பத்தைத் தாண்ட வேண்டும். தாண்டி விட்டால் நுட்பமான ஞானபதம் இப்படி என்று சொல்லலொண்ணா இன்பம். அதுவரை சரியை கிரியை யோகம் மூன்றுமே துன்பமாகவே படும்.

870. இந்த மூன்று பதங்களையும் கடந்து ஞானம் சேரும் போது ஏதேதோ பித்து ஆட்டும். ஓர் ஆண்டு மிகவும் எச்சரிக்கை வேண்டும்.

871. ஆண்டோன்று கிருகிருப்பு மயங்கிடும்
அய்யய்யோ கடினமது இன்னம்மெத்த
கூண்டொன்று போட்டுவிடக் கூட்டுக்குள்ளே
கூத்தாடு மண்டைவலி குமரியோடும்
ஆண்டொன்று யிப்படியே விளையாட்டய்யா
அல்லோருங் குளிகையென்று அதனைச் சொன்னார்
வேண்டென்று சொன்னாரே யோகமேலோர்
மெய்க்கூடு கபாலகுகை விளையாட்டையா.

872. விளையாட்டுப் போலிருக்கும் ஞானமார்க்கம்
மெய்வாத பித்தச்சளி மாறுமட்டும்
சுரியாட்டீ மெத்தவுண்டு யெங்கள்வேலை
தரித்திர மேமிகுந்தால் சலமேபோல
கழியாட்டுக் காண்யதற்கு கடினங்கண்டோம்
கைகாலும் வாசிவர ஞானதேகம்
விழியாட்டு மெத்தவுண்டு மேலோர்ஞாயம்
விளம்பரிது தேட்பதென்ன விளங்குங்கண்டால்.

---

871. ஓர் ஆண்டும் கிருகிருப்பு மயக்கம் முதலிய துன்பங்கள் இருக்கும் மெய்க் கூட்டிலே கபால குகையின் விளையாட்டு.

872. வாயும் பித்தமும் சளியும் உடலிலே மாய்கிறவரை இப்படி இருக்கும் வாசி கை கூடும்போது ஞானதேகம் ஆகும் விழியிலே பல விளையாட்டுக்கள் நிகழும் சொல்ல முடியாத விளம்பரிய நிலை. அனுபவத்திலே பார்த்துக்கொள்ளலாம்.

873. கண்டாலே சொல்வதெல்லாம் கதிக்குள்தோணும்
கதிரவனார் கோடியொளி காணுங்காணும்
அண்டார்கள் சொல்லறியார் நூலேபாரார்
ஆனாலும் ஓர்கால மடுப்பார்வந்து
கொண்டார்கள் சொன்நூல் சுகமேகொஞ்சம்
கோடியென்று சொல்லிடலாம் தடைகள்தன்னை
விண்டார்கள் பாடுபட்டே துன்பந்தானே
வேதாந்த சித்தாந்த நாதாந்தந்தான்.

874. அந்தங்கள் போதாந்தங் கீதாந்தத்தை
அலறியே சொல்லிடுமே அருளேவாசியம்
மந்தங்கள் தானகற்றி முறைகள்சொல்லி
மருவுமே தன்னுடலும் அருளேவுள்ளில்
செந்தங்கள் தானிருத்திப் பதையாநெஞ்சம்
பதைக்குமெனி லருள்பதைப்பு சித்திதானே.
..............................................................
..................................................

---

873. சித்தி ஏற்படுவதற்குள் வருகிற தடைகள் கோடி என்று சொல்ல வேண்டும் சுகம் கொஞ்சம்தான் பாடுபட்டால் பிறகு அதைச் சொன்ன ஞானிகளின் துன்பமே வேதாந்த சித்தாந்த நாதாந்தங்களாகும்.

874. பொறுமையோடு இருந்து பற்பல துன்பங்களைக் கடந்துவிட்டால் பிறகு சித்திதான்.

## சித்தி முத்தி

875. சித்திதான் பெருமளவும் அருள்காண்மட்டும்
தேகவினை நையாது சிக்கொணாது
முத்திதா னிவ்வளவே பேதமேமுற்றே
முழுமுத்தி சொல்லுகிறே னதுக்குமேலே
சித்திதான் மேற்பொழியு மதனாறதானே
செம்படவன் மீன்பிடித்த லெகுவேபோல்
வெத்திதான் மனவாக்குக் காயம்ஆன்மா
னினந்தொன்று சேர்ந்தவர்க்கு சித்திமுத்தே.

876. சித்தி முத்தி நாநரம் பிருசித்தானே
தேனமுயிர் மலக்கசடும் நீங்கயப்பா
சத்திதா னுடலிருந்து ஆடிப்பாடும்
தன்மனதும் உடலுயிரும் ஒன்றுகூடும்
கத்தியே யாடாது கழிவாய்ச் சொல்லும்
கதிர்பெருகு மிருள்மறையும் கணக்கதாகும்
நத்தியே தானிருக்கிற பந்தம்வந்து
நரைமூப்பு மொப்பாக வர்த்தம்ணாடே.

---

875. சித்தி கிட்டும்மட்டும் உடம்பின் செயல் சகிக்க முடியாது துன்புறுத்தும் முத்தி இந்த அளவில் இருக்கிறது முழு முத்தி இதற்கு மேலே.

876. தன்மனதும் உடல் உயிரும் ஒன்று கூடும் கதிர்பெருகும் இருள் மாயும்.

## சித்தர் கேட்குதல்

885. கண்டீரே சனனமது பிறந்தாற்பின்னே
காலனுக்கு ஆளாக மாட்டாமார்க்கம்
கொண்டீரே வடகயிலை பொன்மேருள்ளோய்
குமரனுக்கு முன்பிறந்த குழந்தைக்காகா
விண்டீரே யெங்களுக்கு விளங்காஞாயம்
விளங்கயெடுத் துரைத்தவரே விமலர்ஞாயம்
கண்டீரே உம்மைப்போ லாதியந்தம்
கருக்குருவைச் சொல்லவில்லை யெங்களுக்கே.

## இந்நூலின் பேர்

886. எங்களுக்கே யோகமொடு ஞானம்வந்தால்
எங்கள்மனந் திரிகால வர்த்தமாகும்
உங்களுக்கு யோகமொடு ஞானசித்தி
ஊடுருவச் சொல்லிவைத்தேன் திரிகாலத்தை
தங்களுக்கு மெங்களுக்கும் உங்களுக்கும்
சாஸ்திரப்பேர் ஆதியந்தம் ஞானசூரியன்
உங்கள்மனந் திரிகால நெறியீதாகும்
உரைத்துவிட்டேன் சரிகைகிரியை யோகஞானம்.

---

885. உலகிலே பிறந்துவிட்டால் பிறகு எமனுக்கு ஆளாகாத வழியைச் சொன்னீர். உம்மைப்போன்று ஆதியந்தம் எந்தக் குருநாதனும் எங்களுக்குச் சொன்னதில்லை.

886. முனிவர் சொல்கிறார்; சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய நான்கும் சொல்லிவிட்டேன் உங்களுக்கு. இந்த நூலின் பெயர் ஞான சூரியன்.

## மனம் சித்தி உயிர் முத்தி

887. ஞானமா மதின்மேலே சித்திதானும்
நாடிநாம் பிருகிவிடும் கெவுனம் ஆகும்
வானமோ பாதநடை பூமியாகும்
வல்லபங்கள் மெத்தவுண்டு மனதுற்சாகம்
பானமோ கேட்டதெல்லாம் தானேசாரும்
பறைவாலை முன்னின்று தொண்டுசெய்வாள்
ஈனமோ யிவ்வுடலு முயிருந்தானே
எங்கள்மனஞ் சித்தியுயிர் முத்திதானே.

888. முத்திதான் பெற்றதிந்தக் காயக்கூட்டில்
முன்னின்று விளையாடுஞ் சித்தியேவல்
நத்தியே யெங்களுக்கே தொண்டுபண்ணு
நானென்று சொன்னாக்கா லடங்கிநிற்கும்
வெத்தியே யென்பொருளு மிதுதான்கையில்
வெகுநாளிற் கண்டெடுத்தேன் பாடுபட்டு
சித்தியே கண்டெடுக்க யெடுத்தபின்னே
செனப்பொழுது யான்தாங்க மாட்டாமற்தான்.

---

887. ஞானத்தினால் சித்தி வரும். கமனம் கைகூடும். வானம் நமக்குப் பூமிபோல் காலால் நடக்க இயலும். கேட்டதெல்லாம் தானே வந்துசேரும். வாலை முன்னின்று ஏவல் செய்வாள்.

888. பாடுபட்டுக் கண்டெடுத்த பலன்களைச் சொல்லியவாறு.

## ஞானவழி ஆண்டு 2

889. அத்தானு மச்சானுங் கூடிக்கூடி
அடிக்கடியே பரியாச மாகுமாபோல்
சித்தானும் யான்கூடிச் சேருமார்க்கம்
சிறுபிள்ளை நானறியாத் தோஷத்தாலே
முத்தானே யென்வசமே யாகுமட்டும்
முழுமோசம் போயினனே அறியாநானும்
பெத்தானைக் காணாதான் உத்தான்கண்டு
பேசுமொழி ஞானவழி ஆண்டுரெண்டே.

890. ரெண்டியே யோகமது பனிரெண்டுண்டே
நேர்வழியே ஞானவழி ஆண்டுரெண்டு
ஒண்டிலே நான்திரிந்து ஊரைச்சுற்றி
ஊமைமொழி பேசியெனை யாடினானே
மண்டிலே நானிருக்க யென்னைத்தூக்கி
வாலிவலஞ் சுற்றினதே மண்டையோடே
விண்டிலே நானிருந்து சகியாவாலை
விட்டகுறை வந்ததென்று தள்ளினாளே.

---

889. இரண்டு ஆண்டுகளில் ஞானம் கூடுகிற முறை சொன்னவாறு. அத்தானும் மைத்துனனும் கூடின்கூடி பரிகாசம் செய்து கொள்வதுபோன்ற அனுபவம் அது!

890. யோகவழி பன்னிரண்டு ஆண்டு. பிறகு ஞானம் இரண்டு ஆண்டு. தன்னைத் தூக்கிக் கடலைச் சுற்றிவந்து கதையைச் சொன்னவாறு.

891. தள்ளினாள் யான்பயந்து சுருங்கிநின்றேன்
தமரோடு வாழுகின்ற தன்மைபோல
அள்ளினா ளென்குணத்தை வாரியுண்டாள்
அப்பொருளிற் தன்குணத்தை யதனில்வைத்தாள்
கிள்ளினாள் நெஞ்சத்தை யடக்கிக்கொண்டாள்
கிழவியுருக் கொண்டனளே கிழவனாக்கி
தள்ளினா ளெந்தனைக்கை விட்டிடாமல்
சமுசாரி போலிருப்பா யென்றிட்டாளே.

892. என்றவுடன் நான்வணங்கி நின்றபின்பு
என்மேலே பிரியமுற்று எடுத்தணைத்து
நன்றாகச் சொல்லுகிறேன் கவனமாக
நானிலத்தில் நீயிருப்பா யென்றுநீயும்
குன்றாத யோகமது செய்வாயானால்
கூடுமே பிராணாய முடிந்துபோகும்
அன்றாடம் நீயெழுந்து காலைமாலை
அப்பனே யோகமதை முடிப்பாய்தானே.

---

891. வாலையின் விளையாட்டைக் கூறியவாறு. என்னைத் தள்ளினாள், நான் சுருங்கி நின்றேன். அள்ளினாள். என் குணத்தை வாரி உண்டாள். பரிமாற்றம் செய்தாள். என்னைக் கைவிடாமல் சம்சாரி போல் இருப்பாய் என்றாள்.

892. நான் வணங்கினேன். என்னை எடுத்து அணைத்தாள். "நாள்தோறும் இந்தப் பயிற்சியைச் செய்வாயாக" என்று ஆசீர்வாதம் தந்தாள்.

877. ஓடுமே திரிகால வர்த்தமானம்
ஊடுருவ நாடாது ஒளிபந்தத்தால்
காடுமே போயொழியும் யீனர்போல
கண்ணெதிரே நில்லாது திரிகாலங்கள்
பாடுமே பட்டுஅதைக் கண்டுகொண்டு
பையிருக்க நூல்நழுவப் பையில்லாதே
வாடுமே திரிகால ஞானமார்க்கம்
வாயிருக்க நானில்லா வாறுபோலே.

878. நாவில்லா ஊமைமொழி பேசல்போல
நன்குணர்ந்தார் பித்தமுது சேர்ந்தாப்போல
பூவில்லா நாருமுடிந்த வாறுபோலே
பூவையரின் கெற்பமில்லா வீடுபோல
பாவில்லா நூல்விளங்கும் நெசவுபோல
காவ வில்லா ஊரிருந்த சுகமேபோல
கண்திரி காலமது பந்தத்தாலே.

.......................................................

---

877. பந்தம் மேலிட்டால் காலச் செய்தி நில்லாது ஓடிவிடும் வாயிருந்தும் நாக்கு இணையாத கதை.

878. ஊமையின் பேச்சுப்போல அறிவுடையவனுக்கு பைத்தியம் பிடித்ததுபோல [illegible]வில்லாமல் முடிந்த நார்போல கருத்தரிக்காத பெண்ணின் வீடுபோல பாவில்லாத நூல் நெசவு போல சேணம் இல்லாத குதிரை ஏற்றம்போல காவல் இல்லாத ஊரைப்போல பந்தமானது முக்காலும் பயனில்லாமல் அழித்துவிடும்.

879. பந்தத்தா லேமறையுந் திரிகாலந்தான்
பதைப்புற்ற நெஞ்சத்தால் மறைத்துக்கொள்ளும்
நெந்தத்தால் நொந்தநெஞ்சம் மனமேயாகும்
நோகாத மனமலதோ பதைப்பில்லாதே
அந்தத்தாலே அருளும் திரிகாலத்தை
ஆர்சொல்வார் குருவருளால் அருளைத்தானே
சந்தத்தால் மலர்ந்த வாசற்கூடு
கண்ணைஇமை காப்பனபோற் பந்தங்காக்கும்.

880. காக்கா க்குமேஉடலுயிரும் நினைப்பேபந்தம்
கதவடைக்கக் கட்டுண்ட கள்ளனைப்போல
சேர்க்குமே மல்யுத்தம் புந்தமப்பா
சிறுவர்தெரு விளையாடுஞ் சேர்க்கைபோல
தாத்துகுமே ஆதியந்தத் திசையெல்லாந்தான்
காணிமுத்துக் கொள்ளுமது நினைவால்மூடி
வார்க்குமே முன்பின்னும் விளைவால்நாடி
வாலிபன் போலுள்ளருந்து மாருவேறே.

---

879. பந்தம் ஏற்பட்டால் திரிகாலமும் மறைத்து விடும் கண்ணை இமை காப்பதுபோல் இந்த உடற்கூட்டில் பந்தமானது மலத்தைக் காவல் செய்யும் என்ன விபரீதம்.

880. கதவடைத்தால் கள்ளன் உள்ளே இருப்பதுபோல பந்தமானது உடம்புக்குள் மல்யுத்தத்தை நடத்தும்.

881. மாரென்றும் நெஞ்சென்றுஞ் சித்தமென்றும்
மனமென்றும் உளமென்றும் மாய்கைவீடு
தூரென்று கூட்டிவைத்தால் திரிகாலங்கள்
சொல்லிவைக்குந் திரிகால வர்த்த மானம்
காரென்று நீர்பி நெஞ்சங்காரு
கண்மூடித் றிந்தாலே நெஞ்சமாகும்
பாரென்று மிப்படியே யிரண்டுமூண்டு
பாலித் சித்தியென்றும் மாயதைமூடும்.

882. மூடுமே நெஞ்சமதை மூடிடாதே
மூன்மூக்கில் நின்றாப்போகல் மனதில்நில்லு
ஓடிடே கூடுவிட்டுக் கூடுபாயும்
உட்பொருளை நீயறிவாய் உளமேருசரு
கூடுடே தானிருக்கக் கூடவிட்டுக்
கூத்தாடி யேளினாப்போலோடுதேபார்
நாடுமே தோணுதற்குச் சாஸ்திரமேனோ
நம்குருவைச் சேர்ந்தாக்கால் நீரும்வீணோ.

---

881. மார்பு நெஞ்சம் சித்தம் மனம் உள்ளம் என்று மாயங்கள் புரிந்தால் பந்தம் அதிகமாகி இத்தனை தொல்லைகள் விளைகின்றன.

882. ஆகவே நெஞ்சத்தை மூடவேண்டும் அப்படிச் செய்தால் பிழைப்பிலிருந்து விடுபட்டு யோகம் சித்திக்கும்.

## யோக ஞானாப்பியாசம்

883. வீணல்ல யோகமோடு ஞானாப்பியாசம்
வேராதி யந்தமொழி கடக்கவேணும்
ஊணல்ல நித்திலையுந் தள்ளவேணும்
உண்டுடுத்தல் சையோகந் தள்ளவேணும்
பூணல்ல போக்குவதை யறியவேணும்
புலாலெலும்பு தோலிறைச்சி புரைகள்நீங்க
தோணல்ல நீங்கிடவே யிதுகள்மாய
துன்பமற்றுச் சாதனைகள் தொந்தமாக்கே.

884. ஆகுமே மலவிருத்தி கசடுநீங்கும்
அய்யய்யா மனவெளியும் அரூபமாகும்
ஏகவே சொற்சொல்லாய்த் தனியேசொல்லும்
இன்பமுற யெங்கிருக்கும் நெஞ்சகத்தே
போகவே பொய்யிருளும் வொளியேபாயும்
பொல்லாப்பு நீங்கிவிடும் உலகஞாயம்
வேகவே கூடிருந்த மண்ணுள்மாழ
விட்டகுறை வந்துதென்றால் சனனங்கண்டே.

---

883. யோகத்தோடு ஞானம்பயிலல் என்பது எளிதல்ல. பந்த வேரை அறவே கடக்க வேண்டும். நித்திரை நீங்க வேண்டும். இப்படியெல்லாம் உடல் உபாதைகள் நீங்கினால்தான் ஞானம் கைகூடும்.

884. மனவெளியானது பிணைப்பின்றி அருவமாகும். பொல்லாப்பு நீங்கும். விட்டகுறை வந்து தொட்டுக்கொள்ளும்.

## பிரமரந்திர உற்பத்தி

893. தானென்ற ஞானமே ப்ரமந்திரம்
தானிருந்து பிறந்ததுவும் திரிகாலவர்த்தம்
வானென்ற திரிகாலம் ஆன்மாஉச்சி
மண்டையதின் மேலேற உச்சிக்கண்ணில்
ஆனென்ற கண்ணதுவும் யோகத்தாலே
அவயோகம் வாசிதா ரணையினாலே
ஏனென்ற தாரணைதான் வாசிமூச்சாம்
இவ்வாசி யுண்டஅன்னம் செரிக்கும்போதே.

894. செரித்துவந்த மலம்உருண்டை காற்றுத்தானே
தீப்புகைபோல் புகைகிளம்பி மூலமேறும்
மரித்ததுவும் வந்தகலை வாசியாகி
மாறாது கலைபிரிந்து மாறிக்கொள்ளும்
வெரித்துவந்த முனைமூக்குத் தண்டுஉச்சி
விரைந்துமதில் பாயுவதும் ஆன்மாவாகும்
முரித்துவதி லாடுகின்ற ஆன்மாதானும்
முன்பிறந்த உடலுயிரும் யெலும்பிற்றானே.

---

893. மண்டைமீது ஏறி உச்சிக்கண் இயங்கும் போது உண்டாகிற அனுபவங்களைக் கூறிப் பயிற்சி முறையைப் பேசுகிறார்.

894. உடம்புக்குள் ஏற்படுகிற மாறுதல்களைச் சொல்லி ஆன்ம இயக்கம் பேசுகிறார்.

895. எலும்பென்ற முதுகுத்தண்டு எலும்பினூடே
இளையூசி செலுத்துமது வாசல்போல
எலும்பினிற் துவாரமது ஓடுமார்க்கம்
இருக்கின்ற பாதைவழி பிராணணாகும்
எலும்பினுள்ளே ஓடுகின்ற வாசியான்மா
ஏரியது ஓடுவது முனைமூக்குத்தான்
எலும்பிலே வாய்வான ஆன்மாவந்தால்
இப்படியே புருவமத்தி யேறும்பாரே.

896. ஏறியே ஆகாரத் திடையிற்சென்று
இடைநடுவே பாட்டைவழி பாதையுச்சி
ஏறியே மண்டைநடு உச்சிநேராய்
ஏறியந்தப் பாதைவழி ஓட்டின்மேலே
ஏறியந்த ஓட்டின்மேல் உச்சித்தோலில்
ஏறிநின்று மண்டையெல்லாம் ரோமமாச்சு
ஏறியே யிறங்கினதால் மேல்காலெல்லாம்
இயல்ரோமம் அங்கங்கே முளைத்துச்சேர்ந்தே.

---

895. முதுகுத்தண்டின் வழியாக வாசி செல்லுகிற பயிற்சிமுறையின் நுட்பங்களை விளக்குகிறார். புருவ மத்திவரை ஏறுகிற பாங்கைச் சொல்கிறார்.

896. ஏறுகிற வாசியானது மண்டை உச்சியிலே செயற்படுகிற பாங்கை இயம்புகிறார். உரோம வளர்ச்சியின் நுட்பம் பேசப்படுகிறது.

897. சேரவே காயசித்தி ரோமந்தானும்
சிரசிருந்த மயிர்வெள்ளை கருத்துப்போகும்
மாரவே சரீரங்கள் வெகுகாலந்தான்
மயிர்கருத்து உடல்பிலத்து உயிர்கட்டுண்டு
சேரவே யிவ்வான்மா உச்சிரோமம்
சேர்ந்தேறி மயிர்மார்க்கந் துடர்ந்துபற்றி
மீறவே அங்குலந்தான் பன்னிரண்டு
மிகநடக்கும் காயகப்பிர வேசந்தானே.

## பிரகாயப் பிரவேசம்

898. நடக்குமது பிரகாயப் பிரவேசந்தான்
நாட்டைவிட்டு வெளிதனிலே யேறச்செய்யும்
துடக்காக யேறியது சந்திரசூர்யர்
சுயவுடுக்கள் உயர்லோகம் ஆகாயத்தில்
படக்கவே பன்னிரண்டு மயிலின்மேலே
பார்விசும்பின் பதினெட்டு மயில்வரைக்கும்
இடக்கவே பானுசந்திர வுடுக்கள்தானும்
இயங்கியே உயரவே தூக்கும்பாரே.

---

897. நரை கருத்து உடம்பு வலுவாகும் என்று சொல்லி ஆன்ம இயக்கமும் ரோம மார்க்கமும் விளக்குகிறார்.

898. பரகாயப் பிரவேசம் என்ற கூடுவிட்டுக் கூடுபாயும் சித்தி கைவருவதோடு, ஆகாய சஞ்சாரமும் சித்திக்கும்.

899. தூக்குமே அதற்குமேல் உயரச்செல்ல
துய்யசங்கு நிறமேகம் அடுப்புமேகம்
ஆக்குமே பொன்மேகம் பச்சைமேகம்
அரிநீல மேகமென்ற கருவியெல்லாம்
தாக்குமே யனேகவிகை மேகந்தானும்
கலத்தில்வரு திரைபோலும் மேலும்மேலும்
நோக்குமே ஆகாய மேகபாட்டை
நொடியாதே வருமார்க்கந் தன்னில்தானே.

900. மார்க்கத்தில் பிரகாயம் கெவுனமார்க்கம்
வழியோட கெவுனத்தில் வழியே:செல்லும்
மார்க்கத்தில் செல்லாது செல்லுந்தன்மை
வருவிப்பேன் கண்மூடித் திறப்பதற்குள்
மார்க்கத்தில் யோசனைதூ ரங்கள்போகும்
வருவித்துச் சொல்லுதற்கு நாவோயில்லை
மார்க்கத்தில் செல்லுகின்ற விபரந்தானும்
வருவித்துச் சொல்வதென்றால் அனேகமுண்டே.

---

899. வானப் பாட்டையிலே பன்னிற மேகங்களோடு உறவு ஏற்படும். அவை அலைஅலையாக மிதக்கும்.

900. பாதையிலே நடக்காமலே தொலைதூரம் கடக்கலாம்! இதுவே சித்தி! கண்மூடித் திறப்பதற்குள் பலகாத தூரம் சென்றுவிடலாம்! இதை எப்படிச் சொல்லுவது!

901. உண்டேதான் மேகத்தின் போக்கில்தானும்
ஊர்ந்துவரும் வழிவிலகி யொன்றோடொன்று
சண்டைதா னிட்டதுபோ லண்டத்திற்றான்
தாக்கியது யிடியிடித்துப் போடுஞ்சத்தம்
அண்டந்தான் வாய்விட்டு அலறினாப்போல்
அப்போது பிரண்டுருண்ட கலமேகந்தான்
சண்டன்போல் மேகமது முட்டித்தாக்க
சடுதியினி லொளிவீசும் யிடியுமாச்சே.

902. ஆச்சப்பா யிடிச்சத்தம் ஒளியின்காந்தி
அச்சனமே பூலோகந் தன்னிலேதான்
வீச்சப்பா பூமியதில் ரூபந்தன்னில்
வீழ்ந்தவிடம் அடையாளந் தெரிந்த்துண்டு
பேச்சப்பா காலிநிலந் தனில்விழுந்தால்
பேச்சென்ன பூமியிற்போந் தெரியாதப்பா
காச்சப்பா மூவேழு லகத்துள்ளும்
கடக்குமது சென்றவிடம் அழிந்துபோமே.

---

901. மேகத்தில் ஊர்ந்து செல்லுதலும் போரிடுதலுமாக உல்லாசத்தோடு அந்த அனுபவத்தைப் பேசுகிறார்.

902. அண்டங்கள் அனைத்தும் ஆளுகைக்கு வரும் என்பதைப் பலபடியாகச் சொல்லி மகிழ்ச்சியோடு பேசுகிறார்.

903. அழிந்துபோ யிருந்ததுவு மூன்றுலோகம்
அதிலொன்று மேலோக மப்பாபாரு
வழிந்தந்தக் கீழ்லோக மொன்றேயாகும்
மகிமையுள்ள பூலோக மிதுவேயாகும்
இழிந்ததுவும் போனதுவும் போகமூன்று
இருப்பதிலே இரண்டுக்குச் சுவரேயில்லை
பொழிந்தந்த மூன்றினிலே சீவனுண்டு
புகழ்சீவ பேதமுண்டு சுற்றிப்பாரே.

904. சுற்றிவந்து அண்டச்சுவர் முடிவின்மட்டும்
சூட்சமாய் அங்கங்கே பார்த்துவந்தேன்
பற்றுதலில் லாமலே வெவ்வேறாக
பரவியே நிற்கிறது அணுப்போற்றோன்றும்
மற்றவர்கள் கண்ணுக்கோ தோணாதப்பா
வாகாகத் தெரியவென்றால் சித்தன்பார்ப்பான்
கொற்றவனா னாலுமதைக் காணமாட்டான்
குறிப்பறிந்து யான்பார்த்தே னன்னாள்தானே.

---

903. அண்டத்தோடு பிண்டத்தை இணைத்துப் பேசுகிறார்.

904. உலகளாவிய பார்வை சித்திக்கும்போது பிறர் காணமுடியாத வரம்புகள் எல்லாம் ஞானிக்குப் புலனாகின்றன.

905. அன்னாளி லேயான்போய்ப் பார்க்கவென்று
அடிதொடங்கிப் பார்ப்பதற்கு எத்தனித்தேன்
என்னாலே சொல்லவொண்ணா அதிசயங்கள்
எத்தனையோ தான்பார்த்தேன் தனிமையாக
முன்னாலே தெருவுகளும் வீடுபோலும்
மூதண்ட மானசிவ கணங்கள்போலும்
பின்னாலே மகாவிஷ்ணு கணங்கள்போலும்
பேரின்பம் பெருகினதை விள்ளுவேனே.

906. விள்ளுவேன் சீவனுடல் பிரியுமார்க்கம்
மேலான உயிர்நாடி உயிர்பிரிந்தே
தள்ளுவதும் மார்நாடி தம்பநாடி
தனியான முதுகுதண்டு நடுவாம்நாடி
துள்ளியே வழிவிலகி உயிராம்ஜீவன்
துடிநாடி தனைவிட்டு உயிர்விலகி
தள்ளியே வழிவிலகிப் பாதைதப்பி
சீவனிருப் பிடம்விட்டுப போயினாரே.

---

905. தேவகணங்கள் எல்லாம் கண்ணுக்குத் தெரிகிற நிலை. முன்னும் பின்னும் வானவர்களைக் கண்ட காட்சியை இச்செய்யுள் வர்ணனை செய்கிறது.

906. உயிர் உடம்பைவிட்டுப் பிரிந்துசெல்கிற பாதை எது என்பதைக் கூறுகிறார். துடிநாடியை விட்டு அது எவ்வாறு விலகுகிறது என்பது சொல்லப்படுகிறது.

**907.** போயினா லுடல்விட்டுப் போகுமார்க்கம்
புகழான பிராணனுட லுயிருமாகும்
வாயினால் சொல்லவென்றால் தலைவெடிக்கும்
வகையோடே சுருக்கியே சொல்லக்கேளு
ஆயிசொன்ன படிதானும் உடலைவிட்டு
ஐவகையாய்த் தான்பிரியும் பிராணன்றானும்
காயிருந்து பழம்பழுத்த வாறுபோல்
கனிந்துதிர்ந்த பழம்போலே மூலம்போமே.

**908.** போமேதான் மதிகதிரு மேவலுத்த
புருவநடு மூக்குத்தண்டு உச்சியேறி
வாமேதா னிளைத்துவிடில் உச்சிமூக்கு
மரணவாய் முடிவதென்ன வகைமோசந்தான்
ஆமேதான் இடதுகைப் புரமேசாய்ந்தால்
அப்பனே வலப்புரமாப் படியேசாய்ந்தால்
தேமேதா னிப்படியே பிராணவாயு
திரும்பிவழி விலகிப்போம் அபானன்றானே.

---

**907.** உடலைவிட்டு உயிர் ஐந்துவகையிலே பிரியும் என்கிறார். காய் பழமாகிப் பழுத்துக் கனி உதிர்வதுபோலே என்று உவமை கூறுகிறார்.

**908.** மதியும் கதிரும் வலுத்துப் புருவநடு மூக்குத் தண்டு வழி உச்சியேறி இடதுபுறம் இளைத்து விட்டால் உச்சி மூக்கே மரணவாயில். இடதுகைப்புறம் சாய்ந்து வலப்புறமும் அவ்வாறே சாய்ந்தால் உயிர் விலகிப்போகும், அபானன் வழியாக!

909. போமேதான் மண்டைஉச்சி மூளைதன்னில்
புகுந்தவிடம் பிராணனது மூளைசிக்கித்
தாமேதான் கீழிறங்க விடமாட்டாது
தவறியது விடுமாகில் மோசமெய்தும்
காமேதான் பிராணரந்திரங் கெட்டியாகில்
கனிவாயு வேபிடிக்கும் பிராணன்போகா
ஆமேதான் பிராணமென்ற பிராணன்சொக்கும்
அப்படியே உள்ளுடலில் அமர்ந்துபோமே.

910. அமர்ந்துபோம் நரம்பின்வழி பிராணவாய்வு
யணியணியாய் அலியென்னும் அலையைப்போலே
அமர்ந்துபோம் அலைந்தலைந்து உடலுள்ளேதான்
அங்கமெல்லாம் பரவிநிற்கும் பிராணன்றானும்
அமர்ந்துமே பின்கிளம்பி தோளின்மேலே
அலைமோதி உயிரேறி அங்கேநின்று
அமர்ந்துமே நின்றுவிடும் பிடரியேறும்
அப்போது கீழவிழுந்து சொக்கிப்போமே.

---

909. மண்டை உச்சி மூளையில் சிக்கிக் கீழிறங்க முடியாமலிருந்தால், பிராணன் அப்படியே உள்ளுடலில் அமர்ந்துவிடும்.

910. அமர்ந்து உடம்பு முழுதும் பரவிநிற்கும். பின்கிளம்பி அலைமோதி தோளின் மீது ஏறிநின்று பின் பிடரி ஏறிக் கீழேவிழுந்து சொக்கிப்போகும்.

911. போமேதா னிப்படியே மரணச்சாவு
பொக்கிஷத்தில் வைத்தபொருள் போலேயாகும்
போமேதான் யின்னமுண்டு மரணமார்க்கம்
புகழ்மிகுந்த நோய்பிணிக ளானதெல்லாம்
போமேதான் நரம்பெலும்பத் தசைபசைதோல்
பூரணமாய் வியாதிகளின் மெலிவுநாளும்
போமேதான் வாதபித்த சேத்துமத்தின்
புலன்நாடி குறைத்துவிட்டால் நாடிபோமே.

912. நாடியே உள்மூலஞ் சொல்லுவேன்கேள்
நாபியடி பீசமூலம கோசபீஷம்
பாடியே தொப்புள்வழி வட்டஞ்சுத்தி
பார்த்தாக்கா லிருதயமாம் பள்ளந்தன்னில்
ஆடியே மேலெழும்பித் தொண்டைவந்து
அந்தரங்கச் சுத்தியதாம் வாயண்ணாக்கு
ஓடியே மேலெழும்பி மூக்கில்வந்தே
உற்றயிரு கலையாகித் தோயும்பாரே.

---

911. இப்படிப் பொக்கிஷத்தில் வைத்த பொருள்போலே மரணச்சாவு ஆகும். இனி, நோய் பிணிகள் வந்து மெலிவேற்பட்டு வாதமும் பித்தமும் சேத்துமத்தில் நாடிவிழும்.

912. உள்மூலம் எப்படி என்று சொல்லுகிறார். நாபி, பீஜம், கோசம், தொப்புள் வழியாக வட்டம் சுற்றி, இதயத்தில் ஆடி, மேலெழும்பித் தொண்டைக்கு வந்து, வாய் அண்ணாக்கில் ஓடி, மேலெழும்பி மூக்கில் வந்து தோயும்.

913. பாரேநீ யிப்படியே மூன்றுநாடி
பரிவான பொம்மைபோல் வாசிஉச்சி
நேரேதான் மதியுடனே கதிருமாகி
நேர்மையுடன் மேலாகச் சுழினையாகி
சீரேதா னிருகலையும் போயிப்போயி
சிறப்பான மூக்கின்வழித் தண்டின்வாசல்
தானேதான் வந்துவந்து போகும்போது
தமர்வாசல் வழிநாடி ஏங்குந்தானே.

914. ஏங்குமே யிச்சீவன் நோயுமில்லை
இயல்பாக யீதறிந்தோர் சாகமாட்டார்
சாங்காலந் தான்தோற்றும் மரணமாகார்
தானறிவார் உயிரறிவார் சரீரந்தோற்றும்
போங்காலம் வந்தாக்கால் முன்னேகண்டு
புலனிருக்கு மிடங்கண்டு ஒடுங்கிக்கொள்வார்
ஆங்கால மறிந்தவர்கள் அடங்கிநிற்பார்
அதுவறிந்து கண்டோர்கள் அமரர்கள்பாரே.

---

913. இப்படி மூன்று நாடியின் இயக்கம் - கதிர், மதி, சுழுமுனை!
மூச்சு வந்துவந்து போய் மூக்கின்வழி ஏங்கும்.

914. நோயில்லாமல் இயல்பான இயக்கம் இது. சாகுங்காலம் வரும்போது புலன் இருக்கும் இடம் கண்டு ஒடுங்குவார்கள்.

915. கண்டோர்கள் உடலுயிரும் பிரித்துக்கொள்வர்
கருத்துடனே யிரண்டையுமே ஒன்றாய்ச்சேர்ப்பர்
விண்டோமே நாமறிந்து கொண்டமார்க்கம்
விபரமதை இதன்முன்னே சொல்லிவைத்தோம்
அண்டோமே நாமறிந்து கண்டுகொள்ள
ஹரிஓம் நமாவென்று யிருத்தியூத
பண்டோமே சித்தர்முனி ரிஷிகள்தானும்
பகுத்தெழுதி ஆதியிலே வைத்தார்பாரே.

---

915. ஞானமும் யோகமும் கைவரப்பெற்ற பெரியோர்கள் என்ன சாதனையை இயற்றிக் கொள்கிறார்கள் என்பதைச் சொல்கிறார்.

உடலையும் உயிரையும இரு பிரிவாகப் பிரித்துக்கொள்ளத் தெரிந்தவர்கள் இவர்கள். இந்த இரண்டையும் கருத்துடனே ஒன்றாகச் சேர்ப்பவர்கள். இதுதான் இரகசியம்!

இதைக் கண்டுகொண்டு 'ஹரி ஓம்' நம' என்று இருத்திப் பிடித்து அழுத்தி விடுவார்கள். இதுதான் சித்தர்கள் முனிவர்கள் ரிஷிகள் முதன்முதல் பகுத்து எழுதி வைத்துள்ள பரமஞானக் கல்வியாகும் என்று இந்த நுட்பத்தை வெளிப்படையாகச் சொல்வதாக இப்பாடலிலே பாடுகிறார் காகபுசுண்டர்.

## மூவாண்டு ர்க்கம்

916. ஆதியாம் சரநூ லோ உடலின்சாரம்
அதுவறிந்து உடலறியும் விளக்கந்தன்னை
பேதியா தேயறிந்து கொண்டோன்சித்தன்
பேரின்ப மதையறிந்து நடத்தவேணும்
சாதியாய் மூவாண்டு முன்சொல்மார்க்கம்
தனையறிந்து நீயிருந்து காத்திருந்தே
வாதியா தேயிருந்து சொல்லிவிட்டு
வாங்கியே தீர்க்கமாய்ச் செய்குவாயே.

917. தீர்க்கமாய்ச் செய்வதற்குப் புத்திவேணும்
சிவசிவா உயிரொடுங்குங் காலந்தோண
மார்க்கந்தான் யார்சொல்வார் உடலைக்காப்போர்
ஏரயாலே சொல்வார்கள் நூல்தான்சொல்லும்
யார்க்குந்தா னிதுபோல வெளியாய்த்தானே
அரன்விஷ்ணு பிர்மாதி யாருஞ்சொல்லார்
பார்க்குள்ளே வெளியாகச் சொல்லினாலும்
பண்பாக இடிவீழும் தலையிற்றானே.

---

916. சரம் பார்க்கும் கல்வி பற்றிக் கூறுகிறார். இதைச் சந்தேகமின்றி அறிந்தவனே சித்தன். இது உடலறியும் விளக்கம்! மூன்று ஆண்டுகள் இதைப் பயில்வாய் என்கிறார் குருநாதர்!

917. இதை நன்கு செய்வதற்கு நல்லறிவு வேண்டும். இதை யாரும் வெளிப்படையாகச் சொன்னதில்லை.

918. தானென்ற உயிரோங்குங் காலந்தானும்
தவஞ்செய்த ரிஷிகளுக்குத் தானேதோணும்
வானென்ற மண்டைதனில் நாசிமூக்கு
வலமிடமாய் வருகிறதை மேலேதாக்கி
ஏனென்று கேட்கிறதோர் வாசிமூச்சு
இதுசுத்தி வட்டம்உச்சி யேறிஊஞ்சல்
தானென்று ஆடையிலே நூறுதாண்டும்
தாண்டியது இளைத்ததனால் சமாதியாமே.

919. ஆமேதான் சமாதியது உச்சிவட்டம்
அசைந்ததுவும் மேற்சுற்றி யாடித்தேய்ந்து
போமேதான் பிராணன்வலுக் குறைந்துநிற்கும்
புகழ்நாடி நரம்பிலுக்கும் வலுத்துப்போகும்
தாமேதான் வலுக்குறைந்த பிராணன்றானும்
சமாதியா யடங்கியது உறைந்துநிற்கும்
வேமேதா னிப்படியே பிராணன்நிற்க
விதமறிந்த சித்தர்களுங் குகைசென்றாரே.

---

918. தவம் செய்த ரிஷிகளுக்குத்தான் உயிர் ஒடுங்குகிற வேளை தெரியும். மண்டையிலே மூச்சு வலம் இடமாய் வருகிறதை மேலே தாக்கி சுத்தி செய்வதுவே உத்தியாகும். இந்த ஊஞ்சல் ஆடினால் நூறு வயதைத் தாண்டலாம். தாண்டினது இளைத்தால் சமாதியாகும்.

919. பிராணன் வலு இழந்து வாசியிலே ஆடித் தேய்வது கண்டுகொண்டு சமாதியில் அடங்கக் காண்பர். இது அறிந்தே சித்தர்கள் குகைக்குச் சென்றார்கள்.

920. சென்றாரே சித்தர்களுங் குவடுக்குள்ளே
தீரமுடனே தானிருந்தார் கோடிகாலம்
நின்றதொரு சித்தர்களும் கற்பங்கொண்டு
நீடித்து கெவுனமது சென்றாரப்போ
அன்றுவந்த சித்தர்களு மிதனைக்கண்டு
அதிசயங்கள் தான்பேசி யிருக்கும்போது
என்றுமே அழியாது தேகமென்று
இனிமையுடன் அறிவுள்ளோர் விளக்கந்தானே.

921. அறிவுள்ளோர் அறிவினுட ஆதியந்தம்
அடிநடுவும் முடிவுபெறக் கருதுவார்கள்
அறிவுள்ளோர் கருத்துடனே யூகஞ்செய்து
ஆதியந்தந் தான்தெரிந்து நடந்துகொள்வார்
அறிவுள்ளோர் கற்பத்தால் சித்திபெற்று
அவன்பரமபதத்தினிலே யிருக்கலாகும்
அறிவுள்ளோ ரிதற்குமேல் புலிகளுண்டு
அவர்தேகஞ் சித்திபெற்று முனியாவாரே.

---

920. குகைக்குள்ளே சென்று தீரமுடன் கோடிக்காலம் இருந்தார்கள் என்கிறார்.

921. பேரறிவு படைத்த ஞானிகள் அடிதொட்டு நடுவும் முடிவும் கருத்திலே காண்பார்கள். கண்டு தெளிந்து நடந்து கொள்வார்கள். கற்பசித்தி பெற்றுப் பரமபதத்தில் இருப்பார்கள். இதற்குமேலும் புலிகளுண்டு. அவர்கள் தேகசித்தி அடைந்து முனிவர்கள் ஆவார்கள்.

922. முனியாவார் பிரமரிஷி பதத்தைக்காண்பார்
மூவுலக முந்தெரிவார் கெவுனஞ்செல்வார்
தனிவானோர் ஓரிடத்தி லிருக்கமாட்டார்
தாரணியில் ராஜரிஷி யாவார்பாரு
பணிவாக ஒருவரோ டிணங்கமாட்டார்
பத்திமுத்தி தன்மையுமே காட்டுவார்கள்
துணிவாகச் சகலருக்கும் அஞ்சமாட்டார்
சூட்சாதி சூட்சமெல்லாம் பேசுவாரே.

## சிவனிடஞ் சொல்லுதல்

923. பேச்சப்பா வேலவரும் தொக்கித்தக்கி
பிரளயங்கள் முடிந்தவுட னிவிடம்வந்தார்
மூச்சப்பா யென்னவென்று வினவிக்கேட்டேன்
மூதறிவி னோடெனக்கு முறையைச்சொன்னார்
வாச்சப்பா யிருவென்று யுகங்கள்தோறும்
மறைந்துநான் வெளியேறும் வகையுஞ்சொன்னேன்
காச்சப்பா யிருவென்று யிருத்தியென்னை
கருதிவந்த விபரமெல்லாங் கேட்டிட்டாரே.

---

922. முனிவரானார்கள் பரமரிஷி என்னும் பதமும் காண்பார்கள். ஓரிடத்தில் இராமல் கமனம் செய்வார்கள். இவர்களில் ராஜ ரிஷியாவார் உண்டு. யாரிடத்திலும் பணிவாக இணங்கார்கள். பத்திமுத்தியையும் காண்பித்துக் கொடுப்பார்கள். யாருக்கும் அஞ்சமாட்டார்கள். நுட்பத்திலே நுட்பம் பேசுவார்கள்.

923. இது ஒரு கடவுளனுபவம் கூறுகிற உருவகப் பாடல். வேலர் வந்து யுகங்கள்தோறும் இரு என்று வழங்கியதிலும் உரைத்தார்.

924. கேட்டவுடன் பிரமரந் திரமுஞ்சொன்னேன்
கிருபையுடன் யுகமுடிவு முறையுஞ்சொன்னேன்
நாட்டமுடன் மனுக்களுண்டாம் வகையுஞ்சொன்னேன்
நன்மையுட னதுமடியும் விபரஞ்சொன்னேன்
தேட்டமுட னெப்போது மிருப்பதற்குத்
தேவியுட பூரணத்தைத் தெரியச்சொன்னேன்
வாட்டமிலா தேகேட்டுக் குமரனுந்தான்
மலைமேலே சென்றுவிட்டான் மார்க்கத்தோடே.

### கற்பம்

925. மார்க்கமென்ன மலைகளிலே திரிந்தானப்பா
வகையோடே வுந்தனுக்குச் சொல்லிவிட்டேன்
ஏர்க்கையுட னெல்லாமுங் கேட்டுக்கொண்டாய்
இனியென்ன கேட்கணுமோ கேளுகேளு
சேர்க்கையுள்ள வசிட்டருமப் போதெழுந்து
சிறப்பாகப் புசுணடரிடம் கற்பந்தனனை
பார்க்கவே சொல்வேணு மென்றுகேட்கப்
பண்பாக மனதுகந்து சொல்லுவாரே.

---

924. அவர் இதன் நுட்பத்தைக் கேட்டதும் நான் பிரமரந்திர ரகசியமும் யுகமுடிவின் முறையும் சொன்னேன். எப்போதும் இருப்பதற்குத் தேவியின் பூரணத்தைச் சொன்னேன். முருகனும் சோர்வின்றிக் கேட்டுவிட்டு மலைமேலே சென்றுவிட்டான்.

925. எல்லாம் சொல்லிவிட்டேன், இன்னம் கேட்பதற்கு இருந்தால் கேட்டுக்கொள் என்றதும் வசிட்டரும் புசுண்டரை நோக்கிக் கற்பத்தைப் பார்க்கவேண்டும் என்று கோரினார்.

926. சொல்லுவேன் கற்பமது இரண்டதாகும்
சுகசரீரந் தவறாது இருப்பதற்கு
நல்லதொரு கற்பமொன்று வாலைபூசை
நலமான ஞானகற்ப மொன்றதாகும்
எல்லவற்குங் கிட்டாது இரண்டுந்தானும்
இயல்புடைய முனிரிஷிக்குக் கிட்டுங்கிட்டும்
வல்லவர்கள் கற்பமது கொள்ளுவார்கள்
மற்றவர்கள் ஒன்றுமே அறியார்பாரே.

927. பாரப்பா அகாரந்தான் முதலாங்கற்பம்
பரிவாக உகாரந்தா னிரண்டாங்கற்பம்
நேரப்பா மகாரந்தான் மூன்றாங்கற்பம்
நேசமா யிருந்துசெய்வாய் சிகாரகற்பம்
சீரப்பா இந்நான்கு கற்பந்தானும்
தீர்க்கமுட னுண்டவனே சித்தன்சித்தன்
வீரப்பா பன்னிரண்டு வருடஞ்செல்லும்
முக்கியமுள்ள கற்பமது முடியத்தானே.

---

926. கற்பம் இரண்டு வகைப்படும். சுக சரீரமாகிய நல்லுடம்பு தவறாமல் இருப்பதற்கு நலமான ஒரு கற்பம், வாலையின் வழிபாடாகும். இதைத் தவிர இன்னொரு கற்பம் ஞான கற்பம். இந்த இரண்டுமே எல்லார்க்கும் கிட்டாது. முனிரிஷிகளுக்குக் கிடைக்கும்.

927. அகரம் என்பது முதலாவது கற்பம். உகரம் இரண்டாவது கற்பம். மகரம் மூன்றாவது. சிகரம் நான்காவது. இந்த நான்கு கற்பத்தையும் சேராக உண்டவனே சித்தன். இந்தக் கற்பம் முழுமை பெறப் பன்னிரண்டு ஆண்டுகள் பிடிக்கும்.

928. கற்பமென்று அண்டத்தைச் சுற்றவேண்டாம்
கனிவாக உன்னிடத்தி லிருக்குதப்பா
அற்பமல்ல அண்டபிண்ட மதுதானாகும்
அடைவாகப் பார்த்தாக்கால் தோணாதப்பா
உற்பனமாய் உன்னுக்குள் முடிந்திருக்கும்
உகாரகற்பம் உன்னுக்கு ளிருக்கும்போது
விற்பனமாய் வேறுகற்பந் தேடவேண்டாம்
மேலான கற்பமது அகாரந்தானே.

929. அகாரமாங் கற்பமது தெரியவென்றால்
அன்போடு சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு
நகாரமென்ற வாலையைப்பூ சிக்கவேணும்
நலமாக அறிந்துகொள்ளப் புத்திவேணும்
உகாரகற்பம் சத்தியைப் பூசிக்கவேணும்
உண்மையுள்ள மனோன்மணியைப் பூசைசெய்வார்
மகாரகற்ப மடைவதற்கு யோகம்வேணும்
வாய்த்தபின்பு சிகாரகற்ப முடியுந்தானே.

---

928. கற்பம் என்று தேடி அண்டம் முழுதும் சுற்றித் திரிய வேண்டாம். உன்னிடத்திலேயே அது இருக்கிறது. அற்பமானதில்லை அது! உனக்குள்ளே முடிபோட்டு நிற்கிற கற்பம் அது. அதுவே உகாரம்.

929. அகாரம் என்று கற்பம், நகாரம் என்ற வாலையை வழிபடுவதாகும். உகாரம் என்ற கற்பம் சக்தி பூசை. மகார கற்பம் அடைவதற்கு மனோன்மணியைப் பூசிப்பர். அதற்கு யோகம் வேண்டும். அது வாய்த்த பின்பு சிகார கற்பம் முழுமையடையும்.

930. முடியுவது யெப்படியென் றென்னைக்கேட்டாய்
முக்கியமுள்ள கற்பமதின் முறையைச்சொன்னேன்
அடிநடு முடியென்று மூன்றுபாகம்
அதிலேதான் நடுவாகும் கற்பநேர்மை
துடியாக வேதிறந்து சொல்லக்கூடா
சொல்லினால் தலைவெடிக்கு மென்றுசித்தர்
படியாகச் சாபமது கொடுத்ததாலே
பரிவாகச் சித்தர்களுஞ் சொல்லமாட்டார்.

931. மாட்டார்கள் சொல்லதனா லறிந்துகொள்வாய்
மாறாட்ட மாகவேதான் பெயர்வைத்தார்கள்
காட்டார்கள் நீயறிந்து கொள்வாயப்பா
கருத்தாகப் பார்த்தாக்கால் தோணுந்தோணும்
பாட்டாகப் பாடிவிட்டார் கருச்சொல்லாமல்
பண்பான கருவதுவுஞ் சொல்லக்கேளு
நாட்டார்க ளறியார்கள் கம்பமாகும்
நலமான நந்தியிருப் பிடமாம்பாரே.

---

930. எப்படி முழுமைபெறும் என்று கேட்டால், அடி நடு முடி என்ற மூன்று பாகத்தில் நடுவாகும் கற்பநேர்மை! இதற்கு மேல் திறந்து சொல்லக் கூடாது, தலைவெடிக்கும் என்று சாபம் உண்டு. அதனால்தான் சித்தர்கள் இதை வெளியிடுவதில்லை.

931. வெளிப்படையாகச் சொல்லாமல் மாறாட்டமாகப் பெயர்வைத்துப் பேசினார்கள். காட்ட மாட்டார்கள். நீயே உய்த்து அறிந்துகொள். குறிப்பாகச் சொல்கிறேன், நந்தியின் இருப்பிடத்தை நோக்கி அதை உய்த்து உணர்ந்து கொள்வாயாக!

## கற்பங் கொள்ளும் விபரம்

932\. நந்திக்கொலுக் கண்டவனே ஞானியாகும்
நடுவணையைப் பார்த்தவனே சித்தனாகும்
அந்திசந்தி கொண்டவனே கற்பதேகி
ஆத்தாளைப் பூசித்தானே முனிதானாகும்
முந்திவந்த தகைவிடுத்து நடுவேநின்று
மூக்காலும் வாயில்மந் திரஞ்செபித்து
சிந்தித்துக் காலையிலும் மாலைநேரம்
சிறப்புடனே கொண்டாக்கால் சித்தியாமே.

933\. சித்தியென்ன அகாரகம்ப மின்னதென்று
தெரிந்துகொண்டால் வாலையவள் கிருபைசெய்வாள்
முத்திபெற நந்திகொலுக் கண்டுகொண்டால்
முடிவான நடுவணையைக் காணவேணும்
மத்திபமா யிருக்கின்ற குண்டலியின்
வலிமைகண்டு பிர்மரந் திரமறிந்து
பத்தியுடன் நாதவிந்து வாங்கிக்கொண்டு
புகழாகக் கற்பமது கொள்வாய்நீயே.

---

932\. நந்தி இருக்கின்ற இடம்பற்றி ஏற்கனவே பாடியிருக்கிறார். அதை மீண்டும் சொல்கிறார். நந்தியின் கொலுவைக் கண்டவன் ஞானி. நடு இடத்தைப் பார்த்தவன் சித்தன். அந்தி சந்தி கொண்டவன் கற்பதேகி. அதனையே வழிபடுபவன் முனிவன். மூக்காலும் ஜபதபம் செய்பவன் எல்லாம் சித்தியானவன்.

933\. மேற்சொன்னதையே தேவதைகளோடு தொடர்புபடுத்திச் சொல்கிறார்.

934. கற்பமது காலையிலும் மாலைநேரம்
கருதியே சாப்பிட்டுக் கொண்டுவந்து
விற்பனமாய் மாதம்பன்னி ரெண்டுஞ்செல்ல
விரும்பியே கற்பம்நீ கொண்டுவந்து
அற்புதமாய்க் கற்பமது கொண்டதாலே
அதில்வருங் குற்றங்கள் நீக்கிக்கொண்டு
கற்பனையில் லாவருடம் பன்னிரண்டு
தான்கொள்ளச் சித்தனா யாவான்பாரே.

935. சித்தமுடன் மாதமொன்று கொண்டாயானால்
சிறப்புடனே மேல்கால்கள் வலியெடுக்கும்
பத்தமுடன் மாதம்ரெண்டில் சூடுண்டாகும்
பதமாக மலங்கழியும் பேதியுண்டாம
மத்தபடி மாதமூன் றாகிற்றானும்
வாய்வேகும் அபானம்வரை ஆடுண்டாகும்
அத்தனரு ளாலேதான் மாதம் நான்கின்
அசதிவருங் கால்கைகள் நோகுந்தானே.

---

934. காலையிலும் மாலையிலும் கற்பம் உண்டு. பன்னிரண்டு மாதம் கழியவேண்டும். பலன் உண்டு. பன்னிரண்டு ஆண்டுகளில் சித்தன் என்னும் நிலை கிட்டும்.

935. ஒவ்வொரு மாதம் கழியும்போதும் என்னென்ன இடையூறுகள் வரும் என்பதை விரிவாகக் கூறியவாறு.

936. தானென்ற ஐந்துதிங் ளாகுமாகில்
தன்வயிறு புண்ணாகும் ஆசனமும்வேகும்
கானென்ற பெண்மாய்மை யதிகமாகும்
கவலைவிடும் சிறுநீரு கடுத்துவீழும்
வேனென்ற விந்துவிழும் நினைவுமாறும்
முக்யமுள்ள இடங்களெல்லாம் வெந்துபோகும்
கோனென்ற ஐந்துதிங்கள் வெகுபாடாகும்
குவலயத்திற் வெயிற்படா திருந்துபாரே.

937. பாரேதா னாறுதிங்கள் முடிந்ததானால்
பண்பாக வயிறுதான் பசியுண்டாகும்
நேரேதான் பசிவந்து அமர்ந்துபோகும்
நேர்த்தியாய்ப் புளியேப்ப மிகவுண்டாகும்
சீரேதான் உடல்நோகும் நடைகளோயும்
சிறப்பாக வேயிற்குக் காரசாரம்
காரேதான் சேர்த்துவர வேணுங்கண்டாய்
கருவான புளிகளையுங் அருந்திக்கொள்ளே.

---

936. ஐந்து மாதங்கள் முடிய பாடு மிகவும் அதிகமா இருக்கும். வெயில் அதிகம் படாமல் இருந்துபார்.

937. ஆறு மாதத்தில் ஏற்படுகிற துன்பங்கள் உரைக்கிறார்.

938. அருகியதோர் புளிதனையும் கொண்டாயானால்
கனல்யோகம் ஏழுதிங்கள் கொண்டாயானால்
பெருகிய திமிரேகும் அசதிகொள்ளும்
பேரானஉடம் பெல்லாம் வெளுத்துக்காணும்
அருதியாய்ப் புளியேப்ப மிகவுண்டாகும்
அன்பாகப் பெண்கள்மே லாசைகொள்ளும்
சிறுவாச லடிவயிறு மிகவும்நோகும்
சிற்பரையைப் பூசிக்கத் தீருந்தானே.

939. தீருமது யெட்டான திங்களானால்
சிறப்பான தேகமதி லொளியுண்டாகும்
பாருநீ எலும்பிலுள்ள மூளேபோகும்
பசுமையுள்ள எலும்பின்வழி சுவாசம்போகும்
சீருடனே புளிதனையே கொள்ளவேணும்
தேறுதற்கு மேலெல்லாந் துவாலையோடு
நேருடைய வாசமலை யெண்ணவேண்டாம்
நேர்மையுடன் குணமாகு மின்னுங்கேளே.

---

938. ஏழு மாதமானால் மேலும் சில துன்பங்கள் வரும். அவற்றை வரிசைப் படுத்திச் சொல்லிச் சிற்பரையை வழிபட்டால் நலமுண்டாகும் என்றார்.

939. எட்டு மாதத்தில் தேகத்தில் ஒளியுண்டாகும். மேலும் ஏற்படுகிற மாறுதல்களுக்குப் புளியை உண்ணவேண்டும்.

940. இன்னும்நான் சொல்லுகிறேன் பரையின்பூசை
இயல்பாக இருவேளை நடத்தவேணும்
மன்னவனும் நீயாவாய் குய்யம்வேகும்
மயங்காதே துடைகளெல்லாம் விருவிருக்கும்
நன்னயமாய்ச் சோதிவொளி காணும்பின்பு
நலமான தூரவெளிக் கம்பந்தோணும்
என்னவென்று சொல்லுவேனான் சித்துக்காணும்
இனிமையுடன் ஒன்பதாந் திங்கள்கேளே.

941. திங்களா மொன்பதினில் வயிறுநோகும்
திறமையுள்ள குண்டலியின் முறப்பதாகும்
மங்களமாய்த் தேகமது மினுமினுக்கும்
மயக்கமுடன் தியக்கமா மசதிகாணும்
தங்கம்போல் தேகமது யிருக்கும்பாரு
சரியாகப் பசும்பாலைச் சேர்த்துக்கொள்ளு
கங்கைதனை மறவாமல் பூசைசெய்து
காயத்திரி செபஞ்செய்து இருந்துபாரே.

---

940. வழிபாடு இருவேளை செய்யவேண்டும். பிறகு நீ ராஜா.

941. ஒன்பதாம் மாதம் வயிற்று நோவு உண்டாகும். மேனியில் பளபளப்பு உண்டாகும். பசும்பால் சாப்பிட்டு வா. கங்கையில் குளிப்பு, காயத்திரி ஜபம் செய்து வா.

942. இருந்துபார் பத்தான திங்கள்வந்தால்
எப்பொழுதும் ஆகாரம் வேண்டாதாகும்
அருந்துவது பாலாகும் பேதியாகும்
அன்பான பொருமலுண்டும் அசதிகாணும்
வருந்தாமல் நீயிருந்து வருவாயானால்
மனம்புத்தி அகங்கார மொடுங்கிப்போகும்
திருத்தவே அதிகமாய்ச் சூடுண்டாகும்
தேகமதில் செய்போல வருகுந்தானே.

943. வருகுமே பன்னொன்றாந் திங்கள்தன்னில்
பதமாக மாகமண்டை யிடிக்கும்பாரு
குருவாகப் புளிதனையும் கொண்டாயானால்
கூத்தனுமே உன்னிடத்தி லணுகமாட்டான்
திருவாகத் தனஞ்செய்து மெழுந்திருப்பான்
சிறப்பாகப் பரைபூசை விடாமற்செய்வாய்
அருவான வேதமந்திர மிதுதானகும்
ஆச்சரியம் பன்னிரண்டு மாதங்களே.

---

942. பத்தாம் மாதத்தில் உணவு வெறுக்கும். பேதி உண்டாகும். பொருமல் முதலிய துன்பங்களை அடுக்கிச் சொல்லி இவை உண்டாகும் என்றார்.

943. பதினோராம் மாதம் தலைவலி முதலிய புதிய தொந்தரவுகள்.

944\. மாதமப்பா பன்னிரண்டு வந்ததானால்
மகத்தான சந்துவலி வருகும்பின்பு
சேதம்வரா தொருநாளும் சீதம்வீழும்
செழுமையுள்ள கைகா லசதிகாணும்
வேதமெனும் பூரணத்தைக் கைக்கொண்டாக்கால்
வெகுசுழிவாய்ப் பறக்கும்பார் வியாதிதானும்
ஆதவன்போல் தேகமது யிருக்கும்பின்பு
ஆச்சரிய மெத்தவுண்டு வருடமாச்சே.

945\. வருடமது முடிந்தவுடங் புளிதானுண்ண
வாய்க்குமது வேறொன்றில் மனதுநாடா
குருவருளால் காயகற்ப முண்டுவந்தால்
கொடிதான எமனுமே ஓடிப்போவான்
திருவருளா ளெல்லாமுஞ் சித்தியாகும்.
செய்பாகங் கைபாகம் தெரிந்துகொள்வாய்
அருணன்போ லெந்நாளு மிருக்கலாகும்
அம்புவியில் சித்தரென்று சொல்லுவாரே.

---

944\. பன்னிரண்டாம் மாதம் பிறந்ததும் சந்துவலி உண்டாகும். சீதம் வீழும். கைகால் அசதி.

945\. ஆண்டு முடிந்ததும் புளிஉண்ண விருப்பம், வேறெதுவும் செல்லாது. பிறகு? பிறகு என்ன? எமன் ஓடிப்போய்விடுவான். சூரியனைப் போல எந்நாளும் இருக்கலாகும். உலகத்தில் சித்தர் என்று உன்னை அழைப்பார்கள்.

946. சொல்லுவார் இருவருட முடிந்ததானால்
சூட்சாதி சூட்சமெல்லாந் தெரிந்துகொள்வாள்
வெல்லுவான் எமனையுந்தான் ஞானியாவான்
மெய்ஞ்ஞானி யிவனென்ற பேர்பெற்றுய்வான்
கல்லுப்போற் றேகமது இறுகிப்போகும்
கணத்ததொரு எலும்புகளில் வாசியேறும்
புல்லுப்போல் நரம்பெல்லாம் வலுத்துப்போகும்
புதுமையுள்ள வாலையவள் பேசுவாளே.

947. பேசிடுவாள் மூன்றுவரு டங்களானால்
பிரபல்ய மாயிருப்பான் சவம்போல்வாழ்வான்
தூசில்லா தேயிருப்பான் ஒருவரோடும்
தூஷணமா யொருநாளும் பேசமாட்டான்
ஆசில்லாக் காரியத்தை நினைக்கமாட்டான்
அருமையொடு வாய்திறந்து சொல்லமாட்டான்
நாசிநுனி வட்டமதில் நோக்கங்கொள்வான்
நாலுவரு டங்களதின் முறையைக்கேளே.

---

946. இரண்டு ஆண்டுகள் ஆய்விட்டால் எல்லா நுட்பங்களும் தெரிந்துகொள்வான். எமனைவெல்வான். ஞானியாவான். மெய்ஞ்ஞானி என்று பெயர் பெற்று உடம்பு கல்லாக இருக்கும். எலும்புகளில் வாசி ஏறும். வாலையும் பேசுவாள்.

947. மூன்று ஆண்டுகள் கழிந்தால் புகழுடனே இருப்பான். தூசில்லாத வாழ்வு. சவம் போல எதிலும் மாட்டிக்கொள்ளாத வாழ்க்கை.

948. செய்கையென்ன நாலுவரு டங்களாகில்
தினந்தினமும் யோகத்தின் மேலிருப்பான்
அய்யமது நீங்கிவிடும் உடம்புநோகும்
ஆத்தாளைப் பூசிக்க அதுவும்போகும்
வெய்யிலிலே ஒருநாளுந் திரியமாட்டான்
வேதாந்தத் தாய்பதத்தைப் பூசித்துய்வான்
உய்யும்வகை யாவருக்குங் காட்டமாட்டான்
உற்றஐந்தாம் வருடமதி லுண்மைபாரே.

949. உண்மையுடன் யாவருக்கும் நடந்துகொள்வான்
உயர்வான காரியத்தைச் செய்துபார்ப்பான்
தன்மையுடன் வகராமுத லெல்லாஞ்செய்வான்
தனித்திருப்பான் நரைதிரையு மற்றுப்போகும்
நன்மையுடன் மலைவாச விருப்பங்கொள்வான்
நானிலத்தோர் கண்ணுக்குத் தோணமாட்டான்
பன்மையுடன் வெறியன்போல் திரிவான்பின்பு
பற்றுதலாய் ஆறுவரு டங்கள்கேளே.

---

948. நான்கு ஆண்டுகள் ஆனால் தினமும் யோகத்தில் இருப்பான். வெயிலில் திரியான். ஒதுங்கி வாழ்வான்.

949. ஐந்து ஆண்டுகளில் எல்லாருடனும் பழகிக் கொள்வான். தன்மையுடன் நடந்துகொள்வதோடு தனிமையில் விரும்பியிருப்பான். மலைவாசத்தில் விருப்பம் இருக்கும். பிறகு உலகத்தவர் கண்ணில்படாமல் வெறியன்போல் திரிவான்.

950. கேளப்பா ஆறுவரு டங்களாகில்
கெடியாக மலசலங்க ளும்பேதிக்கும்
வாளப்பா கெவுனத்துக் குறதியாகும்
வருகுமே அமுதமது பெருகிக்காணும்
நாளப்பா அமுதமது கொள்ளவேணும்
நன்மையுடன் பூரணத்தைப் பணியவேணும்
ஆளப்பா தேசமெல்லா முன்னதாகும்
அவனிதனில் பேர்பெற்ற சித்தன்நானே.

951. சித்தனென்ற ஏழுவரு டங்களானால்
சிறுபிள்ளை தானாகும் மதலையாகும்
அத்தனுட பாதமதைப் பூசைசெய்யும்
அம்பிகையாம் வாலைதனைப் போற்றிவாழும்
பித்தனென்றுஞ் சொல்வார்கள் பித்தனல்ல
பெரும்பேற்றை யடைந்ததொரு சித்தனாகும்
முத்தனென்று பேருபெற வெகுநாள்செல்லும்
முடிவாக யெட்டுவரு டங்கள்தானே.

---

950. ஆறு வருடங்களில் வயிற்றுக் கோளாறு ஏற்படும். பிறகு அமுதம் வரும். தேசமெல்லாம் வசமாகும். அவனியில் புகழ்பெற்ற சித்தனாவான்.

951. ஏழு ஆண்டுகள் கழியுமானால் சிறுபிள்ளை போல் ஆவான். பித்தன் என்பார்கள்; ஆனால் பித்தனில்லை. பெரும்பேறு பெற்ற சித்தன். முத்தன் என்ற நிலை வருவதற்கு வெகுநாள் செல்லும்.

952. தானேகேள் எட்டுவரு டங்களாகில்
தனியான குகைதனிலே யிருக்கச்செய்யும்
மானார்க ளாசையெல்லாம் வெறுத்துக்காணும்
மாநிலத்துப் பொருள்களெல்லா மதிகமாகும்
கோனாக வேயிருந்து பூசித்துய்வான்
குறிப்பாக அமுதமுடன் பாலும்விட்டு
தேனாக வேஅருந்தித் திரிவான்பின்பு
சீவனுக்குச் சீவனா யிருந்துய்வானே.

953. உய்வானே ஒன்பதுதான் வருடஞ்சென்றால்
ஒருவரையுஞ் சட்டைசெய்யான் ஒடுங்கிப்போவான்
செய்காரி யங்களையுந் தேடமாட்டான்
தேவிபதம் பூசிக்க மறக்கமாட்டான்
மெய்வாய்மை தவறியே நடக்கமாட்டான்
விரும்பியொரு காரியத்தைச் செய்யமாட்டான்
எய்யாமல் காதவழி நடப்பான்பின்னும்
இயல்பாக வாசிவச மாகுந்தானே.

---

952. எட்டு ஆண்டுகள் ஆனால் அவன் தனியான குகையில் வசிக்கும்படி செய்யும். பெண்ணாசை நீங்கும் என்று சொல்லி மேலான நிலையின் பண்புகளை வரிசையாகச் சொல்லுகிறார்.

953. ஒன்பது ஆண்டுகள் ஆனால் யாரையும் சட்டைசெய்யான். ஒடுங்கியிருப்பான். காரியத் தேட்டம் இராது. தேவிபதம் வழிபாடு செய்ய மறக்கமாட்டான். வாய்மை தவறான். எய்ப்புஇல்லாமல் காதவழி நடப்பான். இயல்பாக வாசி வசமாகும்.

954. ஆகுமே யீரைந்து வருடமாகில்
அவனமுரி லோகத்திற் பழுக்குமப்பா
ஏழுமே தேகசட்டை யொன்றுவாங்கும்
இனிமையுள்ள தேகமது பொன்போலாகும்
பாகமுடன் தேகவுப்பு மாறிப்போகும்
பதமாக மாகவே யிருக்கலாகும்
யோகமது பூரணந்தா னறியவேணும்
உயிர்பதினொன் றாண்டினுட பாகங்கேளே.

955. வரிசையது யேதென்றால் சித்தனாவான்
வாயினாற் சொன்னசொல்லு பலிக்கவேணும்
உரிசையுட னறுவகைகள் வேண்டாதாகும்
உயர்ஞான கேசரங்கள் தெரிவான்பின்னும்
சரிசமமாய் யாவரையும் நினைப்பான்யோக
சாதனமே கைக்கொள்வான் பெற்றாரோடு
உரியதொரு சனங்களுட வாஞ்சைதள்ளி
உம்பர்களோ டிணங்கியே வாழ்வான்பாரே

---

954. பத்து ஆண்டுகளில் அமுரி (சிறுநீர்) மாறுதல் ஏற்படும். தேகச்சட்டை உரியும். மேனி பொன்போலாகும்.

955. பதினோரு ஆண்டிலே வாக்குப் பலிதம் உண்டாகும். சமநோக்கு ஏற்படும். மனிதவாஞ்சை தள்ளி வானவரை வணங்கி வாழ்வான்.

956. இணைக்கமுடன் பன்னிரண்டு வருடமானால்
எப்பொழுதும் அழியாத தேகமாகும்
சணப்பொழுது வெளியேறித் திரியமாட்டான்
சவ்வாது மணக்குமவன் தேகமெல்லாம்
குணமாக நரைமயிருங் கருத்துப்போகும்
குழந்தைபோல் பதினாறு வயதுமாகும்
மணமுடிக்கு மாப்பிள்ளைபோல அழகுண்டாகும்
மகிழ்வாகக் குகைகளிலே வாழ்வான்பாரே.

## காயசித்தியின் பெருமை

957. பாரப்பா பன்னிரண்டு முடிந்ததானால்
பாலகன்போல வொருவயது தானுமாச்சு
நேரப்பா யிருபத்தி நான்குசென்றால்
நேர்மையுள்ள வயதும் ரிரண்டதாகும்
சீரப்பா முப்பத்தியாறு மானால்
சிறபபாக மூன்றுவய தாச்சுதப்போ
தாரப்பா பன்னிரண்டுக் கோர்வயதாய்த்
தான்பெருக்க வயதுவை எண்ணிக்கொள்ளே.

---

956. பன்னிரண்டு ஆண்டுகளில் அழியாத உடல் கூடும். ஒரு வினாடி கூட வெளியேறி அலையமாட்டான். அவன் உடம்பில் சவ்வாது கமழும். நரை கருக்கும். பதினாறு வயது பாலகனாவான். கலியாண மாப்பிள்ளையைப் போல அழகு உண்டாகும்.

957. இருபத்து நான்கு ஆண்டுகளில் நான்கு வயதும், முப்பத்தாறு ஆண்டில் மூன்று வயதும், இப்படியாகப் பன்னிரண்டு ஆண்டுக்கு ஒரு வயது இளமையாகும்.

958. எண்ணியே பார்த்துக்கோ வயது நூறில்
இவன்றானுங் கூடுவிட்டுக் கூடுபாய்வான்
கண்ணியே மூன்றுலகம் போய்வருவான்
உற்றதொரு இடங்களிலே இருந்துவாழ்வான்
திண்ணியனாய் அஷ்டகர்மத் தொழில்கள்யாவும்
செய்வானே அறுபத்து நான்குசித்தும்
புண்ணியனு மிவன்றானே யென்போலாவான்
புகழான பேருபெற்று வாழ்வான்பாரே.

## கற்ப முண்ணுங்கால் பத்தியம்

959. பாரேதான் கற்பமுண்ணுங் காலந்தன்னில்
பத்தியங்கள் தான்கேளு பசுவின்போலும்
சீரேதான் பாசிப்பயர் சோறுஞ்சேரு
சிற்றுணவு மாமிசமு மச்சமாகா
நேரேதான் கடுகுநல் லெண்ணெய்யாகா
நேர்மையுடன் முழுகுதற்குத் தேங்காய்சேரு
வேறேதா னொன்றையுமே சேர்க்கவேண்டாம்
வெகுசுருக்காய்ப் பத்தியத்தைக் காப்பாய்நீயே.

---

958. நூறு வயதில் இவன் கூடுவிட்டுக் கூடுபாய்வான். மூன்று உலகும் சஞ்சரிப்பான். திண்ணியனாய் எண்தொழில் புரிவான். அறுபத்து நான்கு சித்தும் ஆடி என்னைப் போல ஆவான்.

959. கற்பம் உண்ணும்போது உள்ள உணவு நியமங்கள் கூறியவாறு. பாசிப்பயற்றுச் சோறு உண்ணவேண்டும். மச்சம் மாமிசம் கூடாது. கடுகு நல்லெண்ணெய் ஆகா. தலைமுழுகத் தேங்காய். இவ்வாறு பத்தியம் காக்க வேண்டும். வேறு எதுவும் உபயோகிக்கக் கூடாது.

960. பத்தியமா யிருப்பதற்குச் சொல்லிவிட்டேன்
பரிவாக ஆணவங்கள் மிகவுண்டாகும்
நித்தியமு மாதர்களை நினைக்கவேண்டாம்
நேராக வருடமொன்று மட்டும்பாவி
சித்திபெற்று வருடமொன்று முடித்துதானால்
சீரான தாயாக நினைத்துக்கொள்ளு
முத்திபெற வேண்டுதற்கு அவள்தான்வேண்டும்
முடிவான காரியத்தைப் பின்சொன்னேனே.

961. சொன்னேன்பார் கற்பமுண்ண வயதுகேளு
சுகமாக யிருபதுக்கு மேலேதானும்
நன்னயமாய்க் கற்பமுண்டால் நல்லதாகும்
நலமாக முப்பதுக்குள் மிகவும்நன்று
கன்னலுடன் நாற்பதுக்குள் கற்பங்கொண்டால்
கருத்துமிக வுண்டாகும் பலிதமாகும்
சின்னவலு வாராது அம்பதுக்குள்
தேகசித்தி யாகுமது தடையில்லாதே

---

960. பத்தியமாய் இருக்கச் சொன்னேன். ஆணவங்கள் மிகுதியாக உண்டாகும். மாதரை நினையாதே. ஒரு வருடம் இப்படி இரு. சித்தி பெற்று ஓராண்டு ஆகிவிட்டால் அம்மையை எண்ணிக்கொள். முத்திக்கு அவ[illegible] துணை.

961. கற்பம் உண்ணுதற்கு வயது, இருபதுக்கு மேல் முப்பதுக்குள் [illegible] நாற்பதுக்குள் கருத்துமிக உண்டாகும். அம்பதுக்குள் தேக சித்தியாகும்.

958. எண்ணியே பார்த்துக்கோ வயது நூறில்
இவன்றானுங் கூடுவிட்டுக் கூடுபாய்வான்
கண்ணியே மூன்றுலகம் போய்வருவான்
உற்றதொரு இடங்களிலே இருந்துவாழ்வான்
திண்ணியனாய் அஷ்டகர்மத் தொழில்கள்யாவும்
செய்வானே அறுபத்து நான்குசித்தும்
புண்ணியனு மிவன்றானே யென்போலாவான்
புகழான பேருபெற்று வாழ்வான்பாரே.

## கற்ப முண்ணுங்கால் பத்தியம்

959. பாரேதான் கற்பமுண்ணுங் காலந்தன்னில்
பத்தியங்கள் தான்கேளு பசுவின்போலும்
சீரேதான் பாசிப்பயர் சோறுஞ்சேரு
சிற்றுணவு மாமிசமு மச்சமாகா
நேரேதான் கடுகுநல் லெண்ணெய்யாகா
நேர்மையுடன் முழுகுதற்குத் தேங்காய்சேரு
வேறேதா னொன்றையுமே சேர்க்கவேண்டாம்
வெகுசுருக்காய்ப் பத்தியத்தைக் காப்பாய்நீயே.

---

958. நூறு வயதில் இவன் கூடுவிட்டுக் கூடுபாய்வான். மூன்று உலகும் சஞ்சரிப்பான். திண்ணியனாய் எண்தொழில் புரிவான். அறுபத்து நான்கு சித்தும் ஆடி என்னைப் போல ஆவான்.

959. கற்பம் உண்ணும்போது உள்ள உணவு நியமங்கள் கூறியவாறு. பாசிப்பயற்றுச் சோறு உண்ணவேண்டும். மச்சம் மாமிசம் கூடாது. கடுகு நல்லெண்ணெய் ஆகா. தலைமுழுகத் தேங்காய். இவ்வாறு பத்தியம் காக்க வேண்டும். வேறு எதுவும் உபயோகிக்கக் கூடாது.

960. பத்தியமா யிருப்பதற்குச் சொல்லிவிட்டேன்
பரிவாக ஆணவங்கள் மிகவுண்டாகும்
நித்தியமு மாதர்களை நினைக்கவேண்டாம்
நேராக வருடமொன்று மட்டும்பாவி
சித்திபெற்று வருடமொன்று முடித்துதானால்
சீரான தாயாக நினைத்துக்கொள்ளு
முத்திபெற வேண்டுதற்கு அவள்தான்வேண்டும்
முடிவான காரியத்தைப் பின்சொன்னேனே.

961. சொன்னேன்பார் கற்பமுண்ண வயதுகேளு
சுகமாக யிருபதுக்கு மேலேதானும்
நன்னயமாய்க் கற்பமுண்டால் நல்லதாகும்
நலமாக முப்பதுக்குள் மிகவும்நன்று
கன்னலுடன் நாற்பதுக்குள் கற்பங்கொண்டால்
கருத்துமிக வுண்டாகும் பலிதமாகும்
சின்னவலு வாராது அம்பதுக்குள்
தேகசித்தி யாகுமது தடையில்லாதே

---

960. பத்தியமாய் இருக்கச் சொன்னேன். ஆணவங்கள் மிகுதியாக உண்டாகும். மாதரை நினையாதே. ஒரு வருடம் இப்படி இரு. சித்தி பெற்று ஓராண்டு ஆகிவிட்டால் அம்மையை எண்ணிக்கொள். முத்திக்கு அவ[illegible] துணை.

961. கற்பம் உண்ணுதற்கு வயது, இருபதுக்கு மேல் முப்பதுக்குள் [illegible] நாற்பதுக்குள் கருத்துமிக உண்டாகும். அம்பதுக்குள் தேக சித்தியாகும்.

962. இல்லாதே அறுபதுக்குள் கற்பங்கொண்டால்
இனிமையுள்ள தேகமது பொன்னதாகும்
அல்லாது யெழுபதுக்குள் கற்பங்கொண்டால்
அவனிதனில் நூறுவய திருப்பானப்பா
எல்லார்க்குங் கிட்டாது கற்பந்தானும்
எழுபதுக்கு மேலானால் பலனிராது
நல்லாகச் சொல்லிவிட்டேன் கற்பநேர்மை
நானிலத்தோர் தங்களுக்குத் தெரியொண்ணாதே.

963. தெரியவே சொல்லினேன் கற்பம் வேறு
சீராக முப்பூவும் வேறேயென்று
அரியவே கற்பமது கொள்ளாவிட்டால்
அவனிதனில் வாதமுப்பு முடியாதப்பா
உரியதொரு கற்பமுப்பு முடிந்துதானால்
உலோகங்க ளெல்லாந்தான் பழுத்துப்போகும்
கரியமா லுந்தியிலே பூத்தோன்றன்னைக்
கைக்கொண்டால் வாதமுப்பு முடியும்பாரே.

---

962. அறுபதுக்குள் கற்பங் கொண்டால் தேகம் பொன்னாகும். எழுபதுக்குள் உண்டாம் நூறு வயது இருப்பான். எழுபதுக்கு மேலானால் பயனில்லை.

963. கற்பம் வேறு, முப்பூ வேறு. கற்பம் கொள்ளாவிட்டால் வாதமுப்பு முடியாது. கற்பமுப்பு முடிந்தால் உலோகங்கள் பழுக்கும். பரமனைக் கைக்கொண்டால் வாதமுப்பு முடியும்.

964. வாதமுப்பு முடிந்தவுடன் ஞானகற்பம்
வகையுடனே கண்டறிந்து செய்துவந்தால்
சேதமது வாராது கெவுனம்போவான்
சிறப்பான கூடுவிட்டுக் கூடுபாய்வான்
வேதமது வறிந்தோனே ரிஷியுமாவான்
வியப்பான பாஷாண மெல்லாம்நீறும்
சூதமது கட்டிவிடுங் குளிகையாகும்
சுண்ணபற்ப செந்தூர மாகும்பாரே.

965. ஆகுமென்ற ஞானகற்ப முடிந்ததானால்
அவனிதனில் பேர்பெற்ற ரிஷியேயாவான்
ஏகுமென்ற வயித்தியமுப்பு முடிவதற்கு
இயல்பான பூநீரும் அண்டக்கல்லும்
பாகமுடன் சுத்தகங்கை யாலேதீட்சை
பண்ணினால் வயித்தியமுப்பு முடிந்துபோகும்
தாகமுடன் மூன்றுமுப்பும் முடியவேணும்
சாகரத்தி லுப்பெடுத்து தனியாய்பாரே.

---

964. வாதமுப்பு முடிந்து ஞானகற்பம் செய்து வந்தால் சேதம் வாராது. கமனம் போகலாம். கூடுவிட்டுக் கூடுபாயலாம். ரிஷியாவார். பாஷாணம் நீளும். சூதம் கட்டும். குளிகையாகும். பற்பசெந்தூரம் ஆகும்.

965. ஞானகற்பம் முடிந்தால் புகழுடன் ரிஷி ஆவான். இயல்பான பூநீரும் அண்டக்கல்லும் சுத்த கங்கையிலே தீட்சைபண்ணினால் வயித்திய முப்பு முடிந்து போகும்.

966. தனியாக வேயிருந்து அமுரிவாங்கித்
தக்கபடி அதைக்குறுக்கி கல்லுப்பாக்கு
கனிவாக உப்பெடுக்கும் வகையேதென்றால்
கரும்பின்சரம் கற்கண்டு கட்டியாச்சு
இனிதான உப்புமிப் படியேசெய்தால்
இயல்பான கற்கட்டி உப்புமாகும்
பனிபாகக் கல்லுப்பு இதுதானாகும்
பார்தனிலே கொம்பாலைக் கல்லென்பாரே.

967. கல்லான உப்பெடுத்துப் பொன்னதாக்கிக்
கருமலைபோ லுண்டாக்கி விட்டாரப்பா
எல்லார்க்கு மாகாது மகரிஷிக்கு
எய்துமல்லால் மற்றோர்க்கு எய்யாதப்பா
நல்லபிள்ளை யாகவே சித்தர்க்கெல்லாம்
நானிருந்த வகைவிபரஞ் சொல்லுவேன்கேள்
வல்லவனாய்க் கூடுவிட்டுக் கூடுபாய்வேன்
மகாகோடி யுகம்வரைக்கு மிருந்திட்டேனே.

---

966. அமுரியைக் கல்லுப்பாக்குதல் சொல்லி அதுகொண்டு கற்கண்டாக்குதல் கூறுகிறார்.

967. கல்லுப்பை எடுத்து பொன்னதாக்கிக் கருமலைபோல் உண்டாக்குதல் கூறுகிறார்.

968. இருந்திட்ட வகைவிபர மேதென்றாக்கால்
இயல்பான கிரேதாயுகந் திரேதாயுகந்தான்
திருந்தவே துவாபரமும் கலியுகந்தான்
சிறப்பான யுகம்நாலு மனுடரூபம்
பொருந்தவே நாலுயுக முடிந்துபின்னால்
புகழாகக் காக்கையுருக் கொண்டெழுந்து
குருந்தநிழல் விருட்சத்தின் மேலிருந்தேன்
கொடிதான பிரளயமு முடிந்தபின்னே.

969. பின்பாக சிவனயனு மாலும்வந்தார்
பிரபலமாய் மூவரையும் வாங்களென்று
தென்பாக மூவர்களே தங்களைத்தான்
தெரிசித்தேன் கோடியுக மாகத்தானும்
அன்பாக இவ்விருட்சத் திருந்துகொண்டு
அடைவாக முடிவுயுகந் தோறும்பார்த்தேன்
முன்பாக இப்படியே சொன்னதற்கு
மூவர்களும் குறுஞ்சிரிப்புக் கொண்டார்பாரே.

---

968. நாலு யுகம் முடியுமட்டும் மனித வடிவில் இருந்தேன். பிறகு காகத்தின் வடிவம் கொண்டு குருந்த மரத்தின் மேலிருந்தேன்.

969. பிறகு பிரளயம் முடிந்தபிறகு சிவனும் அயனும் மாலும் வந்தனர். இந்த மரத்தில் இருந்தவாறு ஒவ்வொரு யுகமுடிவிலும் பார்த்தேன்.

970. குறுஞ்சிரிப்புக் கொண்டதென்ன வென்றுகேட்க
குணமாக மூவருந்தான் சொல்லுவார்கள்
வஞ்சகங்க ளில்லாமல் சொல்லுகின்றோம்
மகத்தான மூவருந்தான் யுகமுடிவில்
பஞ்சுபோல் பிரளயகா லத்திலேதான்
பதுங்கியே மறைந்திருந்து வெளியேவந்தோம்
துஞ்சுத லில்லாமல்நீர் பிரளயத்தில்
துடுக்காயிம் மரத்திருந்த தருமைதானே.

971. அருமையென்று சொல்லிவிட்டு மூவர்போனார்
அவர்களெத் தனைதரமோ மறைந்துவந்தார்
வெறுமையுடன் சொல்லவில்லை யவர்கள்பேச்சை
விட்டுவிடு கோடியுகம் பார்த்தேனப்பா
பெருமையுடன் சொன்னதல்ல பிரளயத்தின்
பின்புவந்து கண்டவர்க்கே தெரியுமப்பா
உரிமையுடன் வசிஷ்டரே யுனக்குத்தோண
உரைத்தேனே யல்லாது பின்சொல்லேனே.

---

970. அந்த மூவரும் புன்சிரிப்புடன் நிற்க, அதன் காரணம் கேட்க, அவர்கள் சொன்னார்கள். "யுக முடிவில் நாங்கள் மூவரும் பஞ்சுபோல் மறைந்திருந்து வெளியே வந்தோம். நீர் மரத்தில் அழியாமல் இருந்தது அருமை".

971. இவ்வாறு சொல்லிவிட்டு மூவரும் சென்றார்கள். நான் பிரளயந் தோறும் தப்பாமல் இருந்ததை, வசிட்டரே, உமக்குச் சொன்னேன், நீர் தெரிந்துகொள்ளும்படி!

## காரசாரக் குரு முப்பு

972. சொல்லவே காரசா ரத்தின்முப்பு
சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு
மெல்லவே அண்டக்கல் வெள்ளைக்கல்லு
வெகுசுருக்காய்க் கொண்டுவந்து உரலிலிட்டு
கல்லவே மாவாக்கி இடித்துக்கொண்டு
கரியல்லாச் சட்டியிலே தானும்போட்டு
நல்லதொரு அமுரிதனை முங்கவிட்டு
நலமாக நாளொன்று ஊறவைத்தே.

973. ஊறவைத்து முத்துப்போற் தெளிவிருத்து
ஊத்திவிட்டு வேரமுரி தானும்விட்டு
தேறவே யிதுபோல பத்துநாளுஞ்
செய்தெடுத்து ரவியில்வைக்கப் பொருகிநீரும்
ஆரவே தானெடுத்துக் கன்னிச்சாற்றில்
அடைவாக முங்கவிட்டு ரவியிலேதான்
நேரவே காற்றுகளும் படாமல் வைக்க
நேர்த்தியுடன் நான்பார்க்க உப்பேயாகும்.

---

972. காரசாரத்தின் முப்பு செய்யும் முறை கூறியவாறு.

973. இதுவும் அது. இதில் அமுரி என்ற சிறுநீரைப் பயன்படுத்தி இது செய்யும் முறை கூறப்படுகிறது. வைத்திய முறை தேர்ந்தவர்களுக்கே இது மனதில் ஆகும்.

974. உப்பானதை யெடுத்துப் பீங்கானிட்டு
உரிமையுடன் பழச்சாற்றைச் சரியாய்விட்டு
தப்பாம லடுப்பேத்தித் தீபமாகத்
தானெரிக்க எண்ணெய்கக்கிச் சுண்ணமாகும்
இப்பாரி லுள்ளோர்க்குத் தெரியாமற்றாள்
எடுத்துவைப்பாய் சாடிதனில் குருவுமாச்சு
செப்பாதே யொருவருக்கும் வாதமுப்பு
தீரமுடன் புகைச்சரக்கு நீரும்பாரே.

975. புகைச்சரக்காம் பாஷாண மெல்லாத்துக்கும்
புகழான வுப்பெடுத்து வாய்நீர்விட்டு
நகையாமற் சுத்திசெய்த பாஷாணத்தில்
நலமாக வேதடவிக் காயவைத்து
தகையிலா தேயெடுத்து வழக்கம்போல
தக்கயெரு வதனிலிட்டுப் புடமும்போட்டால்
பகையாதே சரக்கெல்லாம் நீறிப்போகும்
பக்குவமாய்த் தானெடுத்து வைத்துக்கொள்ளே.

---

974. இந்த உப்பில் பழச்சாறு விட்டுப் பத்திரமாக வைத்திருப்பது கூறுகிறார்.

975. பாஷாணங்கள் அனைத்துக்கும் உப்பு கொண்டு சுத்தி செய்து புடம்போட்டு நீற்றுகிற முறை கூறுகிறார்.

976. வைத்ததொரு குருவதனைச் சிறிதெடுத்து
வாய்நீரி லேகுழைத்து வைத்துக்கொண்டு
சித்தமுடன் லேகியங்கள் சகாயத்திற்கும்
சிறப்பான சுண்ணசெந் தூரத்திற்கும்
பந்தமுடன் றான்கொடுக்க வியாதியாவும்
பறந்துவிடும் ஒருவருக்கும் வெளியிடாதே
அத்தனுட அருளாலே இவைகள்செய்வாய்
அண்டக்கல் தெரிவதுதா னருமைபாரே.

977. அருமையுட னுந்தனுக்குத் தெரியச்சொல்வேன்
அன்பாக ஊரண்டி யிருந்துகொண்டால்
பெருமையுடன் பிர்மக்கல் தெரியுமப்பா
பேருலகில் கிடையாத தொன்றுமில்லை
உருமையுடன் பிர்மனுமே ஆதிநாளில்
உசந்தெழுதி வைத்தபடி கற்கள்தோறும்
ஒருமையுடன் ருத்திரனார் பூமிதன்னில்
உள்ளுக்குள் கல்லதுவு மிருக்குந்தானே.

---

976. லேகியத்துக்கும் செந்தூரத்துக்கும் இதைப் பயன்படுத்துகிற முறை கூறியவாறு.

977. பிரும்மக்கல் கண்டெடுக்கும் வழி கூறியவாறு.

978. இருக்குகின்ற கல்லதுதான் அண்டக்கல்லு
இதைவிட்டு உவற்காட்டுக் கல்லுவேண்டாம்
பெருக்குகின்ற உவற்காட்டி லிருக்குங்கற்கள்
பெருமையுள்ள கற்குண்டு கல்லதாகும்
உருக்கமுடன் னதையெடுத்து நீத்திக்கொண்டு
உற்றதொரு பூநீரைக் கூடவிட்டால்
வருக்கமுடன் பூநீரு உப்பதாகும்
வயித்தியத்துக் காகுமிந்த உப்புத்தானே.

## பிரம கற்பம்

979. உப்பதுவும் கண்டுகொண்டால் கற்பம்வேணும்
உரிமையுடன் பிர்மகற்பஞ் சொல்லக்கேளு
இப்பொழுதென் தாயிடத்தில் கொடிபடர்ந்த
இனிமையுள்ள பசளையது தானும்வாங்கி
அப்பல்லோ அதன்கோரை தானும்போக்கி
அன்பாக வேநறுக்கி உரலிலிட்டு
செப்பமுட னிருப்புலக்கை தன்னாற்சாடி
சிறப்பாக வேயிடிக்க உண்டையாமே.

---

978. கற்குண்டுக் கல்லை நீற்றிப் பூநீருடன் விட்டு அதை உப்பாகும் முறை கூறுகிறார்.

979. பிரும்ம கற்பம் கூறியவாறு.

980. உண்டதனைச் சட்டியிலே தானும்போட்டு
உருப்படவே அரைப்பாகம் சூடன்போட்டு
அண்டையிலே தானிருந்து அமுரிதானும்
அளவுக்கு நாலுபடி தானும்விட்டு
எண்டிசையு மறியாமல் அடுப்பிலேற்றி
இனிமையுடன் சாம்பிராணித் தூபங்காட்டி
வண்டருக்குத் தெரியாமல் தீயெறித்து
வடுப்படாத் துடுப்பதனால் கிண்டிக்கொள்ளே.

981. துடுப்படனால் கிண்டிவந்து பதத்தைக்கேளு
சுழிவாக அடிபிடிக்கா திருக்கவேணும்
எடுப்பதற்கும் கும்பிவிட்டால் பாகம்போச்சு
இயல்பாக இரண்டையுமே பார்க்கவேணும்
அடுப்பதனில் சிறுதீயா யெரிக்கவேணும்
அன்பாகக் கொதிகிளம்பி வருகும்போது
சடுக்கென்றே நெய்வேறு புஷ்டிவேறு
தான்பிரியும் நெய்மிதக்கு மதனைப்பாரே.

---

980. இந்த உண்மைகளை மேலும் சூடன் அமுரி சாம்பிராணி முதலியவற்றுடன் கூட்டி அடுப்பில் இடுவது கூறுகிறார்.

981. இதைத் துடுப்பினால் கிண்டிவந்தால் ஏற்படுகிற மாறுதல்கள் கூறியவாறு.

**982.** பாரப்பா நெய்வேறு கடுகுவேறு
பக்குவமாய்த் தானெடுத்து வடித்துக்கொண்டு
நேரப்பா கடுகதுவும் உருகிடாமல்
நினைவாகப் பார்த்தெடுத்து வேறேவைத்து
சீரப்பா பராபரைக்குப் பூசையோடு
சிறப்பாக ரேசகபூ ரகந்தான்செய்து
காரப்பா கடுகுடனே தயிலந்தன்னைக்
கருத்தாக உண்பதற்கு வகைசொல்வேனே.

**983.** சொல்லுவேன் கற்பமது உண்பதற்கு
சுகமாகத் தயிலத்தைக் கரண்டிவீதம்
அல்லப்பா காலையிலே உண்டுவாநீ
அன்பாக மாலையிலே கடுகுதன்னை
வெல்லப்பா யெலுமிச்சங் காயளவு
விதமாக வுண்டுவரத் தேகசித்தி
நல்லதொரு மலசலங்கள் பேதிக்கும்பார்
நாட்டிலே யிதைவெளியிற் பேசிடாதே.

---

**982.** இதில் நெய்விட்டுக் கடுகு எடுத்து மேலும் சில பக்குவங்கள் செய்வதைக் கூறுகிறார்.

**983.** தேகசித்தி ஏற்பட இந்தத் தயிலத்தையும் கடுகையும் உட்கொள்ளும் முறை கூறி, அப்படி உட்கொண்டால் தேகசித்தி ஏற்படும் என்றவாறு.

984. பேசிடா திருந்தாக்கால் லாபமுண்டு
போராகத் தொட்டதெல்லாம் வாதமாகும்
கூசிடா தேகெவுன முயரத்தூ க்கும்
கேசரிமார்க்கங்ள்போல் வரவுமாறும்
ஆசையுடன் சித்தர்களும் வந்துபோவார்
ஆச்சரிய மிகவுண்டாம் கீர்த்தியுண்டாம்
பாசைபதி னெட்டுமே தெரிந்துகொள்வான்
பத்தியமா யிருந்திடவும் வேணும்பாரே.

## மூலிகைக் கற்பம்

985. இருந்திடமூ லிகைகற்பஞ் சொல்லக்கேளு
இயல்பான சிவன்வேம்பு வேங்கைப்பட்டை
அருந்திடவே ஆவரையின் பட்டைமூன்றும்
அன்பாக நாதவிந்தும் நிறையொன்றாக்கி
திருந்திடவே பாண்டத்தி லிட்டுமூடிச்
சிறப்பான குளித்தயில மிறக்கிக்கொண்டு
பொருந்திடவே சண்முகர்க்குப் பூசைசெய்து
புகழாகக் கொள்வதற்கு வகையைக்கேளே.

---

984. இதன் பலனாக எத்தகைய ஆற்றல்கள் சித்திக்கும் என்பதைக் கூறுகிறார்.

985. மூலிகைக் கற்பம் கூறியவாறு. இதுவும் வைத்தியத் துறையைச் சார்ந்தது.

986. வகையென்ன துட்டிடைதான் காலைமாலை
வழியோடே சாப்பிட்டு வந்தாயானால்
திகையிலாத் தேகமது வலுத்துப்போகும்
திறமான நரைதிரையு மற்றுப்போகும்
பகையிலா நரம்பெல்லாம் வலுத்துப்போனால்
பாழான வியாதியெல்லா மோடிப்போகும்
நகைபோலத் தேகமது பொன்போலாகும்
நானிலத்திற் சித்தனென்று பேருய்வானே.

### வாத முப்பு

987. பேருபெற வாதமுப்பு சொல்லக்கேளு
பெரிதான சவ்வீரக் கட்டிவாங்கி
நேருடனே பிர்மகற்பத் தயிலந்தன்னில்
நேர்த்தியுடன் றான்றோய்த்து ரவியிற்காய்ந்து
பாருநீ பிர்மகற்பக் கடுகுதன்னை
பண்பாய்வீ ரந்தனக்குக் கவசஞ்செய்து
சேருநீ அதற்குமேல் சேலைசெய்து
சிறப்புடனே ரவிதனிலே வைப்பாய்பாரே.

---

986. இது பயன்படுத்தி உடம்பை வலுப்படுத்தும் முறை கூறியவாறு.

987. இதுவும் வைத்தியமே - வாத முப்பு செய்யும் முறை கூறுகிறார்.

988. பாரப்பா காய்ந்தபின்பு விளக்கில்வாட்ட
பதிவான மெழுகாகும் வைத்துக்கொண்டு
நேரப்பா குந்தனத்தங் கத்தைவாங்கி
நிலையான படியாகத் தூள்கள்செய்து
சீரப்பா முன்கடுகு தன்னிலேதான்
சிறப்பாகத் தானெடுத்துப் பத்துக்கொன்று
தேரப்பா தங்கத்தூள் அதிலேசேர்த்து
திறமாக மெழுகுக்குக் கவசஞ்செய்யே.

989. செய்யப்பா மெழுகெடுத்து ரவியில்வைக்கச்
சிறப்பான தங்கத்தை வீரந்தின்னும்
உய்யப்பா யிம்மெழுகை நவலோகத்தில்
உரிமையுடன் கொஞ்சமது தானெடுத்து
மெய்யப்பா தான்கொடுக்கப் பழுத்துப்போகும்
மேலான வயதுபதி னாறுமாகும்
ஐயப்பா யிந்தவகை கண்டோன்சித்தன்
அவனிதனில் பேர்பெற்ற ரிஷியாவானே.

---

988. இதுவுமது.

989. இதை உட்கொண்டு இளமை பெறலாம். ரிஷியாகப் புகழ் கிட்டும். இதுவும் வைத்தியப் பகுதியைச் சார்ந்தது.

**990.** பேருபெற்ற ரிஷியாவான் யோகியாவான்
பிரபலமா யொருவருக்குங் காட்டமாட்டான்
நேருடனே யாரோடும் பேசமாட்டான்
நேர்மையுட னோரிடத்தி லிருக்கமாட்டான்
ஊரூராய்ப் போய்வருவான் குளிகைசெய்வான்
உண்மைதனை யொருவருக்குங் காட்டமாட்டான்
மாறாதவாய் வார்த்தைகளைச் சொல்வான்ஞான
வழிதெரிந்து மலைகுகையி லிருப்பான்பாரே.

**991.** இருப்பதற்கு ஆறுவரைக் கப்பாற்சென்று
இயல்பான சமுத்திரத்தைத் தெரியவேணும்
பொருப்பான துபஸ்தம்பந் தெரியவேணும்
புகழான வாலையைப்பூ சிக்கவேணும்
திருப்பான குலைக்கனியைக் காணவேணும்
தீவினைகள் வாரா மலருந்தவேணும்
மருப்பான கூற்றுவனை விரட்டவேணும்
மாறாத யோகத்தை யறிவாய்ச்செய்யே.

---

**990.** இப்படி ரிஷிநிலை யடைந்தவன் பழக்க வழக்கங்கள் எப்படி ஒதுக்குப்புறமாக இருக்கும் என்பதைப் பாடுகிறார்.

**991.** இதற்குமேலும் இந்த உடம்பில் பிறப்பெடுத்த நிலையிலேயே அதிமானுடச் செயல்கள் புரிவதைக் கூறியவாறு.

992. செய்யப்பா யோகஅப்பி யாசந்தன்னைச்
சீராகச் செய்துவந்தா லெல்லாஞ்சித்தி
மெய்யப்பா வாலையுங்கை வசமேயாவாள்
மேலான அமுதரசம் பொங்கிவீழும்
அய்யப்பா யிதைவிட்டா லெல்லாம்போச்சு
அவனிதனில் நாதவிந்தை யறியாவிட்டால்
உய்யப்பா வழியொன்று மில்லையில்லை
உந்துகைக்குச் சொல்லிவிட்டே னுண்மைபாரே.

993. உண்மையென்று செய்வோர்க்கு எல்லாமாகும்
ஒன்றுமில்லை யென்போர்க்கு எதுதானாகும்
நுண்மையுடன் சாஸ்திரத்தை யறியவேணும்
நுணக்கமுடன் பரிபாஷை தெரியவேணும்
தன்மையுடன் விட்டாக்கா லெல்லாம்போச்சு
தவறியே நடந்தபின்பு ஒன்றுமாகா
எண்மையென்று நினைப்போர்க்கு எதுவுமாகா
எப்பொருளும் பாடுபட்டால கிடைக்கும்பாரே.

---

992. இதுவே யோக அப்பியாசத்துக்குரிய சாதனங்கள் என்று சொல்லி, இவற்றின் சிறப்பை மேன்மையுடன் பாடுகிறார்.

993. உண்மை என்று நம்பி இந்தச் செய்முறைகளைக் கற்று நடப்பவருக்கு எல்லாச் சாதனைகளும் கிட்டும். இல்லையென்றால் ஒன்றும் ஒவ்வாது.

994. கிடைப்பதுவோ இந்தநூ லாயிரத்தில்
கிருபையுடன் யோகமுதல் கற்பஞ்சொன்னேன்.
மடைதிறந்த வெள்ளம்போல் வயித்தியந்தான்
வகையோடே ஆயிரமுஞ் சொல்லிவைத்தேன்
சடையாமல் சூத்திரமென் பதுவுஞ்சொன்னேன்
சங்கையற ஞானமுப் பதுவுஞ்சொன்னேன்
விடையமுடன் உபனிடதம் சுருக்கிச்சொன்னேன்
வேணுமென்று முப்பூசூத் திரஞ்சொன்னேன்.

995. சூத்திரத்தைப் பார்த்தவர்க்கு எல்லாந்தோணும்
தொல்லையென்று விட்டவற்கு ஒன்றுந்தோணா
சாஸ்திரத்தைப் பிரியமுடன் கையில்வாங்கித்
தனித்திருந்து பார்த்தக்கா லெல்லாந்தோணும்
ஆத்திரத்தோ டேபார்த்து எறிந்திட்டோர்க்கு
அணுவளவுந் தெரிந்துகொள்ளப் போவதில்லை
நேத்திரம்போற் சாஸ்திரத்தைப் பார்த்திட்டோர்க்கு
நெறிமுறையும் வகைவிபரந் தெரிவான்பாரே.

---

994. இந்த நூலில் சொல்லப்பட்டதைத் தொகைப்படுத்திக் கூறியவாறு.

995. சாத்திரத்தை வாங்கித் தனியே இருந்து ஆழ்ந்து பார்த்தால் எல்லாம் புலனாகும். ஆத்திரத்தோடு அணுகுவோர்க்கு அணுவளவும் தெரிய இயலாது.

996. தெரியுதற்குச் சாஸ்திரங்கள் கோடாகோடி
செய்துவைத்தார் கருக்குருவுஞ் சொல்லாமற்றான்
அறியுதற்கு மனம்புத்தி சித்தம்வேணும்
அறிந்துகொள்ள முடிவதற்குக் குருவும்வேணும்
பெரிதான குருவிடத்திற் றொண்டுசெய்து
பேரின்ப நிஷ்டைகளைத் தெரியவேணும்
உரிமையுடன் தெரிந்துகொண்டேன் சித்தனாவான்
உலகோர்க்கா இந்நூலை உரைத்திட்டேனே.

---

996. இந்நூலையும் இதுபோன்ற களஞ்சியங்கயையும் ஆழ்ந்து பார்ப்பதோடு குருவின் துணையும் நேர்முகமாகக் கிட்டவேண்டும். அந்த அடிப்படையிலேயே உலக மக்களுக்காக இதைச் சொன்னேன் என்று முடிக்கிறார் முனிவர்.

காகபுசுண்டர் ஆயிரத்தில் வருகிற இந்தப் பகுதியில் சில பாடல்கள் வைத்தியம் கூறுவதால் அவற்றுக்கு மட்டும் விளக்கமான உரைப்பகுதி தரப்படவில்லை. வைத்தியர்களே இவற்றின் நுட்பத்தை எடுத்தோத வல்லவர்கள்.

இப்பகுதியைப் போலவே அங்கங்கே சில பாடல்கள் நேர்முகப் பயிற்சிகளைக் கூறுகின்றன. யோகப் பயிற்சியும் ஞானப் பயிற்சியும் இயற்றுகிற மாணவர்கள் குருமார்களின் எதிரே செய்து பழகவேண்டிய இந்தப் பயிற்சிகளை மொழியளவில் சொல்வது இயலாத காரியம். அதோடுகூட இறையின்பத்தை ஏட்டிலே படிப்பதால் மட்டும் பெற்றுவிட முடியாது. ஞானகுருவின் நேர்முகத் துணை மிகமிக இன்றியமையாததாகும்.

காகபுசுண்டர் வாசியோகத்தைக் கற்பிக்கும் பகுதிகளிலே ஓரளவே உரை எழுதப்பட்டுள்ளது. சொற்களுக்குப் பொருள் சொல்லிடில் மட்டும் போதாது. அந்தப் பாடல்கள் உணர்த்துகிற யோகப் பயிற்சிக்குரிய உடல் உறுப்புகளைத் தொட்டுக்காட்டவேண்டும். இது முக்கியமாகும்.

கல்லூரிப் படிப்பின்போது 'கெமிஸ்ட்ரி', 'பிஸிக்ஸ்' ஆகிய விஞ்ஞான வகுப்புக்களிலே பாடப்புத்தகத்தைப் படிப்பதோடு ஆசிரியர் அந்தப் புத்தகங்களைக் கையில் வைத்துக்கொண்டு மாணவருக்கு நேர்முகமாக விளக்குகிறார் அல்லவா? அதோடுகூட 'லபாரேடரி' என்னும் ஆய்வுக்கூடங்களில் மாணவருக்கு நேர்முகப் பரிசோதனைகளைச் செய்துகாட்டி விளக்கம் கொடுக்கிறார். இந்த 'ப்ராக்டிகல்' அனுபவ வகுப்புக்களின் நோக்கம் பாடப் புத்தகக் கல்வியிலே வருகிற பொருள் நுட்பங்களை நேரிலே செய்துகாட்டுவது என்பதுதான்.

நேர்முகக் கல்விக்குப் பாடப்புத்தகம் துணைநிற்கிறது. பாடப் புத்தகத்துக்கு நேர்முகக் கல்வி துணை நிற்கிறது. இது இதற்குத் தேவை. அது இதற்குத் தேவை. ஒன்றை ஒன்று சார்ந்திருக்கிறது. நேர்முகக் கல்வி கற்பிப்பதால் பாடப் புத்தகமே வேண்டாம் என்பதற்கில்லை. பாடப்புத்தகம் இருப்பதால் நேர்முகக் கல்வி வேண்டாம் என்று சொல்வதற்கும் இல்லை.

யோகஞானப் பயிற்சிகளும் இதே போன்ற கல்விதான். காகபுசுண்டரின் நூல் ஒரு பாடப் புத்தகம். இந்தப் பாடங்களைப் படித்தால் மட்டும் போதாது. இவற்றை நேர்முகமாக விளக்குவதற்கு ஆசானும் வேண்டும். இதைத்தான் கடைசிப் பாடலின் நான்காவது வரி 'குருவும் வேணும்' என்று வற்புறுத்துகிறது!

உரைவிளக்கங்களையும் மூலப்பாடல்களையும் படிக்கும் போது இந்த அடிப்படை உண்மையை நாம் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். இதே அடிப்படையை மனத்திற்கொண்டுதான் நேர்முக குருவைப் பற்றி அப்படி இந்த நூல் பேசுகிறது. "குரு வேணும்" என்ற அந்த மெய்யுணர்வே இந்த நூலின் அடிப்படை ஆதாரமாகும்!

